உ

கணபதி துணை.



சங்கமருவிய எட்டுத்தொகை நூல்களுள்

ஒன்றாகிய

# கலித்தொகை

(மருதக்கலி, முல்லைக்கலி)

## மூலமும்

மதுரையாசிரியர்

பாரத்துவாசி

நச்சினார்க்கினியருரையும்

இவை

உடையாற்றுமங்கலம்

வைத்தீச்சுவரையரவர்கள் குமாரரும்

சென்னை,

பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய

## அனந்தராமையரால்,

நன்கு பரிசோதித்து,

தாம் புதிதாக எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புடன்

சென்னை

நோபில் அச்சுக்கூடத்தில்,
பதிப்பிக்கப்பெற்றன.

1925



உ

கணபதி துணை.

## இரண்டாஞ் சம்புடத்தின்

# முகவுரை.

---

கிளருந் திருவல்லிக் கேணிக்க ணன்பர்
தளருந் துயர்தீர்ப்பான் சார்ந்து—வளருந்
ஒருகோட்டுக் கற்பகத்தா ளுற்றேன் கலிக்கட்
டிருகோட்டும் வெப்பொழியச் செய்து.

இந்நூலையும் இப்பதிப்பையும்பற்றிய செய்திகள் பலவும், கடவுள் வாழ்த்தும் பாலைக்கலியும் குறிஞ்சிக்கலியும் அடங்கிய முதற்சம்புடத்தின் தலைப்பில் எழுதப்பெற்றுள்ளன.

இவ்விரண்டாஞ் சம்புடத்தில் மருதக்கலியும் முல்லைக்கலியும் அடங்கியுள்ளன. இதில் முதற்சம்புடத்திற்போலவே இப்பகுதிகளிலுள்ள செய்யுட்களோ செய்யுட்பகுதிகளோ மேற்கோளாகவந்துள்ள இடங்களும் ஒத்த பகுதிகளும் ஆங்காங்கு எண்கள் முதலியன

இட்டுக்குறித்திருப்பதோடு, சொல்லாராய்ச்சிக்கும் விலங்கு பறவை பாஞ் செடி கொடிகளைப்பற்றிய ஆராய்ச்சிக்கும் உதவியாக உரிய விடங்களில், சில குறிப்புக்களும் குறிக்கப்பெற்றிருக்கின்றன.

முதற்சம்புடத்திலன்றி இச்சம்புடத்தில் மேற்கூறிய குறிப்புக்களைச் சேர்த்ததற்குக்காரணம், முதற்சம்புடத்தைப் பார்த்த தமிழபிமானிகளான அன்பர்களிற் சிலர், உரையிலுள்ள சொற்கள், பண்டை இலக்கியத்துள்ளன; இல்லன; இவை இன்னசொல்லின் சிதைவு என்ற செய்திகளையும் இயன்ற அளவு தெரிவித்தல் நன்றென்றும், வேறு சிலர், உயிர்களைப்பற்றிக் கூறுமிடத்து மிருகவிசேஷம் பக்ஷிவிசேஷம் விருக்ஷ விசேஷமென்று சிறிதும் அறிய இயலாதபடி விட்டுவிடாமல் இப்பொருள் இன்னதென்று அறியும்படி அவற்றையும் இயன்ற அளவு விளக்கல் பேருபகாரமாமென்றும் விரும்பிக்கூறியனவாகும். ஆதலால் அவற்றையும் பற்றி இயன்ற அளவு குறித்திருக்கின்றேன்.

4

இம்முகவுரையின்பின், முதற்சம்புடத்திலன்றி இச்சம்புடத்தில் வந்துள்ள ஆற்பெயர் முதலியவற்றின் அகராதியும் செய்யுள் முதற் குறிப் பகராதியும் இப்பதிப்பைப்பற்றி மஹாமஹோபாத்தியாயர் தாக்ஷிணாத்திய கலாநிதியென்னும் சிறப்புப் பட்டங்களைப்பெற்று விளங்கும்பிரஹ்மஸ்ரீ உ.வே. சாமிநாதையரவர்களும் மதுரைத்தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ் முதலிய பத்திரிகைகளின் ஆசிரியர்களும் எழுதியுள்ள அபிப்பிராயங்களும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

இந்நூல் விரைவில் இனிது நிறைவேறத் தமிழ்த்தெய்வத்தின் திருவருளை வேண்டுகின்றேன்.

திருவேட்டீசுவரன்பேட்டை
குரோதன௵
ஆனிமீ உகஉ

இங்ஙனம்:
இ. வை. அனந்தராமையன்.

உ

கணபதி துணை.

# முதற்சம்புடத்திலன்றி இதில் எடுத்துக்காட்டப்பெற்ற நூற்பெயர் முதலியவற்றின் அகராதி

அஷ்டாங்கஹிருதயம்
சிகித்ஸாஸ்தானம்
[இராமாயணம் (உத்தர ராமாயணம்)]
சந்திரகேதுநகர்ப்படலம்
இருசமயவிளக்கம்
இன்னாநாற்பது
[உத்தரகோசமங்கைப்புராணம்]
அரித்துவசன் சாபந்தீர்த்தபடலம்
உதயணகுமாரகாவியம்
உஞ்சைக்காண்டம்
உரிச்சொனிகண்டு
[கந்தபுராணம்]
அக்கினிமுகாசுரன்வதைப்படலம்
அசுரர் யாகப்படலம்
ஆற்றுப்படலம்
சுரம்புகுபடலம்
திக்குவிசயப்படலம்
திருவவதாரப்படலம்
தேவகிரிப்படலம்
பானுகோபன்வதைப்படலம்
மூவாயிரர்வதைப்படலம்
[கம்பராமாயணம்]
இராவணன்சோகப்படலம்
உருக்காட்டுப்படலம்
கடிமணப்படலம்
குகப்படலம்
சூடாமணிப்படலம்
சேதுபந்தனப்படலம்
திருவடிதொழுதபடலம்
தேரேறுபடலம்
நிந்தனைப்படலம்
படைக்காட்சிப்படலம்
படைத்தலைவர்வதைப்படலம்
பிணிவீட்டுப்படலம்
பிரமாத்திரப்படலம்
மாரீசன்வதைப்படலம்
வாலிவதைப்படலம்

பஞ்சாக்கத்தின் வரலாறு
மணிகன்னிகையின்சிறப்பு
[காஞ்சிப்புராணம்]
சித்தீசப்படலம்
குண்டலகேசி
[குறள்.]
பரிப்பெருமாளுரை
மணக்குடவருரை
[கூர்மபுராணம்]
ஆதவர்சிறப்புரைத்தது
இந்திரத்துய்மன் முத்திபெற்றது
இராமன் வைகுந்தமடைந்தது
தக்கனைச்சபித்தது
திருக்கல்யாணம் [புரைத்தது
நவகண்டத் துறைவோ ரியற்கை
கோவையார் (திருக்கோவையார்)
சிதம்பரமும்மணிக்கோவை
[சீகாளத்திபுராணம்]
நான்முகச்சருக்கம்
சுக்கிரநீதி.
[சூளாமணி]
அரசியற்சருக்கம்
குமாரகாலச்சருக்கம்
தூதுவிடுசருக்கம்
நகரச்சருக்கம்
சேந்தன்திவாகரம்
[தணிகைப்புராணம்]
இந்திரனருள்பெறுபடலம்
வீராட்டகாசப்படலம்
திணைமொழியைம்பது
[திருக்கழுக்குன்றப்புராணம்]
தீர்த்தச்சருக்கம்
நகரச்சருக்கம்
பசுவாரகச்சருக்கம்
திருக்கழுமலமும்மணிக்கோவை
திருப்புகழ்
[திருவானைக்காப்புராணம்]

வழுவாதபது
[காசிகண்டம்]
அமுதேசன்முதலியவிலிங்கத்தின்
சிறப்புரைத்தது

புராணவரலாற்றுப்படலம்
[திருவிளையாடற்புராணம்]
திருநகரப்படலம்
நான்மாடக்கூடலானபடலம்



# நூற்பெயர் முதலியவற்றின் அகராதி

பரிகரியாக்கியபடலம்
பாயிரம் [லம்
மாமனாகவந்து வழக்குரைத்தபட
மாயப்பசுவைவதைத்தபடலம்
வருணனுக்குச் சிவலோகம் காட்டியபடலம்
வன்னியுங்கிணறுமிலிங்கமுமழை
தீர்த்தகிரிப்புராணம் [த்தபடலம்
கந்ததீர்த்தச்சருக்கம்
[நாலாயிரதிவ்வியப்பிரபந்தம்.]
இயற்பா
திருச்சந்தவிருத்தம்
பெரியாழ்வார்திருமொழி
நிகண்டு
[நீலகேசி.]
குண்டலகேசிவாதச்சருக்கம்
[நைடதம்.]
அரசாட்சிப்படலம்
கைக்கிளைப்படலம்
சிறப்புப்பாயிரம்

சையாதிகதையுரைத்தவத்தியாயம்
(8) வாமனவதார முரைத்த வத்தியாயம்
ஸ்ரீ நாரதர் கஞ்சனுக்குரைத்தவத்
[பிரபுலிங்கலீலை.] [தியாயம்
பிரபுதேவர்வந்தகதி
மாயையுற்பத்திகதி
[பிரமோத்தரகண்டம்.] [தியாயம்
பத்திராயுவுக்கு அரசியலளித்தவத்
புள்ளிருக்கு வேளூர்க்கலம்பகம்
[புறப்பொருள் வெண்பாமாலை.]
உழிஞைப்படலம்
பெருந்திணைப்படலம்
வென்றிப்பெருந்திணை
[பெரியபுராணம்]
கழறிற்றறிவார் நாயனார் புராணம்
கோச்செங்கட் சோழ நாயனார் புராணம்
சிறுத்தொண்ட நாயனார்புராணம்
சேக்கிழார்

நகர்நீங்குபடலம்
போருசெய்படலம்
மாலைப்படலம்
வேற்றுருவமைந்தபடலம்
[பதினொராந்திருமுறை.] [மாலை
மூத்தநாயனார் திருவிரட்டைமணி
[பாகவதம்.] [வத்தியாயம்
(9) அரிச்சந்திரன் கதையுரைத்த
உருக்குமிணியுடனீர்த்தவத்தியாயம்
சகடமுதைத்த வத்தியாயம் [யம்
சுபத்திரை மணமுரைத்த வத்தியா
பிரத்துமனன்மணம்புரியத்தியாயம்
திருநாட்டுச்சிறப்பு
வாட்போக்கிக்கலம்பகம்.
[விநாயக புராணம்.]
கௌதமனார் திருவவதாரப்படலம்
[வில்லிபாரதம்.]
இராசசூயச்சருக்கம்
எட்டாம்போர்ச்சருக்கம்
காண்டவதகனச்சருக்கம்
காண்காம்போர்ச்சருக்கம்
மணிமான்வதைச்சருக்கம்
[வேதாரணியபுராணம்.]
சோரசருக்கம்

இவற்றுள் சில நூல்கள் முதற் சம்புடத்தில் எடுத்துக்காட்டப் பெற்றிருந்தும் உட்பிரிவுகளின் வேறுபாட்டால் இதிலும் எடுத்துக்காட்ட வேண்டியவையாயிருந்தமையால் அந்நூல்கள் இவையென்பதற்கு அறிகுறியாக அந்நூற்பெயர்களின் இருபக்கத்தும் இருதலைப் பகரம் [] அமைக்கப் பெற்றிருக்கிறது. அதனில் இல்லாது, இச்சம்புடத்தில் எடுத்துக் காட்டப் பெற்ற நூல்கள்; (கஅ)

மற்றும் பல.

---

மருதக்கலி முல்லைக்கலிகளின்
செய்யுள் முதற்குறிப் பகராதி.

---

---

உ


ஆ. மாணிக்கம்,
மணவழகு தமிழகம்,
செவ்வாய்பேட்டை, சேலம்.


---

உ

கணபதி துணை.

# கலித்தொகை விளம்பரம்.

## இது மூன்று சம்புடமாகும்.

இருபது பவுண்டு பெதர்வெயிட் பேபர்

டிம்மி எட்டுப்பக்கம் ஸைஸ்.

நல்ல காலிகோ பைண்டு செய்யப்பெற்று இதுவரை வெளிவந்த

சம்புடம் ௨.

அவற்றுள்,

| | | | |
|---|---|---|---|
| ௧-ஆம் சம்புடம் பக்கம் ௩௯௩ விலை ரூ | ௩ | 0 | 0 |
| ௨-ஆம் சம்புடம் பக்கம் ௩௯௪ - ௭௪௩. விலை ரூ. | ௩ | 0 | 0 |

தபாற்கூலி வேறு.

௩-ஆம் சம்புடம் பதிப்பிக்கப்பெற்று வருகிறது; அது சுமார் ௪00 பக்கமாகும். அதில் நெய்தற்கலியும் ஆசிரியர்களின் சரித்திரமும் அரும்பத முதலியவற்றின் அகராதியும் உள்ளன. அதற்கு விலை வெளிவந்தபின் குறிக்கப்பெறும்.

௧௯௨௫ ௵ செப்டம்பர் மாதத்துள் முன்பணமனுப்பும் உள்நாட்டாருக்கு, தபாற்கூலி உள்பட மூன்று சம்புடத்தின் விலை ரூ. ௧௨ ௮ 0

வேண்டுவோர் அடியிற்குறித்த விலாஸத்துக்கு எழுதிப் பெறலாம்.

**இ. வை. அனந்தராமையர்.**

பிரஸிடென்ஸி காலேஜ், தமிழ்ப் பண்டிதர்

௧௬, நாகப்பையர் தெரு,

திருவல்லிக்கேணிப் போஸ்ட்,
சென்னை.

உ

## முதற்சம்புடத்தின் அபிப்பிராயம்.

(பிரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள்.)

சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய பிரஹ்மஸ்ரீ, இ வை. அநந்தராமையரவர்கள் பலவருடங்களாக மிக முயன்று நன்கு பரிசோதித்துப் பதிப்பித்துச் சில மாதங்களுக்கு முன்பு வெளிப்படுத்திய கலித்தொகையின் முதற்பகுதிப் புத்தகத்தைப் படித்துப்பார்த்துப் பரிசோதனைமுறை முதலியவற்றை யறிந்து மிக்க ஆநந்தமடைந்தேன். இருபது வருடங்களுக்குக் குறையாமற் பழகி இவர்களுடைய ஆற்றல்களை ஒருவகையாக யான் அறிந்திருப்பினும் இதுகாறும் இவர்கள்பாற் கண்டறியப்படாமலிருந்த விசேட ஆற்றல்கள் பலவற்றை இப்பதிப்பால் நன்கு அறிந்தேன். சிறந்த ஒரு நூல் எத்தனைவகையாக ஆராய்ச்சிசெய்து பதிப்பிக்கப்பட வேண்டுமோ அத்தனைவகையினும் சிறிதும் குறைவின்றி ஆராய்ச்சி செய்யப்பெற்று இப்புத்தகம் விளங்குகின்றது. இப்பதிப்பிலுள்ள விசேடங்களெல்லாம் இதன் முகவுரையைப் படிப்பவர்களுக்கு நன்கு விளங்குமாதலின், இங்கே அவற்றை எழுதவில்லை.

அருந்தமிழ்ப்புலவர்கள், புதுமொழிகளும் புதியபொருள்களுமாகிய அமுதப்பெருக்கத்தைக் கூட்டுண்ணுதற்கு நல்விருந்தென்றும் செந்தமிழ்ச் செல்வர்களுக்கு வாய்த்த ஒரு கருவூலமென்றும் இப்புத்தகத்தைச் சொல்லலாம்.

தமிழ்ப் பாஷாபிமானிகள் இதனை வாங்கிப்படித்து, இங்ஙன் முயற்சியிற் சிறிதும் சலிப்படையாதபடி இப்பதிப்பாசிரியர்க்கும்

பொருளுதவிசெய்து ஊக்கமளிப்பார்களாயின், அவ்வுதவி தமிழ்ப் பாஷைக்கே செய்த பெரியதோ ருதவியாகுமென்பதிற் சந்தேகமில்லை. எந்தக்காரியத்திற்கும் பொருள் இன்றியமையாததென்பது யாவரும் அறிந்ததன்றோ!

சென்னை,
திருவேட்டீசுவரம்பேட்டை,
தியாகராஜவிலாசம். 5-4-25.

இங்ஙனம்:
வே. சாமிநாதையர்.

## II

(செந்தமிழ்.)

கலித்தொகை (பாலைக்கலி, குறிஞ்சிக்கலி) மூலமும் நச்சினார்க்கினிய ருரையும்:—இப்புத்தகம் சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜின் தமிழ்ப்பண்டிதர் பிரும்மஸ்ரீ அநந்தராமையரவர்களால், பலபிரதிகளை வைத்து ஒப்புப்பார்த்து நன்குபரிசோதித்து அச்சிடப் பட்டிருக்கிறது. இதற்குமுன்பு இந்நூல் ஸ்ரீமத். சி. வை. தாமோதரம் பிள்ளை யவர்களாற் பதிக்கப்பட் டிருப்பினும் இப்பதிப்பில் மூலமும் உரையும் பல திருத்தமடைந்துள்ளன. பாட்டுக்களேனும் அவற்றின் பகுதிகளேனும் பிறநூலுரைகளில் எடுத்தாளப்பட்டவற்றை அவற்றிற் குரிய விவரங்களுடன் ஆங்காங்குக் குறித்தும் இன்னும் தோன்றிய பிற குறிப்புக்கள் வரைந்தும், முற்காலத்தவும் பிற்காலத்தவுமான நூற்றுக்கணக்கான நூல்களிலிருந்து பிரயோகங்கள் எடுத்துக்காட்டியும் அச்சிடப்பட்டிருக்கிறது. ௧அ, ௧௯-ம் பக்கங்களில் ௩. - வது குறிப்பில் அருந்ததியைப்பற்றிய பல புராணங்களிலுள்ள கதைகளும் பலநூல்களிலும் வழங்கிவந்தபெயர்களும் ஒருங்கு சேர்த்துக் காட்டியிருப்பதும், இன்னும் கொல்லிப்பாவை முதலிய சில பல குறிப்புக்கள் அருமையான் ஆராய்ந் தெழுதியிருப்பதும் பாராட்டத்தக்கன. (ரக்தாக்ஷி௵ மார்கழிமீ.)

(சுதேச மித்திரன்.)

கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியருரையும் (முதற் சஞ்சிகை. பாலையும் குறிஞ்சியும்) சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் இ. வை. அனந்தராமையரால் பதிப்பிக்கப்பட்டது.

.........இக்காலத்தவராலும் இது போற்றற்குரியதோவெனின் உரியதே யென்பது பல துறைகளிலுமுழைப்பவர் துணிபு. பண்டைக் காலத்துத் தமிழரின் மதக் கோட்பாடுகள் எப்படிப்பட்டன. அவர் நன்றென்றும் தீதென்றும், அழகியதென்றும், அல்லாததென்றும் கருதியனயாவை. அவர்தம் அரசாட்சி எந்நிலைமையிலிருந்தது. அவ ருண்ட உணவும், உடுத்த உடையும், காதலித்த முறையும், கைப் பிடித்த ஒழுக்கங்களும் இன்றுபோலல்லாது வேறுபட்டிருந்தனவோ என்றும் பலவும் ஆராய்ச்சி செய்வோர் கலித்தொகையை ஒரு பெரு நகையேபோல் பாராட்டுவர்.

iii

இஃதொரு புறமிருக்க,.....................விரிவஞ்சி மேற்கோட்கள் சேர்க்காது விடுத்தாம்.

இனி, இந்நூலைக் காலஞ்சென்ற சி. வை. தாமோதரம்பிள்ளையவர் கள் ௧அ௮௭-ஆம் வருடத்திற் பதிப்பித்தார்கள் அப்பதிப்பிலடங்கிய

பிரதிகள்யாவும் செலவாகி விட்டமையான் அவை பணத்தாலும் சிநேகத்தாலும் மற்றெவ்விதத்தாலும் கொளற்கரியனவாய் முடிந்தன. ஆதலின் வேறுவழிகாணாது எனக்கு இனியனவாத்தோன்றிய சிற்சில பாட்டுக்களை மாத்திரம் கையெழுத்தில் பெயர்த்துக்கொண்டேன். என்னைப்போலவே பலரும் இப்புதிய பதிப்பை எதிர்ப்பார்த்திருப்ப ராதலின் இதனை இரண்டாம்முறை அச்சிட்டு உதவியவருக்கு யாம் பெரிதும் நன்றிபாராட்டக்கடமைப்பட்டவராயிருக்க, இதற்குத்தாம் பல வாண்டுகளாக அரிய ஆராய்ச்சிக் குறிப்புகளும் சேர்த்தருளிய பிரும்மஸ்ரீ அனந்தராமையருக்கு நாம்எத்துணைக் கடமைப்பட்டுளோ மென்பது கூறாமலே விளங்கும்..............................................

(14—2—25.)

---

(நவசக்தி.)

கலித்தொகை என்பது பழைய சங்க நூல்களுள் ஒன்று. அஃது எட்டுத்தொகையுள் ஒன்றாயிருப்பது. கலித்தொகையைக் "கற்றறிந்தார் போற்றுங் கலி" என்று தமிழர்கள் போற்றி வருவது கவனிக்கற்பாற்று.

கலித்தொகை, மக்கள் இன்பவாழ்விற் குரிய அகப்பொருளை அறிவுறுத்தும நூல. அகப்பொருளை யுணர்த்தும் நூல் பலவற்றுள் கலித்தொகை தலையாயது என்று கூறுவது மிகையாகாது. அகப் பொருளிலக்கணம் பயின்ற ஒருவன் கலித்தொகை வாசித்து வருவா னாயின், அவன் உடல் உணவு முதலியவற்றையும் மறந்து இன்பத் தால் விழுங்கப்படுவன் என்பது திண்ணம். அவன் நுகரும் இன் பத்தை எழுத்தால் எழுத முடியாது. அத்தகை இன்பத்தை யூட் டும் நூலன்றோ நூல்? கலித்தொகையில் அத்தகைப் பேரின்ப மிருப்பதாலன்றோ கற்று அறிந்தார் போற்றுங்கலி என்று அந்நூல் புகழப்படுகிறது? அவ்வின்பநூல் பயின்று இயற்கை யின்பத்தில் திளைத்திருந்த நம்மவர்கள் இதுகாலை போலிகாவல்கள் பயின்று

களித்து, இன்பமிழ்ந்து வருவது குறித்து எவரே வருந்தார்?

IV

முன்னை நாளில் கலித்தொகை பயிலாத ஒருவனைக் கற்றவரென எவரும் போற்றார். திருத்தக்க தேவர் சேக்கிழார் கம்பன் சிவஞான முனிவர் முதலிய புலவர் பெருமக்கள் கலித்தொகை பயின்ற கல்வியாளர்கள் என்பதுகவனிக்கத்தக்கது. பாட்டின்பத்துக்குறைவற்றுயுள்ள கலித்தொகை படியாத ஒருவன் எங்ஙனஞ் சிறந்த பாவலனுவன்?

இத்துணைச் சிறப்புவாய்ந்த கலித்தொகை, பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தற்கலியென ஐந்து பகுதிகளையுடையது. ஆகவே இந்நூலில் ஐந்திணை காணலாம். இந்நூல், இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலிய உரையாசிரியர் ஆட்சியையும் பெற்றது.

கலித்தொகை மூலமும், அதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் வரைந்த அரிய உரையும் இற்றைக்குச் சுமார் நாற்பதாண்டுகளுக்கு முன்னர்த் தமிழ்த்தாயின் தவப்புதல்வருள் ஒருவராய அன்பர் சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்களால் வெளியிடப்பட்டன. இதுபோழ்து சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான், அனந்தராம ஐயர் அவர்களால் கலித்தொகையின்பாலையும், குறிஞ்சியும், நச்சினார்க்கினியர் உரையோடு வெளியிடப்பட்டிருக்கின்றன. ஸ்ரீமான் ஐயர் அவர்கள் தமிழ்ப்புலமையும் உழைப்பும் இக்கலித்தொகைப் பதிப்பில் நன்கு புலனாகின்றன. தமிழ்ப்புலமை மிக்க ஐயர் எழுதியுள்ள ஆராய்ச்சிக் குறிப்புக் கலித்தொகை பயில்வோர்க்குப் பெருந்துணை செய்வதாகும். இப்பதிப்பிலுள்ள விசேடம் முகவுரையில் விளக்கப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

க. பல ஏட்டுச் சுவடிகளோடு ஒப்பிட்டதினோடும்..............

அகராதியும் எழுதிச் சேர்த்தல் முதலியவையாம். *

அசபாயன் சடையப்பவள்ளல் போன்றார் இல்லா இந்நாளில்,

தமிழ்வளம் அருகிவரும் இக்காலத்தில், தமிழ்ப்புலவர்கள் மிடியால் பிடிக்கப்பட்டு வருந்தும் இச்சமயத்தில் ஸ்ரீமான் அனந்தராம ஐயர் சங்க நூல்களில் தலையாயதை ஆராய்ச்சிக்குறிப்புடன் வெளியிடப் புகுந்தது குறித்து எமது நன்றி பதிந்தலான வணக்கத்தை அத்தமிழ்ப் பெரியார்க்குச் செலுத்துகிறோம். ஏனைய பகுதிகளும் ஸ்ரீமான் ஐயர் விரும்புமாறு விரைவில் வெளிவர எல்லாம்வல்ல இறைவன் அருள் செய்வானாக.

---

* முதற்சம்புடத்தின் முகவுரை பக்கம் 10-1, முதல் 11-9 வரை பார்க்க.

V

இப்பதிப்புக்குத் தமிழ்மக்கள் எத்தகை ஆதரவு நல்குதல் வேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ? தமிழ்ச்செல்வர்கள் தங்களாலியன்ற உதவி புரிந்து கற்றறிந்தார் போற்றுங் கலியைத் தமிழ்நாட்டிற் பரப்புவாராக. (8—4—25.)

---

(பாரத மித்திரன்.)

கலித்தொகை: இந்நூல்கடைச்சங்கமேறிய பனுவல்களின்பகுப்பு ளொன்றாகிய எட்டுத்தொகையுள் ஆறாவதாக வுள்ளது.

இதனுள் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் ஐந்திணைகளினுடைய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் களும், அவற்றின் இயற்கையணிகளும் கற்றோர்களிப்புறுமாறு விளக்கப்பட்டிருக்கின்றன. 'கற்றறிந்தார் போற்றுங் கலி' என்பதனாலும், இவ்வுண்மை அறியலாம்.

இது, படிப்போருக்கு இன்பச்சுவையுடன் அந்தணர், அரசர், அமைச்சர், வணிகர், வேளாளர்களும் பிறருமாகிய ஆடவரும் மகளிரும் இளமையிலும் முதுமையிலும் அறிந்தொழுகவேண்டிய பலப்பலநீதிகளைக்கற்பித்துநன்னெறிகாட்டிப்பயன்றுய்க்கச்செய்வது.

இச்செந்நெறி நூலுக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் உரை யெழுதியிருக்கின்றார். உரையோடு கூடிய இந்நூலை சென்னபட்டினம் அரசாங்கக் கல்லூரித் தமிழ்ப்பண்டிதர் பிரம்மஸ்ரீ இ.வை. அனந்தராமையர் அவர்கள் பன்னெடுங்காலமாக ஆராய்ச்சிசெய்து அச்சிட்டு வருகின்றார்கள்.

கடவுள்வாழ்த்து, பாலை, குறிஞ்சி ஆகிய மூன்று பகுதியும் தொகுத்த முதற் புத்தகம் வெளிவந்து விட்டது. கசடு நூல்களிலிருந்து மேற்கோள்களும் கதைகளும் எடுத்துக் காட்டி ஐயமகற்றி அச்சிட்டிருக்கின்றார்கள். இதனை ஊன்றிப் படிப்பவர்களுக்கு ஐயரவர்களுடைய பேருழைப்பு விளங்காமற்போகாது......(பெதர் வெய்ட்டுக்காகிதத்தில் இச்சம்புடத்தின் விலை ரூ. ரு.)......தமிழ் மக்கள் பலரும் இச்சிறுதொகைப் பொருளைப் பொருட்படுத்தாது அனுப்பி ஒவ்வொரு காப்பி வாங்கிக்கொண்டால் ஐயரவர்கள் இதுபோன்ற பல நூல்களை அச்சிட்டு உதவிபுரிவார்களென்பது ஒருதலை. இதனாற் புகழும் புண்ணியமும் இரு பகுதியினர்களுக்கும் உண்டென்பதைத் தமிழறிஞர்கள் செவ்வனே அறியவேண்டும். (6—4—25.)

---

## VI

*NEW INDIA, Thursday February 19, 1925.*

## REVIEW.

*Kalithohai*, Edited by Pandit E. V. Anantarama Iyer of the Presidency College, Madras; with the commentary of Nachinarkiniar and with notes of his own research, Vol. 1. pp. 395.

Tamil scholars and others who are interested in tamil literature are well aware of this work, "Kalithohai" being the sixth of the famous eight higher literary productions styled "The Ettuthohai" of the ancient Tamil Sangams. All the commentators of the world

renowned work, "Tholkappiam" have sung in praise of the literary merit of this unique work, so much so that the famous "Nachinarkiniar" spared no pains to write an exhaustive commentary for this work which excites the admiration of the renowned scholars of Tamil Literature. This work is of the highest importance as it throws much light on the highly dignified civilisation of the Ancient Tamils. This production is admired as the best contribution to the Tamil literature of the Sangam Age.

Pandit E. V. Anantaramier has exhibited his scholarly erudition in his research notes in this edition of the work and has shown himself as fitted for bringing out a good edition of this famous literary production.

The present volume has brought out two of the five "Kalis" as well as the "Kadavul Vazth" of this work and the other three "Kalis" are expected to be out in a short time.

---

*The HINDU, Saturday February 28, 1925.*

## VERNACULAR PUBLICATIONS.

### THE TAMIL SANGAM CLASSICS.

*Kalithohai*:—Edited by pandit E. V. Anantarama Iyer of the Presidency College, Madras; with the commentary of Nachinarkiniar and with notes of his own research, Vol. 1, pp. 395.

Tamil Scholars and those others that are interested in Tamil literature are well aware of this work "Kalithohai" being the sixth of the famous eight higher literary productions styled "the Ettuthohai" of the ancient Tamil Sangams. All the Commentators of the world-renowned work "Tholkappiam" have sung in praise of

the literary merit of this unique work, so much so that the famous "Nachinarkiniar" spared no pains to write an exhaustive commentary for this work which excites the admiration of the renowned scholars of Tamil Literature. This work is of highest importance as it throws much light on the highly dignified civilization of the Ancient tamils. This production is admired as the best contribution to the Tamil literature of the Sangam age. A through knowledge and mastery over the other literary contributions of that age, such as the "Ahananooru", the "Natrinai," "The Kurunthohai," etc., as well as over "The Tholkappiam" and its commentaries are of the utmost necessity for bringing out a really good edition of this work.

•Pandit E. V. Anantharama Iyer has exhibited his talents in his research notes in this edition of the work and has brought out a good edition of this famous literary production. Not only the Tamil Nadu but also scholars all over the world have been placed under a deep debt of gratitude to our Pandit by this work of his. It is a praisworthy effort in bringing out from obscure corners the light of ancient wisdom.

The present volume has brought out two of the five "Kalis" as well as the "Kadavul Vazth" of this work and the other three "Kalis" are expected to be out in a short time.

---

## இரண்டாஞ் சம்புடத்தின் அபிப்பிராயம்.

மஹாமஹோபாத்தியாயர் தாக்ஷிணாத்தியகலாநிதி,

பிரஹ்மஸ்ரீ உ. வே, சாமிநாதையரவர்கள்.)

சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய பிரஹ்மஸ்ரீ. இ. வை. அனந்தராமையரவர்கள் பலவருடங்களாக மிக முயன்று நன்காராய்ந்து பதிப்பித்துவரும் 'கலித்தொகை நச்சினார்க்கினியருரை' யின் மூன்றாவது மருதக்கலியும், நான்காவது முல்லைக்கலியும் அடங்கிய உ - ஆம் பகுதிப் புத்தகத்தைப் பார்த்து ஆனந்தம் அடைந்தேன். அவர்களுடைய தமிழ்க்கல்வியின் மேம்பாடு இதற்குமுன் யான் பதித்துள்ள புத்தகங்களில் எழுதியிருப்பவற்றாலும், இவர்களுடைய பதிப்பின் அருமை, இந்நூலின் முதற்பகுதிக்கு யான் எழுதியுள்ள அபிப்பிராயத்தாலும் யாவருக்கும் நன்கு விளங்குமாயினும், இப்பகுதியைப் பற்றியும் எனக்குத் தோற்றியவற்றை எழுதும்படி இதன் பதிப்பாசிரியர் விரும்பினமையால் எழுதலானேன்.



தென்னெஞ்சம் ஏடெனக் கற்றான் தழைமுத் தமிழையுமே என்றபடி, பிறருடைய சகாயத்தைச் சிறிதும் விரும்பாமல் தம்முடைய மனத்தையும், மற்றைக் கரணங்களையுமே துணையாகக் கொண்டு இவ்வளவு பெருங்காரியத்தைச் செய்து முடித்த தொன்றே இப்பதிப்பாசிரியரின் ஆற்றலை நன்கு அறிவிக்கும்.

இப்பதிப்பிற் காணப்படும் அரியவிஷயங்கள் பல.

க. இதுகாறும் நன்கு விளங்காமலிருந்த கடின பதங்களுக்கு உரியபொருளை யறிந்து விளக்கித் தக்க மேற்கோள்களைக் காட்டியிருத்தல்.

உ. உரையிலிருந்த பிழைகளை மூலத்தைக் கொண்டும், மூலத்திலிருந்த பிழைகளை உரையைக் கொண்டும், இவ்விரண்டிலும் இருந்த பிழைகளை வேறுபிரதிகளைக்கொண்டும்நீக்கிச் செப்பஞ்செய்திருத்தல்.

௩. ஒவ்வொரு பொருளினுடைய இயற்கையும் நன்கு புலப் படும்படி பழைய நூல்களிலிருந்தும், பிற்காலத்து நூல்கள் பலவற்றி லிருந்தும் பற்பல மேற்கோள்களைக் காட்டியிருத்தல்.

௪. இந்நூலிலிருந்தும், வேறு நூல்களிலிருந்தும் ஆங்காங்கு ஒப்புமைப் பகுதிகள் பலவற்றைக் காட்டி யிருத்தல்.

௫. பழைய இலக்கண வுரையாசிரியர்கள், உரியவிடங்களில் மேற்கோள்களாக ஆண்டிருக்கும் இடங்களைக் கண்டு பிடித்து அவற்றை விளக்கி யிருத்தல்

இவை போல்வன பிறவும் காணப்படுகின்றன.

இயல்பாகவே கலித்தொகை மிக்க மதிப்புடையதாயினும், இப் பதிப்பால் இந்நூல் பின்னும் மிக்க கௌரவத்தையடைந்து விளங்கு கின்றதென்றே சொல்லலாம்.

மேற்படி ஐயரவர்களுடைய பெருமையைப்பற்றி இன்னும் பல படக் கூறுவதற்கு மனமிருந்தும், இதன்மேலெழுதுதற்கு இப் பொழுது நேரமில்லாமையால் இம்மட்டோடே நிறுத்துகின்றேன்.

சிதம்பரம்
ஸ்ரீ மீனாட்சி தமிழ்க்காலெஜ்
18—7—25.

இங்ஙனம்:
வே. சாமிநாதையர்

உ

தேவர்கோமான் துணை

# கலித்தொகை

# மூலமும்
## நச்சினார்க்கினியருரையும்.
## மூன்றாவது மருதக்கலி.



(௬௬) வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட
ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்
டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற

மாங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்
௫ வீங்கிறை வடிக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லை
பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதா மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர;

௯ அணிமென்றோள் யாம்வாட வமர்துணைப் புணர்ந்துநீ
மணமனையா யெனவந்த மல்லலின் மாண்பன்றோ
பொதுக்கொண்ட கவ்வையுட் பூவணிப் பொலிந்தநின்
வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை;
௧௩ கனலுநோய்த் தலையுநீ கனங்குழை யவரொடு
புனலுளா யெனவந்த பூசலிற் பெரிதன்றோ
தார்கொண்டா டலைக்கோதை தடுமாறிப் பூண்டநின்
னீரணி சிதையாதெம் மில்வந்து நின்றதை;
௧௭ தணந்ததன் றலையுநீ தளரிய லவரொடு
துணங்கையா யெனவந்த கவ்வையிற் கடப்பன்றோ

வொளிபூத்த நுதலாரோ டோரணிப் பொலிக்தநின்
களிதட்ப வந்தவிக் கவின்காண விலைந்ததை;

எனவாங்கு;

௨௨ அளிபெற்றே மெம்மைநீ யருளினை னினியாது
வேட்டோர் திறத்து விரும்பியநின் பாகனும்
நீட்டித்தா யென்று கடாஅங் கடுந்திண்டேர்
பூட்டு விடாஅ நிறுத்து.

இது பரத்தையிற்பிரிந்துவந்த தலைவன் *தனது ஆற்றாமையே வாயிலாகத் தலைவியுழைச் சென்றுந்து, அவள்முன்பு வதுவையயர்ந்ததூஉம்அப்போழுது புனலாடியதூஉம் இப்போழுது துணங்கையாடியதூஉங் கூறிப் புலந்தாள் † தலைவி, அவள் புலந்தவாறுகண்டு சென்றுசார்ந்த தலைமகனுடன் ஊடல் தீர்கின்றுள் கூறியது.

இதன் பொருள்.

(௧)வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட
ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த (௨)வரிவண்

---

௧. கலியடி பதினன்கெழுத்தானவந்ததற்கு, "வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட" என்பது மேற்கோள். தொல். செய். சூ. ௪௯. 'அளவடி' இளம். ('வீங்கு' என்பதிலுள்ள குற்றியலுகரம் அலகுபெறுது.)

௨. (அ) "சுரும்புணக் களித்த புகர்முக வேழம்" ஐங். ௩௬௯. (ஆ) "வரிஞிமி றூர்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்" அகம். ௭௮: ௩-௪. (இ) "மிஞிறூர்க்கும் கமழ் கடாஅத்து..................மழகளிறு" (ஈ) "வரிஞிமி றூர்க்கும் வாய்புகு கடாஅத், தண்ணல் யானை" புறம். ௨௨. ௩-௮, ௩௩: ௪௨-௩. (உ) "வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த, வண்ணல்யானை" தொல்.

களவி. ரு. கக. நச். 'எண்ணியது' மேற்கோள்.(ஊ) "அந்தணைற்றத்து, மதக்களி சுவைக்கு மணிநிறப் பறவை..............குஞ்சரம்" பெருங். (க) நிஅ: கஉ - அ.(எ) "கரிமதத் தளியைப் போன்றும்............ தெரிவின்றி நுகர்ந்ததெல்லாம்" மேரு-அ: சுo.(ஏ) "வேழத்தின், வண் ளோர் கருமதமழையும்" (ஐ) "மூசு வண்டின மும்மத யானையி, னுசை கொண்டன போற்றொடர்ந் தாடின, வோசையொண்கடற் குன்றொ டவையுக, வேசை மங்கைய ராமென மீண்டவே" கம்ப. பம்பை. கஉ. சேதுபந்தன. நிஅ.(ஒ) "மடக்கைய னைகமு மாந்தர் மாலையு, முடைக் தரு கடகளி மதமு மூன்னியே, நடந்தொறு முரலவி தமரி னண் புறத், தொடர்ந்துடன் வரவரச் சோலையெய்தினார்" (ஓ) "தும்பி மென்மதத் திடைவிழும் தும்பிபோல்" (ஔ) "வண்டின மொய்த்த (பிறதிப்பெயம்) * தன்றாற்றுமை,† நிலையின புலந்தயாறு.

# மூன்றாவது மருதம் க. ரு.கக

டோக்குய செழில்யானைக் கன(க)டாங் கமழ்நாற்ற
(உ) மாங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்
(ரு) வீங்கிறை வடிக்கொள விழுநாப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பிலு னரும்பவிழ் நறு*முல்லை
பாய்ச(ங)தாதிப் (ச)படர்தீர்ந்து பண்டுதா மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர

எ - து: பெருகுகின்றயிரி லவிழ்ந்த கருங்குவளையைக் கொண்டுவந்து விற்பார் வயலிடத்தே பறித்துக்கொண்டவை சுமத்தலிற் நிலையிடத்தனவாகிய மலரைச் சூழ்தலைச்செய்து அவ்விடத்தே புகுந்த பாட்டினையுடைய வண்டுக்கு † உத்தமவிலக்கணங்கள் ஒக்குஞ் சிறந்த அழகினையுடைத்தாகிய யானையி னுடைய காறுகின்ற நாற்றத்தையுடைய செறிந்த மதத்தை அம்மதத்தில் முன் படிந்திருந்த (ரு)வண்டுகள் விருந்துசெய்ய‡அப்பூவொடு வந்த வண்டுகள் பகற்பொழுதெல்லாந் தங்கிக் கங்குலிடத்து வீங்கின இறைபித் கிடந்த (கூ) தொடியாலே தங் கணவர் மேனி வடுக்கொள்ளும்படியாகத் தாம் விரும்பின

மதம்பொழி கரியும்" (௬௦) "இகலி யனிமுர லிருகவு ளினுமுட னிழியு மதமழை குமிழிக ளெழவெழ.......... .....முடுகின கரிகளே" வில்லி. ருதுபோர். ௬௧. எட்டாம்போர். ரு. பதினொரம்போர். ௪, ௨௦. (அஅ) "வண்டு, மூசண்ட தான முகமா" திருவிளை. வரகுணனுக்கு. ௧௦. என்பவைகளும் (ஆஆ) "தன்மதந் திவண்ட வண்டு தங்கிய காட்டின் வேழம், பின்மதஞ் செறித்திட் டஞ்சிப் பிடிமரந் திரிந்து போகும், வெண்மதக் களிற்று வெய்ய வசனிவே கத்தின் மேவான்" சிவக. ௨௩௧௩. என்பதும். (இஇ) "நீலயானை..................வண்டுபடு, பூநாறு கடாஅஞ் செருக்கி" மணி. ௧௧. ௨௦-௨௨. என்பதும் இங்கே அறிதற் பாலன.

௧. யானைமதம் மெழுமென்பதனை, "கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்தல்" (கலி. ௨௧: ௨.) என்பதனாலும் அதன் குறிப்பாலும் உணர்க.

௨. "விருந்து அயர்ந்தினைக்கு வருமென்பதற்கு "ஆங்கவை விருந்தாற்றப் பகலவ்வி" என்பது மேற்கோள்; தொல். களவி. சூ. ௫௦. நச்.

௩. "ஊதுதல் - நுகருதல்" அகம். ௩௬௨: ௧௧; புறம். ௭௦: ௧௨.

௪. "படரே யுள்ளல்" தொல். உரி. சூ. ௪௨.

௫. "இரிந்ததேன் குவளையி னெற்றி தைவர, முரிந்துபோ தவிழ்ந்து சொரன் குயிர்க்கு முல்லையி, னரும்புசேர்ந் தணிந்திமி ரார்ப்ப வாய்பதம், விருந்தெதிர் கொண்மெனத் தழுவி வீழ்ந்தவே" சீவக. ௪அ.

௬. "தொடி யுற்றவடு" (கலி. ௭௮: ௨௨.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

பிரதிபேதம்) * முல்லைப்பாய் † தம் உடலிலக்கணங்கள் ‡ பூவோடு,

அதனையே எழுதினர்.

௬. [illegible] - மருதநிலம் செய்தலும்.

௭. தொல். உவம. சூ. உஉ.

[illegible] "[illegible]" (கலி. ௭: ௩, ௨௦:௩,௩௨௪: ௧௨.) (ஆ) "[illegible]" (கலி. ௩௩: ௯) (இ) "[illegible]" (கலி. [illegible] [illegible] (ஈ) [illegible] ௭ - [illegible] [illegible].

[illegible] [illegible], † [illegible]. ‡ [illegible] [illegible].



எ-து: ஆரவாரத்தாற்*பொலிவுபெற்ற (க)சிறப்பில்லாமையைக்கொண்ட(உ) பரத்தையரைப் பூப்பேசிக்கொள்கின்ற †கலியாணத்திலுண்டான நின்னுடைய அழகினையுடைய ‡நாறுகின்றமணத்தினை விடியற்காலத்தே யாங்கள்பெற்றது யாம் ||அணைபோலும் மெல்லியதோள் மெலியும்படியாக நின் நெஞ்சிற்கு அமர்ந்த பரத்தையரைக் கூடி மணமனையிடத்தா யென்று பிறர்சொல்ல நினக்கு உண்டான வனப்பத்திலும் மாட்சிமையுடையதொன்றன்றோ? எ-று.

÷சௌவையிற் பொலிந்த பொதுக்கொண்ட பூவணி வதுவையென மாறுக.

(௩)மருதத்திற்குச் சிறுபொழுது வைகறையென்பதுதோன்ற × வைகறைப்பெற்றதை என்றாள்.

கரு கனலுநோய்த் தலையுநீ கனங்குழை யவரொடு
புனலுளா யெனவந்த பூசலிற் பெரிதன்றே
(அ)தார்கொண்டா டலைக்கோதை தடுமாறிப் பூண்டநின்
னீரணி சிதையாதெம் மில்வந்து நின்றதை

---

(அ) பொதுவென்பது சிறப்பென்பதற்கு எதிர்மொழியாக வழங்குதலும், (ஆ) "எதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது" (புறம். ௩௮: உஎ) என்புழி, பொதுமொழியென்பதற்குச் சிறப்பில்லாதமொழி

யையென்றும் (இ) "புலமிக் கவரைப் புலமை தெரிதல்,.........பொது மக்கட் காகாதே" (பழ-ரு) என்புழி, பொதுமக்கட்கென்பதற்குச் சிறப்பில்லாத மக்கட்கென்றும் முன்னோரால் உரை எழுதப்பெற்றிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

௨. "நூறுபத் தடுக்கி யெட்டுக்கடை நிறுத்த, வீறுயர் பசும்பொன் பெறுவ திம் மாலை, மாலை வாங்குநர் சாலுநங் கொடிக்கென" சிலப். ௩: ௧௧௪ - ௧௧௬.

௩. தொல். அகத். சூ. ௮. ௩௪. உரையிலும் மருதத்திற்கு வைகறை வந்ததற்கு, "அணைமென்றோள்.........பெற்றதை" என்னும் பகுதி மேற்.

௪. (அ) "தகைத்தகோதை தாரொடுபொலியப், புணர்ந்துட னாடுமிசையே" (மது. ௨௬௫-௨௬௬.) (ஆ) "தாருங்கோதையும் - மைந்தர்தாரும்மகளிர் கோதையும்" (இ) "மகளிர் கோதை மைந்தர் புனையவு, மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்" (பரி. ௯: ௪௧.உரை, ௨0: ௨0-௨௧.) (ஈ) "கோதையுந் தாரும் பிணங்கக் கொடுங்குழைக், காதன் மகளிரு மைந்

தருங் காணிய" (சீவக. ௨௧௧௧.) எனவும் (உ) "மைந்தர் கண்ணி மகளிர் சூடவு, மகளிர் கோதை மைந்தர்மலையவும்" (பட். ௭0௯-௧௧0.) எனவும்

(பிரதிபேதம்) * பொலிபெற்ற. † கல்வியானைத்தி னுண்டான ‡ காறுமணைத்தினை ‖ அணைபோல மெல்லிய ÷ கௌவைபட்டபொலித்த. × வைகறைபெற்றதை





எ - து: நின் மார்பின் மாலையை வாங்கிக்கொண்டவளுடைய நெற்றிக் கட்டை வைகறையிலேவருதலின் மணத்தமொழிப் *பூண்ட இரண்டு அணியும் கெடாமல் எம் இல்லிடத்தே வந்துநின்றது எம் மேனி கனலுதற்குக் காரணமான காமநோய்க்கு மேலேயும் நீ (க) பொன்னாற்செய்தமகரக்குழையையுடைய (உ) பரத்தையருடனே புனலிடத்தே விளையாடுகின்றாயென்று பிறர்சொல்ல நினக்கு உண்டான ஆரவாரத்திலும் பெரியதொன்றன்றோ? எ - று.

ஆடவர் கோலமும் மகளிர் கோலமுங் கொண்டு வந்துநிற்றலின்

இரண்டணியென்றாள்.

௧௭ துணைந்ததன் றலையுநீ (௩)தளரிய லவரொடு
(௪)துணங்கையா யெல்வந்த கவ்வையிற் (௫)கடப்பன்றே
வொளிபூத்த நுதலாரோ டோரணிப் பொலிந்தநின்
களிதட்ப வந்தவிக் கவின்காண விலைந்ததை

எ - து: ஒளி பொலிவுபெற்ற நுதலினையுடையாரோடே கூடுதலானுண்டான (௬)பூண்வலிக் கிடத்தலின் அவர்க்கும்நினக்கும் ஓரணியாகப் பொலிவுபெற்ற நின் செருக்குப் பிறர்பாற் செல்லாமல் அமைதி பிறப்பித்துத் தடுக்கையினாலே வந்த இவ்வழகை யாங்கள் காணும்படி பொருந்தினது நீ! என்னைப்பிரிந்த இதற்குமேலேயும் நின்னைப் பெறுதுடதளர்ந்த இயல்பினையுடையாரோடே துணங்கைக்கூத்தாடினையென்று பிறர்சொல்ல நினக்கு உண்டான ஆரவாரத்திலும் மிகுதியானதொன்றன்றோ ? எ - று.

†எனவாங்கு

(ஊ) "தாரு மாலையு மயங்கிக் கையற்று" (சிலப். ௨: ௫௫.) எனவும் வருவன ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

௧. கனங்குழை யென்பதற்கு, பொன்னாற்செய்த மகரக்குழை யென்றே பலவிடத்தும் இவர் பொருள் கூறினும் இந்நூல். ௧௧: ௭. இல், பொன்னாற்செய்த கனவியகுழை என்று எழுதியிருத்தலால் பொன் முதலாய உலோகங்களினும் கனமுடையதென்பது பற்றி இவ்வாறு பொருள் கொண்டனர்போலும்; நுறள் ௧௦௮௧. பரி. உரையும் பார்க்க. கனமென்பது பொன்னின் பரியாயநாம மென்பாரு முளர்.

௨. "கூடியார் புனலாடப் புணையாய மார்பினில்" (கலி. ௭௨: ௧௫) என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

௩. (அ) "தளரியால்" கலி. ௧௧௩: ௬. (ஆ) "தளரியலாய்" கார். ௭. (இ) "தளரியல்பொருட்டின்வந்தசீற்றமும்" கம்ப. இராவணவதை. ௨௦௪.

௪. "துணங்கையுளரவம்" கலி. ௭௦: ௧௪ என்பதன் குறிப்புப்பார்க்க.

௫. "கடப் பன்றே கனங்குழாய்" கலி. ௫௭: ௧௫.

௬. "பொன்னாலும் புக்கொளிப்பப் புல்லுவன்" நள. சுயம். ௮௪.

(பிரதிபேதம்) * பூண்டவிரண்டினையுங் கெடாமல். †எனவாங்கு - ஆங்கசை அசைபெற்றேயெம்மை.

எ-து: என்று யாங்கள் காணும்படியாக; எ - று.

ஆங்கு, அசை.

உஉ அளிபெற்றே மெம்மைநீ யருளினை விளியாது
(௩)வேட்டோர் திறத்து விரும்பிய*நின் பாகனும்
நீட்டித்தா யென்று கடாஅங் கடுந்திண்டேர்
பூட்டு விடாஅ;நிறுத்து.

†எ - து: நீ ஈண்டு வருதலாலே நினது அளியைப்பெற்றேம்; நீயும் எம்மை அருளினை; இதுவே அமையும்; இனி நீ விரும்பியோர்திறத்தே நீ செல்லுதலை விரும்பிய நின்பாகனும் பூட்டுதலைவிடாத கடிய திண்ணியதேரை நீ இவ்விடத்தே தாழ்த்தாயென்று கருதி அது நிற்கும் நிலையிலே செலுத்தும்; அதற்கு முன்னே சென்று அப்பரத்தையர் அன்பு கெடாமல் அவ்வன்பை ‡நிறுத்துவாயாக; எ - று.

விளியாது நிறுத்து எனக் கூட்டுக.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (௩)

(௩எ.) காழுற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து
சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலந்
தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்
னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்;

௬ நலத்தகை யெழிலுண்க ணல்லார்தங் கோதையா
லலைத்தபுண் வடுக்காட்டி யன்பின்றி வரினெல்லா
புலப்பேன்யா னென்பேன்ம னந்நிலையே யவற்காணிற்
கலப்பே னென்னுமிக் கையறு நெஞ்சே;

௧. "காம நிலையுரைத்தலும்" என்னும் தொல். களவியல், ௨௪-ஆம் சூத்திரத்தின் இளம்பூரணருரையில் "பாங்கன் கூறுவன நோய்மருங் கறிந்து அடக்கிக்கொண்டு எடுத்து மொழியப்படுதலன்றிக் கூற்று அவனின்மை உணர்க; அது: 'வேட்டோர்................சிறந்து' என[வும்] வரும்" என்பது காணப்படுகிறது; அதனை நோக்கப் புறங்கனே இக்குத்தேர்ப்பாகனை யிருந்தனனென்றுகொள்ள வேண்டுமென்று தோற்றுகிறது. இஃது ஆராய்தற்பாலது.

(பிரதிபேதம்) * கின்பாலனி நீட்டித்தாயென்று † எ - து என்று பாங்கன் காமம்படியாக் கிளவி ‡சிறந்தவாயென்றும் விளியாது சிறந்தெனமாறுக இதனுள்.



௧0 கோடெழி லகலல்குற் கொடியன்னார் முலைமூழ்கிப்
பாடழி சாந்தினன் பண்பின்றி வரினெல்லா
வூடுவே னென்பேன்ம னந்நிலையே யவற்காணிற்
கூடுவே னென்னுமிக் கொள்கையி னெஞ்சே;
௧௪ இனிப்புணர்ந்த வெழினல்லா ரிலங்கெயி றுறுஅலி
னணிச்சிவந்த வடுக்காட்டி நாணின்றி வரினெல்லா
துனிப்பேன்யா னென்பேன்ம னந்நிலையே யவற்காணிற்
றனித்தே தாழுமித் தனியி னெஞ்சே;
எனவாங்கு;
௧௬ பிறைபுரை யேர்நுதா றுமெண்ணி யவையெல்லாந்
துறைபோத லொல்லுமோ தூவாகா தாங்கே
யறைபோகு நெஞ்சுடை யார்க்கு.

இது வாயின்மறுத்த தலைமகள் ஆற்றாமைவாயிலாகப் புக்குக்கூடிய தலைமகனது நீக்கத்துக்கட் புக்க தோழிக்குக் கூறியது.

இதன் பொருள்.

கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட (௧)மலர்வேய்ந்து
சீர்முற்றிப் (௨)புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலங்

௧. (அ) "மலரு, நாறுபு திகழும் யாறுவா லாறு" (ஆ) "மாறுமென் மல ருர் தாருங் கோதையும்... ......மண்டி.........வேறு இன்றிவ் விரி புனல் வரவென" (இ) "மலைவி ளிழியருவி மல்கிணர்ச் சார்ச்சார்க், கரைமரஞ் சேர்ந்து கவினிமடவார், கனைசேர் கதுப்பினுட் டன்போது மைந்தர், மலர்மார்பிற் சேர்ந்த மலரிதழ் தாஅய், மீனூம் பூத்த வியன்கம்லை கந்திய, வானம்பெயர்ந்த மருங்கொத்த வெஞ்ஞான்றுந், தேனிமிர் வையைக் கியல்பு" பரி. ௯: ௪௧ - ௨, ௯: ௪௯ - ௫0, ௧௧, ௩௨-௩௮. (ஈ) "வையையென்ற பொய்யாக் குலக்கொடி,........புண் ணிய நறுமல ராடை போர்த்து... ........புனல்யா றன்றிது பூம்புனல் யாறென" சிலப். ௧௩: ௧௭0 - ௧௭௪. என்பவையும் (உ) "பூகி ரைத்து மென் ருது பொருந்தியும்,........வான வில்லே நிகர்த்தது வாரியே" கம்ப. ஆற்று. ௮. (ஊ) "கொங்கு லாமலர்க் கொன்றைகூ விளகுர வுழிஞை, பொங்குமாசுணங் தாதகிபாடலம் புன்னை, துங்க மார்திருத் தலைமிசைக் கொண்டுறத் தொடர்பா, லெங்க ளையகன் றன்னையு மொத்ததவ் விருநீர்" கந்த. ஆற்றுப். ௧௧ என்பவையும் ஒப்புநோக்குக.

௨. (அ) "வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப, செய்யபரி பாடற் றிறம்" (ஆ) "புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி, வையை



(௧)தார்முற்றி யதுபோலத் தகைபூத்த(௨)வையைதன்
(௩)னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்
போர்(௪)முற்றொன் றறியாத புரிசைசூழ் *புனலூரன்

யென்ற பொய்யாக் குலக்கொடி" சிலப். ௧௩: ௧௬௯ - ௧௭0. என்பன ஈண்டறிதற் பாலன.

௧. (அ) "மாநில மடந்தை..................ஆரம் போலச், செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்று" சிறுபாண். ௧ - ௩. (ஆ) "ஆரப் பேரியாற்று

........................ மண்ணக மடந்தை" சிலப். ௧: க - ௩. (இ) "காவிரி, மாதர்மண் மடந்தைபொன் மார்பிற் ருழ்ந்ததோ, ரோதநீர் நித்திலத் தாம மொக்குமால்" பெரிய. திருநாட்டுச். ௨.

௨.* (அ) "அமிழ்த வெண்டிரை வையைய மொருபுறத் தகழாம்" (ஆ) (வையை) "கல்லென்றதிர் சும்மைப்புனல் கடிமாமதிற் புறம்போய்,

....................புல்லும்புரி சையுந்தள்ளியுள் புகுகின்றதை யன்றே" திருவிளை. திருநகரப். ௬௭. பரிநரி. ௬௭ - ௮. என்பனவும் (இ) "புனல் பொரு புதவி னுறந்தை" அகம். ௨௩௭: ௧௪. (ஈ) "புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்குங், கல்லென் பொருநை" புறம். ௩௮௭: ௩௩ - ௩௪. என்பனவும் (உ) "சிவந்துகரை யிழிதரு நனந்தலைப் பேரியாற்றுச், சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇய, ருவலை குடி புருத்துவரு மலிர்நிறைச், செந்நீர்ப் பூச லல்லது, வெம்மை யரிதுநின் னகன்றலை நாடே" பதிற். ௨௮: ௧௦ - ௧௪. என்பதும் (ஊ) "ஒருகோம் பானைய மொராயிரத் திரட்டிவெண் கோட்டுச், செருவின் வேழமுந் திரளிமிற் றருமவெள் ளேறும்,• பொருவி லோகையிற் பொருதி[ய](டப்) படுவ தல்லாது, மருவ வார்களிற் பொருதிடப் படாதவவ் வரையே" திருவானைக். புராணவரலாற்றுப். ௯. என்பதும் (எ) "கோற்றொடிப் புரிசை முற்றிக் குளிர்நிழற் படப்பை சாய்த்துத், தோற்றிடு காட்டி னுள்ள பல பொருள் கூறை யாடி, யேற்றம ருடற்றும் வேந்தர் நாட்டினி விகலி னேடும், வேற்றர சிறுத்தா லென்ன மேவும்வை தரணியாறும்" கூர்ம. நவகண்டத். ௩௯. என்பதும் இங்கே அறிதற்பாலன.

௩. "அதிராச்சிறப்பின்மதுரைமூதூர்" என்பதற்கு, 'பகைவரால் நடுக்க மில்லாத சிறப்பினையுடைய மதுரையாகிய மூதூர்' என்று பொருள் கூறி அதற்கும், "முதிர்கடன் ஞாலம்" என்புழி 'முதிர்தல்' என்பதற்கு, 'முற்றுதல், சூழ்தலுமாம்' என்று பொருள்கூறி அதற்கும், "நீர்முற்றி மதில்பொருஉம்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டினர், அடியார்க்கு நல்லார்; சிலப். பதிகம். ௩௧, ௨: ௩௦.

௪. "முற்று - வினைத்தல்" பு - வெ. உழிஞை. ௨௯.

(பி)ரதிபேதம். *புனனாரன்

எ - து: கார்காலம் முதிர்கையினாலே பூங்கொத்துக்கள் அலர்ந்த தமழ் மின்ற இதழ்களையுடையனவாகிய மலர்களைச் சூடித் தலைமைமுதிர்ந்து புலவர் வாயிற் கவிகளைத் தான்பெற்று, ஊரைச் சூழ்ந்து வருதலிற் பெரிய நிலமடந்தைதான் ஒரு பூமாலையைச் சூழ்ந்துகொண்டிருந்த தன்மைபோல அழகு பொலிவுபெற்ற வையையாற்றினது நீர் சூழ்ந்த மதிலைப்பொரும் பகையன்றிப் பகைவர் போரால் *வளைத்தலைச் சிறிதும் அறியாத புரிசை சூழ்ந்த புனலையுடைத்தாகிய மதுரையை யுடையவன்; எ - று.

புனலூரானென்றது பாண்டியனையாதலிற் பாட்டுடைத் தலைவனே கிளவித்தலைவனுக்குகூறிய அகப்புறமாயிற்று. இதற்கு விதி "காமப் பகுதி கடவுளும் வரையா, ரேனோர் பாங்கினு மென்மனார் புலவர்" (க)என்பதனுள் 'ஏனோர்பாங்கினும்' என்பதனாற் கூறினும்.

௯ நலத்தகை பெறிழையங்க (உ)னல்லார்தங் கோதையா
லலைத்தபுண் வடுக்காட்டி யன்பின்றி வரினெல்லா
(௩)புலப்பேன்யா னென்பேன்மற் றந்நிலையே யவற்காணிற்
கலப்பே னென்னுமிக் கையறு நெஞ்சே

க. தொல். புறத். சூ. உ௮. (அ) இதனுரையிலும் இவரால், குறிப்பினாற் பாட்டுடைத்தலைவனைக் கிளவித் தலைவனுகக் கூறியதற்கு, "சீர்முற்றி ...........புனலூரான்" என்பது மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது; (ஆ) முன்னோர்கூறிய குறிப்பினு மென்பதற்கு, முதலாசிரியர் கூறிய காமக்குறிப்பினு மென்று பொருள்கூறி, அஃது இயற்பெயர் சார்த்தி வருதற்கு "வையைதன் னீர்முற்றி........ ..........புனலூரான்" என்பதை மேற்கோள்காட்டி, இது குறிப்பினாற் பாட்டுடைத் தலைமகனைக் கிளவித் தலைமகனுகக் கூறியதென்பர், இளம்பூரணரும்; தொல். புறத். சூ. உஉ. 'வழக்கியன்'

உ. (அ)"குறுகவென் றொள்ளிழை கோதைகோ லாக, விறுகிறுக யாத்துப் புடைப்ப" (ஆ) "கமழ்கோதை கோலாப் புடைத்து" பரி. க: ௩௧-௪௦.

கஉ: டு௮. (இ) "கோதை கோலா விறைஞ்சி நின்ற, ஊதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்" கலி. க௨௮: க௮ - ௯. (ஈ) "மகளி

ரோச்சு, மட்டவிழ் மாலை போல மகிழ்ந்துபூண் மார்பத் தேற்று" (உ) "சந்தனத் தளிர்கள் மாலை, யோக்கினர் கண்ணி சுண்ண முடற்றினர்" சீவக. உ௨௧௬. உ௧௧௬. (ஊ) "நீர்தலைக் கொண்ட நெடும்பெருந் துறையிற், போர்தலைக் கொண்டு பொங்குபு மறலிக், கொங்கலர் கோதை கொண்டுபுறத் தோச்சியும்" பெருங். (க) சவ: க௮௪ - க௮௯. (எ) "கோதைகொண் டோச்ச வாரும்" கம்ப. நீர்விளை. இ.

௯. "புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம், கலத்த லுறுவது கண்டு" குறள். ௧௨௫௯.

(பிரதிபேதம்) * விளக்கி.

## மூன்றாவதுமருதம் உ. ௨௦௭

எ-து: எடீ! எழிலையுடையவாகிய மைபுண்கண்ணினையுடைய பரத்தையர்தம் கோதைகளாலே அடித்தகலத்தினையுடைய அழகினையும் (க) நகத்தாலும் எயிற்றாலும் அலைத்தபுண்களையும் (ட) பூண்கள்பொறித்த வடுக்களையுங்காட்டி என்னிடத்து அன்பின்றி வருவானாயின் யான் புலப்பேனென்றிருப்பேன், அதனாற் பெற்றதென்? இச்செயலற்ற நெஞ்சு அவனைக்காணில் அத்தவறுகளோடு கூடிய அந்நிலைதன்னிலே யான் கூடுவேனென்று கூறாநிற்கும்; எ-று.

௧௦ கோடெழி லகலல்குற் (௩)கொடியன்னார் முலைமுழ்கிப்
பாடழி சாந்தினன் பண்பின்றி வரினெல்லா
வூடுவே னென்பேன்ம னந்நிலையே யவற்காணிற்
கூடுவே னென்னுமிக் கொள்கையி னெஞ்சே

எ - து: எடீ! பக்கமுயர்ந்த எழுச்சியையுடைய அகன்ற வல்குலையுடைய கொடியையொக்கும் பரத்தையர் முலைகள் அழுத்திப் பூசின பாடழிந்த சந்தனத்தையுடையனாய்நன்மக்கள்குணமின்றிவருவனாயின் ஊடியிருப்பேனென்று கூறுவேன், அதனாற் *பெற்றதென்? யான் கூறியதனைக் கொள்ளுதலில்லாத இந்நெஞ்சு அவனைக் காணில் அத்தவறுகளோடேகூடிய அந்நிலைதன்னிலே யான்கூடுவேனென்று கூறாநிற்கும்; எ - று.

கச இனிப்புணர்ந்த வெழினல்லா ளிலங்கெயி றுறூஅவி
ளனிச்சிவந்த வடுக்காட்டி நாணின்றி வரினெல்லா
துனிப்பேன்யா னென்பேன்ம னந்நிலையே யவற்காணிற்
றனித்தே தாழுமித் †தனியி னெஞ்சே

எ-து: எமே! இப்பொழுது புதிதாகக் கூடிய அழகினையுடைய பரத்தையருடைய விளங்குகின்ற எயிறுகள் அழுந்துகையினாலே மிகுதியையுடைத்தாய்ச் சிவந்த வடுக்களைக் காட்டி நாணமின்றியே வரின் துனித்திருப்பேன் யான்

ன்ற கூறுவேன், அதனாற் பெற்றதென்? ‡இத்தனிமையான மனத்தைத் தனக்கு ||உரித்தாக்குதலில்லாத நெஞ்சு அவனைக்காணில் அத்தவறுகளோடே கூடிய அந்நிலைதன்னிலே என்னை நீக்கித் தான் அவனிடத்தேதாழும்; எ - று.

உறூஅவி, விகாரம்.

---

க. "பேணுனென் றுடன்றவ ருகிர்செய்த வடுவினுன், மேணுனின் றோள்சேர்ந்தார் கைசேர்ந்த விதழினை" கலி. எஉ; கக-உ. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. "தொடி வடுக்காணிய" கலி. எக: கக. என்பதும் அதன் குறிப்பும் கண்டறிதற் பாலன.

ங. "அலமர லுண்கண்ணு ராய்கோதை குழைத்தநின், மலர்மார்பின் மறுப்பட்ட சாந்தம்வக் துரையாக்கால்" கலி. எங. கஉ-ங. என்பதும் அதன் குறிப்பும் கண்டு ஒப்புநோக்கற்பாலன.

பாடபேதம்: *பெற்றதென் இத்தயான், †தனிநெஞ்சே, ‡இத்தத்தனிமனத்தை, || உரிதாக்குதலில்லாத.

ச௫ கலித்தொகை.

இத்தாழிசைமூன்றும்(க)மறுத்துரைப்பதுபோல்உவகைபற்றிக்கூறியன. "உடம்பு முயிரும் வாடியக் காலு, மென்னுற்றனகொ லிவையெனி னல்லது, கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை" (உ) என்பதனால் இக்கெஞ்சிற்குத் தன்றன்மையென்பதொன்றன்றியது என்னென்றவாறுகாண்க.

†எனவாங்கு

எ - து. என்று ; எ - று.

ஆங்கு, அசை.

கக பிறைபுரை ‡யேர்நுதலா (௩)யெண்ணியவை யெல்லாந்
துறைபோத லொல்லுமோ தூவாகா தாங்கே
(௪)பறைபோகு நெஞ்சுடை யார்க்கு

எ-து: பிறையையொத்த ||அழகினையுடைய நுதலினையுடையாய்! தமக்கு வலியாகாதே அவனிடத்தே கீழ் அற்றுச் செல்லும் நெஞ்சினையுடைய மகளிர்க்குத் தாம் நினைத்தவையெல்லாம் முடிவுபோதல் பொருந்துமோ? பொருந்ாதன்றே! என்றாள் ; எ - று.

இதனால், தலைவிக்கு இளிவுபிறந்தது.

இது வெள்ளைச்சுரிதகத்தால் இற்ற ஒத்தாழிசைக்கலி. (உ)

---

௧. மறுத்துரைப் பதுபோல் உளகைபற்றிக் கூறியதற்கு, "கோடெழில் ..................கொள்கையி னெஞ்சே" என்பது (தொல். பொருளி. சூ. உ. கச.) மேற்கோளாக் காட்டப்பெற்றுள்ளது.

௨. "தொல். பொருளியல். சூ. க. இச்சூத்திரத்தின் இவுரையில் "இளிப் புணர்த்த............நெஞ்சே" என்பது மேற்கோளாக "இதனை யான் துணித்தல் வல்லேன் என்னெஞ்சிறகுத் தன்றன்மை யென்பதொன் றில்லை; ஈடேன் னென்றலின் அவ்வாறு காண்க" என்றும் குறிப்புக் காணப்படுகின்றது.

௩. (அ) "நின்மார்பு தோயல மென்னு மிடையு நிறையு மெளிதோநிற் காணிற், கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னுந் தம்மோ, டுடன்வாழ் பகையுடை யார்க்கு" கலி. எஎ: உக - ௪. (ஆ) "நின்நீமை, பொறை யாற்றே மென்றல் பெறுதுமோ யாழ, நிறையாற்று நெஞ்சுடை யேம்" கலி. ௯௦: உஎ - ௯.

௪. (அ) "நெஞ்சறை போகிய வறிவி னேற்கே" அகம். உ௯: உ௯. (ஆ) "அறைபோய் நெஞ்ச மவன்பா லணுகினு, மிறைவளை முன்கை பீங் கிவன் பற்றினர், தொன்று காதலன் சொல்லெதிர் மறுத்த, னன்றி யன்றென நயெங்கினன் மயங்கி" மணி. ௯அ: ௯௩௦-௯௯௯. (இ) "நின்ற

பரிவுறலும்" திருவிளை. வரகுணனுக்குச். ௪0; வன்னியும். உஉ என்பவைகளும் (ஈ) "ஒட்டை செஞ்சின ராய்" (சீவக. ௬௪௨) என்பதற்கு, 'அறைபோய நெஞ்சினராய்' என்றெழுதியிருக்கும் உரையும் இங்கு ஒப்புநோக்கற் பாலன.

௧. புல்லுதல் மயக்கும் புலவிக்கண் காமக்கிழத்தியர் கூற்று நிகழ்தற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டி, இது மூவகை பரத்தையும் பொது வென்பர், இளம்; தொல். கற்பி. ௬. அ. 'புல்லுதல் மயக்கும்'





வொலிகொண்ட சும்மையான் மணமனை குறித்தெம்மிற்
பொலிகெனப் புகுந்தநின் புலைபனைக் கண்டயாம்;
எனவாங்கு;
உக கனவினுள் வேருகும் வேளா முயக்க
மனைவரிற் பெற்றுவந்து மற்றெந்தோள் வாட
வினைய ரெனவுணர்ந்தா ரென்றேக்கற் றுங்குக்
கனவினு னெய்திய செல்வத் தனையதே
யைய வெமக்குநின் மார்பு.

இது பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனொடு ஊடிய காமக்கிழத்தி தன்காதன்மிகுதி கூறி ஊடியவாறு கண்டு சென்று சார்ந்த தலைமகனுடன் ஊடல் தீர்கின்றள் கூறியது.

இதன் பொருள்.

(க)பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு
மதி*மொழி யிடன்மாலை (உ)†வினைவர்போல் (ந.)வல்லவர்

---

க. (அ)"வையங்காவலர்வழிமொழிந்தொழுகப், போகம்வேண்டிப்பொதுச் சொற்பொறுஅ, திடஞ்சிறி தென்னு மூக்கர் துரப்ப, வொடுங்கா வுள்ளத்து..................சேரலாதனை" (ஆ) "வழுதி, தண்டமிழ் பொது வெனப் பொறுஅன்" புறம். அ: க-௫; ௫௧: ச - ௫. (இ) "பெருநில

முழுதாளும்பெருமகன்" சிலப். க: ௩௧. (ஈ) "ஞாலம் பொதுவெனப் பொறுவாசர்" துறன். சகஉ. பரி. (உ) "கோசசெகட் செம்பியர் கோன், பூவலயம் பொதுநீக்கி யாண்டருளி" பெரிய. கோசசெகட். கஎ. (ஊ) "உலகம்பொது வறநான்முறை யோராழி செலுத்தி" கூர்ம. இந்திரத்துய்மன். உஉ. (எ) "நிலமுழு தாண்டகோமீ [illegible] ரவிகீர்த்தியான னனெனு காமபேர்த்தன்" வில்லி. அருச்சுனன்றவ [illegible] "முழு தலகம்பொதுநீக்கி முழுசெங்கோல் [illegible] கோ அரித்துவசன் சாபந்தீர்த்த. உ. (ஐ) [illegible] குடையும், பிறர்கொளப் [illegible] திகிரி திசை திசை போக்கி [illegible] உ௫

உ. (அ) "கொலையஞ்சா [illegible] போல்" கலி. கO: ௯, சக: அ. (ஆ) [illegible] ராயினும்" பெருங். (க) ௩.அ: [illegible]

௩. "வல்லவர் செதுமொழி [illegible] தொகைக்குமேற்கோள்; தொல். எ [illegible]

(பிரதிபேதம்) *மொழிவிடன்மாலே; †விளையர்



(க)செதுமொழி சீத்த (உ)செவி(௩)செறு வாக
முதுமொழி *நீராப் (ச)புலனு வுழவர்
(௫)புதுமொழி கூட்டுண்ணும் (௬)புரிசைசூழ் புனலூர

எ-து: பிறர்க்கும் இம் மண்ணுலகம் பொதுவென்னும் மொழி இன்றாக மண்ணுலகமுழுதையும்ஆளுஞ்†சக்கரவர்த்திகளுக்கு(எ)அறிவாகிய சொல்லைச் சொல்லுதலை இயல்பாகவுடைய அமைச்சரைப்போல, நல்லவல்ல ஆசிரியராலே பொல்லாவாகியசொற்கள் இடையிற் புகுதாமற் போக்கப்பட்ட தங்

க. (அ) "செதுகாற் குரம்பை"(ஆ)"செதுகாழ் சாய்த்த" அகம். கூ: கச; ௩எ௩: ச; (இ) "புதுக்கண் மாக்கள் செதுக்கணார" புறம். உசக: க.

செவிகள் (க) செய்யுக, முன்னுள்ளசான்றோர்கூறிய செய்யுட்கள்தஞ்சொல்லை வளர்க்கும் நீராக, அறிவினையுடைய நாவாகிய ஏராலே உழுதுண்ணும் புலவருடைய புதிய கவிகளைக் கொள்ளைகொண்டு உண்ணும் மதில் சூழ்ந்த புனலையுடைத்தாகிய மதுரையையுடையவனே ; எ - று.

இதுவும் பாட்டுடைத்தலைவனைக் கிளவித்தலைவனாகக் கூறியது.

சு ஊரன்மன் னுரனல்ல னமக்கென்ன வுடன்வாளா
தோரூர்தொக் கிருந்தநின் பெண்டிர நேராகிக்
களையாநின் குறிவந்தெங் கதவஞ்சேர்ந் தசைந்தனை
வளையின் (உ) வாய் விடன்மாலை மகளிரை நோவேமோ
கேளல னமக்கவன் குறுகன்மி னெனமற்றெந்
தோளொடு பகைபட்டு † நினைவாடு நெஞ்சத்தேம்

எ - து: நமக்கு ஊரன் மிகவும் பற்றுக்கோடல்லனெனச் சொல்லிப் பின்னர் ஒருவர்கூறியது ஒருவர்கூறாதே நீரூர் குடியேற்றவேண்டுவாராய்த் திரண்டிருந்த நின் சேரிப்பரத்தையருடனே யாங்களும் ஒப்பாகி, நமக்கு ‡ அவன் உறவல்லன் அவனை முயங்காதேகொள்ளுங்கோளெனச் ‖ சொல்லி முயங்கக்கருதின எந்தோள்களுடனே மாறுபட்டுப் பின்னை முயங்கக்கருதின

---

நூலார் சிறந்தவை தெரிந்து சொன்ற, வறிந்தவை யமர்ந்து செய்யு மமைதியா னரசனுவான், செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை

தெரிந்து கூறி, யறிந்தவை யியற்றுகிற்கு மமைதியா னமைச்ச ராவார்" சூளா. மந்திரசாலை. க. (எ) "தம்முயிர்க்குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்; வெம்மையைத் தாங்கி நீதிவிடாது நின் றுரைக்கு மெய்யர்" கம்ப. அயோத்தி. மந்திரப். க. (ஏ) "மன்னவர் செவி யழன் மடுத்த தாமென, நன்னெறி தருவதோர் நவியுரிதியைச், சொன்னவ ரமைச்சர்கள்" கந்த.......... ........(ஐ) "மதிநுட்பரு மாகிச் சேர்வில், சொல்லா லுடையார் மனமுங்களி தூங்கச் சொல்லிப்,

பல்லார் பிறர்சொற் பயனுய்ந்து கவர வல்லாா" திருவிளை. பன்றிக் குட்டிகளை. கச. (ஒ)"செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி, வெகுளினும் வாய்வெரீஇப் போர............யமைச்சு" நீதிநெறி. சகு. (ஒ) "சுருக்கிமெய் விளக்கி யினிமையும் பயனுந் தொகுத்தய லார்மொழிக் கிடையாத், திருக்கிளர் மொழியைச் சோர்வற வலைக்கட் ,செல்லுமா றஞ்சுத லின்றி, புரைக்கவல் லவரே யமைச்சர்க ளாவர்" விநாயக. அரசியற்கை. சுOக.

க. "பன்றி நாட்டார் செறுவைச் செய்யென்று வழங்குவர்" நன். பெயரி. ரு. கக. மயிலை.

உ. "வாய்விடேர் தாவென்ப" கலி. சக: கடு.

(-ரேதபேதம்) *எமக்கென்வுடன்வாராது,†கிளைவாகு, ‡இவறுறவல்லன், ||சொல்லுபங்க,

## மூன்றுவது மருதம் ௩. ஃக்க்

நினைவு கெடுகின்ற நெஞ்சத்தினையுடைய யாங்கள் நின்பெண்டிருள் தோர்கிலரன் உரனல்லனென்ற வார்த்தையைக் கேட்டு நின்குறியிடத்தே வந்து ஆண்டுக் காணுமையின் எம்மிடத்தே வந்தாயென்று கருதி எங் கதவத்தைச் சேர்த்து தட்டின கையின் வளையிருவே தம் வரவினைச் * சொல்லுதலை இயல்பாகவுடைய அப்பரத்தையரை நோவேமோ? அதற்கு யாங்கள் உரியேமல்லேமே; எ - று.

இது †"வண்ணம் பசந்து புலம்புறு காலை, புணர்ந்த போல‡வுறுப்பினைக் கிழவி, புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே"(க)என்பதனுன் உறுப்பினை உணர்வுடையதுபோற் கூறிற்று.

கஉ ஊடியார் நலக்தேம்ப வொடியெறிக் தவர்வயின்
மாறிக்கு மவன்மார்பென் றெழுந்தசொன் ணேவேமோ
முகை||வாய்த்த (உ)மூலைபாயக் குழைந்தநின் ருரெள்ள
(ங)வகைவரிச் (ச)செப்பினுள் வைகிய கோதையேம்

எ-து: முகையின் நன்மை வாய்த்த முலைகள்முயங்குகையினுலே ÷செவ்வி தொலைந்த நினதுமாலை எம்மை இகழ்ந்துகூறக், கூறுபாட்டினை × புடைத்தாகிய

||வொலிகொண்ட சம்மையான் மணை÷மனை குறித்தெம்மிற்
பொலிகெனப் புகுந்தநின் புலையனைக் கண்டயாம்

எ - து: ஆரவாரத்தை மாறுமற் றன்னிடத்தேகொண்ட ஆரவாரத்தாலே மணஞ்செய்கின்ற மனையாகக் கருதி எம்முடைய ×மனையிலே பொலிக பொலிகவென்று கூறிப் **புகுந்த நின்னுடைய புலைத்தொழிலையுடைய பாணனைக் கண்ட யாங்கள் சேரிதோறுஞ் சென்று நீ ††சேர்க்த இல்லை விளியின்றையுத் தேரோடே கூடத் திரிதலைச்செய்யும் பாகனைக் குறைகூறவேமோ? அதற்கு யாங்கள் ‡‡உரியேமல்லேமே; எ - று.

சேரியரன் என்றது "ஊராளோர்தேவகுலம்" என்றாற்போல் நின்றது. சம்மையை ஒலி விசேடித்து நின்றது. ||||புலையன், செறற்சொல்.

× ×எனவாங்கு, அசை.

---

மாலையுஞ், சேம மணிகலைச் செப்பினு ளேக்துபு" தூளா. மக்திர. திசு. என்பவையும் இங்கே அறிதற்பாலன.

௯. (அ) "இடைய னெறிந்த மரம்" பழமொழி. ௯௧௪. (ஆ) "இடைய னெறிக்த மாமேயொத் திராமே"பெரியதிருமொழி. (௧௧) அ: ௯. (இ) "இடைமகன் கொன்ற வின்ன மரத்தினேன்" சீவக. ௧௯௧௪. (ஈ) "பெசுதவனோர்மகன், கொன்றிமுலவைபின்கொள்கையாயினேன்" கந்த. மூவாயிரர்வதை. ௭௧. (உ) "கன்றாங் கேள்வ னருளென வெண்ணி காப்புலர்க் துன்னழிக் தாயன், கொன்றநீண் மரம்போ லெழினலம்வாடிக் குற்றுயி ரோமெம்பதை பதைத்தாள்" கூர்ம. இராமன் வைகுந்த. ௯௯. (ஊ) "ஆயன் கொன்ற மரம்போர, மூரண விக்தொரு பற்று மின்றி முடிக்த பாணியின்" தணிகை. இக்திர னருள். ௯௨.

௨. (அ) "ஒடியெறியத் தீரா பகை" பழமொழி. ௯அ௭. (ஆ) "செறிவினை யொடியெறி கிற்பவ ரோத்து" கலிங்க. ௪௯௯. (இ) "ஒடியெறிக் து மூரிவா ரொழுக்கினர்" விநாயக. சிக்தாமணி. ௭அ.

(பிரதிபேதம்) * மாமாக்கிளைத்தச் சேரிப்பரத்தை †ஒடியெறிக்தெனவிகாரம் சேரியரற் சென்று. ‡விளைவினர் || ஒலிகொண்ட ÷மனைக்குறித், × மனையிலேபொலிக வென்று **புகுந்த தம்முடைய ††சேர்வில்லை ‡‡ உரியமல்லேமே |||| புலையன் செற்றச்சொல் × × எனவாங்கு ஆங்கவை கவைினுள்;

௨0 நனவினான் வேறாகும் வேளா முயக்கம்
*மனைவரிற் பெற்றுவந்து மற்றெந்தோள் வாட
வினைய ரெனவுணர்ந்தா ரென்றேக்கற் றாங்குக்
(ஆ)கனவினா னெய்திய செல்வத் †தனையதே
(உ)ளைய வெமக்குநின் மார்பு.

எ - து: எம்மனைக்கண்ணே நீ ஒருகாலத்தே ‡வந்தாயாயின் நின்னைப் பெற்று மகிழ்ந்து நீ நீங்கிய பின் எம் தோள் மெலிகையினாலே அதனை யுணர்ந்தவர்கள் இக்காலத்து இவளும் ||இவரும் இத்தன்மையராயினரென்று சொல்கூறுதலின் அக்கூற்றை யாம் ஏற்றுக்கொண்டு பழையநிலையைப் பெறுதற்கு ஏக்கற்று முயங்குமாறுபோலே வியக்கத்தக்க நின் மார்பினிடத்தே முயங்கினும் உண்மையிடத்து வேறாயிருக்கும் நீ விரும்பாத முயக்கம் எமக்குக் கனவின்கண் வரப்பெற்ற செல்வத்தையொப்ப தோன்றாய் இருக்கும்; எ-று.

இதனாற் பயனின்றென கூறினள். × நனவினான் கனவினானென்பன, உடப்பொருள. நனவு - உண்மை; கனவு - பொய்.

ஐயென்னும் உரிச்சொல், ஐயவென ஈறு திரிந்தது.

இது மெய்யன்றிப்பொய்யாகக்கோடலிற் (க)பொய்யாக்கோடலென்னு மெய்ப்பாடு.

இஃது ÷ ஈரடிமிக்க தாழிசையும் வருதலிற் கொச்சகம். (௪)

(௫.)போதவிழ் பணிப்பொய்கைப் புதுவது தளைவிட்ட
தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறஞ்சேர்பு
காதல்கொள் வதுவைநாட் கலிங்கத்து ளொடுங்கிய
மாதர்கொண் மாணோக்கின் மடந்தைதன் றுணையாக

க. (அ) "கனவுகண்டது நனவினெய்துத, ரேவர் வேண்டினு மிசைதல் செல்லாது, காவ லாளர் கேட்பிற், பெருநகை யிதுவெனப் பேர்த்துரை கொடாஅ" பெருங். (௪) எ: ௧௭0 - ௧. (ஆ) "செம்பொன் கனவினாற் கண்டல் கைப்புகுமோ" நூ... (௧) ௧: ௧, ௪. (இ)

"கண்டகனவின் பொருள்போல யாவும் பொய்" திருவரங்கத். சஉ.

"ஐயப்பாடும்" தொல். உரி. சூ. அஎ.

பொய்யாக்கோடலென்பதற்கு மெய்யைப் பொய்யாக்கோடலென்று பொருள்கூறி அம்மெய்ப்பாட்டிற்கு "கனவினு ளுய்த்தெ............ [illegible]ப்பு" என்பதை மேற்கோள் காட்டினர், பேராசிரியரும்; தொல். [illegible] சூ. உஉ. இ - வி. உரைகாரரும் இதனையே பின்பற்றினர்; [illegible] திறம்.

[illegible] பெற்று †இன்றுபோதே ‡ [illegible] [illegible] இடப்பொருட்டு [illegible] [illegible] பொய்யாக்கோடலிற்பொய் [illegible]

சகக      கலித்தொகை கக.

ரு வேதுடை யந்தண னெரிவலஞ் செய்வான்போ
லாய்தூவி யன்னந்தன் னணிநடைப் பெடையொடு
மேதகத் திரிதரூஉ மிகுபுன னல்லூர ;
அ தெள்ளரிச் சிலம்பார்ப்பத் தெருவின்கட் டாக்கிநின்
னுள்ளங்கொண் டொழித்தாளைக் குறைகூறிக் கொளநின்றாய்
துணிந்தது பிறிதாகத் துணிவில ளிவளெனப்
பணிந்தாய்போல் வந்தீண்டுப் பயமில மொழிவாயோ ;
கஉ பட்டுழி யறியாது பாகனைத் தேர்கொண்டு
விட்டவள் வரனோக்கி விருந்தேற்றுக் கொளநின்றாய்
நெஞ்சத்த பிறவாக நிறையில ளிவளென
வஞ்சத்தான் வந்தீங்கு வலியலைத் தீவாயோ;
கசு இணர்ததை தண்காவி னியன்றநின் குறிவந்தாள்
புணர்வினிற் புகன்றீங்கே புனலாடப் பண்ணியாய்
தருக்கிய பிறவாகத் தன்னில ளிவளெனச்
செருக்கினால் வந்தீங்குச் சொல்லுகுத் தீவாயோ;

எனவாங்கு;

உக கருங்கேழ் பெருமானின் வல்கல் விரைப்புற்றாக்
தாழ்ந்தாய்போல் வந்து தகளில செய்யாது
சூழ்ந்தவை செய்துமற் றோர்ரையு முன் னுவாய்
வீழ்ந்தார் விருப்பற்றக் கால்.

இதுவும் அது.

## இதன் பொருள்.

போதவிழ் பனிப்பொய்கைப் புதுவது தளைவிட்ட
தாதுசூழ் தாமரைத் தனிமலர்ப் புறஞ்சேர்பு
காதல்கொள் (க)வதுவைநாட் கலிங்கத்து ளொடுங்கிய

க. (அ)"சாணிடை நெடிய வாட்கண் டளையவிழ் குவளை பூப்பப், பூணுடை முலையின் பாரம் பொறுக்கலாச் சுனியின் மேலுங், நாணுடை நுடங்கிச்

மையோ னைத முகம் புதைத்த தோற்றஞ், சேணிடை யரவு சேர்ந்த திங்களை யொத்ததன்றே" சீவக. உசகக. (ஆ)"மைம்மலரின் மீ்னைவுள்

மைம்முகிழ் பிடிப்ப, மெய்ம்மயி ரெறிந்துமணி வேர்ந்த லரும்பிச் செ............றேடிகள் செவ்வனிட மாட்டா, வம்மயிலி றுணைதனை (பிரதிபேதம்) * ஒவ்வ.

துணையாகக் காதலித்துக்கைக்கொள்கின்ற கலியாணகாலத்திலே ஒத்தினையுடைய அத்தணன் அங்கியங்கடவுளை வலஞ்செய்வான்போலே (க) மெல்லிதாயவெருட்டு மயிரினையுடைய அன்னம் தன்னுடைய அழகிய நடையினையுடைய பேட்டோடே கூடிப் பூக்கள் அலர்ந்த குளிர்ச்சியினையுடைய பொய்கையிடத்தே நின்ற தாமரையினது புதிதாக முறுக்கு நெகிழ்ந்த தாது சூழ்ந்த தனித்த மலரைப் புறத்தே சேர்ந்து பெருமை தகும்படி திரிதரும் பரந்த புனலையுடைய நல்ல ஊரினையுடையவனே; எ - று.

வலஞ்செய்வான் போலென்ற ஏனையுவமம் பயவுவமமின்றி வினையுவம மாத்திரையை மேல்வருகின்ற கருப்பொருட்குக் கொடுத்து †அதனைச் சிறப்பித்துநின்றது, ‡அன்னத்திற்கு அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திர||விதியாற் கூறுங் கருத்தின்றித் தாமரையைச் சூழவருகின்ற தொழின்மாத்திரையே கோடலின். அத்தணன் எரிவலஞ்செய்வான் = போல அக்கருத்தில்லாத அன்னம் பெடையோடே தனிமலரைச் சூழத் திரியும் ஊரவென்றதனுன் நீயும் அக் கருத்தின்றிக் குலமகளிரைத் தீவலஞ்செய்துவரைந்துகொண்டு பாதுகாவாது ஒழுகுகின்ற நினக்கு எம்மைப் பாதுகாத்தலுளதாமோவெனக் காமக் கிழத்தியும் உள்ளுறையுவமம் கூறினளாகவுரைக்க. இதனை, "ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே"(உ)என்று உவமப்போலியிற் கூறிய விதியாற் கொள்க.

அ (ங)தெள்ளரிச் சிலம்பார்ப்பத் தெருவின்கட் ÷டாக்கியின்
னுள்ளங்கொண் ×டொழித்தானைக் குறைகூறிக் கொள்ளுநாய்
தணிந்தது ।பிறிதாகத் துணிவில விவளெனப்
பணிந்தாய்போல் வந்தீண்டுப் (ச)பயனில மொழிவாயோ

எ - து: தெளித்த உள்ளீடுமணியையுடைய சிலம்பு ஆரவாரிப்ப வந்து தெருவிடத்தே (ரு) தாக்கணங்கு போலத் தாக்கி நின்னெஞ்சை அகப்படுத்திக்

---

க. "ஒய்தலாய்தல் நிழத்தல் சாஅய் ஆவயினான்கும் உள்ளதனுணுக்கம்" தொல். உரி. சூ. ௩௨.

உ. தொல். உவம. சூ. ௨௭.

௩. "தெள்ளரிப் பொற்சிலம்பு" மது. ௪௪௪.

௪. குறள். 'பயனில சொல்லாமை' என்னும் ௨௦-ஆம் அதிகாரம் இங்கே அறிதற்பாலது.

௭. தாக்கணங்கென்பதற்கு, தாக்கி வருத்துகின்ற தாரணங்கு (குறள் ௧௦௮௨. பரி) தீண்ட வருத்தஞ்செய்யுந் தெய்வம்; தெய்வமுமாம் (சிலப். ௩௪: ௧௧௦. அரும்பத) தீண்ட வருத்துந் தெய்வமகள் (சிலப். ௩௪: ௧௧௦ அடியார்க்கு) தீண்டி வருத்துந்தெய்வம் (மணி. ௧:இ. உரை) வருத்தும்

(பெறும்) * செல்லாமை எவ்வே. † அறிவைப்பிறப்பித்தலின்றது, ‡ அவனைத்தீண்டி... ‖ விதித்தலும் × ...



கொண்டபின்னர்க்கைவிட்டவின் நின் (க) வருத்தத்தைச்சொல்லி அழுத்தக் கொள்ளக் கருதுகின்ற நீ அறநியிட்டு வந்த காரியம் வேறொன்றாயிருக்க இவன் தனக்கென ஓர் (உ) அறநியுடையனல்லனென்று கருதி இவ்விடத்தே தாழ்த்தாயைப்போல வந்து பயனில்லாத சொற்களைச் சொல்லக்கடவையோ? அது நின்னை வருத்தாதோ? எ - று.

௭௨. (௩)பட்டுழி யறியாது பாகனைத் தேரொடும்
விட்டவள் வரனோக்கி விருந்தேற்றுக் கொளநின்றாய்
(௪)நெஞ்சத்த பிறவாக *நிறையில னிவனென
வஞ்சத்தான் †வந்திங்கு வலியலைத் தீவாயோ

எ-து: ‡நீ செல்லாதே அகப்பட்ட (௫)பரத்தையரானெஞ்சு வலித்தென்று ‖அறியாது பாகனைத்தேரொடும்போகவிட்டு அவன் உன்னைவிருந்தாக எதிர் கொள்ள அவன் வரவினைக் கருதுகின்ற நீ அவன் வரக்காணாமையினாலே நின்னெஞ்சத்திடத்தன வேறாகிலவாயிருக்க இவன் (௬) நிறையுடையனின்ற

---

தெய்வம் (அகம். ௭:௪. உரை) என்று பொருளெழுதப்பெற்றிருத்தலால் அவ்வுரைகாரர் பலரும் பெரும்பாலும் ஒரு கொள்கையர்; நச்சினார்க்கினியர் "வேய்வென்ற தோளியோர், தாக்கணங் கோமக னோவனைத் தாழ்த்தான்" (சீவக. ௧௪௭௩) என்புழியும் இச்சொற்குத் திருவென்றே பொருள் கூறியுள்ளார். இவர் கொள்கைக்கு, "தாக்கணங்குறை புகற்றாமரை" (சீவக. ௮௭௧) என்பதும் சிலப். அரும்பத. இரண்டாவதுரையும் நிகண்டுகளும் ஒத்தனவாம்.

௧. குறை - ஆகவேண்டிய காரியமுமாம்.

சூழ்ந்தவை செய்துமற் றெம்மையு முன்னுவாய்
வீழ்ந்தார் விருப்பற்றக் கால்

எ-து: பெருமா! நின்னருளால் யாங்கள் உமனஞ்செருக்கேம்;எம்மிடத்தே விருப்பமுற்றுக் (க) குறைந்தாய்போலேவந்துநின்று நினக்குத் தகுதிப்பாடில்லாதவற்றைச் செய்யாதே நீவிரும்பினரிடத்து நகாக்குறியவற்றைச் செய்துமுடித்து ஆண்உள்ள விருப்பமற்றவிடத்துப் பின்புஎம்மையும் நினைப்பாயென ஊடல் தீர்கின்றாள் கூறினாள்; எ - று.

இதனுவ், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது வெள்ளைச்சரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (ரு)

(எ0.) மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடு மன்னத்தன்
னணிமிகு சேவலை யகலடை மறைத்தெனக்
கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை
மதிநிழ னீருட்கண் டதுவென வுவந்தோடித்
துன்னத்தன் னெதிர்வரூஉந் துணைகண்டு மிகநாணிப்
பன்மல ரிடைப்புகூஉம் பழனஞ்சே ரூரகேள்;

எ நலநீப்பத் துறந்தெம்மை நல்காய்நீ விடதலிற்
பலநாளும் படாதகண் பாயல்கொண் டிமைபவாற்
றுணைமலர்க் கோதையார் வைகலும் பாராட்ட
மணமனைத் ததும்புநின் மணமுழவந் தெடுப்புமே;

கக அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணெம்
புதல்வனை மெய்தீண்டப் பொருந்துத லிமைபவா
னினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
றமர்பாடுந் துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே;

கடு வாராய்நீ துறத்தலின் வருந்திய வெமக்காங்கே
நீசிதம் புலாக்கண் ணிமைகூம்ப விமைபவா
னேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின்

தேர்பூண்ட நெடுகென்மான் றெண்மணிவக் கெடுப்புமே;
எனவாங்கு;

---

௪. தாழ்தலென்பது குறைதலென்னும் பொருளில் வருமென்பது, "தாழ்ந்தான்" "தாழ்ந்து" (வேத. சேவ., உகிலே) என்பவற்றிற்கு இவர் எழுதியிருக்கும் உரையாலும் அறிக.

(பிரதிபேதம்) * மனச்செருக்கோடு.

௪௨௨ **கலித்தொகை ஏ0.**

௨௦ மெல்லியான் செவிமுதன் மேல்வந்தான் காலைபோ
லெல்லாந் துயிலோ வெடுப்புக நின்பெண்டி
ரில்லி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணன் புகுதராக் கால்.

இது பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் தோழியை வாயில்வேண்ட அவன் வாயிநேர்வான் நெருங்கிக் கூறியது.

இதன் பொருள்.

(க)மணிநிற மலர்ப்பொய்கை மகிழ்ந்தாடு (உ)மன்னந்தன்
னணிமிகு சேவலை யக(௩)லடை மறைத்தெனக்
கதுமெனக் காணாது கலங்கியம் மடப்பெடை
மதி(௪)நிழ னீருட்கண் டதுவென வுவந்தோடித்
துன்னத்தன் னெதிர்வரூஉந் துணைகண்டு மிகநாணிப்
(௫)பன்மல ரிடைப்புகூஉம் பழனஞ்சே (௬)ணூரகேள்

எ - து: பலமணிகள் போலும் நிறத்தினையுடையவாகிய மலர்களையுடைய பொய்கையிலே சேவலோடு மகிழ்ந்து விளையாடும் அன்னப்பெடை தனது அழகுமிக்க சேவலன்னத்தை அகன்ற தாமரையிலை மறைத்ததாக அதனைக் காணுமற் (எ) கதுமெனக்கலங்கி அத்த அறியாமையையுடையபெடை மதியி னுடைய நிழலை நீருக்குள்ளே கண்டு அச்சேவலென் றுவந்து ஓடிச்சென்று

---

க. "மணிநிற மலர்ப்பொய்கை வளர்தருஞ மயிலோனை" தொல். செய். சூ. கஉ. நச். மேற். "மணி நிற செய்தல்" ஐங். கக; ஐந் - எழு. கo.

†மிகளிடத்தே நின்ற முழக்கும் நின் மணத்தை எமக்கு உணர்த்தும் முழ வோசை வந்து போக்கும், அதுவே குறை; எ - று.

இயைப, அகாவீற்றுத் தொழிற்பெயர். ஆல், ஐயப்பொருட்டு.

கக (உ)அகலநீ துறக்தலி னழிதோவா வுண்கணெம்
‖புதல்வனை மெய்தீண்டப் பொருந்துத —லியைபவா

---

க. கலைகளென்றது. (அ) "வேத்தியல் பொதுவிய வென்றிரு திறத்தக், கூத்தும் பாட்டுக் தூக்குக் துணிவும், பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலுக், தண ணுமைக் கருவியுக் தாழ்தீங் குழலும். கந்துகக் கருத்து மடைநூற் செய்தியுஞ். சுந்தரச் சுண்ணமுக் தூநீ ராடலும், பாயற் பள்ளியும் பருவக் தொழுககமும, காயக் கரணமுங் கண்ணிய துணர்தலுங், கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும், வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுக்கலுங். கோலங் கோடலுங்கோவையின் கோப்புங். காலக் கணிதமுங்கலைகளின் றுணிவு, காடக மகளிர்க்கு கன் கனம் வகுத்த, வோவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையும்" (மணி. உ: கஅ - கூக.) எனக் கூறப் பட்டனவும் பிறவுமாகிய மகளிர்க் குரிய அறுபத்துநான்கு கலைகளை; இவை பரத்தையர்க்கு இன்றி யமையாதவை யென்பது (ஆ) ' எண்ணெண் கலையு மிசைந்துடன் ... .. .பசந்த மேனியள்' (இ) "எணெண் கலையோர்" (ஈ) "எண்ணுன் கிரட்டி யிருகலை பயின்று பண்ணியன் மடந்தையர்" சிலப். அ: ஈச-ஈஅ, ஈச கக, உஉ கூஅ - கூக (உ) "தலைபுணர் மகளிர்" (ஊ) "கலைவலார்" சீவக. கஉகூ. உகoஎ. (எ) "கலைபுணர் மகளிர்" பெருங். (க) சo கஅச. (ஏ) "கலைபுணர் கொஞ்சிக் கூத்தி யர்" கூர்ம. சவகணடத். கூo. என்பவற்றாலும் அறியலாகும்; (ஐ) இக்கலைகளை, "யாழ்முதலாக அறுபதுதொருநான்கு" என்பர், கொங்கு வேளிர்; பெருங். (க) கூகூ: அச.

உ. (அ) கிழவோன் விளையாட்டும் காமத்தின் மிகுதியைக் காட்டு மென்ப தற்கு "அகலநீ .. . வந்தெடுப்புமே" என்பதனை மேற்கோள்காட்டி, விளையாட்டாற் காமமிக்கு உறக்காமை கண்டு கொள்க வென்பர்; இளம்; தொல். கற்பி. சூ. உo. "கிழவோன்விளை" (ஆ) இப்பகுதியை வாயிலாய் வந்தார்க்கு மறுத்தத் தலைவனது பழிகளைத் தலைவி

௫ னிதமர் காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு
நனிவிரைந் தளித்தலி னகுபவன் முகம்போலப்
பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்
தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர;
௯ ஒருநீ பிறரில்லை யவன்பெண்டி ரெனவுரைத்துத்
தேரொடுந் தேற்றிய பாகன்வந் தீயான்கொ
லோரிற்றன் கொணர்ந்துய்த்தார் புலவியுட் பொறித்தபுண்
பாரித்துப் புணர்ந்தநின் பரத்தைமை காணிய;
௧௩ மடுத்தவன் புகுவழி மறையேனென் றியாழொடு
மெடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந் தீயான்கொ
லடுத்துத்தன் பொய்யுண்டார்ப் புணர்ந்தநின் னெருத்திற்க
ணெடுத்துக்கொள் வதுபோலுந் தொடிவடுக் காணிய;
௧௭ தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயான்கொல்
கணங்குழை நல்லவர் கதுப்பற லணைத்துஞ்சிப்
பணைத்தபோற் கமழுநின் மலர்மார்பு காணிய;
என்றநின்;
௨௨ தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்
யாரீ வருநாட்போ லமைகுவம்யாம் புக்கீமோ
மாரிக் கவாவுற்றுப் பீள்வாடு நெல்லிற்கக்
கரரத் துவலை யளித்தது போலுநீ
யோர்யாட் டொருகால் வரவு.

இது பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனது வரவுகண்டு வாயில்கள் கிழத்தி வாடியவாறுகண்டு சென்று சார்ந்த தலைவனுடன் ஊடல் தீர்கின்றது கூறியது.

தேன் போதுக.

கலித்தொகை எக.

(க)விரிகதிர் மண்டிலம் வியல்விசும் *பூர்தரப்
'புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி
வரிவண்டு வாய்சூழும் †வளங்கெழு பொய்கையுட்
டுனிசிறந் திழிதருங் கண்ணினீ ரறல்வார
இனிதமர் (உ)காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு
நனி(ங)விரைந் தளித்தலி னகுபவன் முகம்போலப்
பனியொரு திறம்வாரப் (ச)பாசடைத் தாமரைத்
தனிமலர் தளைவிடூஉந் (ரு)தண்டுறை கல்லூர

எ - து: மேல் விரியுங் கதிரையுடைய இளஞாயிறு அகற்சியையுடைய விசும்பிலே பரவா நிற்க விடியற்காலத்தே இதழ்கள் முறுக்குண்ட தலைகள்

அம்முறுக்கு நெகிழ்ந்த செல்விப்பூவிடத்து அழகியதேனை (கூ)வரியினையுடைய வண்டுகள் அளைத்துக் கூடி நுகர்ந்து அதனாலும் அமையாது (எ) பின்னும்

நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரியுஞ் செல்வம் மிக்க ‡பொய்கையிடத்தே (அ)துனிமிகுதலாலே பெருக்கு மாறாது வீழ்கின்ற கண்ணினுடைய நீர் கரமத்

---

க. "உள்ளுறையுவமம்" என்னும் தொல். அகத். சஅ-ஆம் சூத்திரவுரையில் "விரிகதிர்.........கல்லூர" என்பதனை மேற்கோள்காட்டி, இதனிற் சிறிது வேறுபடப் பொழிப்புரையும் விசேடவுரையுமெழுதி இது சிறப் பென்னு முள்ளுறையுவமம் என்று கூறி, தொல். பொருளி. சஅ-ஆம் சூத்திரவுரையினும் "விரிகதிர் மண்டிலமென்னும மருதக் கலியுட்

சிறப்புத்தொடுத்து நின்றது காட்டினும்" என வலியுறுத்தினர்; சர். காரிரத்ன கவிராயரும் "இசசிறப்பென்ற உள்ளுறை, 'விரிகதிர் மண் டிலம்' என்னும் மருதக்கலியுள்ளும் வந்தமை காண்க" என்பர்; மாற லலங். உஅக. மேற்கோளுரை.

௨. "மறங்கொள் வெங்கதிர் வேலவன் வார்கழல், கறங்க வேந்தன் காதலி யூடலை, புனைந்த வொண்மலர்ச் சென்னியி னீக்கினு, னிறைந்த நின்ப செங்கணிக் கென்பவே" சீவக. ௧௦௨௪.

௩. "தனிசோ வெர்நீரக் காதலர் துனைதர" கலி. ௧௨௦: ௨௧.

௪. "பாசடைத் தாமரை" கலி. ௯௧: ௧; ௭௩ - ௨; ௭௮: ௧.

௫. "தண்டுறை யூரன்" ஐங். ௧௩, ௨௧, ௮௩, ௮௮; கலி. ௭௪: ௩.

௬. 'வரிவண்டு' கலி. ௩௩: ௨; ௭௪: ௧; ௬௨: ௨௧. முன்பு இத்தொடர் மொழியில் வரியென்பதற்குப் பாட்டென்று பொருள்கூறியுள்ளார்; நோக்குமாம்.

௭. கலி. ௭௪: நாவும், அதன் முதலாவது குறிப்பும் பார்க்க.

௮. துனி - கைமிகந்த வூடல்.

(பிரதிபேதம்) * வைகறையபுதிதலை, † வைத்தெழு, ‡ பொய்யைவிட்டுநீர் பகிவரிக்கும்வே.

## மூன்றாவது மருதம் ௪. [illegible]

<u>நீரைச் சுழி அருதவியுடைத்தாய் ஒழுகு</u> அவ்வருத்தத்தைக் கண்டு இனிதாக அமர்ந்த வனவன் தன் அடியைச் சேர்ந்து நிறைந்தி மிகவிளைந்த அவித் தலையே சிறிது மகிழ்பவன் முகம்போலப் பசிய இலைக்குள்ளே நின்ற தாமரை யினது தனித்த மலர் தனக்கு வருத்தத்தைச்செய்யும் பனி ஒருகூற்றிலே வடியாகிற்கத் தான் மிகச் செவ்வியின்றி அலரும் குளிர்ந்த துறையினை யுடைய நல்ல வூரனே! எ - று.

இதனால் வைகறைக்காலத்து மனைவயிற் செல்லாது இனிய செவ்வியை யுடைய பரத்தையரைப் புணர்ந்து விளையாடி அதனினும் அமையாது பின்னும் அவரைப் புணர்தற்குச் சூழ்ந்து திரிகின்ற இவ்வூரிடத்தே நின்னைப் பெறாது சுற்றத்திடையேயிருந்து *கண்ணீர் வாராநிற்க, நீ ஒருகாலத்து அவித்தலிற் சிறிது செவ்வி பெற்றுளாயிருக்கும்படி தலைவியை வைத்தாய்; என்னை வருத்துதல்கூறவேண்டுமோவெனக் காமமிகுத்தி உள்ளுறையுவமம் †கூறினள்.

கசு (க)ஒளித்தவன் புகுவழி மறையேனென் றியாழொடு
மெடுத்தசூள் பலவுற்ற பாணன்வந் தீயாங்கொல்
அடுத்தடுத்தன் பொய்யுண்டாரப் புணர்ந்தநின் னெருத்தின்க
ணெடுத்துக்கொள் வதுபோலுந்(உ)தொடிவடுக் காணிய

எ-து: அப்பரத்தையர் உடன்பாடின்றித் தானே செல்லுமிடத்து நின்னை மறையேனென்று கூறி யாழாகிய தெய்வத்தோடும் பல தெய்வங்களையும் கூட்டிப் பலசூளுஞ் சூளுற்ற பாணன் வாரானோ? இவன்செய்த பொய்யென்று அறிந்துவைத்தும் மருண்டு அப்பொய்யைப் பலகாலும் அநுபவித்தவர்களைக் கூடின நின் கழுத்தின்கண்ணே அள்ளிக்கொள்ளலாவது தோன்றும்போலும் மறையாமற் கிடக்கின்ற தொடித்தழும்பைக் காண்டற்கு. எ-று.

கஎ தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயாங்கொல்
(ங)கணங்குழை நல்லவர் (ச)கதுப்பற லணைத்துஞ்சி
(ரு)அணங்குபோற் கமழுநின் னலர்மார்பு காணிய

எ-து: நின் தீயகுணங்களை உணர்ந்திருக்கின்ற எமக்கு நீ எங்களை நீங்கினையென்று பிறர்கூறக் கேட்டிருந்து நின் தவறுகளை ஆராதே நினக்கு நற்குணங்கள் உளவாகக் கொண்டாடுந் தோழன் வாரானோ? திரட்சியுடைத்தாகிய குழையினையுடைய மகளிருடைய புணர்ச்சியாற் குலைந்து வீழ்ந்த அறலையுடைய கதுப்பாகிய அணையிலே துஞ்சுகையினாலே தெய்வம்போல மணக்கும் நின் அலர்ந்த மார்பைக் காண்டற்கு. எ-று.

இது நாற்றச்செவ்வி குலையாமல் வந்தமைகூறலின்(சு)மருதத்து விடியற் காலங் கூறிற்றாம்.

---

க. (அ) "சூளுத்தாயர் மடிப்பவு முண்ணான்". அகம். கoசு: க. (ஆ) "ஒளித் தவா யெல்லாம்" குறள். கஉச.

உ. (அ) "தொடியுற்ற வடுக்காட்டி" (ஆ) "தொடியு முகிரும்படையாக நுந்தை, கடியுடைமார்பிற் சிறுகண்ணு முட்காள், வடுவுக்குறித்தாங்கே செய்யும்" (இ) "செறிதொடியுற்ற வடுவும்" கலி. எசு: உஉ, அஉ: உசு - கo, கக: கக.

புதுநீர புதலொற்றப் புணர்திரைப் பிதிர்மல்க
மதிநோக்கி யலர்வீத்த வாம்பல்வான் மலர்கண்ணிக்
கடிகயத் தாமரைக் கமழ்முகை கரைமாவின்
வடிநீண்ட வாய்விடூஉம் வயலணி நல்லூர;
க கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்
பண்ணினாற் களிப்பிக்கும் பாணன்காட் டென்றாளோ

---

க. (அ) "சாலிகள் வளரு மெல்லைத் தடம்புனல் வறுமைத் தாக, வாவிசூழ் குரல் வால சாறு வருத்தொடு மாய்வதே போல், மேலவ ருணாற் போகம் வெறுத்தலிற் கருமல் லின்றி, ஞாலமன் னுயிர்கள் முற்ற வாடொறுங் குறைந்த வன்றே" கந்த. மேருப். உஅ. என்பதூஉம் (ஆ) "உலகம், கயங்க ணற்ற பைதறு காலைப், பீளொடு திரங்கிய நெல்லிற்கு, நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே" நற். உ௨: அ-க என்பதூஉம் இங்கே அறிதற்பாலன.

உ. (அ) "நீர்வரிக் கிளைகளின் பிறங்குகதிர்க் கழனி" அகம். உசுஙு: க. (ஆ) "பொன்னிறச் செந்நெற் பொதியொடு நீர்வாட" நாலடி. உகக.

(பிரதிபேதம்) *நீலம், †சினையும்.



பேணினென் றுடன்றவ ருகிர்செய்த வடுவினான்
மேனாணின் றோள்சேர்ந்தார் நகைசேர்ந்த விதழினை;
கசு நாடிநின் றூதாடித் துறைச்செல்லா ளூரவ
ராடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட் டென்றாளோ
கூடியார் புனலாடப் புணையாய மார்பினி
லூடியா ரெறிதர வொளிவிட்ட வரக்கினை;
கஎ வெறிதுநின் புகழ்களை வேண்டாரினெடுத்தேத்து
மறிவுடை யந்தண னவளைக்காட் டென்றாளோ
களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேற்

குறிபெற்றார் குரற்கூந்தற் கோடீளர்ந்த தகளினே ;
எனவாங்கு;
செறிவுற்றே மெம்மைநீ செறிய வறிவுற்
றழிந்தாகு நெஞ்சத்தே மல்ல லுழப்பக்
கழிந்தவை யுள்ளாது கண்ட விடத்தே
யழிந்தாங்கிற் பேணிக் கொளலி னிழிந்ததோ
விந்நோ யுழத்த லெமக்கு.

இதுவும் அது.

இதன் பொருள்.

(ஆ) இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்
டுணைபுணர் அன்னத்தின் றூவிமெல் லணையசை இச்

---

(அ) "மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத், துணைபுண ரன்னத் தூநிறத் தூவி, யிணையணை மேம்படப் பாயணையிட்டு" (நெடுநல். கங - கங) என்பதும் (ஆ) 'என்புருகி மிக்க அன்போடு புணர்ந்த விற் குட்டிக்கு மென்மை பிறக்குமென்பது தோன்றத் துணைபுண ரன்னத் தூநிறத் தூவி யென்றார்' என்னும் அதன் விசேடவுரைப் பகுதியும், (இ) "துணைபுண ரன்னத் தூவியிற் செறித்த, விணை யணை" (சிலப். ச: கக-எ.) என்பதும் (ஈ) 'தன் சேவலோடு புணர்ந்த அன்னப்பேடை அப்புணர்ச்சியான் உருகியுதிர்த்த வயிற்றின் மயிர் எஃகிப் பெய்தபலவகை அணை' என்னும் அதன் விசேடவுரைப் பகுதியும், (உ) "ஆதாரம் பெருகு கின்ற அன்பினு லன்ன மொத்தும்" (சீவக. கஅக) என்புழி, "ஆதாரம் பெருகுமன்பாவது: புணர்வதன் முன்னும் பின்னும் ஒருதன்மைத்தாய்ச் செயற்கையால் மிகுமன்பு. அன்னம், புணர்ச்சியால் மெய்புருகு மென்மைக்கு உவமம். பலரும், 'துணைபுண ரன்னத்தின் றூவி' என்று புணர்ச்சியால் துவிக்கு மென்மை பிறக்கு

மூன்றாவது மருதம் எ. [illegible]
சேடியல் வள்ளத்துப் பெய்தபால் இலகாட்டி

பூமென் (௧)சிறைகளி யுணர்ப்பவன் முகம்போலப்
*புதுநீர புதலொற்றப் புணர்திரைப் பிதிர்மல்க
மதிநோக்கி †யலர்வீத்த வாம்பல்வான் மலர்கண்ணிக்
கடிகயத் தாமரைக் கமழ்முகை கரைமாவின்
வடிதீண்ட வாய்விடூஉம் வயலணி நல்லூர

எ - து: (௨)ஐந் துவலைப்படப் படுத்தலால் உயர்ந்த மேலப்பட்டாற்செய்த மெல்லிய படுக்கையிடத்தே கிடந்த, துணையோடேகூடிய அன்னத்தின் (௩)தூவியாற் செய்த மெல்லிய அணையைச் சார்ந்திருந்து, பெருமையின்ற வெள்ளி வட்டியிலே வார்த்த பாலைச் சிறிது‡ காட்டி அப்பாலையுண்ணாது வெறுத்திருந்த கிளி அதனை உண்டற்கு வேண்டும் மொழிகளைக் கூறி உண்ணப்பண்ணுவித்து அவ்வுணவினான் மகிழ்ந்து முத்தங்கொள்பவன் || முகம்போல, மிகுதியுடைய கயத்திடத்துநின்ற புதிய நீரிடத்தனவாகிய பசிய தூறுகளின்மேலே இடைவிடாது வருகின்ற திரைகள் மோதுகையினாலே அதன் துவலை மிகாநிற்க இடைநின்ற தாமரையினது கமழாநின்ற முகை தனக்குரிய வண்டு நுகர அலராமல் நின்று கரையில் நின்ற மாவினது வடு மதியைநோக்கி அலர்ந்த ஆம்பலினது வெள்ளிதாகிய மலரை முதற் றீண்டிப் பின்னர்த் தன்னைத் தீண்ட அலரும் வயலணிந்த நல்ல ஊரனே! எ - று.

---

மென்றார்" என்றதிதனை மேற்கோள்காட்டி எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

௧. (அ) "கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப், பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச், செம்பொற் றட்டிற் றீம்பா லேந்திப், பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்றும்" மணி. ௧௮: ௧௭ - ௨௦. (ஆ) "வண்டளிர் மாஅத்துக், கிளிபோல் காய கிளைத்துணர்" அகம். ௩௭: ௭-௮.

௨. (அ) "ஐந்துமுன் றமைத்த செல்வத் தமளி" சீவக. ௮௩௮. (ஆ) "பதினோர் தலைமத்த படையமை சேக்கையுள்" பெருங். (௪) ௯: ௬. (இ) "தூமென் பஞ்சி யன்னத் தூவிதுனிய செய்ய, மைம்மயிர் முதலா மூவைந் தமைத்த வமளி" நைடதம். மணம். ௨௪.

௩. தூவியென்றது சிறகினை; இச்சொல் அன்னத்தின்சிறகிற்குப் பெரும்பான்மையாயும், கிளி வெள்ளாங்குருகு நாரை காக்கை மயில் முதலியவற்றின் சிறகிற்குச் சிறுபான்மையாயும் வரும்.

(பிரதிபேதம்) *புதைக்கப்புதல், †அலர்கிந்தவம்பல், குவிந்த வம்பல், ‡ கட்டிய பகே,
|| முகம்போல வென்ற வேதியுவமம்.

65



முகம்போலவென்ற வினையுவமம் மேல்வருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்துநின்றது. "சிறபூனை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணை,(க)முற *தூவி தாமிவையோ ரைந்து." (உ)துயிலையைப் புணர்ந்த காலத்து மெய்புகுமி உதிர்ந்த தூவிதானும் மிக மெல்லிதாயிருக்குமென்பது உணர்தற்குத் துயிலைப் புணரன்னமென்றார். பாலேச் சிறிதென்றது (ங)சிலவென்றல்†மரூஉ.

தாமரை வண்டூதகர்வதற்குப்பயன்கொடாது வடுத்தீண்ட ‡ அலருமென் பதுனல் கின் தலைவி நீ நுகர்ந்த செவ்விபெருமற் || சேக்கை யிடத்தே இருந்து பால் உண்ணாத புதல்வன் பால் உணப் பெற்றதற்கு அவனை முத்தங் கொண்டு மகிழ்ந்திருக்குமாறுபோல(ச)ஆற்றியிருக்குந்தன்மை எமக்கின்றெனக் ÷ காமக் கிழத்தி உள்ளுறையுவமங் கூறினள்.

க (ரு)கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதொறும் யாமழப்
பண்ணினாற் களிப்பிக்கும் பாணன்காட் டென்றனை

---

க. "உறநுவி சேக்கையோ ரைந்து" நெடுநல். ககக. ங - உரை. சீவக. அஙஅ. உரை.

உ. பறவைகள் போகத்தால் அவசமாகி மெய்புகுமென்பதை, "அருந் தவிர் கயந்து நல்கி யலகுட னலகு சேரப், பொருந்துமுன் னவச மாகிப் போகமென் குயிலும் பெடு, மிருந்துமெய் புருகுங் காவில்" என்பதும் வலியுறுத்தும். வில்லி. சம்பவச்சருக்கம். கக. இந்நூற் பக்கம் சஙஉ: க - ஆம் குறிப்பும் பார்க்க.

ங. இந்நூற் பக்கம் எங: ச-ஆம் குறிப்புப்பார்க்க.

ச. (அ) "அகலநீ துறத்தலி னழுதோவா வுண்கணெம், புதல்வனை மெய் தீண்டப் பொருந்துத லியையவால்" (கலி. எO: கக - கஉ) என்பதும், (ஆ) "ஊடி யவரை புணராமை வாடிய, வள்ளி முதலரிந் தற்று" (குறள். கஙOச) என்பதன் விசேட வுரையில் பரிமேலழகர் "நீர்

பரத்தையரிடத்திராயவழி எம்புதல்வனைக்கண்டு ஆற்றியிருக்கற்பால மாய யாம் நம்மோடு ஊடுதற் குரியமல்லம்; அன்மையின், எம்மை புணர்த்தல் வேண்டா; உரியராகிய பரத்தையரையே உணர்த்தல் வேண்டுவது; அதனால் ஆண்டுச்சென்மி னென்பதாம்." என்று எழுதி யிருப்பதும் இங்கே அறிதற்பாலன.

ஒ. பாணன் முதலியோர் வாயிலாயதற்கு, "கண்ணிநீ........நகளிரே" என்னும் பகுதிகள் மேற்கோள்; தொல். கற்பி. சூ. ௯. ௩௪.

(பிரதிபேதம்) * நலி லைபோலாந்து, †மரு மிகுநியையுடைய...................தாமரை வண்டு, ‡அலரும் என்பதிதன்கருத்து இதனால் கின்றவெளி,||செக்கையிடத்தே, + காமக்கிழத்தியு முன்னுறை.

## மூன்றுவது மருதம் ௭. ௬௪

(௧)பேணுனென் றுடன்றவ ருகிர்செய்த வடுவினன்
மேனுணின் றோள்சேர்ந்தார் நகைசேர்ந்த விதழினை

எ - து: நம்மைப் பேணுகின்றிலனென்று கோபித்தவர் தம்மைப் பேணு தற்காக உகிராற்செய்த வடுக்காரணமாக அவர்க்குப் பின்னுள்ள காளிலே நின் தோளைச் சேர்ந்த பரத்தையருடைய எயிறு அழுந்தின இதழைத், தங் கூட்டத் திற் பிறந்த இன்பத்தைக் கருதி நீ காவல்கொண்ட 'பரத்தையரைச் செறியுந் தோறும் யாம் அழும்படி நின்னைப் பண்ணுவேகளிப்பிக்கும் பாணன்னெக்குக் காட்டென்று சொன்னுனே? எ - று.

மேனுளென்றது, பின்னுள். யாம்அழப் பண்ணினுற் களிப்பிக்குமென்றது, இல்லறம் நிகழ்த்துவதற்கு உரியனவற்றைப் பாடிக்காட்டி யாம் வருந்தாதபடி பண்ணுது (உ) பரத்தையரிடத்தே ஒழுகுதற்குவேண்டுவனவற்றைப் பாடிக் காட்டிக் களிப்பிப்பனென்றவாறு.

௧௧ (௩)நாடியின் னா(௪)தாடித் துறைச்செல்வா றூரவ
ராடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட்டென்றுளோ

---

௧. (அ) "தொடிய முயிரும் படையாக நுசை, கடியுடை மார்பிற் சிறு கண்ணு முட்காள், வ்வுக் குரித்தாங்கே செய்யம்" (ஆ) "புன்னிக்

ஒலிக்கும், * இகழ்ச்சிக்குறிப்பு. ஒளிக்குமென்றும் பாடம். (௩) புலைத்தி, † செறற்சொல்.

௧௭ வெறிதுபின் ‡ புகழ்களை வேண்டாரி லெடுத்தேத்து

(௪) மறிவுடை யந்தண னவளைக்காட் டென்றனை

---

௧. "தாழ்நீ ரிமிழ்சுனை காப்பட் குளித்தவண், மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை, வேய்நீ ரழுந்துதன் கையின் விடுகெனப், பூநீர்பெய் வட்ட மெறியப் புணைபெறு, தருநிலை நீரி னவயோர் கண்டு, கொழுநன் மகிழ் தூங்கிக் கொய்பூம் புனல் வீழ்ந்து, தழுவத் தகைவகைத்துத் தண்பரங் குன்று" பரி. ௨௧: ௩௧-௪௰.

௨. (அ) "வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவோரும்" (ஆ) "புல்லா தூடிப் புலந்து நின்றவள், பூவெழில் வண்ணநீர் பூரித்த வட்டெறிய" பரி. ௧௧: ௬௫; ௨௨: ௧௭ - ௮. (இ) "குலிகநீர் நிறைந்த பந்திற் கொம்பனா ரோச்சமைந்தர், மெலிவுகண் வேந்து மாதோ விருப்பொடு மறலி னாரே" சீவக. ௩௯௮. (ஈ) "காதன் மங்கைய ராகந் தெறியுஞ், சாதிங் குலிகமுஞ் சந்தனத் தேய்வையும்" (உ) "அஞ்செஞ் சாந்த மாகந் தெறிக்கும்" பெருங். (௧) ௪௧: ௧௨௧ - ௩௦; ௪௨: ௧௮௭.

௩. (அ) "அறனில்புலைத்தி யெல்லித் தோய்த்த, புகாப்புகா(க்) கொண்ட புன்பூக் கலிங்கமொடு" நற். ௯௦: ௩ - ௪. (ஆ) "கலத்தைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத், தலைப்புடைப் போக்கித் தண்கயத் திட்ட, நீரிற் பிரியாப் பருஉத்திரி" குறுந். ௩௩௦. (இ) "பசைகொன் மெல் விரற் பெருந்தோட் புலைத்தி" (ஈ) "பசைவிரற் புலைத்தி நெடிது பிசைந் தூட்டிய, பூந்துகில்" அகம். ௩௪: ௧௧. ௩௮௭, ௬ - ௭. என்ப

வையும் (உ) "களர்ப்படு கூவற் றோண்டி நாளும், புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை" புறம். ௩௧௧: ௧-௨. என்பதும் கண்டு அறிதற்பாலன.

௪. (அ) "தவ்வையைக் காட்டி" என்புழி, தவ்வைக்குக்காட்டி யென்று பொருள்கூறி, "தவ்வையைக் காட்டியென்பது 'அறிவுடை யந்தண

(பிரதிபேதம்) * இகழ்ச்சிக்குறிப்பு. † செற்றச்சொல். ‡ புகழிலை வேண்டாரின்.

(௧) ‡களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேற்
குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த துகளினை

எ - து: கட்டத்தாற் களித்தல் பிறந்தவருடைய கமழ்கின்ற மாலை முயக்கத்தான் மென்மைபெற்றதற்குக் காரணமான வடிவின்மேலே, அதற்குப் பின்பு நின்னாற் குறியிடம்பெற்றாருடைய பற்றுத்தினையுடைத்தாகிய மயிரினுடைய முடியை †நீ விரித்து கைசெய்து முடிக்கையினாலே வீழ்ந்துகிடந்த பூந்துகளை நின்புகழ்களைக்கேட்கவேண்டாதவெங்கள் இல்லிலே (உ) ஒருபயனின்றியிருந்துகொண்டாடும் அறிவில்லாத அந்தணன் அவனைக்காணப்பண்ணென்று சொன்னானோ? எ - று.

(௩) கயம் - மென்மை; ஈண்டுத் துவட்சியை உணர்த்திற்று. அறிவுடையந்தணன், இகழ்ச்சி. அவட்கு என உருபு ‡மயக்கமாம்.

|| எனவாங்கு, அசை.

௨௨ +செறிவுற்றே மெம்மைநீ செறிய;வறிவுற்
றறிந்தது நெஞ்சத்தே;மல்ல லழுப்பக்
கழிந்ததை யுள்ளாது கண்ட விடத்தே

---

னவனைக் காட்டென்றானோ' என்பதுபோல உருபுமயக்கம்" என்று இலக்கணமுங் கூறி, (ஆ) "களித்தானைக் காரணங்காட்டுதல்" என்புழி, "களித்தானையென்னும் இரண்டாவது, 'அறிவுடை.......... என்றானோ' என்புழிப்போல நின்றது" என்றும் எழுதினர், பரி, துறவ். கசுஎ; கூ௩. (இ) உருபுமயக்கத்திற்கு இவ்வடியை மேற்கோள் காட்டி, ஐயைக்குவ்வாகக்கொள்கவென்றனர் மயிலை; நன். பெயரி. ௬. ௩௦. (ஈ) சம்பிரதானம் வடநூலார்கூறுத இரண்டனுமெய் வந்ததென்று இவ்வடியை யெடுத்துக் காட்டுவர் சுப்பிரமணிய தீக்ஷிதர்; பிரயோக. ௩௯. (உ) "யாரே யாயினு மிவண்மக ளொருத்தியைச், சீர்கெழு வீணை சிறப்பொடு காட்டி" என்பது, பெருங். (௧) ௩௪: ௩௦ - ௩௧.

க: "வெறிது" பெருங். (௩) ௨: ௨அ. கம்ப. மாயாசீதை. எ.

௨. "கழிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின்மேல்" என்பது உவமைமோனைக்கு மேற்கோள்; தொல். செய். சூ. ௧௨. உச.

௩. நயமென்பது உரிச்சொல்லாதலின், அது விகாரவகையாற் கயமென நின்றது; "வயமென்னுமுரிச்சொல் விகாரவகையால் வயமென நின்றது; சிறுபான்மை மெல்லெழுத்துப் பெற்றதெனினும் அமையும்" (கோவையார். ௩௦. சொளு. உரை) என்று பேராசிரியர் எழுதியிருத்தல் இங்கு அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * கழிபட்டார், † விரிந்து வைசெய்து, ‡ பயக்குமாம், || வாயாது பூக்கமை, + செறிவுந்தேமையை.



வழிந்துயிர்ப் பேணிக் கொளவி னிழிந்ததோ
வின்னோ யுழத்த லெமக்கு

எ - து: முன்பு எம்மை நீ செறிகையினாலே யாமும் நின்னைச் செறிதலை யுற்றேம்; இக்காலத்து நீ செய்யுங் குறைகளை அறியலுற்று அதனானே அழிந்துகெடுகின்ற நெஞ்சத்தினையுடையேம்; அதன்மேலே வருத்தத்திலே தங்கும்படியாக நீ செய்து கழிந்த இக்குறைகளைக் குறையென்று நினையாதே நின்னைக் கண்டஇடத்தே நெஞ்சு அழிந்து நின்னைப்பேணிக்கொள்ளுதலின், இக்காமநோயிலே தங்குதல் எமக்குத் தாழ்ந்ததொரு * தொழிலோ? இஃது இழிந்ததன்றுகாண். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (எ)

(எக.) அகன்றுறை யணிபெறப் புதலொடு தாழ்ந்த
பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை
கண்பொர வொளிவிட்ட வெள்ளிய வள்ளத்தாற்
றண்கமழ் நறுந்தேற லுண்பவன் முகம்போல
வண்பிணி தளைவிடூஉம் வயலணி நல்லூர ;
௫ தோதக்கா யெனநின்னை நொந்தியா ரில்வழித்

நீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
ஞெகிழ்தொடி யிளையவ ரிடைமுலைத் தாதுசோர்ந்
திதழ்வனப் பிழந்தநின் கண்ணிவந் துரையாக்கால்;
கனற்றிநீ செய்வது கடிந்தீவா ரில்வழி
மனத்திற்றீ திலனென மயக்கிய வருதிமன்
னலமர லுண்கண்ணா ராய்கோதை குழைத்தநின்
மலர்மார்பின் மறுப்பட்ட சாந்தம்வந் துரையாக்கால்;
என்னைநீ செய்யினு முரைத்தீவா ரில்வழி
முன்னடிப் பணிந்தெம்மை யுணர்த்திய வருதிமன்
னிரைதொடி நல்லவர் துணங்கையுட் டலைக்கொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரையாக்கால்;

எனவாங்கு;

மண்டுநீ ராரா மலிகடல் போலுநின்
றண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்

---

(பிரதிபேதம்) * தொழிலேவின இழிந்தன்று எனென ஆடமிர்த்தால் இதனும்.

## மூன்றாவது மருதம் ௩. ௬௮

புலத்தகைப் பெண்டிரைத் தேற்றிமற் றியாமெனிற்
றோலாமோ நின்பொய் மருண்டு.

இது "தங்கிய வொழுக்கத்துக் கிழவனை வணங்கி, யெங்கையர்க்
குரையென விரத்தற்கண்" (க)தலைவி கூறியது.

### முதல் பொருள்.

அகன்றுறை யணிபெறப் புதலொடு தாழ்ந்த
(உ)பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை
கண்பொர வொளிவிட்ட வெள்ளிய வள்ளத்தாற்
(௩)றண்கமழ் நறுந்தேற லுண்பவன் முகம்போல
வண்பிணி தளைவிரீஇம் வயலணி நல்லூர

இ-ள்: அகன்ற நீருண்ணுந்துறை அழகுபெறும்படி நிறைந்தோடே வந்து தாழ்ந்து கிடந்த பகன்றையினது பூவைச்சேரும்படி வளர்ந்த பசிய இலையினையுடைய தாமரைமுகை கண்ணெதிர்கொள்ளும்படி ஒளிவிட்ட (ச) *வெள்ளி வள்ளத்தாலே குளிர்ந்த நறிய கள்ளை உண்பவன் முகம்போல வளவிய முறுக்குநெகிழும் வயலணிந்த நல்ல ஊரனே ! எ - று.

---

க. தொல். கற்பி. சூ. க. இச்சூத்திரவுரையில் "அகன்றுறை யென்னு மருதக்கலியுள் 'தோழிக்காய்.....................உரையாக்கால்' எனவும் 'மண்டுநீ ரார..................மருண்டு' எனவும் கூறுதலால், தலைவி தான் தாழ்ந்தவாறும் பின்னர் எங்கையர்க்கு உரையெனக் கூறிய வாறும் காண்க" என்றனர் இளம்பூரணர்; நச்சினார்க்கினியரும் இதனையே தழுவினர்.

உ. (அ) "பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத்தாமரை" என்பது பகன்றை யிலுப்பையன்று; சிவதையென்பதற்குமேற்; தமிழ்ச்சி. அஅ. உரை. (ஆ) "பாண்டிலொப்பிற்பகன்றைமலருங், கடும்பனியச்சிரம்" நற். அக. (இ) "வெள்ளிதழ்ப், பகன்மதி யுருவிற் பகன்றை மாமலர்" ஐங்குறு. சஙசு. (ஈ) "பாசிலை பொதுளிய புதலிவரும் பகன்றை, நீலுண்........ ........தோலெதிர் பாண்டிலின் வாலியமலர" (உ) "பகன்றை வான் மலர் பனிநிறைந்ததுபோற், பால்பெய்வள்ளஞ் சால்கைபற்றி" அகம். உகஎ: க - அ. உசக: ச - ரு.

ங. (அ) "தண்கமழ் தேறல்" புறம். உச. கஉ. (ஆ) "தண்ணறவுண் களி நீ" கோவையார். கஉஉ. (இ) "மணங்கமழ் தேறல்" மது. எஅ௦. (ஈ) "தேங்கமழ் தேறல்" பெரும். (உ) சச: கக.

ச. "வள்ளத் தராகறவு வாக்குந, ராவுசெறி புலவுமறிமென வள்ளையிற் முக்கி, வெறிமகர வலய மணிநிழ் றதலியர், மறிபுனர மகளிர் வரம்பல்லாம் மிப்ப" பரி. கo: எசு - எஅ.

(பிரதிபேதம்) * வெள்ளிய வள்ளத்தாலே.

வெள்ளியவள்ளமென்பது அம்மூச்சாரியையின் மகரம் கெட்டு அகரம் பகாவுடம்படு மெய்பெற்று நின்றது; "மென்மையு மிடைமையும் வரூஉம் காலை, யின்மை வேண்டு மென்மனார் புலவர்" (க) என்பதனால்.

அகன்றதுறை பரத்தையர்சேரியாகவும், அழகுபெறும்படி புதலோடு வந்து தாழ்ந்த(உ)மணமில்லாத பகன்றைப்பூப்பாணர்முதலியவாயில்களோடே வந்து தங்கின அன்பில்லாத பரத்தையராகவும், அதனை உற நீண்ட தாமரை அப்பரத்தையரிடத்தே சேர்ந்த தலைவனாகவும், அத்தாமரை, கள்ளைத் தீதென்று உணர்ந்துவைத்தும் அதனை உண்டு களிக்கின்றவன் முகம்போலத் தளைவிடுதல் அன்பில்லாத மகளிரிடத்துப் பெறுகின்ற இன்பநுகர்ச்சி தீதென்றுஉணர்ந்துவைத்தும் அதனை நுகர்ந்து மகிழ்கின்ற தலைவனாகவும் உள்ளுறை யுவமங் கொள்க. முகம்போல வென்னும் ஏனை யுவமம் கருப் பொருட்குச் சிறப்புக்கொடுத்து நின்றது.

(ரு)நோதக்கா யெனநின்னை நொந்தீவா ரில்வழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்
னெகிழ்தொடி யிளையவ (௬)ரிடைமுலைத் தாதுசோர்ந்
திதழ்வனப் பிழந்தநின் (௭)கண்ணிவந் துரையாக்கால்

எ - து: நீ மேற்குதலான் நெகிழ்ந்த தொடியினையுடைய பரத்தையருடைய முலையிடையிலே தாதுகள் உதிர்ந்து இதழ்கள் அழகிழந்த நின் கண்ணி நினக்கு உட்பகையாய்வந்து நின் பரத்தைமையை எமக்கு உரையாத பொழுது நீ யாங்கள் வெறுக்கத்தக்க பரத்தைமை*யென்றதொருகாலத்தும் நின்னை வெறுப்பார் இல்லாத இடத்தே யான் தீதிலேனென்று தேற்றுதற்கு வருவாய்; அதனாற் பெற்றதென் ? எ - று.

௰ கனற்றிநீ செய்வது கடிந்தீவா ரில்வழி
†மனத்திற்றீ திலெனென மயக்கிய வருதிம

---

க. தொல். புணரியல். ௩. உ௮.

உ. "பேரிலைப் பகன்றைப் பொதியவிழ் வான்பூ, வின்கலெ கள்ளின் மணமில் கமழும், புன்கண் மாலையும்" என்று (குறுந். ௧௬௦.)

காணப்படுவது ஆராயத்தக்கது; பகன்றை, பெருங்கையா வென்னும் கொடியென்பர் அடியார்க்குநல்லார். சிலப். கக.: கஉஎ. உரை.

"பலவ்கெழு*தூணையனை புல்லிய புல்லா, துயர்குவனன் கிடக்க கிழத்தி யைக் குறுகிப், புல்லென முன்னிய நிறையழி பொழுதின், மெல்லென் சேறடி புல்லிய விரவினும்" (க)என்பதனான் முன்னடிப்பணிந்தென்றார்.

†எனவாங்கு, அசை.

மண்டுநீ ராரா மலிகடல் போலுநின்
றண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்
புலத்தகைப் பெண்டிரைத் தேற்றி‡மற் றியாமெனிற்
றோலாமோ நின்பொய் மருண்டு.

எ - து: யாற்றினின்று மிக்குச்சென்றுவீழ்கின்ற நீரால் நிறையாத மிகு கடல்போலும் நின் அமையாத ||பரத்தைமை மேவிநிலையினாலே நாடோறும் நின்னொடு புலக்குந் தகுதியையுடைய பெண்டிரைத் தெளிவிப்பாய்; பின்னை, யாமாயின் நின்பொய்யை மெய்யாக நினைந்து நினக்குத் தோலாதிருப்பேமோ? தோற்பேமன்றோ? என்று எட்டையர்க்கு உரையென்றாள். எ - று.

இதனால், தலைவிக்கு முனிவு பிறந்தது.

இது வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற ஒத்தாழிசைக்கலி. (அ)

(௭௪.) பொய்கைப்பூப் புதிதுண்ட வரிவண்டு கழிப்பூத்த
நெய்தற்று தமர்ந்தாடிப் பாசடைச் சேப்பினுட்
செய்தியற்றி யதுபோல வயற்பூத்த தாமரை
மைதபு கிளர்கொட்டை மாம்பதிப் படர்தரூஉங்
கொய்குழை யகைகாஞ்சித் துறைபணி நல்லூர ;
அன்பில னறனில னெனப்படா னெனமேத்தி
நின்புகழ் பலபாடும் பாணனு மேமுற்றான் ;
நஞ்சுயிர் செகுத்தலு மறிந்துண்டாங் களிபின்மை
கண்டுநின் மொழிதேறும் பெண்டிரு மேமுற்றார்;
முன்பகற் றலைக்கூடி நன்பக லவணீத்துப்
பின்பகற் பிறர்த்தேரு நெஞ்சமு மேமுற்றாய்;

---

க. தொல். கற்பி. சூ. ௬. இச்சூத்திரத்தின் இவ்வுரையில் மெல்லென் சேறடி புல்லிய இரவினைத் தலைவிகூறியதற்கு 'என்னை நீ செய்யினும் ............வந்தனையாக்கால்' என்னும் இப்பகுதி மேற்கோள்.

முயர்ந்த போரி னெயிதல் லூரன்
க0 புதுவோர்ப் புணர்தல் வெய்ய னாயின்
வதுவை நாளால் வைகலு மஃதியா
னறிவென் றோழி காவாய் நீயென
வெற்பார்த் துறையைப் பேணித் தெற்றென ;
கச எல்வினை வருதி யெவன் நறித் தனையெனச்
சொல்லா திருப்பே னாயி னொல்லென
விரியுளைக் கலிமான் றேரொடு வந்த
விருந்தெதிர் கோடலின் மறப்ப லென்றாய்;
கஅ வாடிய பூவொடு வாரலெம் மனையென
வூடி யிருப்பே னாயி னீடா
தச்சா றாக வுணரிய வருபவன்
பொய்ச்சூ ளஞ்சிப் புலவே னாதல் ;

---

க. | இச்செய்யுள் கற்பின்கண் தலைவிகூற்றுப் பெட்பின்கண் வந்ததற்கு மேற்கோள்; தொல். கற்பி. சூ. க. இளம். கச.

(பிரதிபேதம்) * பரத்தையர்க்கவர்களைப், † பிற்றேதிற்றிலே சொல்லு, ‡ ஆறுபெயபாற பாக்கிலே, நெறுல்.



உஉ பகலாண் டல்கினை பரத்த வென்றியா
னிகலி யிருப்பே னாயிற் றான்றன்
முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த்துயி றுஞ்சும் ;
ஆங்க;
உஎ விருந்தெதிர் கொள்ளவும் பொய்ச்சூ ளஞ்சவு
மரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவு
மாங்கவிக் கொழியுமென் புலவி தாங்கா

௬. கல்லகாளில் வதுவை செய்தல் மரபென்பதை, கலி. கூ: கஉ - ௬ - ஆம் அடிகளின் குறிப்பாலுணர்க.

௨. "இடைநிலைப்பாட்டே தரவகப்பட்ட மரபினது" என்புழி அகப்படுதல் என்பதற்கு அகம்புறமென்றிரு கூறு செய்தவழி முற்கூற்றினுட்படுதல்; முன், காலமுன்றும்; எனவே ஆறடிமுதல் இரண்டடிகாறும் வரப்பெறுமென்று கொள்க.................பன்னிரண்டி யிகந்த "நோாச் செறுவின்" என்ற தாவிற்கும் "எல்லிவருநர்..............மறைப்ப

(பிரதிபேதம்) * விரைந்தவிதழை. † அலைக்க, ‡ வெள்ளியைவருநி, எல்லிவருநி, || எல்லை.

## மூன்றுவது மருதம் கO. ௯௯௯

(க) *விரியுளைக் கலிமான் றேரொடு வந்த
(உ) விருந்தெதிர் †கோடலின் மறப்ப லென்றும்

எ - து: வதுவை அயர்ந்த ‡பின்பு விளக்கத்தினையுடையையாய் வாராநின்றாய், எம்மை எத்தன்மையாகக் கருதினையெனப் புலந்துகூறிப் பின்னர் ஒருமொழியைக் கூறுதிருப்பேனாயின் அது||நீக்கப்பரந்த கழுத்தின்மயிரினையும் மனச்செருக்கினையுமுடைய குதிரை பூண்ட தேரிலே ஆரவாரிப்பக் கொண்டு வந்த விருந்தினரை எதிர்கொள்ளுகையினாலே எந்நாளும் புலவியை(ட) + மறப்பேன். எ - று.

கஅ வாடிய பூவொடு வாரலெம் மனையென
ஆடி யிருப்பெ னாயி னீடா

---

வென்றும்" எனத் தரவகப்பட்ட தாழிசை வருதல் கொள்கவென்பர், நச்; தொல். செய். சூ. கரு௬.

௬. தனக்கொத்த இல்லறம் இன்னதென்று தலைமகள் மனத்துட்படுதலாகிய "புரையறத் தெளிதல்" என்பதற்கு,"விரியுளை..........மறப்பலென்றும்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, இது அவனொடு சொல்லாடாது கூடியிருப்பேனாயின் விருந்து கொண்டு புகுதரும்; அதனால் கூடலே மறப்பேனென்றமையிற் புரையறந்தெளிதலாயிற்றென்பர், பேர்; தொல். மெய்ப். சூ. உ௬; இ - வி. நூலாரும் இதனையே எழுதுவர்; இ - வி. சூ. ௫அO.

உ௨ பகலான் டல்கினை பரத்த வென்றியா
னிகலி யிருப்பே னுயிற் றன்றன்
(ரு) முதல்வன் பெரும்பெயர் ‖முறையுளிப் பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த்துயி லுஞ்சும்

---

௧. "தெய்வ மஞ்சல்" என்னும் மெய்ப்பாட்டிற்கு, "அச்சாறுக......... ஆகுவல்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உ௪. பே. இ - வி. சூ. ௩௮௦.

௨. "என்னை யருளி யருண்முருகு குன்றுளி, வின்னை யருளி வணக்கான் மெய் வேறின்னும், விறல்வெய்யோ னூர்மயில் வேனிழ னேக்கி, யறவு ரடிதொடி னு மாசுகவை குளேல், குறவன் மகளாவே கூறேலா கூறே, லைய குளி னடிதொடு குன்றேறு, வையைக்குத் தக்க மணற்சீர் குன் கூறல்." பரி. அ: சுஇ - எக.

௩. தொல். கள. சூ. உ௩. இதனுரையில் இவர் 'அஞ்சுதல் அச்சென்று யிற்று' என்று எழுதியிருக்கிறார்.

௪. (அ) "அச்சற் றேம மாகி" (பதிற். ௬௦: உ.) என்புழி, அச்சமென்பது கடைக்குறைந்த தென்று எழுதியிருத்தலும். (ஆ) "நகையச் சாக நல்லமிர்து கலந்த" பரி. ௩: ௩௩. (இ) "அச்சிடை யிட்டுத் திரிபின்" பழ. உ௧௧. என்பவையும் ஈண்டறிதற்பாலன.

௫. "புதல்வன் பொன்மகுடம் பொறுத்தலான், முதல்வன் பேருவகைக்கு முந்துவார், ஒதவும் பூமகள் சேர வொண்மலர்க், கதவுஞ்செய்ய கரத்தி னீக்கினான்" கம்ப. அரசியற். உ௧. என்பதனால் முதல்வனென்பது தகப்பனார் பெயராய் வருதலையும் "அறைதரு மாக்தா தாமுன முயிர்த்தோ ரம்பரீ டன்புரு குச்ச, னெறிபுரு புகழ்சார் தருமுசு குந்த னிகழ்த்துமிம் மூவரின் முன்னேன், குறைவற குணஞ்சாலொருமகவென்னக்குலவி......பிதாமகனுரு, முறைமையின் புவனச் சுவனெனு நாம முதல மெற்பெறீஇச் சிறந்தான்" பாக. (பிருதிவேபதம்) * புணரிய, † நீட்டியமல், ‡ வேட்டுணை ரதநம் வழி. ‖ முறையுளிபெற்ற.

மூன்றாவது மருதம் ௬௦. ௬௫௩

எ - று: *பரத்தைமையையுடையவனே! பகற்பொழுதெல்லாம் பரத்தையர் மனையிலே தங்கினையென்று கூறி யான் அவனுடனே மாறுபட்டிருப்பேனாயின், தான் தன்னுடைய தந்தையுடைய பெரியபெயரைப் பெற(க)முறையாற் பெற்றபுதல்வனைத் தழுவிப்(உ)பொய்யாகியதுயிலைக் கொண்டிருந்தும். எ-று

அஞ்சுதல் - இறந்துபடுதல். 'பகலாண்டல்கினை' எனவே உண்டிக்காலத்தும் வந்திலையென்றான்.

† ஆங்க, அசை.

உச (௩)விருந்தெதிர் கொள்ளவும் பொய்சூ ளஞ்சவு
மறம்புரி புதல்வனை முயங்கக் காணவு
‡மாங்கனித் தொழிலுமென் புலவி தாங்கா
‖தவ்வயி னிடத்தா னவையவை காணப்
பூங்கண் மகளிர் புனைநலஞ் சிதைத்து
(௪)பாய ÷மகிழ்நன் பரத்தைமை
நோவென் றோழி (௫)கடனமக் கெனவே

---

(க) அரிச்சந்திரன்கதையுரைத்த. க. என்பதனாலும் "எந்தை பெயரனை யாங் கொள்வேம்" கலி. அக: நகு. எனப் பின்பு இந்நூலுள்ளே வருதலாலும் ஒருவன் தன்தகப்பனார்பெயரைத் தன்பிள்ளைக்கு இடுதல் மரபென் பதையும் அறிக.

க. உளியென்பது மூன்றாம்வேற்றுமைப்பொருள்படவந்தோரிடைச்சொல்.

உ. (அ) "சிந்தைபெய்த் திரு வினைசப், பூவிய லமளி மேலசப் பொய்யுறக் குறங்குவானை" கம்ப. சார்தேவி. உகரு. (ஆ) "பொலங்கொடி னாணி ஞெண்டும் பொய்த்துயில் கூர்த்தா ளன்றே" நைடத. மணம். சஉ.

௩. தற்புன்னுங் கைகோளில் உணர்தலுக்கு "விருந்தெதிர்........புலவி" என்னும் இப்பகுதி மேற்கோள். தொல். செய். சூ. கஅ௭. பேர். நச்.

௪. (அ) "அன்புடைக் கணவ ரதிகச் செயினும், பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை" பெருங். (௪) கச: கஅக. (ஆ) "சிறுமையும் பெருமையுந் தெரிந்தி லாபெனப், பொறுமையொன் றின்றியே பொங்குங் கங்கையை, யறமல குவமினார்க் கன்பர் பாற்செயுந்,

(௭௩.) புனையிழை நோக்கியும் புனலாடப் புறஞ்சூழ்ந்து
மணிவரி தைஇயுநம் மில்வந்து வணங்கியு
நினையுபு வருந்துமிந் நெடுந்தகை திறத்திவ்வூ
ரினையளென் றெடுத்தோதற் கனைப்போ நீயென
வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி;

௬ செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றா யென்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
கௌவைநோ யுற்றவர் காணாது கடுத்தசொல்
லொவ்வாவென் றுணராய்நீ யொருநிலையே யுரைத்ததை;

௧௦ ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர வவன்கண்டு
நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்தந் தனைத்தற்கோ
விடுந்தவர் விரகின்றி யெடுத்தசொற் பொய்யாகக்
கடிந்ததூஉ மிலையாய்நீ கழறிய வந்ததை;

---

இல்லுறைமகளிர்க்கு இயல்பென்னும் அறத்தினுனே' எனக்கூறிய வாறு கண்டுகொள்க" என்பர், இளம்; தொல். மெய்ப். சூ. ௨௪.

௧. தொல்: செய். சூ. ௧௩௧. இரண்டாம்பக்கம். ௪௪௭: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * பாத்தலையையலே, † நின்காத படியாலே, ‡ வயப்பேற்பவும் பிழை, வயப் பேறவும்பெறுமே, வயவென்றதையவும் பிழை, ‖ தழுப்பட்ட, × தனி [illegible]

## மூன்றாவது மருதம் ௧௧. ௪௨

௧௪ வரிதேற்றாய் நீயென வணங்கிறை யவன்பற்றித்
தெரிவேய்த்தோட் கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத்தற்கோ
புரிபுநம் மாயத்தார் பொய்யாக வெடுத்தசொல்
லரிதென வுணராய்நீ யுலமந்தாய் போன்றதை;
எனவாங்கு;

கக. அரிதினி யாயினுமா யதுதேற்றல் புரிபொருங்
கன்றுநம் வதுவையு ணயர்செய்வ தின்றிங்கே
தாணயந் திருந்த தில்லூ ராயி னெவன்கொலோ
நாஞ்செயற் பால தினி.

இஃது "அச்ச நீடினும்" (க) என்றதனாற் கூட்டமுண்மை உணர்ந்த தோழிக்கு உண்மைகூறுதற்கு அஞ்சிய அச்சம் நீட்டித்துத் தலைவி கூறியது. இது "திணைமயக் குறுதலுங்கடி நிலையிலவே" என்னும் (உ) சூத்திரவிதியான் மருதத்துக் குறிஞ்சி வந்தது.

இதன் பொருள்.

புன்னையிழை நோக்கியும் புனலாடப் புறஞ்சூழ்ந்து
மணிவரி தைஇயுநம் மில்வந்து வணங்கியு

நின்னுறு வருத்துமிக் கொடுந்தனை திறத்தில்லூ
ரின்னையளென் றெடுத்தோதற் கனைமையோ நீயென
(ரு) வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி

எ - து: கைசெய்த பூண்களைக் கிடக்கும் முறைமையிலே கிடக்கத் திருத்தியும், நாம் நீரிலே விளையாட நமக்கு நடுக்கம் வாராமற் புறத்தே சூழ்ந்து திரிந்தும் அழகிய தொய்யிலெழுதியும் நம்முடைய சிற்றிலிலே வந்து

வெற்றெழுதிலைச் செய்தும் கூட்டத்தை † நினைந்து வருந்துகின்ற, இந்தப் பெரிய தகுதிப்பாட்டையுடையவனிடத்தே கூட்டத்தையுடையனென்று இவ் வூரிலுள்ளார் பலகாலுங் கூறுதற்கு நீ அங்ஙனம் ஒருகூட்டத்தையுடையை யோவென்று கேட்கின்றாயாயின், விளக்குகின்ற இழையினையுடையாய்! இப்பொழுது யான் கூறுகின்றதனைக்கேள். எ - று.

---

க. தொல். களவு. சூ. 20. இச்சூத்திர வுரையிலும் இச்செய்யுட்கே இக் குறிப்போடு இச்செய்யுளை இவர் மேற்கோள் காட்டியிருக்கிறார்.

உ. தொல். அகத். சூ. கஉ. இச்சூத்திரத்தின் இவருரையிலும் மருதத்துக் குறிஞ்சி மயங்கியதற்கு இச்செய்யுள் மேற்கோள்.

ரு. "வினவுதி யாயிற் கேண்மதி" ஆசிரிய. 'ஒளிவிடு'

(பி-ம்.) * [illegible], † [illegible].



(க)செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்று மென்றவன்
பௌவநீர்ச் (உ)சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
*கௌவைநோ யுற்றவர் காணாது கடுத்தசொல்
லொவ்வாவென் றுணராய்நீ யொருநிலையே (ங)யுரைத்ததை.

எ - து: அலர்தூற்றுத லில்லாதபொழுது வருத்தமுற்றிருந்த மகளிர் இது தகாதென்று ஆராயாதே ஐயுற்றுக் கூறியசொல் இவட்குப் †பொருந்தா வென்று அறியாயாய் நீயும் அவர்கள் சொன்ன நிலையிலேசொன்னது, சிவந்த விரல் மிகச்சிவப்புப் பரக்கும்படியாக நெடும்பொழுதுநின்று வாங்கினு மென்றுசொல்லி அவன் கடல் நீர் வந்து எறின கழியிடத்துத் தண்டான் கோரையைப் பறித்துக் கிழித்துப் பாவைபாக்கித் தந்த அச்சிற்றுபகாரத் திற்கோ? எ - று.

நீர், ஆகுபெயர்; "ஒன்றேவேறே" (ச) என்பதனால் வேற்றுநிலமாயிற்று. மருதத்துத் தலைவி நெய்தலில் நேர்பட்டமையின்.

ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர வவன்கண்டு
நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்தந் தனைத்தற்கோ
‡விடுந்தவர் விரகின்றி யெடுத்தசொற் பொய்யாகக்
கடிந்ததூ மிலையாய்நீ கழறிய (ரு)வந்ததை

எ - து: தீயரென்று எல்லாருங் கைவிடப்பட்ட மகளிர் அன்னைக் கூறுதல் தீதென்று உணரவல்ல விரகின்றிப் பல்காற் கூறிய சொல் பொய்யாகக் கெடும்படி தவிர்த்ததுவுமில்லையாய் நீ என்னைக் கோபித்தற்கு வந்தது, தோழி யாம் உட்புகுதலைப்பொருந்தேமாய்மீள அவன் அதனைக்கண்டு நெடிய

---

க. (அ) "ஒவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச், செவ்விரல் சிவந்த...
.........அரிவையர்" பதிற். கஅ: சஎ-க., (ஆ) "சேந்தக ணதிகமுஞ்
செவந்து நீருக" கம்ப. மாரீசன்வதை. கூஅ. (இ) "சிவந்த தளிர்க்கை
சிவப்பூர" பாக, உருக்குமிணி யூடறீர்த்த. உ.

௨. "தாய்தாட் பிள்ளை தந்து கொடுத்தும்" கலி. ௧௫: ௨௪.

௩. "வன்ந்தனை" என்பது வினைத்திரி சொல்லென்பதற்கு 'உரைத்தனை' என்பது மேற்கோள்; சீவக. ௨௨௩ - உரை.

௪. தொல். களவி. ௫. உ. இச்சூத்திர வுரையில் "செவ்விரல்............ உரைத்தனை" என்னும் பகுதியை மேற்கோள்காட்டி 'இது மருதத்துத் தலைவி களவொழுக்கங் கூறுவாள் பௌவநீர்ச் சாய்ப்பாவை தந்தொருவனென செய்தனிலத்தெதிர்ப் பட்டமைகூறியது' என்பர். நச்.

௫. வந்தனை யென்பது வினைமுற்றாக வருதல். கந்த. தேவகிரி. ௨௨.

(பிரதிபேதம்) * சோலைபோழ்ந்தவை. † பொருந்தாதென்று. ‡ விளித்தவை.



கயத்தின் மலரைப் பறித்துப் *புறவிதழையொடித்துத் தந்த அச்சிற்றுபகாரத்திற்கோ ? எ - று.

தந்த, விடுத்த: இவை விகாரம்.

௧௪ வரிதேற்றாய் நீயென வணங்கிறை யவன்பற்றித்
தெரிவேய்த்தோட் கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத்தற்கோ
புரிபுநம் மாயத்தார் பொய்யாக விடுத்தசொல்
(க)†வரிதென வுணராய்நீ ‡(உ)புலமந்தாய் போன்றதை

எ - து: காவல்புரிந்து காக்கின்ற நம் ஆயத்தார் காவல் ||பொய்யாய்ப் போம்படி இவ்வூரார் பலகாற் கூறிய கூற்றை நீ பொய்யென்றுணராயாய் இவட்கு உரித்தென்றுகருதி அலமந்தாரைப்போலே இருந்தது, நீ தொய்யி லெழுத அறியாயென்று கூறி வளைந்த முன்கையை அவன் பிடித்துத் தெரிந்தவேய்போலுந்தோளிலே கரும்பையெழுதித்தொய்யிற்குழம்பான்(௩)மற் றும் எழுதற்கு உரியனவற்றை எழுதின அச்சிற்றுபகாரத்திற்கோ ? எ - று

செய்த, உரித்து: இவை விகாரம்.

∴ எனவாங்கு

எ - து: என்று யான் நினக்குக் கூறும்படியாக. எ - று.

ஆங்கு, அசை.

௧௬ அரிதினி யாயிழா யதுதேற்றல் புரிபொருக்
கன்றுநம் வதுவையு ணமர்செய்வ தின்றீங்கே
தானயந் திருந்த திவ்வூ ராயி னெவன்கொலோ
நாஞ்செயற் பால தினி.

எ - து: ×நின்னெஞ்சிடத்து நிகழ்ந்த இக்காரியம் ஆயிழாய்! இனித் தெளிவித்தல் அரிது; இனி நம்முடைய வதுவையிடத்தே நஞ் சுற்றத்தார் சேரவிரும்பி அன்று செய்யுங் காரியத்தை இன்று இவ்விடத்தே இவ்வூர் விரும்பி யிருந்ததாயின் அதற்கு நாம் ✛ செய்தற்பகுதியையுடைய காரியம் எக்காரியம்? =எ - று.

---

௧. "உரிது" குறிஞ்சி. ௯௯; பரி. ௧௩: ௧௩; ௧௮: ௯௯; கலி. ௧௨: ௭; அகம். ௧௧௨: ௨௦. சிலப். ௨: ௪௦.

௨. "உலமரல், சொற்புற நடையாற் கொள்க" என்பர், ௧௪; தொல். உரி. ௫. ௧௩. கலி. ௮௩: ௨: ௧௧௩: ௩; ௧௩௭: ௯; ௪௯: ௪; அகம். ௧௮: ௧௩: ௩௧௯: ௧௦. கம்ப. மீட்சி. ௨௨௪.

௩. "கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி" சிலப். ௨: ௨௯.

(பிரதிபேதம்) * புறவிதமொழிந்து, † உரித்தென. ‡உலம்வந்தாய், || பொய்யாம்படி, ✛ உலமந்தானா, ∴ ஆங்கசை. என அரிதினி, × என்றயான் நினைக்கும் கூறும் படியாக நின் ✛ செய்தற்குப் பகுதியை, ∞ எனத்தலைவி தோழிக்குக்கூறிமுடிப்பன்றது.

## ௪௯௪ கலித்தொகை ௭௭.

இது தலைவி தோழிக்குக் கூறியது.

"பன்னூறு வகையினுந் தன்வயின் வரூஉ, நன்னய மருங்கி னாட்டம் வேண்டலிற், றுணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந், துணையோர் கரும மாக லான" (௧) என்பதனுள் வினவுதியாயினென நாட்டம் நிகழ்ந்தவாறும் சுரிதகத்துக் கூட்டங் கூறித் துணைச்சுட்டுக் *கிளவி கிழவியதாயவாறுங்காண்க.

இதனால், தலைவிக்கு அச்சம் நிகழ்ந்தது. இதனைத் தோழி கூற்றாக்கி உரைப்பாரும் உளர்.

இஃது † ஆசிரியத்தளையுங் கலித்தளையும் விரவி ஐஞ்சீரடி வந்து வெள்ளைச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. "வெண்பாவியலினும் பண்புற முடியும்"(௨) என்பதனால் வெள்ளைச்சுரிதகத்தாலிற்றது. இது "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு, மைஞ்சீ ரடியு முளவென மொழிப"(௩)என்பதனான் ஐஞ்சீரடியும் வந்தது. (௪௪)

(௭௭.) இணையிரண் டியைந்தொத்த முகைநாப்பட் பிறிதியாதுந்
துணையின்றித் தளைவிட்ட தாமரைத் தனிமலர்
திருமுக மிறைஞ்சினள் வீழ்பவற் கினைபவ
ளரிமதர் மழைக்கண்ணி ரலர்முலைமேற் றெறிப்பபோற்
௫ றகைமலர்ப் பழனத்த புள்ளொற்ற வொசிந்தொல்கி
மிகைனி சேர்ந்தவம் முகைமிசை யம்மல
ரகவிதழ்த் தண்பனி யுறைத்தரு மூரகேள் ;
அ தண்டளிர்த் தகைபூத்த தாதெழி னலஞ்செலக்
கொண்டுநீ மாறிய கவின்பெறல் வேண்டேன்ம
ணுண்டாதல் சாலாவென் னுயிர்சாத லுணர்ந்துநின்
பெண்டெனப் பிறர்கூறும் பழிமாறப் பெறுகற்பின்;
௧௨ பொன்னெனப் பசந்தகண் போதெழி னலஞ்செலத்
தொன்னல மிழந்தகண் டுயில்பெறல் வேண்டேன்ம
னின்னணங் குற்றவர் நீசெய்யுங் கொடுமைக
ளென்னுழை வந்துநொந் துரையாமற் பெறுகற்பின்;

---

௧. தொல். கள. சூ. ௩௨. இச்சூத்திரத்தின் இவ்வுரையில் "புனையிழை நோக்கியுமென்னும் மருதக்கலியுள் 'வினைவயிற்பிரிந்தோன்' என நாட்டம் நிகழ்ந்தவாறும் அதன் சுரிதகத்துக் கூட்டமுண்மை கூறுதலின் துணைச்சுட்டுக் கிளவி கிழவியதாயவாறும் காண்க" என்பது காணப்படுகிறது.

௨. தொல். செய். சூ. ௭௭. ௩. தொல். செய். சூ. ௬௩.

(பிரதிபேதம்) * கிளவியதாயவாறும், † ஆசிரியத்தளையும் விரவி ஐஞ்சீரடியும்.

கச மாசற மண்ணுற்ற மணியேசு மிருங்கூந்தல்
விசேர்ந்து வண்டார்க்குங் கவின்பெறல் வேண்டேன்ம
னேய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்லினும் வாராமற் பெறுகற்பின்;
ஆங்க;
உக கடைஇய நின்மார்பு தோயல மென்னு
மிடையு நிறையு மெளிதோநிற் காணிற்
கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னுந் தம்மோ
டுடன்வாழ் பகையுடை யார்க்கு.

இது பரத்தையர் சேரியிற்சென்றுவந்ததலைவனோடு ஊடிய தலைவி ஊடறீர்கின்றாள் கூறியது.

இதன் பொருள்.

(க) இணையிரண் டிணைக்கொத்த முகைகாப்பட் டிறிதியாதுந்
துணையின்றித் தளைவிட்ட தாமரைத் தனிமலர்;
திருமுக மிறைஞ்சினள் வீழ்பவற் கிணைபவ
(உ) ளரிமதர் (ங) மழைக்கண்ணா ளலர்முலைமேற் றெறிப்பபோற்

று நகைமலர்ப் பழனத்த புள்ளொற்ற வொசிந்தொல்கி
யிதழணி சேர்ந்தவம் முகைமிசை யம்மல
ரகவிதழ்த் தண்பனி யுறைத்தரு மூரகேள்

எ - து: தாமரையிற் றனித்த மலர்கள் இரண்டு தம்மிற் சேர்ந்து ஒப்பொத்த முகைகளுக்கு நடுவே நின்று † வேறொரு பூச் சிறிதுந் தம் அருகு சேர்தலின்றி முறுக்கு ‡ அவிழ்ந்தன; தான் விரும்பப்பட்டவனுக்கு அழகினையுடைய முகம் கவிழ்ந்து அழுகின்றவளுடைய செவ்வரியினையுஞ் செருக்கினையுங் குளிர்ச்சியினையுமுடைய கண்ணின் நீர் அடிக்கொண்ட முலைமேல்

க. இவ்வடி இணைமோனைக்கு மேற்கோள்; தொல். செய். சூ கஉ. ரச.
உ. இவ்வடி பொழிப்பு மோனைக்கு மேற்கோள். தொல். செய். சூ. கஉ. ரச.

௯. (அ) "கண்ணீர்சிறந்தல்செல்லான், முலைமுக நனைப்ப" புறம். கசஙு: கரு - கச. (ஆ) "முலைமேல், வடிக்கேழ் மலர்செங்கண் வார்புயலும் காலும்" சீவக. உ௬சக. (இ) "வாருங் கண்ணீர் வளர்கொங்கை வரைமே லருவி யெனவீழ" வில்லி. குருபோர். உகக. (ஈ) "மைக்க ணிலவாவி சிந்த வைகிய, மங்கை மென்முலைத்த டத்து" நைடதம். கைக்கிளை. க.

(பிரதிபேதம்) * சேரிச்சென்றுலைந்தழிகளோடு முடிய, † வேறொரு பூக்கள், ‡ அவிழ்ந்தன வென முற்றாகவுரைக்க. அப்பூக்கள் அழகின......வாரனே.

## சஙிஅ கலித்தொகை எஎ.

வீழ்வன * போல, அப்பூக்கள் அழகினையுடைத்தாகிய மலர்களையுடைய பழனத்திடத்தனவாகிய பறவைகள் வந்து தாக்க மிகவுஞ் சாய்ந்து வளைந்து மிகவும் இணர்த † அந்த முகைகளின்மேலே தம்முடைய உள்ளிதழினின்ற நீரைத் துளித்தலைத் தருகின்ற ஊரனே! ‡கேள். எ - று.

அம்மலர் புள்ளொற்ற ஒல்கி அம்முகைகளின்மேலே தண்பனி புறைத் தரும் ஊர என்றதனாற் சேரிப்பரத்தையர் நின்மனைவியரை இகழ்ந்து வந்து அவர்மனை தோறும் நின்னைத் தேடுகையினாலே அவர் வருந்தி அழுகின்ற ஊரவெனத் தலைவி புலந்துகூறினாள்.

அவிழ்ந்தன என வினைமுற்றாக உரைக்க.

அ தண்டளிர்த் தகைபூத்த காழெரி னலஞ்செலக்
(க)தொண்டுநீ மாறிய கவின்பெறல் வேண்டேன்மன்
றுண்டாதல் சாலாவென் னுயிர் ‖ சாதற் றுணார்ந்து(உ)நின்
(ங)பெண்டெனப் பிறர்கூறும் பழிமாறப் பெறுகற்பின்

எ - து: உண்டென்று கூறுதல் அமையாத என்னுயிர் அந்நிலையினும். நில்லாமற் சாதலை உணர்ந்துவைத்தும் நின் பெண்டென்று பிறர்கூறும் பழி போகப்பெறின், குவிந்த(ச)தளிரிடத்தே வீழ்ந்து அழகுபொலிவுபெற்றதாது

௧. (அ) "பிறனைக் கொலையாக்கும் கொண்டுகண்மாறல்" நான்மணி. ௮.
(ஆ) "கொண்டுகண் மாறல் கொடுமையிற் றன்றா" முதுமொழி. ௧௭.

௨. (அ) "சுட்டுமுதலாகிய அன்னும் ஆனும், ஐயைமுதலாகிய பெண்டென் கிளவியும்" என்பதன் விசேடவுரையில் என்னை, 'நின், பெண்டெனப் பிறர் கூறும் பழிமாறப் பெறுகற்பின்' எனச் சான்றோர் கூறலின் பெண்டென்பதே பாடமென்றும் அப்பெண்டென்னுஞ் சுட்டு, "சுழி சொல்லில்லை" என்பதனால் பெண்டென நின்றது என்றும் கூறுவர் நச்; தொல். பெயரி. சூ. ௧. (ஆ) தொல்காப்பியர் காலத்தே பெண்டென்னும் சொல் வழங்கிற்றென்பது, "வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும்" "பெண்டென் கிளவிக் கன்னும் வரையார்" தொல். குற். சூ. ௧௫, ௧௬. என்பவற்றால் விளங்குகின்றது. இச்சொல் பிறவற்றிலும் வந்துள்ளதேனும் ஐங்குறுநூற்றில் மிக வந்துள்ளது. (இ) 'இன்னன' என்பதனால் பெண்பாற்பெயர்களுள் பெண்டென்பதுமொன்றென்று கூறி அதற்கு "நின் பெண்டென...... .....பெறுகற்பின்" என்பதனை மேற்கோள்காட்டுவர், இ - வி. உரைகாரர்; இ - வி. சூ. ௧௭௮.

௩. ஒரூஉமோனைக்கு இவ்வடி மேற்கோளாகக் காட்டப்பெற்றிருக்கிறது; தொல். செய். சூ. ௯௨ நச். வேறுசிலர் கருத்தின்படி இது மேற்கதுவாய் மோனையாகும்.

௪. இந்நூற்பக்கம், ௧௫௪: ௩ - ஆம் குறிப்பில் இவ்விடத்துக்கு ஒத்தன ஒப்புநோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * போல் அம்மலர் புன்னொற்ற.........கூறினன், தண்டளிர்த் † அம்முலைகளின் ‡ கேளெக. தான் விரும்பப்பட்ட || சாய்தலுணர்த்து.

## மூன்றாவது மருதம் ௧௨. ௪௧

போலும் எழிலையுடைய மாமையுஞ் சுணங்கும் எம்மிடத்தினின்றும் போம்படியாக வாங்கிக்கொண்டு நீ பின்பு ஒருகாலுந்தாராதுவிட்ட அழகை யான் பெறுதலை விரும்பேன்; அதனைப் பெற்றதென்? பெண்டென்னும் பெயர் போகாதாயிற்றே! எ - று.

(௧) பெறுகற்பின், வினைத்திரிசொல். மன், கழிவு.

சாதலுணர்த்துமென்பது நெடுங்காலங் கைவிட்டமை தோன்ற நின்றது.

௬௨ (உ)பொன்னெனப் பசந்தகண் போதெறி னலஞ்செலத்
தொன்னல மிழந்தகண் டுயில்பெறல் வேண்டேன்மன்
(௩)னின்னணங் குற்றவர் நீசெய்யுங் கொடுமைக
ளென்னுழை வந்துநொந்(௪)துரையாமற் பெறுகற்பின்

எ - து: *கண்கள் பூவினது அழகையுடைய நலம்போம்படியாகப் (௫)பொன்போலப் †பசந்தன; நின்னால் வருத்தமுற்ற பரத்தையர் நீ செய்யுங் கொடுமைகளை என்னிடத்தே வந்து வெறுத்துச்சொல்லாமையை யான் ‡பெறின், இயற்கைநலத்தையுமிழந்தஅக்கண் துயில்பெறுதலைவிரும்பேன்; அதனாற் பெற்றதென்? அம்மனம் என்னை இகழ்ந்து கூறுதல் ||தவிராரே! எ - று.

---

௧. 'பெறுகற்பின்' என்பதற்குப் பெறின் என்னும் பொருள் இங்கே காணப்படுகின்றது. இதைப்போலத் திருக்குறளிற் 'செல்கற்பின்' என ஒரு வாய்பாடு காணப்படுகின்றது; அதற்கெழுதியுள்ளபொருளை நோக்க அது 'செல்கிற்பின்' என்றிருக்க வேண்டுமெனத் தோற்றுகிறது. இஃது ஆராய்தற்பாலது.

௨. இச்சூத்திரப்பக்கம் ௪௬௬: ௩-ஆம் குறிப்புப்பார்க்க.

௩. (அ)பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைக்கூறக்கேட்டதலைமகள் அதனைப் புலவியின்கண் தலைமகற்குக் கூறியதற்கு "நின்னணங்கு......... பெறுகற்பின்" என்பது மேற்கோள்; தொல். பொருளி. ரு. ௯௧. 'தம்முறு விழுமம்' இளம்.

(ஆ) "கோதக்கா யென நின்னை நொந்தீவா ரில்வழி" கலி. ௭௩: ௯.

௪. (அ) "பிறவாம லெந்த பெரியோய்" கம்ப. நாகபாச. ௨௫௮. (ஆ) "தற்பழி யாமலுஞ் சந்திர வாணன் றமிழ்த்தஞ்சைநாட், டற்பழி யாமலுங் காரணமாக" தஞ்சை. ௨௨௭. (இ) "என்சொல் வழுவுறாமல் வேண்டு மென்ன" வில்லி. பதினொன்காம். ௬௭. (ஈ) "வினைத் திமுத்துக் குட்டா மலுக்கு" தனிப்பாடல். என்பவற்றாலும் 'மல்' எதிர்மறைத் தொழிற்பெயர் விகுதியாய் வருதல் அறியலாகும்.

௫. "பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே" ஐங். ௯௯.

(பிரதிபேதம்) * உரையாமை பெறு, † பசந்தனவென முற்றுக்கு, இயற்கை நலத்தை யிழந்த அக்கண்ணெனச்சுட்டாக்கியுரைக்க. நின்னால், ‡ பெறின் அக்கண் துயில்பெறுதலை || தவிராரேயென்க. மாசற.

பசந்தனவென முற்றுக்குக. இயற்கை நலத்தையும் இழந்த அக்கண்ணனைச் சுட்டாக்கி உரைக்க.

௧௯ (௧)மாசற (௨)மண்ணுற்ற (௩)மணியேசு மிருங்கூந்தல்
(௪)வீசேர்ந்து வண்டார்க்குங் கவின்பெறல் வேண்டேன்மன்
(௫)ஞெய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை
நீசேர்ந்த வில்வினைப் வாராமற் பெறுகற்பின்

எ – து: நின்னுடைய பாணன்(௬)சோவுசேர்ந்த திறப்பண்ணைப்பண்ணி எம்முடைய மனையிடத்தே நீ சென்று சேர்ந்த பரத்தையர் மனையை என்னைக் கேட்டு வாராதிருத்தலை யான் பெறின், மாசறக் கழுவுதலுற்ற நீலமணியை நீ எனக்கு ஒவ்வாயென்று செய் கரியகூந்தல் பூவணிந்து வண்டுகள் ஆரவாரிக்கும் அழகைப்பெறுதலை யான் விரும்பேன்; அஃதுற் பெற்றதென் ? அவன் விளுவுதலைத் தவிரானே. எ – று.

எம்மனை, *வேண்டேனென்ப, ஒருமைப்பன்மைமயக்கம்.
ஆங்க, அசை.

---

௧. "செய்பொடு துறந்த மையிருங் கூந்தன், மண்ணுறு மணியின் மாசற மண்ணிப், புதுமலர் களுவ" புறம். ௧௪௭: ௬ – அ.

௨. "மண்ணார் மணியின் வணர்குரல் வண்டார்ப்ப" பரி. ௧௦: அ௬

௩. "அணிக்கயிற் றவழ்ந்த மணிக்குரலைம்பால்" "நீல மாமணி நிமிர்ந்தியன்றன்ன, கோலங்கொண்ட குழலெறிக் கூழை" "மணியிருங் கூந்தல்" பெருங். (௧) ௪௦: ௧௫அ, (௨) ௧௫: ௬௦ – ௬௧. (௩) ௬: ௧௫௩.

௪. (அ) "அருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை, கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன, வொலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத், தண் கமழ் கோதை புனைய" (ஆ) "புணர்ந்தோர் பூவணி யணிய" புறம். ௧௪௬: எ–௧௦; ௧௧௪: ௩. (இ) "பெறுக நின் செவ்வி பெருமகன் வந்தா, னறுமலர்க் கூந்த லொணி பெறுகென" சிலப். ௨எ: ௨௧௫ – ௨௧௬. எனவும் (ஈ) "போதில் வறுங் கூந்தல்" கலி. அ௦: ௨௩. (உ) "தன்ன

வன் றணந்த காலைப், பூமனும் புனைதலின்றி" சீவக. கஙகஅ. எனவும் வருவன இங்கு அறிதற்பாலன.

ஓ. "நோய் சேர்ந்த.........பெறுகற்பின்" என்பது கற்பின்கண் மடந்தப வுரைத்தலென்னும் மெய்ப்பாட்டிற்கும் (தொல். மெய்ப். சூ. கக. பேர்.) ஊடலுக்கும் (தொல். செய். கஅஎ. பேர், கச.) மேற்கோள்.

க. பரி. பதின்மூன்றும்பாடலின்பண் நோதிறமென்றிருத்தலும் சிலப். ச: எஙி. "யாண்வாய் வண்டு நோதிறம்பாட" என்றிருத்தலும் இங்கு கருதற்பாலன.

(பிரதிபேதம்) * வேண்டேனென்பது.

## மூன்றுவது மருதம் கஉ.

உக (க) கடைஇய நின்மார்பு தோயல மென்னு
மிடையு நிறைய வெளிதோநிற் காணிற்
கடவுபு கைத்தங்கா (உ)நெஞ்சென்னுந் தம்மோ
டுடன்வாழ் பகையுடை யார்க்கு.

எ - து: "தம்முறு விழுமம் பரத்தையர் கூறினு,மெய்ம்மையாக வவர்வயி னுணர்ந்து, தலைத்தாட் கழறரம் †மெதிர்பொழு தின்றே, மலிதலு மூடலு மவையலங் கடையே" (க) என்பதனாற் பரத்தையர் முன்னரன்மையின் மலிதலும் ஊடலும் ‡நிகழ்த்துதலைக்கழ றினள். நின்னைக் காணில் என்னை உன்னிடத்தே செலுத்தத் தாராமல் நினனிடத்தே ||தங்கி வருந்துநெஞ் சென்று சொல்லப்படுகின்ற நம்மோடே ஒன்றாய் வாழப்படுகின்ற உட்பகையை

புடையார்க்கு முன்னர் எம்மை நின்மேல் வீழ்வித்த நின் மார்பைக் கூடக் கடவேமல்லேமென்று †கருதும் (ச) நிறையென்னும குணத்தையும் பெறுத லெளிதோ? அரிது அரியன்றோ? என ஊடநீர்த்தாள். எ - று.

இடையும் - நெஞ்சென்க. நிறையுமென்னும் உம்மை, சிறப்பு.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சிபுவகை பிறந்தது.

×"அருணமுற் துறத்த வன்புபொதி கிளவி, பொருள்பட மொழிதல்கிழ

விரைபகை தணிப்பவக் குடிபதிப் பெயர்ந்தாங்கு
நிரைபுன லீங்கவர் தத்தும்பி யம்மலர்ப்
பறைதவிர் பசைவிடேம் பாய்புன லல்லூர ;

கக நீங்குங்கா லிறஞ்சாய்ந்த புணருங்காற் புகழ்பூத்து
நாங்கொண்ட குறிப்பிவ னலமென்னுந் தகையோதா
னெரியிதழ் சோர்ந்துக வேதிலார்ப் புணர்ந்தமை
கரிகூறுங் கண்ணியை யீங்கெம்மில் வருவதை ;
கஉ சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற்கூம்பு மலர்போலென்
றொடர்நீப்பிற் றொகுமிவ னலமென்னுந் தகையோதா
னலர்நாணிக் கரந்தநோய் கைம்மிகப் பிறர்கூந்தன்
மலர்நாறு மார்பினை யீங்கெம்மில் வருவதை ;

கங பெயினந்தி வறப்பிற் சாம் புலத்திற் தப் பெயல்போல்யான்
செலினந்திச் செறிற்சாம்பு மிவளென்னுந் தகையோதான்
முடியுற்ற கோதைபோல் யாம்வாட வேதிலார்
தொடியுற்ற வடுக்காட்டி யீங்கெம்மில் வருவதை ;
ஆங்க;
உச ஐய வமைந்தன் றனித்தாகப் புக்கீமோ
வெய்யாரும் வீழ்வாரும் வேறாகக் கையின்
முகைமலர்ந் தன்ன முயக்கிற் றகையின்றே
தண்பனி வைக லெமக்கு.

**இது பரத்தையர் *சேரியிற் சென்று வந்த தலைவனோடு ஊடிய காமக் கிழத்தி ஊடறீர்கின்றாள் கூறியது.**

**இதன் பொருள்.**

---

(பிரதிபேதம்) * சேரிச்சென்று.

## மூன்றாவது மருதம் கக. உகஉ

பன்மலர்ப் பழனத்த (க)பாசடைத் தாமரை

யின்மல ரிமிர்பூதுங் துணைபுண ரிருந்தும்பி
யுண்டுறை யுடைந்த பூப் புனல்சாய்ப்பப் புலந்தூடிப்
பண்புடை (உ)நன்னாட்டுப் பகைதலை வந்தென
௱ வதுவைவிட் டகன்றொரீஇக் காக்கிற்பான் குடைநீழற்
பதிபடர்ந் திறைகொள்ளுங் குடிபோலப் பிறிதுமோரு
பொய்கைசேர்ந் †தலாரும் பொழுதினான் மொய்தப
விறைபகை தணிப்பவக் (௩)குடிபதிப் பெயர்ந்தாங்கு
நிறைபுன னீங்கவந் தத்தும்பி யம்மலர்ப்
(௪)புறைதவிர் (௫)பகைவிடூஉம் (௬)பாய்புன லல்லூர

எ - து: பலமலர்களையுடைத்தாகிய மருதநிலத்திடத்தனவாகிய பசிய இலைகளையுடைய தாமரையினது கட்கினிய மலரை ஆரவாரித்துச் சென்று

௧. "பாசடைத் தாமரை" கலி. எ௯: எ.

உ. ஒரு நாட்டுப் பகைவரூற் றுன்பம் வந்துழி ஆங்குள்ள குடிகள் அந்நாட்டைக் கைவிட்டுச் செல்லுதல் மரபு: (அ)"பதியெழு வறியாப் பழங்குடி செழீஇ" மலைபடு. ௬௪௧. (ஆ) "பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய" சிலப். ௧: ௧௫ என்பவையும் 'பதியெழு வறியா-பதியினின்றும் பெயர்தலை யறியாத; எனவே பகையின்மை கூறிற்று' என்று அடியார்க்கு நல்லாரெழுதியிருப்பதும் (இ) "அதிராச்சிறப்பின் மதுரை மூதூர்" (சிலப். பதி. ௩௧) என்புழி 'அதிராச்சிறப்பு' என்பதற்கு, 'பகைவரால் அதிர்ச்சியில்லாத சிறப்பு' என்று அரும்பத வுரையாசிரியரும், 'பகைவரால் நடுக்கமில்லாத சிறப்பு' என்று அடியார்க்கு நல்லாரும் எழுதியிருப்பவையும், (ஈ) "ஆளெலா மழிக்க தேரு மாளைய மடன் மாவு, காளெலா மெண்ணி னூக் தொலைவிலா காதின்றித், தாளெலாங் குலைய வோடித் திரிவன தாக்க லாற்றும், கோளிலா மன்ன னாட்டிற் குடியெனக் குலைவ கண்டான்" கம்ப. பிரமாத்திர. ௩௪௭. என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

௩. "சூறை யாட்டயர் வார்தொலை வெய்தலும், பாறி னோர்படர்ந் தாங்குப் படுகளை, கோறல் செய்தவர் நீக்கலுங் கொம்மெனச், சேற குவயற் செறறின புள்ளெலாம்" தணிகைப். திருநாட்டுப், ௧௧௨.

௬. பறை - பறத்தல்; இஃது ஆகுபெயராய்ப் பறவைக்கும் வரும்.

௭. அசை, முதனிலைத் தொழிற் பெயர்.

௮. (அ) பூரய்தலென்பது பரத்தலாயெ குறிப்புணர்த்தி வருதற்கு, 'பாய் புனல்' என்பது மேற்கோள். தோல். உரிச். ரு. கூ. சே. ரு. ௬௦.

(பிரதிபேதம்) *பிறிதுமோர், † அலமரும்.



ஊதுர் துணையைப்புணர்ந்த கரிய தும்பி பலரும் நீர் உண்ணும் துறையில் அலர்ந்த பூவைப் பெருகிவந்த நீர்சாயப்பண்ணுகையினாலே அப்பூவிலிருத்தலை வெறுத்து * அப்புனலுடனே ஊடி நற்குணங்களையுடைய நல்ல நாட்டிற்கு உரிய பகை தம்மிடத்தே வந்ததாக அந்நாட்டை † இருப்பல்லவென்று கைவிட்டு நீங்கிப் போய்த் தன்னாட்டைக் காக்கின்றவனுடைய குடைநிழலி

லூர்களை இருப்பாக நினைத்துத் தங்குதல் கொள்ளுங் குடிமக்களைப்போல வேறுமொரு பொய்கையைத் தனக்கு இருப்பாக ஆராய்ந்திருந்து பழைய பொய்கையை நினைத்துச் சுழல்கின்ற காலத்தே ‡அவ்விறைவன் வந்தபகையின் வலிகெடும்படியாக அப்பகையைப்போக்க அக்குடிமக்கள் பதியிடத்தே மீண்டு சென்றாற்போல அந்நிலத்துள்ளார் போக்க அப்பெரும்புனல் நீங்குகையினாலே ‖ மீண்டுவந்து அத்தும்பி அந்தத் தாமரைப்பூவின்மேல் பறத்தலைத் தவிர்த்து இளைப்பாறும் பரந்த புனலையுடைய நல்ல ஊரனே! எ - று.

பகைதலைவந்தன இறைகொள்ளுங் குடிபோலத் தும்பி ஊடித்தேர்ந்து அலமரும்பொழுதிலே அவ்விறை பகைதணிப்ப அக்குடி பதிப் X பெயர்ந்தாற்போலே புனனீங்க மீண்டுவந்து அத்தும்பி அம்மலரிலே அசைவிடும் ஊர என்றதனாற் பல பரத்தையரையுடைய பரத்தையர் சேரியிலே சிலநாள் ஒரு பரத்தையை ஆராய்ந்துடனே நீ வதுவைபயர அவளை நின் காதற்பரத்தை வந்து கோபித்துத் திங்கு கூறுகையினாலே வதுவையயர்ந்தவளிடத்துக் கூட்டத்தையும் வெறுத்துக் காதற்பரத்தையொடும் ஊடி வேறோர் பரத்தையர் சேரியிலே சென்றிருந்து நீ வதுவையயர்ந்தவளை நினைத்து + வருந்துகின்ற காலத்தே அவள் சுற்றத்தார் காதற்பரத்தை கோபந்தணிக்க மீண்டு சென்று

அவளிடத்தே தங்குகின்றாயெனக் காமக்கிழத்தி புலர்ந்து கூறினள். இது வினைபுவமப்போலி. வினைபுவமரும் வினையுவமம்.

கக (க)நீங்குங்கா லிறந்தாய்ந்து புனைநுங்காற் புகழ்பூத்த
நாங்கொண்ட குறிப்பினவ னலமென்னுந் தகைபோதா
வெரியிதழ் சோர்ந்தூக (உ)மேதிலார்ப் புணர்ந்தனை
கரிகூறுங் கண்ணியை யீங்கெம்மில் வருவதை

'ஞெமர்தலும்' தெய். (ஆ) வினையியலுள் ஒதாமையாற் பெயரெச்ச உம்மை இடைச்சொலென்று கொள்ளப்படும். பாயும் புனலென்பது பாய்புனலெனத் தொக்குழி வேற்றுமைப்பொருட்கண் உருபு பெயர் நிற்பத்தொக்க வாறுபோல வினை நிற்ப உருபு தொகுதலானும் செய்பு மென்பது வினைபு முருபுமாகிய இரு நிலைமைத்தென்று கொள்க. என்பர் தெய்; தொல். இடை. ரு. எ. 'எச்சஞ்'

அ. கலி. ந.அ. இன்தாழிசைகள் ஈண்டு அறிதற்பாலன.

உ. கலி. எக: கஎ - கஅ. அடிகள் ஒப்புநோக்குக.

(பிரதிபேதம்) * அப்புனலுடனே கற்குணமில்லை. † விருப்பல்ல, ‡அவ்விறைவத்த ||மீண்டு வந்தவத்தாம்பி. ÷ ஊரயென்க பகை × பெயர்த்தாய்போலே ┼ வது இன்றகாலத்தே.

## மூன்றாவது மருதம் கக.



எ - து: எரிபோலும் நிறத்தையுடைய இதழ்கள் வாடி உதிரப் பார்த்தை யரைப் புணர்ந்தபடியைச் சான்றாய் எமக்குக் கூறுங் கண்ணியையுடையை யாய் எம்முடைய இல்லில் யாயிருக்கின்ற இடத்தே வருகின்ற நிலைமை, இவளுடைய *நலம், யாம் பிரியுங்காலத்து நிறந்தெட்டுப் புணருங்காலத்துப் பிறர் புகழ்தல் பொலிவுபெற்று காம் மனக்கிற் கொண்ட கருத்தாயிருக்கு மென்று நீ குறித்திருக்கும் தகைமைப்பாடோதான். எ - று.

கஉ (க)சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற்கூம்பு மலர்போலென்
றொடர்நீப்பிற் றொகுமிவ னலமென்னுந் தகைபோதா
வலர்நாணிக் காக்கநோர் கைம்மிகப் (உ)பெற்றோர்கூந்தன்
மலர்நாறு மார்பினை யீங்கெம்மில் வருவதை

எ - து: பிறர் கூறும் அலருக்கு நாணி மறைத்த காமநோய் ஒழுக்கத் தெல்லையைக் கடவாதிருக்கப் பிறர் கூந்தலின் மணம் நாறுகின்ற மார்பினை யுடையையாய் எம்முடைய இல்லிலே †யாமிருக்கின்ற இடத்தே வருகின்ற ‡நிலைமை இவள் நலம் அழித்தனைக் கண்டு அலர்ந்ததாமரைப்பூ அந்தழித்தன் அடக்குமளவிற் குவிந்தாற்போல ||எனது தொடர்ச்சி நின்னின் வறிதுபட்டிருக்குமென்னும் தகைமைப்பாடோதான். எ - று.

கக (௩)பெயினந்தி வறப்பிற்சாம் புலத்திற்குப் பெயல்போல்யான்
செலினந்திச் செறிற்சாம்பு மிவளொன்னுந் தகைபோதான்

---

௯. (அ)"கொழுநனைக் காணே. .. ......அவன் வடிவெலா நோக்கித், தென்னு தென் டிசைக்கும் பொலன்கிரி முகட்டிற் சேட்டினம்பரிதிகண்டாங்கே, முன்னரை முளரி முறுக்கவிழ்க் தென்ன முகமலர்ந் தகமலர்ந் தனளே" பிரமோத்தர. உமாமகேசவிரதபலம். ௬௨. (ஆ) "தணந்த வென் கணவன் வல்லே சார்தர வருளு கென்னப், பணந்தழை யரவ மாலைப் பகவனைக் கரங்கள் கூப்பு, மணந்தவழ் கமல மென்றாழ் வருதலுந் தழுவி மார்பம், புணர்ந்திடக் கூப்புங் கைகள் .பொருக் கென விடுத்த நின்ற" பேரூர்ப். குழகன் குளப்புச் சுவிற்ற. ௰௯.

௨. (அ)"சாந்த நாறு நறியோன், கூந்த னாறுநின்மார்பே தெய்யோ" ஐங். உ௯௦. (ஆ) "வேந்த, னெரிமணி யார மார்பி னின்றயில் பொருக்கி னேனே" நைடதம். மண. ௭௪.

௩. (அ) "வறனுழக்கும்பைக்கூழ்க்கு வான்சோர்வினிதே" இனியது. ௧௧. (ஆ) "தளியின்மை ஞாலத்திற் செற்றற்றே வேந்த, னளியின்மை வாழுமுயிர்க்கு" குறள். ௫௫௭. என்பவையும்.(இ)"வைபெயிற் றெய்யா மகளிர் திறமினிப், பெய்ய வுழக்கு மழைக்காமற் றைய" பரி. ௬: ௯௯-௯௦. என்பதும்அதனுள் 'மழைக்கா'என்பதனை விளக்குமிடத்து.

(பிறர்பெறும் * கைம்மிகவும் † யாமிருக்கின்றவிடத்தே, ‡ நிலைமை அழித்தனை. || எனது.





## கலித்தொகை எ௮.

(௧)முடியுற்ற கோதைபோல் யாம்வாட வேதிலார்
(௨)தொடியுற்ற வடுக்காட்டி நீங்கெம்மில் வருவதை

எ - று: முடியிலே பொருந்தும் மாலைபோல யாம் வாட நின் பரத்தையர து தொடியினாலுற்ற வடுவினைக் காட்டி இவ்விடத்து எம் இல்லிலே யாமிருக்கின்ற இடத்தே வருகின்றநிலைமை, இவள், மழைபெய்யிற் செருக்கி அது பெய்யாதொழியிற் புலர்கின்ற நிலத்திற்கு (௩) † அப்பெயல் பெய்து விளைவித்தும் பெய்யாது கெடுத்தும் போமாறுபோல யான் சென்றேனாயிற் செருக்கிச் செல்லாமல் வருத்திக் கெடுமென்று நீ குறித்திருக்குந் தகைமைப் பாடோதான். எ - று.

‡ஆங்க, அசை.

௨௪ ஐய வமைந்தன் றனைத்தாகப் புக்கீமோ

(௪)வெய்யாரும் ‖வீழ்வாரும் வேறாகக் கையின்
முகை × மலர்ந் தன்ன =முயக்கிற் றகையின்றே
தண்பனி வைக லெமக்கு

---

"காலையொத்தலாவது: கா, தனக்கு இன்றி யமையாத மழையை வருவித்துக்கொள்ள மாட்டாது அது தானேவந்துழிப் பொலிந்து வாராதவழியும் ஆமளவும் ஆற்றி ஆகாதவெல்லைக்கண் இறந்துபடுதல்" என்றெழுதி யிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

௧. (அ)"சேக்கை யாகி மலர்ந்தசெந் தாமரைப், பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள்" (ஆ) "அரக்கர், ..... .. .. .. .. ..புறத்தினோடின ரோடிய குருதியேபோல" (இ) "கரைவித்தா னுயிரைக் கண்போல்" கம்ப. மிதிலைக். ௪௧: கும்பகருணப். ௨௨௩. நாகபாச. ௨௩௦. (ஈ) "நின் னிடை யெனத்தா, மெய்வண்ணம்வாடி" தஞ்சை. ௩௨௦. (உ) "மாலை யென வேதுவளுறும்" விநாயக.

௨. "தொடிவடு" கலி. ௪௧: ௧௧. இன் குறிப்புப் பார்க்க.

௩. "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச சார்வாய்மற் றாங்கே, யெடுப்பதூஉ மெல்லா மழை" குறள். ௧௫. என்பதும் அதன் பரிமேலுரையும் இங்கே அறிதற்பாலன.

௪. உள்ள துவர்த்த வென்பதற்கு உள்ளதனை 'உவர்த்துக்கூறுத'லென்று பொருள் கூறி 'வெய்யாரும்............லெமக்கு'என்பதை மேற்கோள்

எ - து: அதனைக் கேட்பாய்; பெரிய மடலையுடைத்தாகிய பனையினுடைய குடம்போலத் திரண்ட இடத்தையுடைத்தாகிய சர்ச்சரையையுடைய முகிழையுடைய பசியகுரும்பையைத் தொடியாகக் கட்டிப் பின்னின பின்னலை இழுத்து அதனால் இளைக்குஞ் சிறிய பிள்ளைகளுக்குரியவே பெரிய மணி யழுத்தின திண்ணிய தேரிலேயிருந்து அகன்ற மனையை நோக்கி மீளுதலைச் செய்வானாகாநிற்க, நீலத்திறவுடைய முதற்குமெழிந்து கிடைத்த பூக்கள் மிக்க காற்றுக்கு அசைவனபோலே சாளரங்களிலே ஒதுங்கிப் பார்த்த கண்ணினையுடையார் பரந்த மிக்க புகழையுடைய ஆலின்கீழ் இருந்த இறைவனுடைய மகனாகிய(௪)பிள்ளையார் திருநாளுக்கு அடிக்கொள்ளுகின்றானென்று கருதி, †வாயிலே முயன்று தொகுவந்து பார்த்து, இவனுதலாற் றிருந்தின அடியிற் சிலம்பொலிப்ப அணுகி, நின் கண்ணாலும் ‡நுதலாலும் கருப்பாலும் நின்னைத் தழுவிய தாயர்க்கு விளக்கத்தைக்கொடுத்தலை ஏற்றுக்கொண்டிருக்கின்ற அழகிய கையினாலும் நின் தந்தைக்குத் ||தண்மென நீ செய்யுஞ் சிறப்புக்கள் போலே எமக்குஞ் சிறப்புக்கள் செய்து இவ்விராக்காலத்து எம்மோட்ட நம் மிப்போதலைச் செய்யவேண்டும்; [சிறப்பாலே] தலைவா! எங்கள் குலத்தின்

---

௧. இதனை ஐஞ்சீரடியாக்கலுமாம் உரையின் பிரதிபேதத்தால் 'கவுளும்' என்பதை நீக்கி விருப்பினுவென்பதை அடுத்த அடி ஆக்கலுமாம்.

௨. தலைவன் றமரைக் கண்டவழி உவத்தலாகிற "அவன்றம ருவத்தல்" என்னும் மெய்ப்பாட்டிற்கு 'செய்வன சிறப்பிற்....................நீர்க்கு வேமன்' என்பது மேற்கோள்; தொல்; மெய்ப்பாடு. ௫, ௨௨. இளம்.

௩. "மாண மறந்துள்ளா நாணிலிக்கு" கலி. ௮௧: ௨௨.

௪. பிள்ளையாரென்றது, முருகவேளை; 'பிள்ளையார் அயனைச்சபித்தலின்' 'சித்தனென்பது பிள்ளையாருக்குத் திருநாமம்' 'பிள்ளையார் வேலைத்

(பிரதிபேதம்) * செல்லன். † வாயிலே. ‡ நுதலு நின்ன, || கண்மெனக்.

புதுமையை நுகர்ந்த பின்னர் எம்மை நினையாத காணில்லாதவன் தந்த தனிமையெல்லாம் மிகவும் போக்குவேமென்று கூறி, இவனிடத்து விருப்பத்தாலே அமையாத வேற்றுத்தாயர் எதிர்கொள்ள, அதனைமாற்றுத இக்கள்வனாலே ஆண்டுத் தாழ்க்க நின்றதன்றி, யான் வேறோர் தீதுடையேனல்லேன்; ஒள்ளிழாய்! என்னைக் கோபியாதேகொள்ளென்றான் சேடி. எ - று.

உக எள்ளலான், அம்மென் பணைத்தோ ளுமர்வேய்த்த கண்ணியோ
டெம்மில் வருதியோ வெல்லாநீ தன்மெய்க்க
ணார்தீஞ்சொ(க) லல்லா ரணிந்த கலங்காட்டி
முந்தை யிருந்து மகன்செய்த நோய்த்தலை
(உ)வெந்தபுண் வேலெறிந் தற்றால் வடுவொடு
தந்தையும் வந்து நிலை

எ - து: அதுகேட்டுப் †புதல்வனை நோக்கி, எடா! அழகையுடைய மெத்தென்ற ‡மூங்கில்போலும் தோளினையுடைய நும்முடைய தாய்மார் சூடின கண்ணியோடே எம்முடைய இல்லிலே நீ வருவையோவாராயோவென வெறுத்துக்கூறி, தலைவன்வந்தமைகண்டு, முன்னேயிருந்து மகன் எமக்குச் செய்த நோய்க்குமேலே எம்மைமனத்தால் இகழ்ந்திருத்தலாலே தம் மெய்யிடத்துக் கிடந்த அழகிய இனியசொல்லையுடைய நல்ல மகளிர் அணிந்த கலன்களில் வடுவைக்காட்டி எனை விக்கலோடே தந்தையும் வந்து நிற்றல், வெந்ததொரு புண்ணிலே வேலால் எறிந்த தன்மைத்தாயிருந்ததென அவனொடு புலந்து கூறினாள். எ - று.

---

'தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின் வேலனென்றார்' 'நகர் - பிள்ளையார் கோயிலென்றுமாம்' முருகு. கஙஉ, எகூ, உஉஉ உகூஅ; 'பிள்ளையாரால் வந்ததென முற்கூறி' மது. ககக. என்பவற்றாலும் இவ்வழக்கு அறியலாகும்.

க. ‡"ஒளிபூத்த நுதலாரோ டோரணிப் பொலிந்த" கலி. கக: கூ - உ0

உ. (அ) "வெந்தபுண் வேலெறிந் தற்றால்" (ஆ) "வெந்ததோர் புண்ணின் கண் வேல்கொண்டு நுழைப்பான் போல்" கலி. அச:உக. கஉ0: கஎ. (இ) "வெந்துயர்க் கண்ணின் வேலிட்டதுபோல்" (ஈ) "தழலுறு புண்மேற் கருவி பாய்ந்தென" பெருங். (க) ருகூ: கஇ; (உ) கஙு: கஙு0. (உ) "புண்செய் நோவில் வேலெறிந்தாற் போலும்" பெரிய. சிறுத்தொண்ட. ௫0. (ஊ) "நீறுமை புண்ணில் வேல் செறித்த

தென்ன" கந்த. குமார. சக. (எ) "வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்" கம்ப. இராவணன்சோக. ௪0. (ஏ) "வெவ்வே வெறிந்த விழுப்புண்ணின் மீட்டும் வெறுப்பியபோர், செவ்வேலுழைப் பவர் சேமன்றோ" தந்தை. ககூ. (ஐ) "புண்ணி னுடெரி, பயி னுழைக் காலென வலமர் தேன்மினுள்" நைடதம். சச்சேந்கு அ.

(பிரதிபேதம்) * மாருத, † அப்புறமல்லின், ‡ அவைபோலும் தோளினைபுடைய தாய்மை.



இதனால், தலைவிக்கு இளிவும் தலைவற்குக் கைமிகலும் பிறந்தது.

இது தளைவிரவி ஐஞ்சீரடியும் வந்த வெள்ளைத்தாழிசையும் தனிச்சொல்லும் தளைவிரவின வெண்பாவும் ஐஞ்சீரடுக்கிய வெள்ளைச்சுரிதகமும் பெற்ற கலி வெண்பா. (கஅ)

(அச.) உறுவளி தூக்குறு முயர்சினை மாவி
னறுவடி யாரிற் றலைப்போ லழியக்
கரந்தியா னரக்கவுங் கைநில்லா வீங்கிச்
சுரந்தவென் மென்முலைப் பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த பொழுதினு னெல்லா
கடவுட் கடிநகர் தோறு மிவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்றாய் விலங்கினை
யீர மிலாத விவன்றந்தை பெண்டிருள்
யாரிற் றவிர்ந்தனை கூறு ;
நீருள், அடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ
விவன்மன்ற யானேவ வுள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்
தெருவிற் றவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தங் கலங்களுட் கையுறை பென்றிவற்
கொத்தவை யாராய்ந் தணிந்தார் பிறன்பெண்டி
ரீத்தவை கொள்வானு மிஃதொத்தன் சீத்தை

செறுதக்கான் மன்ற பெரிது;
௨0 சிறுபட்டி, ஏதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட
மோதிரம் யாவோயாங் காண்கு ;
௨௨ அவற்றுள், நறுவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச்
சுறுவே றெழுதிய மோதிரந் தொட்டாள்
குறியறிந்தேன் காமன் கொடியெழுதி யென்றுஞ்
செறியாப் பரத்தை யிவன்றந்தை மார்பிற்
பொறியொற்றிக் கொண்டாள்வ லென்பது தன்னை
யறீஇய செய்த வினை;

68



*அன்னையோ இஃதொன்று,
௨௧ முந்தைய கண்டு மெழுகல்லா தென்முன்னர்
வெந்தபுண் வேலெறிந் தற்றா லிஃதொன்று
தந்தை யிறைத்தொடி மற்றிவன் றன்கைக்கட்
டந்தாரியா ரெல்லா அ விது;
௧௧ இஃதொன்று, என்னொத்துக் காண்க பிறரு மிவற்கென்னுந்
தன்னலம் பாடுவி தந்தாளா நின்னை
யிதுதொடு கென்றவர் யார் ;
௧௯ அஞ்சாதி, நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த
பூவெழி லுண்க ணவளுந் தவறிலள்
வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா
டான்யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன்.

இது கடவுட் கடிநகர்தோறும் வலங்கொளீஇ வாய்த்துச் சேடியரோடு மகற்போக்கிய தலைவி அவன் நீட்டித்து வந்துழி. "தாயர் கண்ணிய

†நல்லணிப் புதல்வனை-மாயப் பரத்தை யுள்ளிய 'வழி"(க)யின்கண், தந்தை தோடு மகனைக்கண்டு புலந்தாள் தன்னுள்ளே அழிந்து கூறியது.

## இதன் பொருள்.

---

க. தொல். கற். சூ. ௯. இச்சூத்திரப் பகுதிக்கு 'தாயர்கண்ணிய நல்ல அணியையுடைய புதல்வனை மாயப்பரத்தை குறித்த வழியும் கூற்று நிகழும்; புதல்வனைப் பரத்தைமை குறித்தலாவது தலைவன் புறப் பெண்டிர் மாட்டுப்போகிய வழி வெகுளுமாறுபோலப் புதல்வனையும் அவரிடைச் சென்றவழி வெகுளல்; நல்லணி யெனவே அவர்கொடுத்த நல்லணியென்பது பெறுதும்; பரத்தைமை உள்ளாத வழி இவண்மாட்டுக் குறிப்புச் சூழாதாம்; மாய மென்பது பரத்தைமைக்குப் பண்பாகி இனஞ் சுட்டாது வந்தது' என்று கூறி, அதற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் இளம்பூரணர்; நச்சினார்க்கினியரும் இச்சூத்திரப்பகுதியில், "அவருள் (தாயருள்) தனியாலே வருந்திய பரத்தையர் தம் வருத்தத்தினை உணர்த்தியும், தலைநின்றொழுகும் பரத்தையர் தம் சிறப்புணர்த்தியும் அணிவரென்றற்கு, 'நல்லணி' என்றார்" என விசேடவுரை எழுதி, இச்செய்யுளை இதற்கே மேற்கோள் காட்டியுள்ளார்.

* 'அன்னையோ முந்தையன' என, தொல். கற். சூ.௯ இள.உரையிலுள்ளது. (பிரதிபேதம்) † நல்லிலைப், ‡ வகையின்கண்.

## மூன்றாவது மருதம் கக. சகூ

(க) உறுவளி தூக்கு முயர்சினை (உ)மாவி
னறுவடி யாரிற் றவைபோ லழியக்
கரந்தியா(ங)னரக்கவுங் கைநில்லா வீங்கிச்
சுரந்த (ச) வென் மென் † முலைப் பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த ‡பொழுதினா னெல்லா
கடவுட் கடிநகர் தோறு மிவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்றாய் விலங்கினை
ஈர மிலாத இவன்றந்தை பெண்டிருள்
யாரிற் றவிர்ந்தனை கூறு

எ - று: ஏடீ! நீ நல்||வாயிலினின்றும் போதலைச்செய்த காலத்தின் கண்ணே தெய்வங்களையுடையதாகிய விருத்திகளையுடைய கோயில்தோறும் இவளை வலஞ்செய்வித்து வாவென்று யான் கூறச் சென்ற நீ யான் கூறிய கூற்றினைத் தப்பினாய்; இனி மாவினுடைய உயர்ந்த கொம்புகளினின்றுமிக்க காற்றால் அசைக்கும் தளிர்களையுடைய கொம்பு முறிந்தனபோலே பால் மிகக் குதிக்கையினாலே அதனை மறைத்து—யான் அங்கைபால் அமுக்கித் தேய்க்கவும் அத்தக் கையினெல்லையில் நில்லாவாய் விம்மிச் சுரந்த என்னுடைய மெல்லிய முலையிற் பால் பின்னை உண்ணுமைற் பாழ்போம்படி அருளில்லாத இவன் தந்தையுடைய பரத்தையர்களுள் யாருடைய இல்லிலே தங்கினாய்; சொல் லென்றாள். எ - று.

க. கூறு என்னு முரிச்சொல் விருத்தியென்னும் பண்புணர்த்தி வருதற்கு இவ்வடி மேற்கோள். தொ. உரி. ௬. கழி. மயிலை; விருத்தி. இரா.

௨. "கறவடிமாவின்" (கலி. சஉ: கச) என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

௩. "ஆக்க நில்லா கண்ண நீர்கள்" நாலாயிர. நாச்சியார். ௩: ௪.

௪. (அ) "எம்முலை, பாலொழுக்கத்தலைச்சொடிதாயினை புத்தேளிர்கோட்டம் வலஞ்செய் கிவனொடு புக்க வழியெல்லாம் கூற" (ஆ) "சென்று, புனைவில, யூட்டலென் நம்பால் பெருகு மனவெல்லா, கீட்டித்த காரணமென்" கலி. அஉ: க - ௫. அ௩: ௪ - ௯.

௫. "முனித்தலைக் கண்ணாக் கெற்றிச் சிறூர்முலை முழாவிற் பில்கிப், புனிற்றுப்பால் பிலிற்றித் தேமா வலிஉறத் தாங்குப் பாய, துனித்துக் கண் ணாக்கி நோக்கா தெரிக்குகின் முர்க வன்றே, களிப் பெரறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம் பொத்தார்" சீவக. உ௫௪௪.

(பிரதிபேதம்.) *யான்காக்கவும். †முலைப்பால் பழுதாக. ‡போழ்திலுள். ||வாயிலே நின்றும். + யாக்கையால்.

நீருள், (க)அடைமறை *யாய்இதழ்ப்(உ)போதுபோற் கொண்ட
குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ
இவன்மன்ற யானேவ வுள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரைஇறந்து போத்தந்து தாயர்
தெருவிற் றவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தங் கலங்களுட் கையுறை யென்றிவற்
கொத்தவை †யாராய்ந் தணிந்தார் பிறன்பெண்டி
ரீத்தவை ‡கொள்வானோ (ந)இஃதொத்தன் (ச)சீத்தை
||செறுக்கலன் மன்ற பெரிது

எ - து: நீருள்ளத்தே (ரு) இலையின்கீழே மறைந்துநின்ற அழகிய இதழை யுடைய தாமரைப்பூப்போலே எடுத்த பசுமைக்குடையின் கீழிலே தோன்று கின்ற நின்பிள்ளையைக்கண்டு தாய்மார் யான் கோம்படி மனத்தைக்கைக் கொண்டு பின்னர் என்னை நினையாத நன்கு மதிக்கும் மகனல்லாதவன் பெற்ற மகன் அறுதியாக இவனென்று கருதி அகன்ற மனையிலுடைய ÷வாயிலி னெல்லையைக் கைவிட்டுப்புறப்பட்டுத் தெருவிலேவந்து தடுப்ப அவரிடத்தே

க. இந்நூற்பக்கம் உக: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ) "இன்கதிர் மதாணி [illegible] குறு பாக்கனை, தோம்பனைத் தழீஇத் தாம்புணர்ந்து மயங்கித் தாதலர் தாமரைப் போதுபிடித் தாங்குத், தாமு மவரு மோராங்கு விளங்க" மதுரை. சசக - சசச. (ஆ) "போதவிழ் தாமரை யன்னநின் காதலம் புதல்வன்" ஐங். சஉச. (இ) "வழுவில் பொய்கையு ளம்மலரென வளர்த்தனை யாடி" சீவக. உஎ௯க. (ஈ) "இவர்பெரி தளவி லாற்றலைப், பொருந்தின ராயினும் பூவின் மெல்லியர்" கம்ப. தாடகை. [illegible]. எனவும் (உ) "பொய்கைப் பூவினும் நறுந்தண்ணியளே" ஐங். கஎ. (ஊ) "பதுமப் போதனுள்" கம்ப. மீட்சி. எக. எனவும் (எ) "புள்ளிதழ்த் தாமரைப் போதுறழ் முகமே" ஐந்-எழு. ௫௦. எனவும் வருதல்காண்க.

ந. "இஃதொத்தன்" இந்நூற்பக்கம் ந௪க: ந-ஆம் குறிப்புப்பார்க்க.

௯. சித்தை. கலி. ௬௭: உ௨ குறிப்புப்பார்க்க.

௭. (அ) "தாமரை, தேமரு குடையிலை கவிப்பத் தேவியர், பூமரு மடந்தையர் போன்று தோன்றினர்" துனா. சுயம்வர. ௯௩௧. (ஆ) "பாசடை கவிகை யாக.................பொய்கை செய்கு வளம்படவொழுகிற் றன்றே" கந்த. திருவவதார. ௧௩௦.

(பிரதிபேதம்) * ஆயிதட்போத. † குயபாய்சுத,‡ கொய்யணிகொத்தன், || செறுத்தக்கன், ¶ வாசனின்,



தங்கினன்; அதனாலே பின்னை அவர்கள் தம்முடைய தம்முடைய அணிகளில் இவன்வடிவிற்கு ஒத்தவையிற்றை * ஆராய்ந்து (௧) கைக்காணியென்று அணிந்தாரென்றாள்சேடி; அதுகேட்டதலைவி தனக்குஅயலாயிருக்கின்ற தந்தையுடையபரத்தையர்கொடுத்தவையிற்றை இவனொருவன் †வாங்குவா (௨)னும், இனி இவன் வைவிடப்படுமேவன் அறுதியாக மிகவும் நம்மாற்கோபித்தல் தக்கானென நெஞ்சொடுகூறினள். எ - று.

'அடைமறை..................செம்மல்' என்றது: இலையும்பூவும், குடைக்கும் புதல்வர்க்கும் உவமையாய் (௩)விரவிநின்றது. இதுவினைக்கு முதல்வந்தது.

உ௬ (௪)சிறுபட்டி.

எ-து: காவலின்றி வேண்டியவா றொழுகுவாய். எ - று.

எதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட
மோதிரம் யாவோயாங் காண்கு

எ - து: நீ எம்மை இகழ்ந்து இட்ட பரத்தையர் கையின் மோதிரங்கள் யாவை? யாம் அவற்றைக்காணுபேன். எ - று.

யாங் காண்கு, பன்மையொருமை மயக்கம். யானும் ‡பாடம்.

உ௨ அவற்றுள், (௫)நறாவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச்
(௬)||சுறாவே றெழுதிய (௭)மோதிரந் தொட்டாள்

௧. இந்நூற்பக்கம் ௬௧௧: ௬-ம் குறிப்புப்பார்க்க.

௨. "ஒருவரே மாலுட னேழைம மாதர், வருவளும் விறன்மணி மாலெ ஞெஞ்சமர், பொருவளு மலரயிர் பொன்ற வென்றிடர், தருவளும்" வில்லி. மணிமான். ௮0: என்பது முதலியவற்றில் ஆமென்பது இவ்வாறே செறற்குறிப்பில் வந்திருத்தல் காண்க.

௩. "அடைமறை.......காழுற." என்பது உவமை பலபொருள் விரவி வந்ததற்கும் தொல். உவம. சூ. உ. இளம். முதற்குச் சினைபுவமையாய் வந்ததற்கும் மேற்கோள்; தொல். உவம: சூ. க. இளம்: பேர்; இ - வி. சூ. ௬௪௧.

௪. "சிறுபட்டி" கலி. ௬௪: ௪ என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௫. "நறவவிழ்ந் தன்னவென் மெல்விரற் போது" கலி. ௬௪: ௫.

௬. "அவ்வாய் மகரத் தவளினர் மோதிரம்"

௭. (அ) "மணிநாக மோதிரந் தொட்டு" சீவக. ௧0௪௦. (ஆ) மாதிரத்தமரேனையோலையும் வல்ல வென்றதன் முத்திரை, மோதிரச்சவ டேற்றிறைஞ்ச முடித்து" விநாயக. சிந்தாமணிவிநாயகர். ௭௧.

(பிரதிபேதம்) * அப்சாய்ந்த. † வாக்குவாரூயினவன், வைவிடப்பமிம்இவை அறியேக. ‡ பாடம் தெளிதயு, || சுடுவேறெழுதிய.



குறியறிந்தேன் காமன் (௯)கொடியெழுதி யென்றுஞ்
செறியாப் பரத்தை யிவன்றந்தை மார்பிற்
பொறியொற்றிக் கொண்டாள்வ லென்பது தன்னை
* யறீஇய செய்த வினை

எ - து: அம்மோதிரங்களுள் †கரும்பூவைக் கண்டாற்போன்ற சிவந்த விரலுக்குப் பொருந்தச் சுறவிலேற்றைக் குழித்த மோதிரத்தை இட்டவளுடையகருத்தை அறிந்தேன்; காமன்கொடியாகியமகரத்தை மோதிரத்தே ‡குழித்தாற்போல வேறொன்றிலே அழுத்தி அதனை எக்காலும் அடங்காத பரத்தைமைக்குணத்தையுடைய இவன் றந்தைமார்பிலே பொறியாக ஒற்றி அடிமைக்கொண்டு ஆண்டுபோதுவேனென்று சொல்கின்ற வார்த்தை தன்னை

எனக்கு அறிவித்தற்குச் செய்ததொரு தொழிலெனப் புலந்து அவனொடு கூறினள். எ - று.

"கடல்வாழ் சுறவு மேறெனப்படுமே" என்றதனால்(உ)||சுறவேறென்றார். பாத்தைமை பாத்தை யென÷நின்றது; "தன்வயி னுரிமையு மவன்வயிற் பரத்தையும்" (௩)என்றார் ஆசிரியராகலின்.

அன்னையோ

எ - து: நீயும் அத்தன்மையையோ! எ - று.

புதல்வனாகிய நீயும் எம்மை இகழுந்தன்மையையோ × என்றதாம். இது புதல்வனை நோக்கிக்கூறியது.

இஃதொத்தன்று,

எ - து: இவ்விகழ்ச்சியும் நாமே செய்துகொண்டதொன்றெனக் கெஞ்சொடு கூறினள். எ - று.

௨௯ +முந்தைய கண்டு மெழுகலா தென்முன்னர்

(௪)வெந்தபுண் வேலெறிந் தற்றா லிஃதொத்தன்று

---

௧. (அ) "வில்லா னிழிகொடி யகலம்" (ஆ) "ஆடுகொடி யணிந்தவுய ரலக்கல்வரை மார்பன்" சீவக. உசஎஎ, உசஅ௩.

௨. தொல். மரபி. சூ. ௪0. பேர். ந.அ. ந‌ச். இதனுரையில் சுறவின் ஆண் ஏறெனப்படுதல் மரபென்பதற்கு, "சுறவே றெழுதிய மோதிரந்தொட்டாள்" என்பது மேற்கோள்.

௩. தொல். கள. சூ. ௨0.

௪. "வெந்தபுண் வேலெறிந் தற்றால்" (கலி. அ௩: ௩0) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) *அறியிய, † நாரம்பூலை. ‡ குறித்தாற்போல. ||சுறவேறென்றும், ÷நிற்கும், × என்றதாம் புதல்வனை நோக்கி இஃதொன்று. + முந்தை பலகண் டெழு.

(க) தந்தை பிறைத்*தொடி மற்றிவன் றன்கைக்கட்
டந்தாரியா ரெல்லாஅ விது

எ - து: பின்னை என்முற்பட்டனவற்றைக்†கண்டு மதிலையெடுக்கமாட்டாத என்முன்னே வெந்ததோர் புண்ணிலே வேலாலே எறிந்த ‡தன்மைத்தாக இஃதொன்று இவன்றந்தையுடைய முன்கையிற் றொடியை இவன் கையிடத்தே || இட்டவர் யார்தான்? கூறென்றாள். எ - று.

கக இஃதொன்று, என்னொத்துக் காண்க பிறரு மிவற்கென்னும்
தன்னலம் பாடுவி × தந்தாளா நின்னை
யிதுதொடு +கென்றவர் யார்

எ - து: அவன் = கூறுமையின், எடா! இத்தொடி என்னையொழிந்தவர்களும் இத்தலைவற்கு என்னையொழித்த வனப்பை வழிபடும்படியைக் காண்பார்களாக(?)வென்று கூறுந் தன் நலத்தை மிகுத்துப் புகழ்கின்றவனாயிருக்குந் தந்தவள். இவ்விகழ்ச்சியும் காமே செய்துகொண்டதொன்றென நெஞ்சொடு கூறினாள்; கூறி, 'புதல்வனை நோக்கி நின்னை இத்தொடியை இடுகவென்று சொன்னவர் யார்தானென்று கூறினாள். எ - று.

கஉ அஞ்சாதி, (உ) நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த
பூவெழி லுண்க ணவளுந் தவறிலள்
(ங) வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா

---

க. "தந்தை பிறைத்தொடி ..... ......எல்லாவிது" என்பது, 'பல்வேறு புதல்வர்க் கண்டு நனியுவப்பினும்' என்புழி, தாயர்நோக்கப்புதல்வன் கொண்டமைக்கு மேற்கோள்; தொல். கற்பி. சூ. கo. நச்.

உ. "நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப், போதர விட்ட நமருந் தவறிலர், நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறைபறைத் தல்லது செல்லற்க வென்னா, விறையே தவறுடையான்" (கலி. ருக: ௩o-௩௪.) என்பதும் அதன் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் நோக்குக.

௧. வாளாதே புலமஞ்செய்து உற்றது உணர்த்தாத வழியும் தெளிவு படாமை உண்டென்பதற்கு, "வேனிற் புனலன்ன நுந்தையை நோவார் யார்" என்பது மேற்கோள்; தொல். உவம. சூ. ௨௦.

(பிரதிபேதம்) * தொடங்கிமற்றிவ்விலன், † கண்டேதம், ‡ தன்மைத்தாக வியன். || இட்டவள் யார் தானெனக் கூறேன்று, × நந்தானோவில்லை, + என்றவன்பார். ஊ உருமையின் இத்தொடி.



டான்யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன்.

எ - து: அவன் அதற்கு அஞ்சினமை கண்டு அஞ்சாதேகொள்; இதனைத் தொட்டுவந்த நீயுந் தவறுடையையல்லை; நின் கையிலே இத்தொடியையிட்ட பூவினது அழகையுடைய மையுண்கண்ணையுடைய பரத்தையுந் தவறுடையளல்லள்; (௧)வேனிற்காலத்துப் புதுப்புனல்போல எல்லார்க்கும்பயன்படுகின்ற நுந்தையை ஈண்டு நோவாரில்லை; நமக்கு மேலாய்நின்றுந் தன்னலம்பாடிப் பின்னரும் நம்மை இகழ்ந்து இத்தொடியை இவன் கையிலிட்டவள் யாரோ வென்றுகேட்ட இந்நோயின் கூற்றேனாகிய யானேயன்றே தவறுடையேனெனத் தன்னுள்ளே அழிந்து கூறினாள். எ - று.

இது, பரத்தை தன் (௨) சிறப்பு உணர்த்தி அணிந்தமைகூறிற்று.
'மேனின்று மெள்ளி' என்றதற்கு: முற்காலந் *தொடங்கி இகழ்ந்தென்றுமாம்.

இதனால், தலைவிக்கு எள்ளல் தோன்றிற்று.
இது தளைவிரவி ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பா. (௧௧)

(௮௫.) காலவை, சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு
பொடியழற் புறந்தந்த செய்வுறு கிண்கிணி;
௩ உடுத்தவை கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ்மேன்
மையில் செந்துகிர்க் கோவை யவற்றின் மேற்
றைஇய பூந்துகி லைதுகழ லொருதிரை;
௬ கையதை, அலவன் கண்பெற வடங்கச் சுற்றிய

பலவுறு கண்ணுட் சிலகோ லவிர்தொடி ;
அ பூண்டவை, எறியா வாளு மெற்று மழுவுஞ்
செறியக் கட்டி யிரிடைத் தாழ்ந்த
பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிரின்
மையற விளங்கிய வானேற் றவிர்பூண்;
கஉ சூடின, இருங்கடன் முத்தமும் பன்மணி பிறவு மாங்
கொருங்குடன் கோத்த உருளமை முக்காழ்மேற்
சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூ லாக

க. ஆன வேனிலின் மாக்தர்போ லலர்த்தடம் பொழிலுங், தாலு மாடுதல் கருதியோ.,........ ...புனல்பரக் தொழுகியதால்" திருவானைக். ஆரஞ் சாத்து. உ0.

உ. இந்நூற்பக்கம் சகஅ: க-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * தடக்கி.



வரும்பவிழ் நீலத் தாயிதழ் காணச்
சுரும்பாற்றுப் படுத்த மணிமருண் மாலை;
கஎ ஆங்க, அவ்வும் பிறவு மணிக்கணி யாகநின்
செல்வுறு திண்டேர்க் கொடுஞ்சினை கைப்பற்றிப்
பையயத் தூங்குநின் மெல்விரற் சீறடி
நோதலு முண்டுங் கென்கை வந்தீ
செம்மானின் பாலுண் ணிய;
உஉ பொய்போர்த்துப், பாண்டலை யிட்ட பலவல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் வேண்டியார்
நெஞ்சம் பிணித்த றொழிலாத் திரிதரு
நுந்தைபா லுண்டி சில;
உசு நுந்தைவாய், மாயச்சூ டேறி மயங்குநோய் கைமிகப்
பூவெழி லுண்கண் பனிபரப்பக் கண்படா

ஞாயர்பா லுண்டி சில;

உ௬ அன்னோ, யாமெம் மகனைப்பா ராட்டக் கறுமெனத்
தாம்வந்தார் தம்பா லவரொடு தம்மை
வருகென்றார் யார்கொலோ வீங்கு;

௩௨ என்பாலல், பாராட் டுவந்தோய் குடியுண் டீத்தையென்
பாராட்டைப் பாலோ சில;

௩௪ செருக்குறித் தாரை யுவகைக்கூத் தாட்டும்
வரிசைப் பெரும்பாட்டொ டெல்லாம் பருகித்தை
தண்டுவென் ஞாயர்மாட்டைப் பால்.

இது தலைவி தன் மகனைப் பாராட்டிப் பால் கூறிட்டு * ஊட்டுகின்ற வழிச் சிறைப்புறமாகக் கேட்டுப் புக்க தலைவனைக்கண்டு தன்னுள்ளே புலந்து புலவியொடு பின்னும் பாராட்டியது.

இதன் பொருள்.

(க)காலவை, சுடுபொன் வளைஇய வீரமை சுற்றொடு
பெருமயழற் புறந்தந்த (உ)†செய்வுறு கிண்கிணி

க. இச்செய்யுளின் க, ௩, ௫, அ, கஉ. இவ்வடிகளின்முதலிலும் பரி. உ௪: க, ௩, அ, க0, கஉ. இவ்வடிகளின்முதலிலும் உன்வர்திருத்தல் ஒப்பு நோக்கற்பாலது.

உ. "செய்வு" இந்நூற்பக்கம் ௪௯: ௪-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * ஊட்டுவழி, † செய்யுறு,





எ - து: செம்மால்! நின்(க)காலிற் கிடக்கின்றவை, *சுடும்பொன்னாலே வளைத்த இரண்டாய் அமைந்த †காற்சரியோடே பண்ணுதலைத் தான் உறுகின்ற, (உ)பொடி மூடுதெழுலாலே நிறம் உண்டாகப்பட்ட ‡ சதங்கை. எ - று.

(௩)சுடுபொன், எக்காலமும் பொன்னென (௪) முக்காலத்திற்கும் உரிய பொன்னின் இயல்பு கூறிற்று; சுடுபொன்னென வினைத்தொகையாகாமை உணர்க.

௩. உடுத்தவை,(௫)கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ்மேன்
மையில் (௬)செந்துகிர்க் கோவை யவற்றின் மேற்
றைஇய பூந்துகி லைதுகழ ||லொருதிரை

எ - து: (எ)அல்குலிற்கு உடுத்தவை,கைத்தொழிலாலே பொலிவுபெற்ற மணிகள் இடையிடை அமைந்த பொன்மணிகளையுடைய வடம்; அதின் ÷மேலே அழுக்கில்லாத சிவந்த பவளவடம்; அவற்றின்மேலே ×உடுத்தின ஐதாய்க் கழல்கின்ற ஒன்றாகிய திரைத்த பூந்துகில். எ - று.

வடங்கள் தோன்றத் +திரைத்தாரென்றார்.

---

௧. இந்நூற்பக்கம் ௪௭௮: எ - ஆம் குறிப்புப் பார்க்க.

௨. (அ)"திறம்பெறப், பொடியழற்புறந்தந்த பூவாப்பூம் பொலன்கோதை" கலி. ௫௪: ௧ - ௨. (ஆ) "ஒள்ளழற்புரிந்த தாமரை" (இ) "அழல்புரிந்த வடர்தாமரை" புறம். ௧௧: ௧௪, ௨௯: ௧.

௩. |"சுடுபொன்" ஐங். ௪௩௨; பரி. ௨௧: ௧௮.

௪. தோல்.

௫. பவழக் காசொடு பன்மணி விரைஇத், திகழக் கோத்த செம்பொற் பாண்டில், கைவினைக் கொளுவிற் செய்துகலங் குயின்ற, வெண்ணூற் காழ்கிரை" பெருங். (௨) ௧௧: ௧௪௨ - ௧௪௫.

௬. (அ) "துண்டுகி னுழைந்த வல்குற் பவளமொத்து" சீவக. ௧௧௮௪. (ஆ) "செந்துகிர்க் கோவை சென்றேந் தல்கு, லந்துகின் மேகலை யசைந் தன வருந்த" (இ) "அந்துகிர்க் கோவை யணியொடு பூண்டு" சிலப். ௪: ௨௯ - ௩௦, ௧௪: ௯௩. (ஈ) "அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலா னென்கின் றாளால்" தேவாரம்.........(உ)"பவழஞ் சேர்ந்த புல்காழல் குலர்" பெருங். (௧) ௪௩: ௧௪௯.

௭. (அ) "கொன்வீ ரல்குலோர் கோவணம்" தே....... .....(ஆ) "துளிக்கு நெய்க் கருங்குழற் றோகைமாருயிர், விளிக்குமென் றல்குலை மறைத்த மேதகு, பளிக்குவெள் ளுடையின்மேற் பசும்பொனம்பரங், களிக்கும் வேன் மன்னவன் கவினச் சுற்றினான்" காஞ்சி. நகரேற்று. ௨௦௦.

(பிரதிபேதம்) * சுடுபொன் எக்காலமும்...........உணர்க சுடுபொன்னுலே. † காற்கற்றை போடே, ‡சதங்கைஉடுத்தவை ||ஒருதிறை,÷ மேலேயழுக்கில்லாத, × உடுத்தினவை ஐதாய், + திரைத்தார் கைபாதை.

௬ கையதை, அலவன் கண்பெற வடங்கச் சுற்றிய
பலவுறு கண்ணுட் சிலகோ லவிர்தொடி

எ - து: கைவிடத்தது, ஞெண்டின்கண் தன்மைபெற நெருங்கப் பல அருப்புத்தொழில் சூழப்பட்ட சில கோற்றொழில் அவிர்கின்ற இரண்டாய்ச் சேருந் தொடி. எ - று.

(க) கண்ணுள் - தொழில்.

அ பூண்டவை, எறியா வாளு மெற்றா மழுவுஞ்
செறியக் கட்டி யிரிடைத் தாழ்ந்த
பெய்புல (உ)மூதாய்ப் புகர்நிறத் துகிரின்
மையற விளங்கிய (௩)வானேற் றவிர்பூண்

எ - து: பூணப்பட்டவை, வெட்டாத வாளும் வெட்டாத மழுவும் நெருங்கக் கட்டி இரண்டு புறத்திலுந் தங்கின மழைபெய்த *புலத்து ஈயன்

க. (அ) "கண்ணுள் வினைஞர் கைவினை முற்றிய, நுண்வினைக் கொல்லர்" சிலப். கக: ௧0௬ - ௧0௬. (ஆ) "கண்ணு ளாளர் கைபுனை இடும்" பெருங். (இ) க: ௩௦. எனவருதல்காண்க. (ஈ) கண்ணுளென்பது சித்திர மெழுதலும் கூத்தாடுதலுமாகிய கண்ணுள் நிறுத்தும் தொழிற்றிறத் திற்கும் பெயராம்.

உ. (அ) "தண்பெய வெழிலி, யணிமிகு கானத் தகன்புறம் பரந்த, கடுஞ் செம் மூதாய்" நற். ௩௬உ: ௩ - ௬. (ஆ) "தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக், குருதியுருவி னொண்செம் மூதாய், பெருவழி மருங் கிற் சிறபல வரிப்ப" அகம். எச: ௩ - ௫. எனவும் (இ) "அரக்கு நிற வுருவி னீயன் மூதாய்" அகம். கங௧: க௩.(ஈ) "ஈயலின் மூதாய் பரப்ப வினமரீஇ, கோவல ரூதுப குழலிரங்கக்-கோவலர், தவழக்கார் செய் தன்று" நாற்கவி. ரு. கஎ௦. மேற்கோள். எனவும் (உ) "அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக், காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன், னீயன் மூதாய் வரிப்பப் பவளமொடு, மணிமிடைந் தன்ன குன்றம்" (ஊ) "மணிமிடை பவளம் போல வணிமிகக், காயாஞ் செம்ம

ரூ அய்ப் பலவுட, னியன் மூதா யீர்ம்புறம் வரிப்பப், புலனணி கொண்ட காரெதிர் காலை" (எ) "பெயல்பெய்து கழிந்த பூசாறு வைகறைச், செறிமண னிவர்ந்த களர்தோன் றியவிற், குறுமோட்டு மூதாய் குறுகு ரேமடி, மணிமண்டு பவழம் போலக் காயா, வணிமிகு செம்ம லொளிப்பன மறையக், கார்கவின் கொண்ட காமர் காலை" அகம். கச: க - ச, கூ௦ச: கங - கக, கஎச: க௦ - கடு. எனவும் வருவன காண்க.

௩. (அ) "மருப்புப்பூண்" (ஆ) "பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட, நலங்கிள ரொண்பூண்" கலி. அஉ: கஉ; அசு: ௩ - ச.

(பிரதிபேதம்) * புலத்தின் மூதாயினது.

# ௫0அ கலித்தொகை அரு.

மூதாயினது புகரையுடைத்தாகிய நிறத்தையுடைய பவளத்தாற் செய்த அழகு தறவிளங்கிய இடபத்தையுடைய விளங்குகின்ற பூண். எ - று.

கஉ சூடின, இருங்கடன் *முத்தமும் பன்மணி †பிறவு மாங்
கொருங்குடன் கோத்த வுருளமை (க)முக்காழ்மேற்
சுரும்பார் கண்ணிக்குச் சூழ்நூ லாக
வரும்பவிழ் நீலத் தாயிதழ் காணச்
(உ)சுரும்பாற்றுப் படுத்த மணிமருண் மாலை

எ - து: சூடப்பட்டன, கரிய கடலின் முத்தும் அதனுடனே பல மணிகள் பிறவுஞ் சேரக்கோத்த உருட்சி அமைந்த மூன்றுவடம்; அதின்மேலே கிடக்கும் நூலாற் சூழ்ந்த சுரும்புகள் ஆருங் கண்ணிக்குப்‡பொருந்தும்படியாக நடுவே கிடக்க அரும்புகள் அலர்ந்த சில நீலத்தினது ஆய்ந்த இதழ் காணும் படியாக நீலமணியாற் பண்ணின சுரும்புகளைப் போக்கின கண்டார் மருளும் மாலை. எ - று.

கஎ ஆங்க, உரையசை.

அவ்வும் பிறவு மணிக்கணி யாகநின்

‖செல்வுறு திண்(௩)டேர்க் கொடிஞ்சினை கைப்பற்றிப்
பையயத் தூங்குநின் மெல்விரற் சீறடி
நோதலு÷முண்டிங் கென்கை வுந்தி
செம்மானின் பாலுண் ணிய

எ - து: யான் கூறியவையும் பிறவும் நின்னழகிற்குமேலே தீர் அழகாகச் செறியும் நின்னுடைய மெல்லிய விரல்களையுடைய சிறிய அடிகள் இங்ஙனந் திரிதற்கு நோதலுமுண்டு; அதனைத் தவிர்த்து நின்னுடைய உருட்டுதலுறு கின்ற திண்ணிய தேரில் விளக்க(௪)தாமரைமுகையினைக் கையாலே பிடித்து மெத்தென மெத்தென அசையாநின்று இவ்விடத்து என் கையிடத்தே வருவாய்; நினக்கென்று வைத்த பாலையுண்டற்கு. எ - று.

---

௧. (அ) "முக்காழ் கயந்தலைத்தாழ" கலி. அ௯: உ. (ஆ) "மயிர்ப்புறஞ் சுற்றிய கயிற்கடை முக்காழ்" மணி. ௩: ௧௩௫.

௨. (அ) "கன்றூற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்" குறுந். உ௪௬. (ஆ) "கதிராற்றுப் படுத்த முதிராத் துன்பமொடு" மணி. ௫: ௧௩௧.

௩. (அ) "நெடுங்தேர்க் கொடிஞ்சி பற்றி, நின்றோன்" அகம். ௧௧0: உ௪-௫. (ஆ) "மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றி" மணி. ௪: ௪அ.

௪. (அ) "பண்டரித லூர்தியயன் வந்தபழ முந்தைப், புண்டரிக மொட்டனைய மொட்டினது" கம்ப. தேரேறு. ௪௭. (ஆ) "கோகனக முகையனைய கொழுங்கனகக் கொடிஞ்சியன" இராமா. சந்திர. அ.

(பிரதிபேதம்) * முத்தம், †பிறவு, மொருங்கு, ‡பொருந்தும்படி. ‖செப்வுறு, ÷உண்டிங்கு.



அணியாகத் தங்கும் நின்னென்க. தேர்க்குத் தாமரை (௧)சினையாதலின் அதனைச் சினையென்றார்.

௨௨. பொய்போர்த்துப், பாண்டலை யிட்ட பலவல் புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கித்தான் வேண்டியார்
நெஞ்சம் பிணித்த றொழிலாத் திரிதரு
(௨)நுந்தைபா *லுண்டி சில

எ - து: தலைமேல் ஏறட்டுக்கொண்ட பாண்மையாலே வஞ்சனையை மறைத்து வசீகரித்தற்றொழில் பலவும் வல்ல பாணனைத் தூண்டிலாகப் போகட்டுப் பரத்தையரை அகப்படுத்தித் †தான் விரும்பின பரத்தையருடைய நெஞ்சம்தன்வசமாக்குதல்தனக்குத்தொழிலாகக்கொண்டு திரியும் நுந்தைக்குப் பட்ட சிலகூற்றை உண்பாய். எ - று.

உசு நுந்தைவாய், மாயச்சூ டேறி மயங்குநோய் கைமிகப்
பூவெழி லுண்கண் பனிபரப்பக் கண்படா
ஞாயர்பா ‡லுண்டி சில

எ - து: நுந்தை வாயிற் பொய்ச்சூளை மெய்யாகத் தெளிந்து பூவினது அழகையுடைய உண்கண் நீர் பரக்கும்படியாக மயங்குகின்ற நோய் கைகடத்தலாலே அக்கண்கள் துயிலாத நின் தாய்மார்க்குப்பட்ட சில கூற்றை உண்பாய். எ - று.

உஎ அன்னையோ,

அன்னையோவென்றது, அம்மையோவென ஒரு வியப்பு.

---

க. 'கொடுஞ்சினைக் கைப்பற்றி' என்று சகரவொற்று மிக்கபாடம் காணப்படின், "கொடுஞ்சினைத்தேரும்" பெருங். (க) சக. கள. என்புழிப்போல, 'கொடுஞ்சு' என்பதையே தாமரைமொட்டின் பெயராக்கலுமாம். இப்பொருளில் 'கொடிஞ்சி' என்றசொல்லே பெருவழக்கிற் றாயினும், அச்சொல் 'கொடுஞ்சி' என்று (புறம். எஎ: ங, ககஅ: ச, சிலப். கச: ககஅ; உக: கஙஉ, உகங; உஎ: ஙஎ; மணி. ச: சஅ) இவற்றிற் காணப்படுதலால் இடையிகரம் உகரமாய்த்திரிந்துவழங்குதலும், 'கொடிஞ்சு' என்று (சூளா. அரசியல். கo. உஎங; கம்ப. குக. ருக, கான்வதை. கசக, தேரோ று. சங) இவற்றில் வந்திருத்தலால் ஈற்றிகரம் குற்றியலுகரமாய்த் திரிந்துவழங்குதலும் உண்டென்பதுவிளங்கும். இத்திரிபுகளோடு பரிதிமுதலியவற்றில் இடையிகரம் உகரமாயும் பஞ்சிமுதலியவற்றில் ஈற்றிகரம் குற்றியலுகரமாயும் திரிந்து வழங்குதலை ஒப்பு நோக்குக. இச்சொல் தேர்த்தட்டுக்கும் பெயராய் வரும்.

உ. இந்நூற் பக்கம். கசக: உ - ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * உண்டில. † தாம்விரும்பின. ‡ உண்டில.

(க)யாமெம் மகனைப்பா ராட்டக் கதுமெனத்
தாம்வந்தார் தம்பா லவரொடு தம்மை
வருகென்றார் யார்கொலோ வீங்கு

எ - து: வாராத தலைவன் வந்தமை கருதி, யாம் எம்முடைய மகனைப் பாராட்டாநிற்கத் தம் பகுதியிலுள்ள பாணன்முதலியோருடனே தாம் கடுக வந்தார்; தம்மை இவ்விடத்து வருகவென்று கூறினார் யார்தானெனத் தன் னெஞ்சொடு கூறினாள்.

மேல், பிள்ளையைநோக்கிக் கூறுகின்றாள்.

௬௨ என்பாலல், பாராட்டு வந்தோய் குடியுன் மூத்தை(உ)யென்
பாராட்டைப் பாலோ சில

எ - து: என்னுடைய குடியின்பகுதியிடத்தன அல்லவாகிய பாராட்டுக் கேட்டு மகிழ்ந்தவனே! எனக்குப்பட்ட கூற்றை யுண்பாய்; அப்பால்தான் சிறிது காணென்றாள். எ - று.

(ங)செருக்குறித் தாரை யுவகைக்கூத் தாட்டும்
வரிசைப் பெரும்பாட்டொ டெல்லாம் பருகீத்தை
கண்டுவென் *(ச)ஞாயர்பாட்டைப் பால்

†எ-து: அவன் அதனை உண்ணுமறபோகவிற்கோபிக்கக்கருதின அன்னை, தன் பிள்ளையாட்டால் மனமகிழ்ச்சி செய்தவனை நோக்கிக் கோபிக்கக் கருதினவர்களை உவகையாகிய கூத்தாட்டுவிக்கும் உன்னுடைய தாகத்தாலே

க. ஆறும் வேற்றுமைக்கு உரித்தென்றோதிய முறைப் பொருட்கண், உயர்திணைப் பொருள் இரண்டு சேர்த்த விடத்து நிலைமொழி யீற்றில் உருபு விரிப்புழி, குக ம் வரும்; அதுவன்றி ஆறும வேற்றுமையை விரிப்புழி, அதுவென் னுருபுகெட அதன் உடைமைப் பொருள் விரியும்; என்று கூறி, "யாமெம்மகனைப் பாராட்ட" என்பதை மேற்கோள் காட்டி, இது உருபு நிலைக்களத்துப் பொருண் மயங்கிற்றென்றும், இதற்கு நான்க னுருபு விரிப்பின் எமக்கு மகனாகியவனை யென ஆக்கங்கொடுத்துக் கூறல் வேண்டுமென்றும் கூறுவர், நச்சினார்க்கினியர்; தொல். வேற்றுமைமயக்கு. சூ. கக.

உ. "அழுதகண் ணீர்கண் மைக்த ளுவிபோழ்ந் திட்ட வன்றே" என்பதன் விசேடவுரையில் நீர்களென்றதனை, "என் பாராட்டைப்பாலோ சில" என்றாற்போலக் கொள்க வென்பர், நச்; சிவக. உ௦அஎ.

ரு. முன்பதிப்பில் அடிப்பிரிப்பு வேறாகவுள்ளது.

௪. "ஞாயர்" கலி. அக: கஉ; "ஞாயையு மஞ்சுதி" கலி. க௦எ என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * ஞாயர்பாட்டைப், † எ - து: அஃது அவின உண்ணுமத்,

மூன்றுவது மருதம் உக. ருகக

இனி யான் பாராட்டும் பெரிய பாட்டுக்களோடு நின் தாய்மாருக்குப்பட்ட கூற்றையுடைய பாலைப்பருகு; இத்தையெல்லாம் நின்னை *ஊட்டல் அமைவேனென்று (க) கூறிட்டு ஊட்டினாள். எ - று.

தண்டுதல் அமைதலென்னும் பொருடருதல், (உ) தண்டாமையென்னும் அதன் மறையால் உணர்க; "தண்டாக்காற் றனரியல்" (ங)"தண்டாவிருப்பினன்" (௪) எனவரும். †ஞாயரென்றது தன்னைப் பிறர்போற் கூறிற்று.

(இதனால்) தலைவிக்குத்தலைவனைக்கண்டு துமைபற்றிவியப்புத்தோன்றிற்று. தலைவற்கு ‡ நினைத்தல் பிறந்தது. புதல்வனால் தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது;(ரு)புதல்வனுஞ் செல்வமாதலின்.

இது "தரவும் போக்கும் பாட்டிடையிடைந்தும்" என (௬) ‖ இடைநிலைப்பாட்டினை ஈற்றின் வைத்தமையால், (எ) தரவும் போக்குமின்றி இடைநிலைப்பாட்டுக்களே ஒன்றோடொன்றுவந்து கலிவெண்பாவிற் கூறிய உறுப்பொத்து யாப்புவேறுபட்டு வந்த கொச்சகம். (௨0)

(அக.)மைபடு சென்னி மழகளிற் றோடைபோற்
கைபுனை மூக்காழ் கயந்தலைத் தாழப்
பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட
நலங்கிள ரொண்பூ ணணைத்தரு மவ்வாய்
௫ கலந்துகண் ணோக்கார்க் காண்பின் றுகிர்மேற்
பொலம்புனை செம்பாகம் போர்கொண் டிமைப்பக்
கடியரணம் பாயாரின் கைபுனை வேழந்
தொடியோர் மணலி னுழக்கி யடியார்க்க

---

க. "பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி, யென்பா லுண்டனை யாயி னொருகா, லுந்தை பாடு முண்ணென் றூட்ட" அகம். உகக: ௫ - எ.

உ. இவர் இவ்வாறாகப் பொருள்கொள்ளு முறைமையை, "எய்யாமையே யறியாமையே" (தொல். உரி.சூ. ௪௪) என்பதற்கு இவர்கூறியிருக்கும் விசேடவுரையாலும் அறிக.

௩.

௪. (அ) "தம்பொரு ளென்பதம் மக்கள்" குறள். ௬௩. எனவும் (ஆ) "பொன்போற் புதல்வனொடு" ஐங். உ௬௫. (இ) "பொன்போற் புதல்வர்ப் பெறூஅ திரும்" புறம். ௯: ௪. எனவும் வருதல் காண்க.

௬. தொல். செய். சூ. க௫௪.

எ. தரவும் போக்கு-மின்றிக் கொச்சகம் பலதொடர்ந்து இற்றதற்கு, இச்செய்யுளை மேற்கோள்காட்டி உறழ் பொருட்டுஅன்மையிற் கொச்சகக்கலியாயிற் றென்பர். பேராசிரியர் நச்சினார்க்கினியர், இருவரும்; தொல். செய். சூ. க௫௫.

(பிரதிபேதம்) *மாட்டாமல்விடுவேனென்று, † தாயென்றது தன்னைப்பிறர்போற்கூறிருள்; இது தலைவிக்கு ‡வினைதல் பிறந்தது, ‖ இடைநிலைப்பாடலைவ யீற்றின்.

தேரைவாய்க் கிண்கிணி யார்ப்ப வியலுமென்
போர்யானை வந்திக வீங்கு ;

௧௬ செம்மால், வனப்பெலா நுந்தையை யொப்பினு நுந்தை
நிலைப்பாலு ளொத்த குறியென்வாய்க் கேட்டொத்தி
கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெருமாற் றெவ்வாதி
யொன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோ
மென்றே யெணகிழ விடல் ;

௧௭ பால்கொள லின்றிப் பகல்போன் முறைகோடாக்
கோல்செம்மை யொத்தி பெருமமற் றெவ்வாதி
கால்பொரு பூவிற் கவின்வாட நுந்தைபோல்
சால்பாய்ந்தார் சாய விடல் ;

௨௧ வீத லறியா விழுப்பொரு ளச்சியார்க்
கீதன்மாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
மாதர்மென் னோக்கின் மகளிரை நுந்தைபோ
னோய்கூர நோக்காய் விடல் ;

ஆங்க;

௨௩ திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்
மகனல்லான் பெற்ற மகன் ;

௨௮ மறைநின்று, தாமன்ற வந்திக் கனர் ;
ஆயிழாய், தாவாத வெற்குத் தவறுண்டோ காவாநின்
கித்தை யிவனையாங் கோடற்குச் சித்தையாங்
கன்றி யதனைக் கடியவுங் கைநீவிக்
குன்ற விறுவரைக் கோண்மா விவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா னறனில்லா
வன்பிலி பெற்ற மகன்.

இது "தந்தைய ரோப்பர் மக்கள்ளென் பதனு, லந்தமில் சிறப்பின் மகப்பழித்து தேநுங்கலும்" (க) என்பதனுன் மகனைத் தலைவனை ஒக்க

க. தொல். கற்பி. சூ. க. இச்சூத்திர வுரையில் "வனப்பெலா...... ..... செகிழவிடல்"என மகனைக்கொண்டு விளையாடியவழி, அவன் தலைவன் மேல் வீழ்தலில், "தந்தை வியன்மார்பிற்..................மகன்" எனத் தன் பிறத்து அன்பிலனெனநெருக்கிக்கூறியவா றுகாண்கவென்பர், நச்.

## மூன்றுவது மருதம் உக. ருகக

லாங் துணையும் ஒக்கலாகக் துணையும் தலைவி கூறுகின்றுழி மறைந்துபுக்க தலைவன் அவன் ஊடலுணர்வன சொல்ல, மகன்வாயிலாக ஊடறீவாக் தன்றுன்ளே கூறியது.

இதன் பொருள்.

(க)மைபடு சென்னி மழகளிற் றேடைபோற்
கைபுனை (உ)முக்காழ் கயந்தலைத் தாழப்
பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட
நலங்கிள ரொண்(ரு)பூ ணனைத்தரு மவ்வாய்
ரு கலந்துகண் ணேக்காரக் *காண்பின் றுகிர்மேற்
பொலம்புனை (ச)செம்பாகம் போர்கொண் டிமைப்பக்
(ரு)கடியாரணம் பயாரின் கைபுனை வேழுந்
தொடியோர் மணலி னுழக்கி யடியார்ந்த

க. (அ) "அஞ்சன மெழுதின..............குஞ்சரம்" (ஆ) "மையணி மத யானை" சீவக. உஉருO, உசருச. (இ) "மையணி பிரும்பிடி" (ஈ) "மையணி யானை" (உ) "மையணி வேழமும்" (ஊ) "மையணி புயர் நுத, விருங்களிற்றியானை" பெருங். (க) சஅ: கஅச, இஇ: கருச; இக: கருரு;(உ) கஉ: ருஎ; (ரு) உஉ: ககக - உOO.(எ)"இழையஞ் சனமால் களிறு" கம்ப. அதிகாயன். உக.

உ. "முக்காழ்" (கலி. அஇ: கரு) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௬. "அவ்வாய் தன்,மெய்பெரு மழலைபின் விளங்குபூ ணணைத்தா" கலி. அக: க-உ. என்பதும் இந்நூற்பக்கம். ௬௧௯: ௬-ஆம் குறிப்பும் பார்க்க.

௭. "செம்பாகம்" தறள். ௬௦௯௨.

௮. (அ) "நீண்மதி லரணம் பாய்ந்தெனத் தொடிபிளந்து, வைந்நுதி மழுகிய தடங்கோட் டியானை" (ஐங். ௪௪௪) (ஆ) "எழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக், குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணிற், தேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி, வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல், லேர்தகை மருப்பித் தோட்டி நீவி, மேம்படு வெல்கொடி நுடங்கத், தாங்க லாகா வாங்குசின் களிறே" பதிற். ௫௩: ௧௫ - ௨௧. என மெய்யாகிய யானையையும் (இ) "கவழ மறியாநின் கைபுனைவேழம்" (கலி. அ௦: ௯) எனப் பொய்ம்மையானையையும் கூறியிருத்தலும் (ஈ) "கொய்புஞ் சுவற்பரி புக்குலப் பாகுமுட் கோது மில்லா, வையங் கடவு மதகளி றேவருந் தாமலெங்கை, செய்யும் பெருந்தவ மேகலைத் தாருழைத் தீமையையும், பொய்யுங் கலாதொழி வாய்புனை நூரனைப் போலவின்றே" அம்பிகாபதி. ௫௦௭. என்பதும் ஈண்டு அறிதற் பாலன.

(பிரதிபேதம்) * காண்மின் றுனின்மேற்.

65

ருக௪ கலித்தொகை அக.

தேரைவாய்க் கிண்கிணி யார்ப்ப வியலுமென்
போர்(க)யானை (உ)வந்திக வீங்கு

௬. (அ) "காதற் சொல், யானையென ஒப்புமை கருதாது காதல் பற்றி வருவது; காதல் பற்றிச் சிறுவனை யானையென்றலும் ஆகுபெயராமன் றோவெனின்;—யாதானுமோ ரியைபுபற்றி ஒன்றன்பெய ரொன்றற் காயது ஆகுபெயராம்; இயைபு கருதாது காதன் முதலாயினவற்றான் யானை யென்றவழி ஆகுபெயருளடங்கா வென்பது. ஒன்றன்பெயர் ஒன்றற்காத லொப்புமையான் ஆகுபெய ரென்பாரு முளர்" என்பர் சேனாவரையர்; (ஆ) நச்சினார்க்கினியர், காதற் சொல் யானை வந்தது என ஒப்பின்றிக் காதல் பற்றி நிற்கும் என்று கூறி, "போர்யானை வந்தீக வீங்கு" என்பதை மேற்கோளும் காட்டுவர்; தொல். கிளவி. சூ. ௫௭. (இ) உயர்திணை அஃறிணையாகி ஒப்புமை கருதாது உவப்பின்கண் திணைமயங்கி வந்ததற்கு, "என்போர் யானை வந்தீக வீங்கு" என்பதை மேற்கோள் காட்டுவர், இ-வி. நூலார்; இ-வி. சூ. ௨௧௧. (ஈ) ஒருவனை என் யானை வந்தது என்பது உவப்பினால், திணை மயங்கிற்றென்பர், மயிலைநாதர்; நன். பொது. சூ. ௨௮. இவைகளும் (உ) "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" தொல். உவம. சூ. ௩. என்னுஞ் சூத்திர வுரையில் "உள்ளுங்காலை என்றதனான் முன்னத்தி னுணருங் கிளவியான் உவமங்கோடலும், இழிந்தபொருள் உவமிப்பினும் உயர்ந்த குறிப்புப்படச் செயல்வேண்டு மெனவுங்கொள்க. அவை 'என்யானை' 'என்பாவை' என்றவழி அவை போலும் என்னுங் குறிப்புடையான், பொருள் கூறிற்றிலனாயினும், அவன்குறிப்பினான் அவை வினைபுவமையெனவும் மெய்யுவமையென வும்படும்; இவற்றுக்கு நிலைக்களம், காதலும் நலனும் வலியு மென்பது சொல்லுதும்; அவைபற்றாது சொல்லுதல் குற்றமாகலின்" என்று

காணப்படுங் குறிப்பும் இங்கே அறிதற் பாலன. (ஊ) "மாதர், வருக வென் களிறென்றேத்தி வாங்குபு தழுவிக் கொண்டாள்" சீவக. ௧௧௧௧. (எ) "இன்றுணை மகளிரோ டொன்றியான் விடுதருஞ், சொல்லொடு படுத்துச் செல்கவென் களிறென" பெருங். (௧) ௫௬: ௫௪௬ - ௭. (ஏ) "அன்னை. பொருகளிறு வருகவளர் போரேறு வருகவெழிற் பூவை வண்ண, வருகவெனத் துகிரில்வினை மணிமுத்தங் கொண்டன ளுண் மகிழ்வு பூத்தாள்" பாக. ௧௦: சகடமுதைத்த. ௨௧. எனவருதலும்

காண்க.

உ. (அ) வந்தீக வென்பதனோடு "வினைகலந்து வென்றீக" நறன். ௧௨௯. (ஆ) "யார்மேற்றாக் கொன்னினுங் கொண்டீக" (இ) "என்செய்தே யாயினு முய்ந்தீக" பழ. ௨௩௧; ௩௮௪. என்பவை ஒப்புநோக்கற் பாலன.

## மூன்றாவது மருதம் ௨௧. ௫௯

எ - து: பட்டத்தையுடைய இளையகளிற்றினது கருமை*யுண்டாகின்ற தலையில் தாழுகின்ற மூன்று வடம்போலே கையாற் புனைந்த மூன்று வடம் மென்மையையுடைய தலையிடத்தே தாழ, (க) பொன்னாற் செய்த மழுவோடே வானம் அணிதலைக்கொண்ட நன்றே விளங்குகின்ற ஒள்ளிய பூணை நனைத் தலைச் செய்யும் அழகிய வாயைக் கண் கலந்த நினை வேட்கைநகரக் †கரட்சி யினிய பவளப் பலகைமேலே (உ) செம்பாதி வடிவு வேறோர் யானையை இறக் குத்துகின்ற போர்த்தொழிலைத் தன்னிடத்தே கொண்டு விளங்கும்படியாகப் பொன்னாற் செய்த, காவலையுடைய அரணங்களைக் குத்தாத கையாற் புனைந்த நின் வேழத்தோடே, நின்னடியில் நிறைந்த (௩) தேரையின் வாய்போலும் வாயையுடைய சதங்கை ஆரவாரிப்ப, (௪) தொடியினையுடைய மகளிர் இழைத்த வண்டலின் கண்ணே உழக்கி நடக்கும் என்னுடைய போர்த்தொழிலையுடைய யானே! இவ்விடத்தே வருக. எ - று.

‡ பொலம்புனைவேழமென்க. உழக்கியியலுமென்க.

௧௧ செம்மால், வனப்பெலா நுந்தையை யொப்பினு நுந்தை
நிலைப்பாலு ளொத்த குறியென்வாய்க் கேட்டொத்தி;

---

௧. இங்கே கூறிய பின்ளைப்பணி, திருமாலின் ஐம்படைகளின் வடிவ மான தாலியேயன்றி இறைவன் படை வடிவமான தாலிபோலும். "பூண்டவை, எறியாவாளு மெற்று மழுவுஞ், செறியக் கட்டி யீரிடைத் தாழ்ந்த, பெய்புல மூதாய்ப் புகர் நிறத் துகிரின், மையற விளங்கிய வானேற் றவிர்பூண்" கலி. அடி: அ - ௧௧. என முன் வந்திருத்தலும் காண்க.

உ. "சம்பாதி யருச்சிப்பத் தம்பிசடா யுவும்பரவச், செம்பாதி யவள் வணங்கத் திருப்பாத மளித்தனையே" புள்ளிருக்குவேளூர்க்கலம். க.

ங. இது மெய்யுவமம்; வாயென்றது வாயிறெலியைக் குறிப்பதாகக் கொள்ளின் வினையுவமமாம். (அ) "தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடி" (ஆ) "தவளைக் கிண்கிணித் தாமம்" சீவக. உசங., ஙகஉச. (இ) "அரிக்குரற் கிண் கிணி யரற்றுஞ் சீறடி"........(ஈ) "அரிப்பொற் கிண்கிணி யார்ப்ப" (உ) "தவளைக் கிண்கிணி ததும்புசீ றடியர்" (ஊ) "தவளையங் கிண்கிணிச் சேவடி" பெருங். (க) சO: கஅ, சக: உசக. (ங.) க: கஎ - அ. (எ) "தவளையங் கிண்கிணித் தாளும்" கூர்ம. கல் யாண. உஅ. (ஏ) "தவளைவாய்ச் சதங்கை" காசி. பஞ்சநதத். ங. (ஐ) "தவளைவாய்ச் செம்பொற் கிண்கிணி" சீகாளத்தி. நான்முக. உக. என்பவைகளும் இந்நூற்பக்கம் சஎஅ: எ - ஆம் குறிப்பும் இங்கே அறிதற் பாலன.

ச. இந்நூற்பக்கம் கறுஅ: உ - ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) *உண்டாகின்ற ஒன்னியபுயினை, †எனைம் இனியபனைப் ‡புலம்புமே,

## ருகக. கலித்தொகை அகூ.

தன்றிய தெவ்வர்க் கடந்து (க)களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி; பெருமமற் றெவ்வாதி
யொன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோன்
மென்றோ ணெகிழ விடல்.

எ - து: தலைவா! பெருமா! *நுந்தையை அழகெல்லாம் ஒத்திருப்பினும் நுந்தை நிற்கின்ற நிலைகளின் கூற்றில் உனக்கொத்த குறிக்கப்படுங் குணத் தினை யான் கூறக்கேட்டு ஒப்பாய்; அவற்றுள் மாறுபாட்டிற்பட்ட பகைவரை வென்று களத்தைக்கொள்ளும் வெற்றிக்குணத்திடத்து அவனை ஒப்பாய்; மற்றுள்ள குணங்களிலே யாம் இவனோடு ஒருமனமாயினேமென்று உணர்ந் திருந்த மகளிரை நுந்தை மென்றோள் மெலிய விடுமாறுபோல நீயும் அவர் மெல்லியதோள் மெலியும்படி விடுதலாகிய†பரத்தைமையை ஒவ்வாதேகொள். எ - று.

கஎ (உ)பால்கொள வின்றிப் பகல்போன் ‡முறைக்தோல்தாக்
கோல்செம்மை யொத்தி பெருமமற் றெவ்வாதி

---

க. (அ) "களங்கொள் யானைக் கமொன் பொறைய" (ஆ) 'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர், தாமரைக் தனரோ குடைதுளங் கினவே, புரைசால் சிறப்பின் முரைசொழிக் தனவே, பன்னூ றடுக்கிய வேறு படு பைஞ்ஞில, மிடங்கெட வீண்டிய வியன்கட் பாசறைக், களங் கொளற் குரியோ ரின்றித் தெறுவர, வுடன்வீழ்ந் தன்று லமரே" புறம். ருக: ரு; கஉ ஏ - கரு.(இ)'அமர்க்கள மரசன தாகத் துறந்து, தவப் பெரும் கோலங் கொண்டோர்' சிலப். உஅ: கoச - ரு. (ஈ) "வென்று களங் கொள்ளுமேல் வேந்து" பெரும்பொருள். (தோல். புறத். ரு. ரு. நச். மேற். (உ) "இருக்களி யானை யினமிரிந் தோடக், கருங்கழலான் கொண்டான் களம்" (ஊ) "வென்று களங் கொண்ட வேல்வேந்தே" பு - வே. வாகை. உக. பாடாண். கஎ. (எ) "களங் கோடற் குரியசெருக் கண்ணி யக்கால்" கம்ப. சூர்ப்பணகை. கருக.

(ஏ) "வென்று வெங்களங்கொண்டு" (ஐ) "இக னெடுங்களம் வென்று கொள்குவம்" (ஒ) "பொரு களங் கொண்டு வாகை புனைந்து" வில்லி. காண்டவதகன. ருக. பதின்மூன்றாம். உக. பதினெட்டாம். கஉ. என்பவைகளும் (ஓ)"தேன்மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்ததே" (சீவக.உஎக) என்புழி, 'இத்துணையும் இவன் வெற்றியாதலின், இவன் களமென்றார்' என்னும் விசேடவுரையும் ஈண்டு அறிதற்பாலன.

உ. "பால்கொள..........ஒவ்வாதி" என்னும் இரண்டடிகளை 'ஒப்பு வழி யுவத்தற்கு உதாரணமாகச் சொல்லுப' என்பர் பேராசிரியர்; தோல். மெய்ப். ரு. உஉ.

(பிரதிபேதம்) * நங்கை அழகெல்லாம், † பரத்தமை. ‡முறைகோடாக்,

மூன்றுவது மருதம் ௨க. ருகள்

கால்பொரு பூவிற் கவின்வாட நுந்தைபோல்

சால்பாய்ந்தார் சாய விடல்

எ-து: பெருமா!(க) நுகத்துப் பகலாணிபோல் ஒருபக்கத்தைக் கொள்ளுத லின்றி (உ) முறைமைசெய்தற்குச் சாயாத கோல் செவ்விதாக நிகழ்த்துதலில் அவனை ஒப்பாய்; மற்றுள்ள குணங்களில், தன்னுடைய அமைதிக்குணத்தாலே இவன் நம்மைத் தப்பானென்று ஆராய்ந்த மகளிரைக் காற்றுப் பொருகின்ற பூப்போலே அழகுகெடும்படி நுந்தை சாயவிடுமாறுபோலச் சாயவிடுதலாகிய சுபாத்தைமையை ஒவ்வாதேகொள். எ - று.

உக (ங)வீத லறியா விழுப்பொரு (ச)ணச்சியார்க்
(ரு)கீதன்மாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
(சு)மாதர்மென் னோக்கின் மகளிரை நுந்தைபோ
னோய்கூர நோக்காய் விடல்

எ-து: பெருமா ! தன்னையுடையார் கெடுதலன்றித் (எ) தானே கெடுத லறியாத சிரிய பொருளை நச்சினவர்களுக்குக் கொடுத்தவிடத்து அவனை

---

க. (அ) "கெடுநுகத்துப் பகல்போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர்" பட். உ0௬ - உ0௭; (ஆ) "நுகத்துப் பகலாணி போன்று" பழ. ௬௫. (இ) "நுகத்திற் பகலனையாய்" தஞ்சை. ௪அ.

உ. "ஓர்வுற் றொருதிற மொல்காத நேர்கோ, லறம்புரி நெஞ்சத் தவன்" கலி. ௪உ: க௪ - ௫.

௩. "வீதலறியா...... .....விடல்" என்பது தந்தையொப்பர் மக்களென்ப தனுல் மகப்பழித்து நெருங்கும் தலைவிகூற்றுக்குமேற்கோள்; தொல். கற்பி. சூ. ௬. இளம்.

௪. "நச்சியார்க் கீதலும்" கார். எ.

௫. "ஈதன்மாட் டொத்தி,பெரும" என்பது இகரவீறு தகரத்தை யூர்ந்து எதிர்காலம்பற்றிவருமென்பதற்கும் (தொல். வினையியல். சூ. உ௬. ௧௪; இ - வி. சூ. உ௩அ) தகரம் சிறுபான்மை எதிர்காலம் காட்டி வருமென்பதற்கும். (இ - வி. சூ. ௪௧) மேற்கோள். ககர தகரங்களை ஊர்ந்துவரும் இகரம் எவ்லகண்ணியே நிற்குமென்பர்; நச.

௬. (அ) "மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய்" (ஆ) "மாதர்கொண்

மாஞேக்கின் மடந்தை" கலி. ௬௪: ௧௪; ௧௧: ௪.

௪. (அ) "வெள்ள மறலி விறல்வேந்தர் நித்தாயங், கள்ளரென் றிவ்வாறிற் றைகரப்பத் தீர்ந்தகலும்" செல்வப்பொருளை, விதலறியா விழுப்பொரு ளென்றதற்கு நச்சினார்க்கினியர் எழுதியிருக்கும் உரை பாராட்டத் தக்கது. (ஆ) "கேடில் விழுப்பொரு டருமா" குறுந். ௨௧௭, (பிரதிபேதம்) * பாத்தமை.



ஒப்பாய்; மற்றைக் குணங்களில், காதலையுடைய மெல்லிய நோக்கினையுடைய மகளிரை நுந்தை நோய் கூரா நிற்க நோக்காது விடுமாறுபோல நீயும் அவர்களை நோய்மிகாநிற்கப் பாராது விடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே கொள். எ - று.

(௧)* ஆங்க, அசை.

---

என்பது ஒப்புநோக்கற்பாலது. (இ) இலக்கணக் கொத்து நூலாரால் அந்நூலின் அ-ஆம் சூத்திரத்து 'அரும்பொருள்' என்பதன் விசேடவுரையில், "பொருளென்னும் பெயர் பொதுவாயினும், கல்விப் பொருளினை மாத்திரம் அங்ஙனங் கூறாது, நற்பொருள், பெரும்பொருள், அரும்பொருள், குறையாப்பொருள், துணைப்பொருள், நீங்காப்பொருள், கேடில்பொருள், விளக்கும்பொருள், விழுமிய பொருள் முதலாக யாதானு மோரடை கொடுத்தே கூறுவர்; 'கேடில் விழுச் செல்வங் கல்வி' எனச் சிறபான்மை பலவடையும் கொடுத்துக்கூறுவர். அக்கருத்துப் பண்டை நூல்களெல்லா வற்றினுள்ளுங்காண்க. அந்நியமம் மறந்துந்தப் பார்களென்பது தோன்ற அரும்பொருள் பெறுகவென்றும். கலித்தொகையின் நுர்காரண நோக்கி நிதிப் பொருளைக் கேடில் விழுச் செல்வமென்றார். இவ்வடை கல்விக் குரித்தன்றிப் பிறவற்றிற்கு முரித்தோ வென்பாரை நோக்கி, வழுவமைத்தார் நச்சினார்க்கினியர்" என்று எழுதப்பெற்றிருப்பது இங்கே ஆராய்தற்பாலது.

க. "ஆங்கத் திறனல்ல... .. ....,பெற்ற மகன்" என்பதை ஆங்கென்பது அசைநிலையாய் வருதற்கு (நன். இடை. சூ.கஅ) மேற்கோள்காட்டினர், மயிலைநாதர்; ஆங்கு என்னு மசைநிலை 'ஆங்க' என இறுதி விகார மாய் நின்றதென்று பொருத்தினர் விருத்தியுரைகாரர். "அந்நி லாஅங் கசைநிலைக் கிளவியென், றாயிரண் டாகு மியற்கைத் தென்ப' என அந்தில் என்பது ஆங்கு என்னும் இடப்பொருளும் அசை நிலையுமாமென்றந்த இவர் அந்திலும் ஆங்கும் இடப்பொருளும் அசை நிலையுமாமெனச் சூத்திரஞ்செய்தார். அது ஆசிரியர் கருத்தன்றென் பதை அவர் சூத்திரத்தாலும் ஆங்கு என்பது இச்சுட்டுப் பெயர்ச் சொல்லாதலாலும் (அறிக) ஆங்கு அசைநிலையெனக் கூறி ஆங்க என உதாரணங் காட்டிய[தினுலு](தும்) பொருந்தா தென்க. இனி ஆங்க என்னும் அகரவீற்றிடைச்சொல் அசைநிலையெனக்கொளின் அமையும். என்னெனின் 'ஆங்கவுரையசை' எனக் கூறியதினுலும் 'ஆங்கக்குயிலு மயிலுங்காட்டி' எனவும். 'ஆங்கத் திறனல்ல யாங் கழற' எனவும், பயின்று வருதலானு மென்க" என்று மறுத்துரைப்பர் இராமாநுச கவிராயர்; இலக்கண விளக்க நூலாரும் இக்கருத்துடையரென்பது சூ - வி. உஎஉ - ஆம் சூத்திரத்தால் விளங்கும்.

(பிரதிபேதம்) * ஆங்கசை.

## மூன்றுவது மருதம் உக. ருகசு

உக (க) திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்

(உ) மகனல்லான் பெற்ற மகன்

எ - து: பின்வந்துநின்ற தலைவனைக்கண்டு நக்க புதல்வனைநோக்கி, இந்த நன்குமதிக்கும் மகனல்லாதவன் பெற்ற மகன் நற்குணங்களல்லாதவற்றை *நீ ஒவ்வாதே சொன்னென்று யாம் கோபிக்க யாரைநோக்கி நகும். எ - று.

† என்று கருதிப் பார்த்துப் பின்னின்ற தலைவனைக் கண்டாள்.

உஅ மறைநின்று, தாமன்ற வந்தீத் தனர்

எ - து: கண்டு, வாராத தாம் பின்னே மறையநின்று பின்னர் நாம்

தெளியும்படி முன்னே வந்தா ‡ரென்றான். எ - று.

௨௬ ||ஆயிழாய், தாவாத வெற்குத் தவறுண்டோ காவாதீங்
கித்தை யிவனையாங் கோடற்குச் (௩)சித்தையாங்
கன்றி யதனைக் கடியவுங் கைநீவிக்
குன்ற (௪)விறுவரைக் கோண்மா விவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா ÷னறனில்லா
வன்பிலி பெற்ற மகன்.

எ - து: அதுகேட்ட தலைவன், இங்ஙனஞ் செயலமைகூறுகின்றாயாயின் அழகிய இழையினையுடையாய்! நின்னிடத்துச் செய்வதோர் வருத்தம் இல்லாத எனக்கும் ஒரு தப்புண்டோ? இவனை யாம் எடுத்துக்கொள்ளுதற்கு

நின்னிடத்தே காத்துக்கொள்ளாதே என்னிடத்தே தருவாயென்றான்; அதுகேட்ட புதல்வன் அவன்மேலே வீழ்ந்தவனைத் தலைவி நோக்கிக் கை

விடப்பட்டவனாகிய அன்பிலி பெற்ற பிள்ளை யாம் அவன்மேலே வீழ்தலை மனங்கன்றி விலக்கவும் ×நம்மைக் கைகடந்து மலையிடத்து உறுகின்ற அரி

---

௧. "திறனல்ல...............மகனல்லான் பெற்ற மகன்" என்பது தன் இளமை பொருளாகப்பிறந்த நகைக்கும், (தொல்.மெய்ப்.சூ. ௪.பேர்.) பிரிவின்பாற் படுவதாகிய ஊடலிற் பிறந்த துனிக்கும் (தொல். செய். சூ. ௧௮௭.பேர்; நச்) மேற்கோள்.

௨. "மகனல்லான் பெற்ற மகன்" கலி. அ௪: ௧௩.

௩. "சித்தை" கலி. ௧௪: ௨௨.

௪. "இறுவரை யிவர்வதோ ரிலக்கெயிற் றரியென" சீவக. ௧௮௩௩. இறுவரை - பெரியமலை. சீவக. ௧௪௩௩, ௧௮௩௩, ௨௭௨௨; பக்கமலை. கலி. ௫௩: ௧௩.

பிரதிபேதம் * நீ கொள்ளாதேகொள்ளென்று, † எனக்கருளிப் பிள்ளின்றதலை, ‡ என்றான் ஆயிழாய். || ஆயிழாயிழாய், ÷ அறனிலா, × நம்மைக்கடந்து.

வரையிலே செக்கம் பாய்ந்தாற்போல அறனில்லாத தந்தையுடைய அகன்ற மார்பிலே * பாய்ந்தானென்றாள். எ - று.

இது மகப்பழித்துநெருங்கியது. அன்பிலி பெற்ற மகனென (க)அவனையித் † பிரித்தவாறுங் காண்க. அறனில்லாவென்றது, ஆங்கு நெஞ்சழிதல்.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இஃது ஆங்கவெனத் தனிச்சொற்பெற்று ஐஞ்சீரடுக்கி வந்த கலிவெண்பா. (உ௪)

(அஎ.) ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை;
ரு தெரியிழாய், செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய்
மெய்பிரிந் தன்னவர் மாட்டு;
௬ ஏடா, நினதுகுத் தவறுண்டோ நீவீடு பெற்று
யிமைப்பி னிதழ்மறை பாங்கே கெடுதி
நிலைப்பா லறியினு நின்னொந்து நின்னைப்
புலப்பா ருடையர் தவறு;
௯ அணைத்தோளாய், தீயாரைப்போலத் திறனின் றுடற்றுதி
காயுந் தவறிலேன் யான்;
௧௧ மானோக்கி நீயழ நீத்தவ னானது
நாணில னாயி னலிதந் தவன்வயி
னூடுத லென்னோ வினி;
௧௪ இனியாது மீக்கூற்றம் யாமில மென்னுந்
தகைபது காண்டைப்பாய் நெஞ்சே பனியானாப்
பாடில்கண் பாயல் கொள.

இது பரத்தையர்சேரிச் சென்றமை அறிந்திலனெனத் தலைவிமாட்டுச் சென்றவனோடு அவள் ஊடி உறழ்ந்துகூறித் தோழி வாயிலாக ஊடறீர்வாள் தன் னெஞ்சோடு கூறியது.

இதன் பொருள்.

௧. தலைவி தன்னொடு மைந்தனிடை உறவுநீக்கி, அவனைத் தலைவனொடு சார்த்திக் கூறுதலாகிற அவன்வயிற் பிரிப்பு என்பதற்கு "மறைநின்று ............மகன்" என்னும் பகுதியை மேற்கோள்காட்டி, "அறனில்லா வன்பிலி பெற்ற மகனெனப் பிரித்தவாறு காண்க" என்பர் நச்சினார்க்கினியர்; தொல். கற்பி. சூ. ௬.

(பிரதிபேதம்) * பாய்ந்தானெனமகப்பழித்ததெறுவ்பிலவாறும் அன்பிலி. † பிரித்தவாறும்.

## மூன்றாவது மருதம் ௨௨. ௫௨௧

(௧) ஒரூஉ நீ; எங்கூந்தல் கொள்ளல் * யா நின்னை
வெரூஉதுங் காணுங் கடை

எ - து: † யாம் நின்னைக் காணுமிடத்து வெருவுவேம்; ஆதலால் எங் கூந்தலைத் தீண்டாதேகொள்; நீ நீங்கென்றாள் தலைவி. எ - று.

இது வெருவவேண்டாப் பொருட்கட் கடிதிற் பிறந்ததோர் வெறியாதலின், (௨) வெருவுதலென்னும் மெய்ப்பாடு.

௩. தெரியிழாய், செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய்
மெய்பிரிந் தன்னவர் மாட்டு

எ - து: அதுகேட்ட தலைவன், தெரிந்த இழையினையுடையாய்! அத் தன்மையாகிய பரத்தையர்மாட்டு உண்மையாகப் பிரிந்து யான் செய்த தவறில்லாத இடத்து நீ என்னைஞ் சினப்பாயென்றான். எ - று.

அன்னவரென்றது, நீ புலக்குந் தன்மையுடையவரென்றது.

க. (அ) தலைவன் முன் தலைவி தன்னைப் புகழ்தல், தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்தவழி இரத்தலும் தெளித்தலுமாகிய ஈரிடத்து மட்டுமென் டென்று கூறி, 'ஒருஉநீ..................காணுங் கடை' என்பதை முத லாவதற்கு மேற்கோள் காட்டி, 'இதில் தன்னை உயர்த்துக் கூறுதலாற் புகழ்ந்தாளாம்; நின்னை வெருவாதார் பிறருளரென்னு முள்ளக்கருத்தி னால்' என்றும், தொல். கற்பியல். சூ. ௬௰. 'தற்புகழ் கிளவி' (ஆ) "பரத்தைவாயி லால்வர்க்கு முரித்தே" (தொல். பொருளி. சூ. உக.) என்பதன் விசேடவுரையில், 'நால்வர்க்கு மென்றமையால், நான்கு வருணத்துப் பெண் பாலாரும் அவரோடு கூடப்பெறுப' என்றுகூறி, இப்பகுதியை (பார்ப்பனியும் அரசியுமொழிந்த) 'ஏனைய வருணத்தார் கூற்று' என்றும் கூறுவர் இளம்பூரணர். (இ) "யாரிவ னெங்கூந்தல் கொள்வா னிதுவுமோ, ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" கலி. அக: க - உ. (ஈ) "தோடேந்து பூங்கோதை வேண்டேன் கூந்த ஞெடேல்" சீவக. கஉஉக.) என்பவையும் (உ) "கலிமயிற் கலாவத் தன்னவிவ, ளொலிமென் கூந்த லுரியவா நினக்கே" குறுந். உஉ௫. என்பதும் (ஊ) "காறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே" (புறம். ககூ: க) என்னு மூலமும் 'மணங்கமழும் கரிய கூந்தலைத் தீண்டுதற் குரியவரை நினைந்து' என்னும் அதனுரையும் ஒப்புநோக்கற்பாலன.

உ. 'வெருஉதலென்பது அச்சம்போல நீடுநில்லாது கதுமெனத் தோன்றி மாய்வதொரு குறிப்பு; அதனைத் துணுக்கென்றலுமாம்' என்று கூறி, அதற்கு, "ஒருஉநீ............கடை" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, 'இதில் அஞ்சத்தருவது கண்டஞ்சதலின்மையும் அஞ்சினார்க்கு உள்ள வேறுபாடு அதன் பின்னிகழாமையுங் காண்க' என்றுங்கூறுவர்.

(பிரதிபேதம்) * யானின்னை, † யானின்னை.

66



இஃது (க) கூடல்பற்றிய வெருளியென்னும் மெய்ப்பாடு.

இனி (உ) ஒருயிராயிருக்க உடம்பிரண்டாயிருப்பாயென்றால், தன்னைப் பிறன்போற் கூறிற்றாகாது; பன்மையாய் நிற்றலின்.

ஞ் எடா, நினக்குத் தவறுண்டோ நீவீடு பெற்று

இமைப்பி னிதழ்மறை பாங்கே கெடுதி
நிலைப்பா லறியினு நின்னொந்து நின்னைப்
புலப்பா ருடையர் தவறு

எ - து: வடா ! நின் கண்ணை மறைத்த இமைக்குள்ளே மலர்ந்த பொழுதே தோன்றாமற் போதி; ஆதலால், நீ கைவிடுதலைப் பெற்றாய்; அந் நிலைமைப் பகுதியை அறிந்திருப்பினும் அறியாதாரைப்போலே நின்னை நொந்து நின்னைப் புலக்கின்றவர் தவறுடையர்; நினக்கு ஒரு தவறு உண்டோ வென்றான். எ - று.

௬ | அணைத்தோளாய், தீயாரைப் போல * திறனின் றுடற்றுதி
| காயுந் தவறிலேன் யான்

எ - து: அதுகேட்ட தலைவன், (௬) அணைபோலுந் தோளினையுடையாய் ! தீய மக்களை உடற்றுமாறுபோல ஒரு தீய திறனின்றாகவும் உடற்றாநின்றாய்; யான் நீ காய்கைக்குக் காரணமாவதோர் தவறுடையேனல்லே னென்றான். எ - று.

---

இளம்பூரணரும்; தொல். மெய்ப். சூ. ௧௨. 'ஆங்கவை, ஒரு பால்' (ஆ) இதனை அச்சத்திற்கு மேற்கோள் காட்டி, தலைவனைக் கள்வன்பாற் சார்த்தி உரைத்தமையின் கள்வர் பொருளாக அச்சம் பிறந்த தென்பர் பேராசிரியரும், இ-வி. நூலாரும்; தொல். மெய்ப். சூ. ௧. இ-வி. சூ. ௫௭அ.

௧. ஊடற்கண் தலைமகள்வெகுட்சி கூறியதற்கு, "செய்தவ றில்வழி யாங் குச் சினவுவாய்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௧௦. பேர்.

௨. (அ) "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவ, ராகத்து ளோருயிர் கண்டனம்யாம்" (ஆ) "ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ரா ருயி ரீருருக்கொண், டானந்த வெள்ளத் திடைத்திளைத்தாலொக்கும்" கோவையார். ௭௧, ௩௦௭. (இ) "பாவைநீ புலவியி னீடல் பாவியேற், காவியொன் றிரண்டெம் பல்லது" சீவக. ௧௦௪௪. (ஈ) "காவிபோற் கண்ணிக்குங் கண்ணியத்தோட் காளைக்கு, மாவிபோ லாடையு மொன் றானதே" நள. கலிதொடர். ௮௪. (உ) "மருங்கிலா நங்கையும் வசையி லையனு, மொருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினர்" கம்ப. மிதிலைக். ௩௮. என்பவை ஈண்டு அறிதற்பாலன.

௧. இந்நூற்பக்கம் ௬௨௨: ௪; ௬௪௬: ௪; ௪௦௦: ௪-ஆம் குறிப்புப் பார்க்க. (பிரதிபேதம்) * சிறனைன்றுடைற்றதி.



௧௧ மானோக்கி நீயழ நீத்தவ னுனது
நாணில னுயி னவிதந் தவன்வயி
*னூடுத லென்னோ வினி

எ - து: அதுகேட்ட தோழி, மான்போலும் நோக்கினையுடையாய்! நீ அழும்படி நின்னைக் கைவிட்டவன் †பரத்தைமையில் அமையாமல் நாணமற்றிருப்பனுயின், மேல் அவனிடத்தே நவிதலைக்கொடுத்து ஊடுகின்றதன்மை என்னபயன் தருமோவென்றாள். எ - று.

இஃது "உறுதகை யில்லாப் புலவியுண் மூழ்கிய, கிழவோள் பானின்று கெடுத்தற்கண்" (க) தோழி கூறியது.

௧௪ இனியாது கேட்கற்றாம் ‡யாமில மென்னுந்
தகையது காண்டைப்பாய் நெஞ்சே பனியானுப்
பாடில்கண் பாயல் கொள

எ - து: அதுகேட்ட தலைவி, நெஞ்சே! நீர்விழுதல் அமையாத, துயிலுத லில்லாத கண் துயில்கொள்ளும்படியாக நாம் இனிச் சிறிதும் மேலாகக் கூறுங் கூற்றையுடையேமல்லேமென்று இவள்கூறுந் தகைமையினையுடைய கூற்றினைக் காரியமென்று நினைத்துப் பார்ப்பாயென நெஞ்சொடு ||கூறி யூடறீர்த்தாள். எ - று.

இதனால், ÷தலைவர்க்கும் தலைவிக்கும் உணர்வென்னும் உவகை பிறந்தது.

இது (உ)தரவும்போக்குமின்றி ஐஞ்சிறடுக்கி வந்த உறழ்கலி. (௨௨)

(அஅ.) ஒருஉக், கொடியிய னல்லார் குரனூற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரி . . .
. . . . . . . . . . யாக

௯ கடியரோ வாற்று தவர்;

---

தோல். கற். சூ. ௬. இச்சூத்திரப்பகுதிக்கு, இவர், 'தலைவன் சென்று சேரும் தகைமை இல்லாமைக்குக் காரணமாகிய புலவியின்கண் அழுந்திய தலைவி பக்கத்தாளாய்நின்ற அவள் புலவியைத் தீர்த்தற்கண் (தோழிகூற்றுநிகழும்)'என்று பொருள்கூறி அதற்கும், "மாணேக்கி ..........இனி" என்பதை மேற்கோள் காட்டியிருக்கிறார். இஃது இளம்பூரணர் கருத்தைத் தழுவியதே.

௨. இச்செய்யுளை, தரவும் போக்குமின்றி ஐஞ்சிறுதேச்சி வந்த உறழ்கலிக்கு மேற்கோள் காட்டினர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்; தோல். செய். சூ. ௧௫௫.

(பிரதிபேதம்) * வெயிலேதன்றே. † பரத்தமை... ‡ காமிலமன்றனையது. || கடிபூ...
+ தலைவனும் தலைவியும் உணர்...ம் உவகையைப்பெற்றார்.



## கலித்தொகை ௮௮.

௫ கடியர்தமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று;
௬ வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின்
மாய மருள்வா ரகத்து;
௮ ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு;
௧௦ இஃதொத்தன், புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவு
மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு நல்லார்
சிறுபு சிறச் சிவந்தநின் மார்புந்
தவறுதல் சாலாவோ கூறு;
௧௫ அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு;
௧௭ இனித் தேற்றேம்யாம்;

௧௮ தேர்மயங்கி வந்த தெரிகோதை யங்கல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீயுறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு.

இஃது அவ்வாற்றம் புக்க தலைவனுடன் ஊடியும் உறழ்ந்துச்சொல்லி போய்ச்சூளஞ்சி யூடறீர்ந்தது.

இதன் பொருள்.

(க)ஒருஉக், (உ)கொடியிய னல்லார் குரனுற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்

௧. கற்புக் காலத்துத் தலைமகள் புலவிக்கண் அவளுயர்வும் தலைமகன் றாழ்வு முரியவென்பதற்கு, 'ஒருஉக் கொடியிய னல்லார்.........தவறு' என்றபகுதிகளை மேற்கோள் காட்டி, 'இதனுள் தலைமகன் பணிவும் தலைவியுயர்வும் காண்க; இஃதீண்டுக் கூறிய தென்னை? காமக் கடப் பிணுட்பணிந்த கிளவி யென மேற் கூறப்பட்ட தாலெனின், ஆண்டுக் கூறியது ஊடல் புலவி துனியென்னு மூன்றிற்கும் பொதுப்படநிற்றலின் இது புலவிக்கே யுரித்தென்னுஞ் சிறப்பு நோக்கிக் கூறியவாறு' என்பர். இளம்பூரணர்; தொல். பொருளி. சூ. ௩௪. 'மனைவி யுயர்வும்'

௨. "எதிலான் முச்சி, புதிர்தக ளுக்கின் னுடையொலிப்ப, வெதிர்வளி தின்முயங் செல்" கலி. அக ௭௦ - ௩௨.

மூன்றாவது மருதம் ௨௩. ருஉரு

*தொடிய வெமக்கு(க)நீ யாரை (உ)†பெரியார்க்
கடியரோ வாற்று தவர்

‡எ - து: கொடியினதியல்பையுடைய பரத்தையருடைய புழுகுமுதலிய வற்றிலே அளைந்த மயிர்முடியினின்றும் உதிர்ந்த பூந்தாதுகள் நின் தோட் கட்டிலே கிடவாநிற்க, எம்மை நீ தீண்டுதற்கு எமக்கு நீ யாராக் தன்மையை யுடையை? எம்மைவிட்டு நீ நீங்குவாயாக; பிரிவாற்றாதவர் பிரியவல்ல பெரியோர்க்கு அடியரோ? அன்றே ||யென்றாள். எ - று.

குரல் - மயிர். காற்றம், ஆகுபெயர்.

இது "சினனே பேதைமை நிம்பிரி நல்குர, வினைகால் வகையுஞ் சிறப்பொடு வருமே" (௩) என்பதனுல்,'தொடிய வெமக்குநீயாரை'எனச்சினம் பற்றி வரினும் அது தன் காதலைச்சிறப்பித்தலின் அமைந்தது.

---

௧. (அ) "நம்பிநீ யாரை யென்றான்" (ஆ) "ஐயநீ யாரை யென்றாற்கு" சீவக. கஙிச, கஏகஅ. (இ) "அய்யநீ யாரை" கம்ப. நாகபாச. உகஎ. என்பவையும் "யாரைநீ யெம்மில்,புகுதர்வாய்" கலி. கஅ: க; என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௨. "பரத்தை வாயி னல்வர்க்குமுரித்தே" என்பதற்கு,பரத்தையர் மாட்டு வாயில் விடுதல் நான்கு வருணத்தார் (ஆடவர்) க்கும் உரித்தென்று முதலிற் பொருள் கூறிப் பின் நான்கு வருணத்துப் பெண்பாலாரும்

அவரோடு கூடப்பெறுபவென்றுமாம் என்றுகூறி, "பெரியார்க் கடிப்பிரா யாற்றாதவர்" என்பதைப் * பார்ப்பனி கூற்றாக்கு (* அரசிகூற்றென்றும் பிரதிபேதம்) [illegible] பொருளி. கு. உஅ.

௩. தோல். பொருளியல். சூ. ௰௪. (அ) இச்சூத்திரத்தின் இவ்வுரையிலும் இப்பகுதி இக்குறிப்போடு இச்செய்திக்கு மேற்கோள். (ஆ) இளம்பூரணர் இச்சூத்திரத்திற்கு "மெய்ப்பாட்டியலுள் (சிலகுணங்கள்) ஈடுவா ணைந்திணைக்குரிய தலைமக்கட் காகாவென எடுத்தோதுகின்றாராகலின் அவற்றுள் ஒரு காரண மொரோவிடத்து வருமென்பதுணர்த்திற்று; இச்சூத்திரம் எதிரதுநோக்கிற்று; சினமுதலியனான்கும்யாதானுமொருபொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும்" என்று உரை வகுத்து, "கொடியிய னல்லார்.........ஆற்றாதவர்" என்ற பகுதியை முதலாவதற்கு மேற்கோள்காட்டி, இதனுள் தொடிய வெமக்கு நீயாரை யென்பது சினம்பற்றிவரினும் காமக்குறிப்பிறைப் புணர்த்த தலைமகள் கூறுதலின் அவன் காதலைச் சிறப்பிக்க வந்ததென்றனர்; தோல். பொருளி. சூ. ௪௪.

(பிரதிபேதம்) * தொடிஇய. † பெரியோர்க்கு ‡ எ - து: குழல் - மயிர்............பெயர் கொடியினியல்பை, ‖என்முன் கடியதமக்கினியார் சொலத்தக்காமறறு.

௫௰௯ கலித்தொகை அ௮.

௫ (க)கடியர்தமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று

எ - து: அதுகேட்டுக் கடியராயிருப்பார்தமக்கு மாற்றஞ்சொல்லத் தக்கவர் யாவரென்றான். எ - று.

விணக்கெட்டு, (உ)வாயல்லா வெண்மை யுரையாது †கூறுநின் மாய மருள்வா ரகத்து

எ - து: அதுகேட்டு நீ போகின்றதொழிலைத் ‡தவிர்த்துநின்று உண்மை யல்லாத வெண்மைகளைச் சொல்லாதே நின் பொய்ம்மைகளை மெய்யென்று மயங்குவாரிடத்தே ‖சொல்லென்றாள். எ - று.

'விணக்கேட்டு' பாடமாயின் விணக்கேடாகிய வாயல்லாவெண்க. உரையாதியும் பாடம். வெண்மை, பண்புப்பெயர்.

அ ஆயிழாய், நின்(௩)கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா வென்க ணெவனோ தவறு

எ - து: அதுகேட்ட தலைவன், ஆராய்ந்த இழையினையுடையாய்! நின்னுடைய + கண்ணினில் (௪) அருணோக்கினைப் பெறிலன்றி இனிய உயிர் வாழமாட்டாத என்னிடத்துத் தப்பு யாதுதானென்றான். எ - று.

"தாமக் கடப்பினுட் பணிந்த கிளவி, காணுங் காலைக் +கிழவோற் குரித்தே" (௫) என்பதனால், தலைவன் பணிந்து கூறினான்.

---

க. "கடியர் தமக்கு... ..........மாற்று" என்பது உரைவகை நடை நான்கனுள், பாட்டிடை வைத்த குறிப்பிற்கு மேற்கோள்; தொல். செய். சூ. க௭௩. 'பாட்டிடை' இளம்.

உ. பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளுள் தலைவன் கூற்றைத் தலைவி பொய்யாக் கோடற்கு, "வாயல்லா வெண்மை... ........ .....ரகத்து" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உஉ. 'இன்பத்தை' இளம்.

௩. கண்ணென்பது அருளென்னும் பொருளில் வருதலை, "கண்மாறி விடின்" கலி. ௬௧: உ௪; என்பதனாலும் அதன்குறிப்பாலும் அறிக.

௪. "நின், னருணோக்க மழியினு மவலங்கொண் டழிபவள்" கலி. ௪௦: க௭ - கக.

௫. தொல். கற்பி. சூ. கக. (அ) இச்சூத்திரத்தின் இவ்வுரையிலும் தலைவன் தலைவி மாட்டுக் காமங் கைமிகக் கழித் தாழ்ந்து கூறியதற்கு, "கடியர் தமக், கியார்சொல்லத் தக்கார்மாற்று" என்பதும் "ஆயிழாய், நின்கண் ..............தவறு" என்பதும் மேற்கோள். (ஆ) இளம்பூரணரும், "பெரியார்க், கடியரோ' வாற்றுதவரெனத் தலைவி கூறியவழி, 'கடியர்

(பிரதிபேதம்) * வினைகெட்டு, † சென்றீன், ‡ தவிர்த்தவின்று. ‖ செல்லென்றான், + கண்ணில் வருநோக்கினைப், + கிழவோர்க்கு.

௧0 (க)இஃதோத்தன், (உ)புள்ளிக்(ங)களவன் புனல்சேர்பொதுக்கம்
(ச)வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றூற்றனவு [போல்
மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு (ரு)நல்லார்
சிரறுபு சிறச் சிவந்தநின் மார்புந்
தவறுதல் *சாலாவோ கூறு

எ - து: அதுகேட்ட தலைவி இவனொருத்தனென நெஞ்சொடு வியந்து கூறி, பின்னர், புள்ளியையுடைய (கூ) நண்டுகளின் நடையாலுண்டான வடு நீருகைச் சேர்ந்து கிடந்தாற்போலப் பெரிய உகிரால் பிளந்த வடுக்களும் ஒளியையுடைய எயிறு அழுந்தின வடுக்களும் ஒள்ளிய இதழ்கள் வாடின நின் கண்ணியும் பரத்தையர் நின்னோடு வேறுபட்டுக் கோபித்து அடிக்கச் சிவந்த நின்னுடைய மார்பும் தப்பாதலுக்கு அமையாவோ? அமையாவாயிற் கூறு என்றாள். எ - று.

சேர்பென்னும் எச்சத்திற்கு வினை வருவித்து முடிக்க. ஒதுக்கமென்னுந் தொழிற்பெயர் ஆகுபெயர். "சிரறுசே லாடிய நீர் வாய்ப்பதத்த"(எ)என்றாற்

---

தமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று' எனத் தலைவன்பணிந்து கூறியது காண்க" என்பர்; தொல். கற்பி. சூ. கஎ. 'காமக்கடப்பின்'.

க. இந்நூற்பக்கம் ஙஅகூ: ங - ஆம் குறிப்புப்பார்க்க.

உ. (அ)பொறியலவன் (சிலப். எ: ஙக. முதற்பதிப்பு) என்பதற்கு, 'புள்ளிக் கள்வன்' என்பது மேற்கோள்; (ஆ) "புள்ளி ள்வன்" ஐங். உக, உஉ, உச.

ங. (அ) "களவன் மண்ணளைச் செறிய வகல ற், கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ" அகம். உஙுு: கக - கஉ. (ஆ) "அலவ னள்ளி குளிர்ஞெண் டார்மதி, களவ னென்றிவை கற்கடகப் பெயரே" சேந்தன் திவாகரம். (இ) "களவன் குளிர்ஞெண்டு கற்கடம்" உரிச் சொனிகண்டு. க0. என்பவற்றால் நண்டிற்குக் களவனென்னும் பெயரும் பயின்று வருதலறிக.

கலி. கஎ: கச - கடு; அடியும், எஉ: கக - கஉ; அடியும், குறிப்பும் பார்க்க.

"[...] கொதித்து மேற்றிசை யணங்கலத் தகப்பதன் கொடுமே,
லுதைத்த தாமெனச் சிவந்தது வெய்யவ னுடலம்" நைடத. மாலை. உக.

செய்ச்சேத கத்திற் குளிர்நடக் தாங்குச் செறிந்த வடு, மெய்ச்சே யிழைக்கொடி 'யன்னார் கடைத்தலை மேயினதால்." திருவெங்கைக் கோவை. நடஅக.

எ. "சிறுமில வூறிய நீர்வாய்ப் பத்தல்" என்பது பதிற். உஉ: கக. (பிரதிபேதம்) * சாலாதோ.

## ருஉஅ கலித்தொகை அஅ.

போல, சிறுதல் சிதறுதன்மேல் நின்றது. "வேட்கை மறுத்துக் கிளைந்தாங் *குரைத்தன், மரீஇய மருக்கி னுரித்தென மொழிப" (க)என்பதனுள், "ஒன் றெனமுடித்தலென்பதனுன் மரீஇயவாறு ஏனையவற்றிற்குங் கொள்க" என்ற லின், இழிந்தோர் கூற்றை உயர்ந்தோர் கூறுவனவும் அமைத்தாம். அதனுன் வள்ளுவிர் போழ்ந்தன முதலியன கொள்க.

கசு அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ வோராதி; தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு

எ - து: நீ கூறுகின்ற மெய்வேறுபாட்டையோ என்னிடத்துண்டாக ஓராதேகொள்; அங்ஙனம் ஓராதிருத்தல் நினக்குத்தக்கது; அதற்குக் காரண மென்னெனில் அத்தீது என்கண் இல்லாமையை யான் நினக்குத் தெளிவிக்க நீ காணாய்; யான் இனித்தெளிவிப்பேனென்றான். எ - று.

கஎ இனித் தேற்றேம்யாம்

எ - து: இக்கற்புக்காலத்து நீ கூறுகின்றதனைக்கொண்டு யாம் எக்நெஞ்சைத் தெளிவியேம்; அதற்குக்காரணங்கேள். எ - று.

கஅ தேர்மயங்கி வந்த தெரிகோதை (உ)யங்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
(ங.)†நீயுறும் (ச)‡பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு

க. தொல். பொருளி. சூ. கள. இச்சூத்திரத்தின் இவருரையிலும் இச்செய்திக்கு இக்குறிப்புக்களோடு "புள்ளிக் களவன்............கூறு" என்பது மேற்கோளாகக் காணப்படுகின்றது.

உ. "தார்கொண்டா டலைக்கோதை தடுமாறிப் பூண்டசின், வீரணி" (கலி. கக: கடு - கக.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ங. (அ) தலைவி தலைவன் முன் தன்னைப் புகழ்தல் தலைவன் பரத்தையிற் பிரிந்துவந்தவழித் தெளித்தற்கண் வருமென்பதற்கு, "நீயுநம் பொய்ச் ..............கூறு" என்பதை மேற்கோள் காட்டி, 'இதில் பெண்டிர் பல ருளராயினும் அவரெல்லார்மாட்டும் செல்லாது தன்மேல் வருமெனக் குறித்தாளாதலிற் றன்னைப்புகழ்ந்தாளாம்' என்பர். இளம். தொல். கற்பி. சூ. கக. 'தற்புகழ்' (ஆ) இப்பகுதியையே இவர் அழிவில்கூட்டத்திற்குரிய பொருள்களுள் தெய்வமஞ்சலென்பதற்கும் மேற்கோள்காட்டுவர்; தொல். மெய்ப். சூ. உச. 'தெய்வ' (இ) ஓசை வேற்றுமையால் தகரவுகரம்வியங்கோள்முற்றாயும் நிற்குமென்பதற்கும் இப்பகுதியே மேற்கோள்; தொல். வினை. சூ. க. கச:

ச. (அ)"என்னை யருளி யருண் முருகு சூள்சூளி, னின்னை யருளி லணங் கான்மெய் வேறின்னும், விறல்வெய்யோ னூர்மயில் வேனிழ லேக்கி, (பிரதிபேதம்) உணர்த்தன்மரீஇய. † ¶ கூறும், ‡ பொய்ச்சூ ழணங்காகும்.

மூன்றாவது மருதம் உக. ருஉக

எ-து: (க) நேரேறிவருகின்ற சிறப்பிலேமைக்கி நின்னீகைக் கருதாது வந்த தெரிந்த கோதையையுடைய அழகிய பரத்தையருடைய (உ)தாரை நின் தாராக நினைத்து அணிக்றுவந்த் தப்பிற்கு அஞ்சி யாம் ஊடிப் பொருத போரிலே கலங்கி இக்கற்புக்காலத்து நீ சூளுறும் மிகப்பொய்யாகிய *சூளுறவு வருத்தத்தைச் செய்யுமாயின், பின்னை அதுதான் எங்கண்மே லன்றி யார் மேல் வரும் ? அன்னனம் வாராமற் களவுகாலத்துச் சூளுறவுபோற் கெடுமோ? நீதானே கூறுவாயாகவென ஊடறீர்ந்து கூறினள். எ - று.

யார்மேல் வருமென ஒருசொல் வருவிக்க. இனி நீயுறுமென்க.

இஃது "இன்னாத்தொல்சூளெடுத்தற்கண்ணும்" (ங)என்பதனாற்கூறிற்று. என்றது, இன்னாக்குப் பயக்குஞ் சூளுறவினைத் தலைவன் சூளுறுவெனக் கூறுமிடத்துமென்றவாறு. தலைவன், "வந்த குற்றம் வழிகெட வொழுகி"(அ) களவிற் சூளுறவான் வந்த ஏதம் நீக்கி, இக்கற்புக்காலத்துக் கடவுளரையும்

குரவரையும் புதல்வனையுஞ் சூளுறுதலின் இன்னாதசூளென்றாள்; இது

---

யுறவு ராடிதொடினு மாங்கவை சூளேல், குறவன் மகளாணை கூறேலா கூறே, லைய சூளி னடிதொடு குன்றொடு, வையைக்குத் தக்க மணச் சீர்சூள் கூறல்" பரி: அ: சுடு - எக. (ஆ) "பொய்ச் சூளா னென்ப தறியேன்யா னென்றிரந்து, மெய்ச்சூ ளுறுவானை மெல்லியல் பொய்ச் சூளென், றெல்லுவ சொல்லா துரைவமுவச் சொல்ல" பரி. கஉ: கூங - கூரு.

க. "சேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின், றேர்பூண்ட நெடு நன் மான் றெண்மணிவத் தெடுப்புமே" கலி. எ0: கஅ - கக.

உ. தாரென்பது ஆடவர்மார்பின் மாலைக்குவருதலே பெருவழக்கு; மகளிர் மாலைக்கும் அருகி வழங்கும்.

ங. தொல். கற்பி. சூ. க. (அ) இச்சூத்திரப்பகுதியினுரையில் "வேற்றுமை

.........கூறு" என்ற பகுதிகளை மேற்கோள்காட்டி, தலைவி எம்மேலே இப்பொய்ச்சூளால் வருங்கேவரூமெனமறுத்தவா றுகாண்கவென்பர். நச். (ஆ) இச்சூத்திரத்து, "தன்வயிற் சிறப்பினு மவன்வயிற் பிரிப் பினு, மின்னாத்தொல்சூ ளெடுத்தற் கண்ணும்" எனப்பாடங்கொண்டு, தன் மாட்டு நின்ற மிகுதியானும் அவன் மாட்டு நின்ற வேறுபாட் டானும் இன்னாத பழைய சூளுறவைத் தலைவி யெடுத்தவழியும் கூற்று நிகழும்; தலைமகன் மாட்டு மிகுதியாதோ வெனின், 'மனைவி யுயர்வும் ..............உரிய' என்று ராகலின், அக்காலத்து மிகுதி யுளதாம்" என்று கூறி, "தேர்மயங்கி..............கூறு" என்பதை மேற்கோள் காட்டுவர் இளம்பூரணர்.

ச. தொல். கற். சூ. கூ.

(பிரதிபேதம்) *சூளுறவாயின வருத்தத்தைச்செய்யும் பின்னே.





ளவுபோலச் சூளுறுதலின், தொல்சூ ளாயிற்று; இதனுள் (க) இரத்தலும் தெளித்தலும் வந்தவா றுணர்க.

இதனால், தலைவிக்கு அணங்கால் அச்சம் பிறந்தது; தலைவற்குப் புணர் வாகிய உவகை பிறந்தது.

இஃது(உ)ஒரூஉவென ஒழியசையாகிய சொற்சீரடிவந்து ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வந்த கலிவெண்பா. "தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்"(ங)எனப் பாப் போக்கின்பின் *வைத்ததனற்'கடியர்தமக் கியார் சொல்லத் தக்கார் மாற்று' எனப் போக்குட்போல் காற்சீரான் இறும் பாட்டும் வந்தது. (உங)

(அகூ.) யாரிவ னெங்கூந்தல் கொள்வா னிதுவுமோ
ரூராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை
வாரனீ வந்தாங்கே மாறு;
ச என்னிவை, ஒருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று
போரெதிர்ந் தற்றாப் புலவனீ கூறினென்
னாருயிர் நிற்குமா றியாது;
எ ஏஎ, தெளிந்தேம்யாங் காயாதி யெல்லாம்வல் லெல்லா

எ - து: இவன் யார்? *எங் கூந்தலைத் தொடுதற்கு இவன் என்ன தொடர்புடையனென நெஞ்சொடு கூறி, பின்னர் இங்ஙனங் கூந்தலைப் பிடிக்கின்றஇதுவும் நீபாதுகாத்தலின்றிப்பாதுகாப்பாரைப்போலே†பண்ணிக் கொண்டு ஊரையாளுந் தன்மைக்குப் பொருந்தினதொரு கொடுமையை யுடைத்து; இதனை ஓர்ந்துபார்; இனி நீ எம் மனையிடத்தே வாராதேகொள்; வந்தாற்போலே மீண்டுபோவென்றாள். எ - று.

இது (க)வலிந்துபுக்கது கூறிற்று. வான், வினையெச்சம்.

ச ‡என்னிவை, (உ)ஒருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று
போரெதிர்ந் தற்றாப் ‖புலவனீ கூறினென்
னுருயிர் நிற்குமா றியாது

---

க. தலைவன் வலிந்து சென்றதனைத் தலைவி துனியால் மறுத்துக் கூறிய தற்கு, "யாரிவன்............மாறு" என்பது மேற்கோள்; தொல். கற். ரு. இ. நச்.

உ. (அ) "யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பி, னிருதலைப் புள்ளி னோருயி ரம்மே" (ஆ) "ஒரு குடர் படுதர வோரிரை துற்று, மிருதலைப் புள்ளி னோருயிர் போல" (இ) "உள்ளத் துவகை யொருதலைப் பட்ட விருதலைப்பைம், புள்ளொத் தினிய புதுமலர்ப் பாயற் புணர்ந்த வின்ப, வெள்ளக் கடலிடை வீழ்ந்திட னிர்துவர்" (ஈ) "ஒருயிர்த்தா, யிருதலைப் புள்ளி னியைந்தநும கேண்மையை யெண்ணி" (உ) "இருதலைப்புளி னுற்றவோருயி ரென்ன நும்முட னாகியே, மருவு தன்பமு மின்பமும்வழு வாதுதுய்த்திடு மாட்சியேன்" (ஊ) "இரு தலைசே ரொருபுள்ளி னேகவுயி ராய்நீவிர், மருவியிட றியாமே வாழு நாள்" என்பவைகளும்,(எ) "அந்தா மரையன்ன மேனின்னை யானகன்

றுற்றவனே" என்புழி, யானென்பதற்கு, 'இருதலைப் புள்ளி னோருயி ரேனைய யான்' என்று (கோவையார். கஉ.) பேராசிரியரும், (ஏ)"யார் பிரிய யார்வர யார்வினவ யார்செப்பு" என்புழி, 'இருதலைப் புள்ளி னோருயிரே நாதலாற் பிரிவும் வரவும் வினவும் செப்பும் நம்மிடை உளவாகா' என்றும். பரி. அ: எஉ. (ஐ) "ஊட லுணர்தல் புணர்த லிவைகாமம், கூடியார் பெற்றபயன்" என்னுங்குறளில், '(இம் மூன்று பயனும்) இருதலைப்புள்ளி னோருயிராய உழுவலன் புடைய எமக்குவேண்டா' என்றும் (குறள். ககOக) பரிமேலழகரும். (ஒ) "காதலானுட லுள்ளுயிர் கைவிடி, னேதமென்னுயி ரெய்தி யிறக்கும்" என்புழி, 'யாம் இருதலைப் புள்ளி னோருயிரேமாதலிற் காதலா னுயிர் நீங்கின் என்னுயிரும் ஏதமெய்தி நீங்கும்' என்று (சீவக. கஙகக.)

(பிரதிபேதம்) *இயனென் கூக்தலைத்தொடுதற்கு என்ன, † பணிக்கொண்டு, ‡ என்னலை, எனிலை, || புலவுரீ கூறியென்.



எ - து: அதுகேட்ட தலைவன், உடலும் உயிரும் ஒன்றாய்த் தலை இரண் டாகிய புள்ளினுடைய அவ்விரண்டு தலையில் ஒருதலை மற்றைத்தலையோடே *போர்செய்தலை மேற்கொண்ட தன்மைத்தாக, நீ இக்கொடுமைகளைக் கூறிப் புலத்தாற் பயனென்? அதனைக் கைவிட்டு இனி என்னுடைய அரிய உயிர் நிற்கும்வழி யாது? அதனைக் கூறுவாயென்றான். எ - று.

இஃது (க)ஆற்றாமைகூறிற்று. புலவல், புலத்தலெனப் படுத்தலோசையாற் பெயராய்நின்றது. இவை கூறிப் †புலவலென்னெனக. கூறு என வருவிக்க.

எ (உ)என. இகழ்ச்சிக்குறிப்பு.

நீங்கின காலமெல்லாம் மறந்து ஈண்டு வந்தால் இறந்து ‡படுவேனெனக் கூறலின், அதனை எவ்வென இழித்து நெஞ்சொடுகூறினள்.

தெளிந்தேம்யாம்; காயாதி; || யெல்லாப்வல் ÷ லெல்லா
(ந)பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் ×கொடுத் தாங்கு
வருந்தனின் வஞ்ச முரைத்து.

எ - து: எடா! எல்லாம் உணர்ந்திருக்கும் பெரிய காட்டிடத்திற் கொற்றவைக்கு அவள் அறியாதன சில உண்டாகப் பேய் கொடிசொன்னாற்போல, நின்பொய்களை எனக்குச் சொல்லி வருந்தாதேகொள்; யாம் முன்பே நின் வஞ்சனைகளைத் தெளிந்துவிட்டேமென்றாள். எ - று.

---

நச்சினார்க்கினியரும் எழுதியவுரைகளும் ஈண்டு அறிதற்பாலன. (ஒ) "எட்டுக் காலொடு மீண்டுவன் றலையொடு மெரிகால், வட்டக் கண்ணொடும் விளைப்பறை யெயிற்றொடுந் தழங்கிக். கிட்டிக் கொண்டவச் சிம்புளின் கிளர்ச்சியை யஞ்சி, விட்டுக் கண்ணுதற் குலைத்திட வோடினள் விமலை" (ஒள) "பிரிவரும் புள்ளி ஞெருமையி ஞெட்டி" என்பவற்றிற்குறித்த புள்ளும் இஃதென்பாரு முளர்.

௩. தலைவன் வலிந்து சென்றதனைத் தலைவி கூறிய வழி, "என்னிவை... ...........யாது" என்பது தலைவன் ஆற்றாமை மிகுதியாற் சென்றமை கூறியதற்கு மேற்கோள்; தொல். கற்பியல், சூ. ௫. நச்.

௨. "எள தெளிந்தேம்யாம்" என்பதை எ அசைநிலையாய் வருதற்கு மேற்கோள்காட்டினர், சேனாவரைச்; தொல். இடை. சூ. உ௩. 'எயுங் குரையும்'

௩. (அ) "அணங்கைய செல்விக் கணங்குநொடித் தாங்கு" பெரும்பாண். ௪௫௮. (ஆ) "அரற்றென்பது அழுகை யன்றிப் பலவுஞ்சொல்லித் தன் குறைகூறுதல்; அது காடுகெழுசெல்விக்குப் பேய்கூறும் அல்லல்போல வழக்கிலுள்ளோர் கூறுவன"; தொல். மெய்ப். சூ. ௧௨. பேர்.

(பிரதிபேதம்) * போர்த்தலையேய்கொண்ட, † புலவலெனைக் கூறியென, புலவலெனைக் கூறியென, ‡ புலவலெனைக்கூறலின், || அல்லாயதெல்லா, எல்லாவெல்லா, ÷ எடா, × கொடிக்காங்கு.



மருந்தின்று, (க)மன்னவன் சீறிற் றவறுண்டோ நீயுந்த வின்னதை நீதோ விலேன்

எ - து: அதுகேட்ட தலைவன், என்னைப் பேயென்று காயாதே *கொள்

எனக்குத் தவறுகளேற்றுதற்கு அலமாராதேகொள்; எனக் கூறி, † பின்னும் இனிய நகையினையுடையாய்! நீ என்மேல் ஏற்றிச்சொல்ல விரும்பிய தீதோ யான் உடையேனல்லேன்: அவன் கோபிக்கப்படுகின்றவன்மேல் ஒருதவறு உண்டோ? தவறில்லாயினுங் கோபிப்பனன்றே? அங்ஙனங்கோபிக்குமிடத்து அதற்கொரு (உ)பரிகாரமில்லை யென்றான். எ - று.

கஉ (ங)‡மாண மறந்துள்ளா நாணிலிக் கிப்போர்
புறஞ்சாய்ந்து ‖ காண்டைப்பாய் நெஞ்சே ÷ யுறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎ னெனநெருங்கிற் (ச)றப்பினே
னென்றடி சேர்தலு முண்டு

க. 'உற்றொரு தனியே தானே தன்கணே யுலக மெல்லாம், பெற்றவன் முனியப் புக்கா னவனிப் பிழைப்ப தெங்கே, குற்றமொன் றிலாதோர் மேலுங் கோள்வரக் குறுகு மென்று, மற்றைய பூத மெல்லாம் வருணனை வைத மாதோ" கம்ப. வருணனை வழிவேண்டு. சுங.

உ. மருந்து - பரிகாரம். புறம். ங: கஉ, சஉ: உஉ.

ங. (அ)"கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது, நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப், பகுதியி னீங்கிய தகுதிக் கண்ணும்" என்பதற்கு, "கொடியோ ரதுகொடுமைசுடாநின்றதெனப் புணர்ச்சியை யொடியாது புகழை விரும்பினோர் சொல்லோடே யொருப்பட்டு வேறு பகுதலி னீங்கிய தகுதிக் கண்ணும் என்றவாறு; அஃதாவது:

அக்காலத்துத் தோன்றுதல்; புகழை விரும்பினோர் சொல்லுஞ் சொல்லாவது காமம் விரும்பும் பரத்தையரைப் போலாது அறத்தை விரும்புதல்" என்று உரைவகுத்து, "மாண ........ உண்டு" என்பதை மேற்கோள் காட்டுவர் இளம்; தொல். கற்பி. சூ. கூ. (ஆ) இப்பகுதி, கற்பென்னுங் கைகோளுள் சிதைவு பிறர்க்கின்மை யென்னு மெய்ப்பாட்டிற்கும் மேற்கோள்; தொல். மெய்ப். சூ. கக. (இ) மாறுமை யென்பது மிகாமை யென்னும் பொருளிலும் வருமென்பதற்கு, "மாண மறந்துள்ளா நாணிலி" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உ௪. 'தெய்வம்' இளம்.

௪. புலவியுள் தலைவியுயர்வும் கிழவோன் பணிவும் உண்டென்பது தலைவி மனத்து நிகழ்தலுண் டென்பதற்கு, "தப்பினே னென்றடி சேர்தலு முண்டு" என்பது மேற்கோள்; தொல். பொருளி. சூ. ௩௩. ௧௪.

(பிரதிபேதம்) * கொள்வென் றெனக்கு, † பின்னு மின்னாய் நீ. ‡ மாணமறந்துள்ளாத. கண்டைப்பாய்நெஞ்சே, கண்டெய்ப்பாய் நெஞ்சே ÷ புரத்தலின.

## மூன்றாவது மருதம் உரு. ருக(கூ)

எ - து: அதுகேட்ட தலைவி, *நெஞ்சே! இவனைப்(க)பொய்சொல்லவிடேமென்று மாறுபட்டுக் கோபிக்கின், தப்பினேனென்று வணக்கஞ்செய்தலும் இவனுக்குப் பரிகாரமுண்டு; ஆதலான் நம்மை மறந்து ஒருகாலமும் நாம் மாட்சிமைப்பட்டிருக்க நினையாத நாணமில்லாதவனுக்கு இவ்வூடற்போரைத் தோற்று அதனாலுள்ள பயனைக் காண்பாயென்று ஊடறீர்ந்தாள்.

இதனால், தலைவிக்குத் † சூழ்ச்சியும் தலைவற்குப் புணர்வாகிய உவகையும் ‡பிறந்தன.

"ஒருசிறை நெஞ்சமொ டுசாவுங் || காலை, யுரிய தாகலு முண்டென மொழிப" (உ)என்பதனால், இவள் ÷ஆற்றுமென நெஞ்சுடன் உசாவினாள்.

இஃது ஐஞ்சீரடுக்கிவந்த (௩)கலிவெண்பா. (உ௪)

(கூO.) கண்டேனின் மாயங் களவாதல் பொய்க்கா
மண்டாத சொல்லித் தொடாஅ றெமை இயகின்
பெண்டி ருளர்மன்னோ வீங்கு;

௧. "இற்றதென் னுவி யென்னு வெரிமணி யிமைக்கும் பஞ்சிச், சிற்றடிப் போது புல்லித் திருமகன் கிடப்பச்சேர்ந்து, பொற்றதா மரையிற் போர்ந்து கருமுத்தம் பொழிப வேபோ, லுற்றமை கலந்து கண்கள் வெம்பனி யுகுத்தவன்றே" என்னும் (சீவக.உ௫0அ) செய்யுளுரையில், 'உற்று' என்பதற்கு, ஊடறீர்தலுற வென்று திரித்துப் பொருள் கொண்டு, "பொய்ப்ப விடேஎ மென .. .....முண்டு" என்றாராகலின்,

என இவ்வுரைக்கு மூலமான பகுதியை மேற்கோள் காட்டி, அடியில் வணங்கியபின்னும் ஊடறீரா தழுதாளென்றல் கற்பிற்குப் பொருந்தா தென்பர் நச்சினார்க்கினியர்.

௨. தொல். பொருளி. சூ. ௩0. இச்சூத்திரத்தின் இவருரையிலும் நெஞ்சுடன் உசாவுதற்கு, "மாண...... ..முண்டு" என்னும் பகுதி மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

௩. இளம்பூரணர் இச்செய்யுளை உறழ்கலிக்கு மேற்கோள்காட்டி, "'யாரிவ னெங்கூந்தல் ........மாறு' இது தலைமகள் கூற்று; 'என்னிவை...... ... .....யாது' இது தலைமகன் கூற்று; 'ஏஎ, தெளிந்தேம்......... .. உரைத்து' இது தலைவி கூற்று; 'மருந்தின்று.............விலேன்' இது தலைமகன் கூற்று; 'மாண மறந்துள்ளா ........ .....முண்டு' இது தலைவி கூற்று; "இப்பாட்டுச் சரிதக மின்றி வந்தவாறு கண்டு கொள்க. எற்றுக்கு? இறுதியின்கண்வந்ததுசரிதகமாகாதோவெனின், ஆகாது; சரிதகமாவது ஆதிப் பாட்டினும் இடை நிலைப்பாட்டினு முள்ள பொருளைத்தொகுத்துமுடிப்பது; இஃது அன்னதன்றென்க" என்பர்; தொல். செய். சூ. ௧௪அ. 'கூற்று மாற்றமும்' இதனுரை.

(பிரதிபேதம்) * விடேனென்று, † குட்டி, ‡ பிறந்தது, || காமேயுறுனியது, + ஆம்முறுவலை.

கண்டது, நோயும் வடுவுங் கரந்து மகிழ்செருக்கிப்
பாடு பெயனின்ற பானா ளிரவிற்
றொடிபொலி தோளு முலையுங் கதுப்பும்
வடிவார் குழையு மிழையும் பொறையா
வொடிவது போலு நுசுப்போ டடிதளரா
வாராக் கவவி னொருத்திவந் தல்கற்றன்
சீரார் ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின்
போரார் கதவ மிதித்த தமையுமோ
வாயிழை யார்க்கு மொலிகேளா வவ்வெதிர்
தாழா தெழுந்துநீ சென்ற தமையுமோ
மாருள் சினைஇ யவளாங்கேநின் மார்பி
னறிணர்ப் பைந்தார் பரிந்த தமையுமோ
தேறிநீ தீயே னலேனென்று மற்றவள்
சீறடி தோயா விறுத்த தமையுமோ
கூறினிக் காயேமோ யாம்;
தேறிற், பிறவுந் தவறிலேன் யான்
அல்கற், கனவுக்கொ ளிகண் டது;
கனைபெயற், றண்டுளி வீசும் பொழிநிற் குறிவந்தாட்
கண்ட கனவெனக் காணாது மாறுற்றுப்
பண்டைய வல்லநின் பொய்ச்சூ ளினக்கெல்லா
நின்றாய்நின் புக்கில் பல;
மென்றோளாய், நல்குநின் னல்லெழி லுண்கு;
ஏடா, குறையுற்று நீயெம் முரையனின் றீமை
பொறையாற்றே மென்றல் பெறுதுமோ யாழ
நிறையாற்றா நெஞ்சுடை யேம்.

இது "புல்லுதன்மயக்தும் புலவிக்கண்ணும்" (க)என்பதனுல்தலைவன் புலப்படப்பாத்தையரிடத்து ஒழகாது மறைந்தொழுகிவந்து*நின்றவனுடன்

உறழ்தற்பொருளாலும் இச்செய்யுளைக் கலிவெண்பா என்று கொள்ளாது உறழ்கலியென்று கொள்ளுதலே பொருத்த முடையது.

க. தொல். கற்பியல். சூ. க௦. இச்சூத்திரப்பகுதிக்கு இவ்வுரைகாரர் அங்கு, "இரட்டைமொழிதலென்பதனுல், பரத்தையரிடத்துப் புலப்பட (பிரதிபேதம்) * நின்றிவனுடன்.

## மூன்ருவது மருதம் உரு. ௫௬எ

காமக்கிழத்தி வடிச்சொல்லித் தலைமகன் ஆற்றமைகண்டு தன் ஆற்றமையுக்சொல்லி ஊடறீர்ந்தது.

இதன் பொருள்

கண்டேனின் மாயங் களவாதல்;பொய்ந்நகா

(க)*மண்டாத சொல்லித் †தொடாஅ றெமஇயசின்

பெண்டிருளர்மன்னோ வி'ங்கு

எ - து: நின் ‡பரத்தைமை இக்காலத்துக் களவொழுக்கத்தேயாதலைக் கண்டேன்; ஆதலாற் பொய்யாகவே நக்கு, யான் விரும்பாதனவற்றைக் கூறி என்னைத் தீண்டாதேகொள்; நீதீண்டுதற்கு இவ்விடத்து நினக்குப் பெண்டிராயிருப்பார் உளரோ? இல்லையே என்றுள். எ - று.

மன்னும் (உ)ஓவும் அசை.

௪ ஒண்டொடிநீ, கண்ட தெவனோ தவறு

எ - து: அதுகேட்ட தலைவன், ஒள்ளிய தொடியினையுடையாய்! நீ என்னுடைய தவருகக் கண்டது எவனென்றுன். எ - று.

௫ (௩)கண்டறு, (௪)தோயும் வடிவுங் கரந்து மகிழ்செருக்கிப்

ஒழுகாது அவர்புல்லுதலே மறைத்தொழுகுதலாற் காமக்கிழத்தியர்க்குப் பிறக்கும் புலவிக்கண்ணும் அவர்க்குக் கூற்றுநிகழுமெனவும் பொருள் கூறுக" என்று பின்னதாக ஒரு விசேட வுரை யெழுதி, "உதாரணம், 'கண்டேனின் மாயங் களவாதல் பொய்க்கா' என்னும் மருதக் கலியுட் காண்க" என்பர்.

க. "மண்டாத கூறி" கலி. ௯௦அ: உக.

உ. ஒவும் அசையென்பதை நோக்க, உளரென்பதற்கே ஒசை வேற்றுமை செய்து உளரோவென்று பொருள்கொண்டாரென்று தோற்றுகிறது.

ந. "தான் முன் கண்ட தவற்றின னாதலிற், சென்ற வாயிற் சொன்றல னூடி" பெருங். (க) கஎ: ௩கஎ - ககஅ.

ச. "முதலொடு..............ஐந்நிலம் பெறுமே" என்னும் சூத்திரத்திற்கு, 'ஐந்நிலம்: களவும் உடன்போக்கும் இற்கிழத்தியும் காமக்கிழத்தியும் காதற்பரத்தையு மெனப்பட்ட ஐவகைக் கூட்டமென்றும், ஐந்நில மென்பதனை முல்லை குறிஞ்சி முதலாயின வென்று கொளாரெனின், முதலொடு புணர்ந்தவென்பதனுன் *நிலம் பெற மாதலான், நில மென்பதற்கு வேறுபொருளுரைத்தல்வேண்டுமென்றும், இற்கிழத்தி காமக்கிழத்தி யென்பார் உள்ளப்புணர்ச்சியானுதல் மெய்யுறு புணர்ச்சி யானுதல் வரையப் பட்டா ராக, பொருட்பெண்டி ராகிய காதற்

(பிரதிபேதம்) * வண்டாத. † தொடரதற்றெழுமிய, ‡ பரத்தமை.





பாடு பெயனின்ற (க) பானு ளிரவிற்
றொடிபொலி தோளு முலையுங் கதுப்பும்
வடிவார் குழையு மிழையும் பொறையா
வொடிவது போலு நுசுப்போ*டடிதளரா

௪0 (உ)வாராக் †கவவி னெருத்திவர் தல்கற்றன்
சீரார் (ந)ஞெகிழுஞ் சிலம்பச் சிவந்தடியின்
(ச)‡போரார் கதவ மிதித்த தமையுமோ
வாயிழை ||யார்க்கு மொலிகேளா (ரு)வவ்வெதிர்
தாழா தெழுந்துநீ சென்ற தமையுமோ

---

பரத்தையர்கூட்டம், ஒத்தகாம மாகியவாறு என்னையெனின், அவரும் பொருளானுதல் அச்சத்தானுதலன்றி, அன்பினுற்கூடுதலின் அதுவும் கந்திருவத் தின்பாற்படும்; அவ்வாறன்றி அவரைப் பிறிது நெறியாற் கூடுவனாயின், இவன்மாட்டுத்தலைமையின்றாம்' என்று உரைவகுத்து, "நேரயும் வடிவுக்......இறந்த தமையுமோ" என்பதனைமேற்கோள் காட்டி, 'பரத்தையர் அன்பினற் * கூடியவாறும், (* கூறியவாறும் என்றும் பிரதிபேதம்) இவர் இற்கிழத்தியும் காமக்கிழத்தியும் அன்மையும் அறிந்துகொள்க' என்பர். இளம்பூரணர். தொல். களவி. ௬.௧௫.

௧. "பாணு, னிரவினிற் றூது கொண்டோன்" திருவிளை. பாயிரம். ௨௦.

௨. "அரிமத ருண்கண்ணு ராராக் கவவின்" கலி. ௬௧: ௧௪.

௩. "அஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து, துஞ்சூர் யாமத்து முயங்கினன் பெயர்வோள்" (அகம். ௪0: ௧௧.) என நாணு மகளிர்க்குக் கூறுதல் காண்க.

௪. "போர்க்கதவின்" பட். ௪௦. சிலப். ௧௦: ௭. உரைபார்க்க; இஃது இரட்டைக்கதவு.

ல. ||(அ) 'வடவேங்கடந் தென்குமரி யாயிடை' (தொல். சிறப்புப்) என்புழி, ஆயிடையென்பதற்கு, அவற்றை எல்லையாகவுடைய நிலத்தென்று இளம்பூரணரும், அதற்கு, அவ்விரண்டெல்லைக்குளென்றும், (ஆ) "யார், மாகமே நோக்கி மடவாளே யவ்விருந்தா ளாகும்" (சீவக. ௧௦௩௮) என்புழி, அவ்விருந்தாளென்பதற்கு, அவ்விடத்திருந்தாளென்றும் இவ்வுரைகாரரும் பொருளெழுதியிருத்தலும். இவ்வாறே இகரச்சுட்டையும் (இ) "குகனென்பான் இந்நின்ற குரிசிலென்றான்" (ஈ) "இந்நின்ற, தாணிலுமுளன்" (உ) "இம்முதலோர்" (ஊ) "மறக்கண் வெஞ்சின மல்லென விந்நின்ற வயவர்" (கம்ப. குகப். ௩௪. இரணியன் வதை. ௧௨௪. நாகபாச. உ௩௩. படைக்காட்சி. உக.) எனவும்,

(பிரதிபேதம்) * அடித்தனரா. † கவினிறைபொருந்தி. ‡ போராகதவம். || குக்குமொளி.



௧௫ மாறுள் சினைஇ யவளாங்கே நின்மார்பி
னறிணர்ப் பைந்தார் பரிந்த தமையுமோ
தேறிநீ தீயே னலேனென்று மற்றவள்
சிறடி தோயா விறுத்த தமையுமோ
கூறினிக் காயேமோ யாம்

எ - து: யான்கண்டது, ஒருத்தி தானுற்ற காமநோயையும் அதனாற் பிறந்த அலரையும் பிறர் அறியாமல் மறைத்து மகிழ்ச்சியின்றியிருக்கவும் மகிழ்ச்சியுண்டாக்கிச் செருக்கிச் சொரிகின்ற மழை மாறாமல் நின்ற ஒரு நாளிற் பாதியாகிய இராப்பொழுதிலே தொடி பொலிவுபெற்ற தோளும் முலையுங்கூந்தலும்(க) * மகரத்தின்வடிவுநிறைந்த குழையும் ஏனை அணிகலன்களும் தனக்குச்சுமையாக முறிவதொரு(உ)வஞ்சிக்கொம்புபோலும்இடையைத் தாங்கிக்கொண்டு அமைதி பிறவாத மயக்கத்தாலே அடிதளர்ந்து வந்து தங்கு தலையுடைய தன் தலைமைநிறைந்த சிலம்பொலிப்ப, கோபித்து நின்னுடைய பலகை பொருத நிறைந்த கதவத்தைப் பாய்ந்தது; அது தவறுதற்கு அமையுமோ? அந்த ஆராய்ந்த இழையினையுடையவள் ஆரவாரிக்கும் ஆரவாரத்தைக் கேட்டு அவ்வாரவாரத்திற்கெதிரே நீ நீட்டியாது எழுந்திருந்து போனது; அது தவறுதற்கு அமையுமோ? அவள் மாறுனாய்ச் சினந்து அவ்விடத்தே நின் மார்பிற் கிடந்த நாறுகின்ற இதழையுடைய செவ்விமாலையை அறுத்தது; அது தவறுதற்கு அமையுமோ? பின்னை அவளுடைய சிறிய அடியைச் செறித்து யான் நிறைமையையுடையேனல்லேன்; அதனை நீ தெளியென்று கூறி அவளிடத்தே தங்கினது; அது தவறுதற்கு அமையுமோ? இனிச்சொல்லு; யாம் நின்னைக் கோபிப்பேமோ? என்றாள். எ - று.

(க)பாடுபெயல், பாடெனவிகாரம். நாளிற்பால், பாலுளென மருஉ. நசைப் போடென உருபுமயக்கம். கண்டது, மிதித்தது; அது அமையுமோ? கண்டது, சென்றது; அது அமையுமோ? கண்டது, பரிந்தது; அது அமையுமோ? கண்டது, இறுத்தது; அது அமையுமோ? என முடிக்க.

(எ) "பரிதியின் விருந்த தேவே" (எ)"இவ்விருந்த வேந்தன்"(ஐ) "இவ் விருந்த மீனி" (நைடத. சுயம்வர. கஉச, கஙஎ, கஙஅ) எனவும் பெருநூலாசிரியர்கள் அமைத்திருத்தலும் இங்கே அறிதற்பாலன; (ஒ) அகரச்சுட்டு, தனித்துநின்று பொருளுணர்த்தலாற்றாதென்று சிவஞானமுனிவர் தொல். பாயிரவிருத்தியில் கூறியிருக்கிறார்.

க. "காதிசைய, மான்மகர வார்குழையாய்" ஏலாதி. ௬௬.

உ. வஞ்சியென்பது, ஒரு கொடிக்கேயன்றி ஒருமரத்திற்கும்பெயர்; இதன் கொம்பும் வஞ்சிக்கொடியும் மகளிரிடைக்கு உவமை கூறப்படும்.

ங. பார்த்தபிரதிகளிலெல்லாம் இவ்வாறேகாணப்படுகின்றது; 'பகுபெயல், பாகுபெயலென விகாரம்' என்று இருக்கவேண்டியதுபோலும்.

(பிரதிபேதம்) * ஆகத்தின், † மகரக்குழையும்.



உ0 தேறிற், பிறவுந் தவறிலேன் யான்
அல்கற், (க)*கனவுக்கொ ளிகண் டது

எ - து: அதுகேட்ட தலைவன் யான் தேற்றத் தெளிவையாயின் இக் கேட்பதோர் தவறு யான் உடையே † னல்லேன்; (உ) இராக்காலத்து நீ கண்டதுதான் கனவுபோல இருந்ததென்றான். எ - று.

உஉ (ங)கண்பெயற், றண்டுளி வீசும் பொழுதிற் குறிவந்தாட்
கண்ட கனவெனக் காணாது மாறுற்றுப்

பண்டைய வல்லநின் பொய்ச்சூ ‡ ளினக்கெல்லா
நின்றாய்நின்(ச)புக்கில் பல

க. முற்றியலுகரம் ஒற்றடுத்து உரியசையானதற்கு, "கனவுக்கொ ளிகண் டது" என்பதை மேற்கோள் காட்டி, இங்ஙனம் வருமொழியொற்று மிகினும் நிரையாமெனவும் நிலைமொழியொற்று நின்றவழிப் புளிமாவா மெனவும் விளக்குவர், பேராசிரியர்; தொல். செய்யுளி. ரு. ௪0.

உ. "இரவு கண்டே னொருகன வதனின், புதுமை கேட்பிற் புரைதீர்ந்த தெனச், செவ்வாய் வெண்ணகைத் திருந்திழை கண்ட, தெவ்வா றேவென வியம்பினன் கேட்பநின், மனத்துறைப் பெயரா வெனைக் கரத் தெழுந்தனை, தனித்துப் போயோர் தடந்தோண் மடந்தையோ, டாடரங் கேறி யணைந்திருந் தவளோ, டீடியு முணர்ந்துங் கூடிவிளை யாடியுந், தேறினி ராகித் தெளிவுட னிருவிரு, மாறுமா றெழுதிய வாசகங் கூறி, மாதரு நீயு மயலுறைத் தெழுந்து, போதரும் போதையின் மோதிர மருளிப், பெயர்ந்தனை நயனமு மலர்ந்தன வாங்கே, புலர்ந்தது கங்குலும் புரவல வாழ்கென, வண்டலர் கோதாய் மனத்தினு மில்லது, கண்டனை யாதலிற் கலங்கினை மற்றுநின், னுள்ளத் தன்னே புறைகுவே றாகவுங், கள்வ னென்று கருதினை யன்றியு, நெறியுடை மகளிர் நினைப்பவுங் காண்பவு, மிவையிவைபோலுங் கணவர்தந் திறத்தெனக், கனவிற் கண்டது பிறரொடு பேசக், குறைபோ மென்றலிற் கூறினே னன்றியும், யாவை காணினுங் காலவற் கன்றிப், பேசவ தெவரொடு பெரியோ யென்று, மானுர் நோக்கி மனத்தொடு நகையா, வானு நினைவுட னகநர வேந்தன், றேவியை யையந்தெளித்தனமொரு வகை, யாரு மில்லென வினிதிருந் தவப்ப" பெருங். (௩) ௧௯: ௧௮௧ - ௨௧௧.

௩. இந்நூற்பக்கம் ௨௭௩: ௩ - ஆம் குறிப்புப் பார்க்க.

௪. "புக்கில்" தொல். ௩௪௦.

(பிரதிபேதம்) * கனவிற்சொல், களவுசொல். † அல்லேன்கண்டதுதான் இராக்காலத்துக் கனவுபோலே. ‡ நினக்கேடா.



எ - து: அதுகேட்ட தலைவி, செறித்த மழையாகிய தண்ணிய துளியைப் பெய்கின்ற இராக்காலத்தே ஒருவன் செய்த குறியிடத்தே வந்தாளொருத்தியைநீ(க)கண்டதனுல் உனக்குநிகழ்ந்த கனவு இதுவெனச்சொல்லி, நீசெய்த தனை நினையாதே அச்செய்தியை மாறுதலுற்று நின்றாய்; அங்ஙனம் நின்று பின்னர் நீ குளூற்ற நின்னுடைய பொய்யாகிய குளூறவு *யாம் நன்மையாகக் கண்டமையின் நினக்குப் பண்டுபோற் பயன்றருந் தன்மையையுடைய வல்ல; ஆதலால், எடா! நினக்குப் புகும் இல்லுப்பலவால்; ஆண்டே செல் லென்றாள். எ - று.

கண்ட கனவு, உண்ட எச்சில்போல †நின்றது.

உசு மென்றோளாய், நல்குநின் னல்லெழி லாங்கு

எ - து: அதுகேட்ட தலைவன், மெல்லிய தோளினையுடையாய்! இனி யான் செய்த குறையைக் கைவிட்டு நின்னுடைய நன்றாகிய அழகை எனக்கு அருள்; அதனை யான் நுகர்வேனென்றான். எ - று.

உஎ ஏடா, குறையுற்று நீயெம் முரையனின் றீமை
(உ)பொறையாற்றே மென்றல் பெறுதுமோ யாழ
நிறையாற்றா நெஞ்சுடை யேம்.

எ-து: எம் வயத்ததாக நிறுத்தமாட்டாத நெஞ்சையுடைய ‡யாம் நினது தீமையைப் பொறுத்தலை நடத்த மாட்டேமென்று கருதுதலைப் பெறவேமோ? ||பெறேம்; ஆதலால், இக்காரியத்திலே ...ற்று எமக்குச் சில குறை கூறாதே கொள்ளென்று ...ரிரந்தாள். எ - று.

"பிறவும்" (ங)என்றதனால், சேரிப்பரத்தையாற் புலந்துகூறினள். இதனால், தலைவிக்கும் தலைவற்கும் புணர்வாகிய உவகை பிறந்தது.

இஃது ஒண்டொடி நீயெனவும் தேறினெனவும் ÷ அல்கலெனவும் ஒழியசையும் பிறவுந் தவறிலேன்யானெனவும் கனவுக்கொளிகண்ட தெனவும்

---

க. "நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற், கனவிற் கண்டு" (கலி. சக: ங - ச.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. "எண்ணியவையெல்லாந், துறைபோதலொல்லுமோ தூவாகாதாங்கே, யறைபோகு நெஞ்சுடையார்க்கு" (கலி. கஎ: கக - உக) என்பதும் இந்நூற்பக்கம் சOஅ: ங-ஆம் குறிப்பும் பார்க்க.

ங. தொல். கற்பி. சூ. கO. இச்சூத்திரப் பகுதியின் இவருரையிலும் "ஆராக் கவலின்.........இறுத்த தமையுமோ" என்னும் இப்பாட்டின் பகுதி, காமக்கிழத்தியர் சேரிப்பரத்தையாற் புலந்து தலைவனை கூறியதற்கு மேற்கோள்.

(பிரதிபேதம்) * யாருமன்மையாக, காதுமன்மையாக. † னின்றன. ‡ யானினது நிலைமைய, || பெறேமேயாதலால், ÷ அச்சலெளவும் விருவும் தவறிலேன்.



வழியசையும் புணர்த்து, கண்ட *தெவனோதவறென மூற்றடியின்றிக் குறைவு சீர்த்தாகிய சொற்சீரடியும்பெற்று, கலிவெண்பாவின் வேறுபட்டு, † "பாகிலவகையே கொச்சகக் கலியென, நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே" (க)என்னும் விதியாற் கொச்சகக்கலியாயிற்று. (உ௫)

(கூக.) அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்
புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த
தெரிமலர்க் கண்ணியுந் தாரு நயந்தார்
பொருமுரண் சீறச் சிதைந்து நெருநையி
னின்றுநன் றென்னை யணி;

சு அணைமென்றோளாய், செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவ
னையத்தா லென்னைக் கதியாதி தீநின்மை
தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு;
கூ பற்றது, அறிவல்யா னின்கு ளனைத்தாக நல்லார்
செறிதொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்
கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின்
முருந் ததர்பட்ட சாந்தமுஞ் சேரி
யரிமத ருண்கண்ணா ராராக் கவவிற்
பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்
செருவொழிந்தேன் சென்றீ யினி;
கசு தெரியிழாய், தேற்றாய் சிவந்தனை காண்பாய்நீ தீதின்மை
யாற்றி னிறப்பல் பணிந்து;
கஅ அன்னதே லாற்றல்காண்;
வேறுபட் டாங்கே கலுழ்தி யகப்படின்
மாறுபட் டாங்கே மயங்குதி யாதொன்றும்

கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ
மாணு செயினு மறுத்தாங்கே நின்வயிற்
காணி னெகிழுமென் னெஞ்சாயி னென்னுற்றாய்
பேணாய்நீ பெட்பச் செயல்.

இதுவும் அது.

இதன் பொருள்.

---

க. தொல். செய். சூ. கசுஉ.

(பிரதிபேதம்) * சவனென்றவறேனமுட்டடி. † பாசிலைகையே.

## மூன்றாவது மருதம் உகூ. ருசாக

அரிநீ ரவிழ்நீல மல்லி யனிச்சம்
*புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த
தெரிமலர்க் கண்ணியுந் தாரு நயந்தார்
பொருமுரண் சீறச் †சிதைந்து நெருநையி
னின்றுநன் றென்னை யணி

எ-து: ‡நரம்பூவோடே அழகிய நீரில் அவிழ்ந்த அல்லியையுடைய நீலப்பூ அனிச்சப்பூ முறுக்கு நெகிழ்ந்த முல்லைப்பூப் ‖ பொருந்தின (க) மார்பின்மாலையும் ஆராய்ந்த நறியமலராற்செய்த கண்ணியும் விரும்பின பரத்தையர் ஊடுகின்ற மாறுபாட்டாலே கோபித்துப் பற்ற நிறங்கெட்டு என்னையுடைய ஒப்பனை நேற்றையில் இன்றுநன்றாயிருந்ததென்றாள். ÷எ-று.

கண்ணி, வகைமாலை.

"அன்னை யென்னை யென்றலு முளவே, தொன்னெறி முறைமை சொல்லினுமெழுத்தினுந், தோன்றா ×மரபின வென்மனார் புலவர்"(உ)என்பதனால், தலைவனை என்னை யென்றாள்.

சு (ரு) அணைமென்றோளாய், செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவ
னையத்தா லென்னைக் கதியாதி தீதின்மை
தெய்வத்தாற் கண்டீ தெளிக்க

எ - து: அதுகேட்ட தலைவன், அணைபோலு மெல்லிதாய தோளினை யுடையாய்! இவன் † நீங்கிற் பரத்தையரிடத்தல்லது நீங்கானென்று உட்கொண்டு அவ்வையத்தாலே யான் செய்யாதகாரியங்களைச்சொல்லி இவ்விடத்தே நினக்கின்ற குறை யாதுதான்? என்னிடத்துத் தீதில்லாமையைத் தெய்வத்தாலே நினக்குத் தெளிவிப்பேன்; அதனைக் காண்பாய்; இனி என்னைக் கோபியாதே கொள்ளென்றான். எ - று.

க. மற்றது, அறியல்யா னின்கு ளனைத்தாக நல்லார்
செறி(ச)தொடி யுற்ற வடுவுங் குறிபொய்த்தார்

---

க. "தாருந் தானையும் பற்றி" அகம். உஎக: க.

உ. தோல். பொருளி. ரு. ௯உ.

௩. இந்நூற்பக்கம், ௩௪௩: ச - ஆம் குறிப்பும் ௪00: ச - ஆம் குறிப்பும் பார்க்க.

ச. தொடியால் வடு வுறுத்தலை, கலி. எக. கக-ம் அடியாலும் அதன்குறிப்பாலும் உகிரால் வடு வுறுத்தலை, கலி. எஉ: கக-ம் அடியாலும் அதன் குறிப்பாலும் அறிக.

(பிரதிபேதம்) * புரிநெகிழ்ந்தமுல்லை, † நிறைந்து. ‡ நாம்பூவோடே அழகினையுடைய நீரிலே அலர்ந்த. || பொருந்தினதங்கமாலையும் ஆராய்ந்த..................கண்ணி, நிற வகைமாலை கண்ணியும் மார்பின் மாலையும் நின்னை விரும்பின பரத்தையர், † எ- று. அன்னையென்னை. × மரபினென்மனூர். † நீங்கிப்பரத்தையரிடத்து.



கூருகிர் சாடிய மார்புங் (க)குழைந்தநின்
ருருந் (உ)ததர்பட்ட சாந்தமுஞ் சேரி
யரிமத ருண்கண்ணு (௩)ராராக் கவவிற்
பரிசழிந் தியாழநின் மேனிகண் டியானுஞ்
செருவொழிந்தேன் சென்றீ யினி

எ-து: அதுகேட்ட தலைவி, *யான் நீ நீங்கியபின்னர் நீசெய்த காரியமும் அறிவேன்; நின்சூளுறவு பொய்யாதலும் அறிவேன்; புதிய பரத்தையருடைய செறித்த தொடியழுத்தின வடுவையும் அவர் †முயக்கத்தாற் குழைந்த நின் தாரையும் நீ குறியாத் பொய்க்கப்பட்ட பரத்தையர் கோபித்துக் கூரிய உகிரால் தாம் விரும்பியாங்கு வடுச்செய்த மார்பையும் சேரியிலிருந்த செவ்வரியினையுஞ் செருக்கையுமுடைய மையுண் கண்ணினையுடையாருடைய நிறையாதமுயக்கத்தாலே பூசின பாடழிந்த சிதறுதல்பட்ட சந்தனத்தையுமுடைய நின்வடிவைக் கண்டு இதற்குரிய யானும் நின்னோடு ஊடுதலைத் தவிர்ந்தேன்; இனி அப்பரத்தையரிடத்தே செல்வாயென்றாள். எ - று.

கஎ தெரியிழாய், தேற்றாய் சிவந்தனை காண்பாய்நீ தீதின்மை
யாற்றி னிறுப்பல் பணிந்து

எ - து: அதுகேட்ட தலைவன் தெரிந்த இழையினையுடையாய்! யான் தெளிவித்ததனைக்கொண்டு நின்னெஞ்சைத் தெளிவியாயாய்க் கோபித்தாய்; யான் தீயேனல்லாமையை நின்னைத்தாழ்ந்து நெறியாலே நின்னெஞ்சிடத்தே நிறுத்துவேன்; அதனைக் காண்பாயாகவென்றான். எ - று.

கஅ ‡அன்னதே லாற்றல்காண்
வேறுபட் டாங்கே கலுழ்தி யகப்படின்
மாறுபட் டாங்கே ||மயங்குதி யாதொன்றுங்
கூறி யுணர்த்தலும் வேண்டாது மற்றுநீ
மாணா செயினு மறுத்தாங்கே நின்வயிற்
காணி னெகிழுமென் னெஞ்சாயி ÷னென்னாற்றாய்
(ச பேணாய்நீ பெட்பச் செயல்

---

க. கலி. கஅ: கச; ககஉ: உங. புறம். எங: கச.

உ. (அ) "ஊன்றதர்ந் திழிந்த வுதிர வெம்புனல்" (ஆ) "மிதிதோற் கொல்லன் பொதியுலைச் செந்தீத், ததர்வனபோலச் சிதர்வன சிந்தி" (இ) "ததரிதழ் ஞாழல்" பெருங்.(க) நிஉ: ககஎ, நிஅ: க - கO. (ங) க: உஎ.

ங. "ஆராக் கவவி னொருத்தி" கலி. கO. கO.

ச. (அ) "பேணா பெட்ப ரூணர்மன்னோ மற்றவர்க், காணா தமைவில கண்" (ஆ) "பேணா பெட்பவே செய்யினுங் கொண்கனைக், காணா தமையலகண்" குறள். ககஎஅ; கஉஅரு.

(பிரதிபேதம்) * யானீங்கியபின்னர் நீ செய்தகாரியமுமறியேனின். †முயக்கத்தாற்குழைந்த

எ - து: அதுகேட்ட தலைவி, இவன் கருத்து இன்னும் நீதின்மையே யென்பது நெஞ்சிடத்தே நிறுத்துதலேயாயின், இவன் வலியை நெஞ்சே காண்பாயாகவென நெஞ்சொடு கூறி, அவனைநோக்கி, யான் நின்னோடு வேறுபட்ட * அப்பொழுதே நெஞ்சு கலங்குவை; யான்வேறுபடாமல் நின்கையிலே அகப்படுவேனாயின், அக்கலக்கத்தை மாறுபட்டபொழுதே என்னை இகழ்ந்து பரத்தையர்பாற்சேறற்கு மனம் மயங்குவை; ஆதலால், யாதொருவார்த்தையையுஞ் சொல்லி என்னை ஊடலுணர்த்துதலும் உனக்கு வேண்டாததொரு காரியம்; † இக்குறையையொழிய நீ வேறு மாட்சிமைப்படாத குறைகளைச் ‡செய்யினும் அவற்றைத்தள்ளி, நின்னைக்காணின், அப்பொழுதே என்னெஞ்சு நின்னிடத்தே நெகிழ்ந்துவருமாயின், என்னெஞ்சின்றன்மையை உட்கொள்ளாயாய் நீ யான் விரும்பும்படி என்னெஞ்சைத் தெளிவிக்குஞ் செயல்களை என்ன காரியத்திற்குச் செய்தாயென ஊடநீர்க்தான். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியாகிய உவகை பிறந்தது.

இஃது ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வந்து போக்கின்றி உறழ்கலி. "கூற்று மாற்றமு மிடையிடை மிடைந்தும், ||போக்கின்றாக லுறழ் கலிக் கியல்பே" (க)என்பது விதி. (உக)

(கூஉ.) புனவளர் பூங்கொடி யன்னாய் கழியக்
கனவெனப் பட்டதோர் காரிகை நீர்த்தே
முயங்கிய நல்லார் முலையிடை மூழ்கி
மயங்கிமற் றாண்டாண்டுச் சேறலுஞ் செல்லா

௧. தொல். செய். சூ. ௧௫௧. இச்சூத்திரத்தினுரையில் உறழ்கலிக்கு இச் செய்யுளைமேற்கோள்காட்டி, "'காணினெனிழும்.........செயல்' என்பது வெள்ளைச்சுரிதகமாகாதோ வெனின், ஆகாதன்றே? 'போக்கியல் வகையே வைப்பெனப் படும்' என்றஇலக்கணத்தான் முற்கூறியவற்றை யெல்லாந் தொகுத்து இதன்கண் வைத்தில்லாமையி னென்பது; அல்லதூஉம் அவ்வாறு முடிதலே யன்றி இன்னும் ஓர் கொச்சகம் பெய்து சொல்லி உறழ்ந்த வழியும் அஃதேற் பதாகலான், அஃது ஒருதலையாக அமைந்ததெனப்படாது;என்னை? 'அன்னதேயாயினுமாகமற்றாயிழாய், நின்னகை புண்க முயங்குவாய் நின்னெஞ்ச, மென்னொடு நின்ற தெனின்' என்றாற்போலப் பின்னுமொன்று தலைமகன் உரைத்தற்கு இடம் பட்டு நின்றமையின், இது போக்கியல் வகைத்தாயெனவைப் பெனப்படா தென்க" என்பர் பேராசிரியர். நச்சினார்க்கினியரும் இதனையே தழுவிச் சுருக்கி யெழுதுவர்.

(பிரதிபேதம்) * அப்பொழுதே நின்னெஞ்சு கலங்குவையாயின் வேறு, † இக்குறைகளை ‡ நீசெய்யினும். || போக்கின் முதல முறழ்.





௫ துயங்கி யிருந்தார்க் குயர்ந்த பொருளு
மரிதி னறஞ்செய்யா வான்றோ ருலகு
முரிதி னொருதலை யெய்தலும் வீழ்வார்ப்
பிரிதலு மாங்கே புணர்தலுந் தம்மிற்
றருத றகையாதான் மற்று;
௧௦ நனவினாற் போலு நறுநுதா லல்கற்
கனவினாற் சென்றேன் கலிகெழு கூடல்
வரையுறழ் நீண்மதில் வாய்சூழ்ந்த வையைக்
கரையணி காவி னகத்து;
௧௪. உரையினி, தண்டாத்தீஞ் சாய னெடுந்தகா யவ்வழிக்
கண்ட தெவன்மற்று நீ;
௧௬ கண்டது, உடனம ராயமொ டவ்விசும் பாயு
மடநடை மாயின மந்தி யமையத்

இடன்விட் டியங்கா விமையத் தொருபா
விறைகொண் டிருந்தன்ன நல்லாரைக் கண்டேன்
றுறைகொண் டுயர்மணன் மேல்; ஒன்றி நிறைவதை
உக ஓர்த்த திசைக்கும் பறைபோனின் னெஞ்சத்து
வேட்டதே கண்டாய் கனு;
உ௫ கேட்டை, விரையனி மற்று வெகுள்வா யுரையாண்
டிதுவாகு மின்னகை நல்லாய் பொதுவாகத்
தாங்கொடி யன்ன தகையா ரெழுந்ததோர்
பூங்கொடி வாங்கி பிணர்கொய்ய வாங்கே
சினையலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனையரண் போல வுடைந்தன்றக் காவிற்
றுனைவரி வண்டி னினம்;
௩0 மற்றுங்கே, நேரிணர் மூசிய வண்டெல்லா மவ்வழிக்
காரிகை நல்லார் நலங்கவர்ந் துண்டபோ லோராங்கு மூச (௧)
அவருள்,
ஒருத்தி, செயலமை கோதை நகை
ஒருத்தி, யியலார் செருவிற் றொடியொடு தட்ப
௩௫ ஒருத்தி, தெரிமுத்தஞ் சேர்ந்த திலகம்
ஒருத்தி, யரிமா ணவிர்குழை யாய்காது வாங்க

௧. இஃது ஆறுமெய்பெற்றதென்பதனால் இவ்வாறு பிரிக்கப்பட்டது.



ஒருத்தி, வரியா ரகலல்குற் காழகம்
ஒருத்தி, யரியார் ஞெகிழத் தணிசுருத் தட்ப
ஒருத்தி, புலவியாற் புல்லா திருந்தா ளலவுற்று
வண்டின மார்ப்ப விடைவிட்டுக் காதலன்
றண்டா ரகலம் புகும்;
சஉ ஒருத்தி, அடிதாழ் கலிங்கந் தழீஇ யொருகை
முடிதா ழிருங்கூந்தல் பற்றிப்பூ வேய்ந்த

கடிகயம் பாயு மலர்ந்து;
௪௫ ஒருத்தி, கணங்கொண் டவைமூசக் கையாற்றுள் பூண்ட
மணங்கமழ் கோதை பரிபுகொண் டோச்சி
வணங்குகாழ் வங்கம் புகும்;
௪௮ ஒருத்தி, இறந்த களியா னிதழ்மறைந்த கண்ணள்
பறந்தவை மூசக் கடிவாள் கடியு
மிடந்தேற்றுள் சோர்ந்தனள் கை;
௫௧ ஆங்க, கடிகாவிற் காலொற்ற வொல்கி யொசியாக்
கொடிகொடி தாம்மிற் பிணங்கி யவைபோற்
றெரியிழை யார்ப்ப மயங்கி யிரிவுற்றார் வண்டிற்கு
வண்டலவர் கண்டே னியான்;
௫௫ நின்னைநின் பெண்டிர் புலந்தனவு நீயவர்
முன்னடி யொல்கி யுணர்த்தினவும் பன்மாண்
கனவின் றலையிட் டுரையல் சினைஇயான்
செய்வதி லென்பதோ கூறு;
௫௯ பொய்கூறேன், அன்ன வகையால்யான் கண்ட கனவுதா
னல்வாயாக் காண்டை நறுநுதால் பன்மாணுங்
கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி னீடிப்
பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல
வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி
லானு தகவும் பொழுதினான் மேவர
௬௫ நான்மாடக் கூடன் மகளிரு மைந்தருந்
தேளிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா
றானு விருப்போ டணியயர்ப காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு.

இது பரத்தையிற்பிரிந்து வந்த தலைவன் வாயில்பெறாது ஆற்றாமை வாயிலாகப் புக்கு, தலைவியை நயப்பித்தல் காரணமாகத் தெய்வமகளிர் *போய்த்தலையளிப்பதோர் கனாக்கண்டேன்; அது †நன்வாயாய்ப் பருவம் வந்து இறுத்தது பாராயென ஊடறுதீர்வது பயனாகத் ‡தலைவிக்குக் கூறியது.

இதன் பொருள்.

‖ புனவளர் பூங்கொடி யன்னாய் கழியக்
கனவெனப் பட்டதோர் காரிகை நீர்த்தே
முயங்கிய நல்லார் முலையிடை மூழ்கி
மயங்கிமற் றாண்டாண்டுச் சேறலுஞ் செல்லா
(ரு) துயங்கி ÷ யிருந்தோர்க் குயர்ந்த பொருளு
மரிதி னறஞ்செய்யா வான்றோ ருலகு
(க)முரிதி னொருதலை யெய்தலும் வீழ்வார்ப்
பிரிதலு மாங்கே புணர்தலுந் தம்மிற்
+ றருத றகையாதான் மற்று

எ - து: புனத்திடத்துவளர்ந்த பூவையுடைய கொடியையொப்பாய்! (உ) ×பொருள்வயிற்சென்று முயலாதே வருந்தியிருந்தவர்களுக்கு அவர்கள் இருந்த இடங்களிலே இடங்களிலே மிக்க பொருளும் தானே செல்லுதலும் ;**அரிதாயிருத்தலாலே உலகம்தமக்குஉரித்தாக அறத்தைச்செய்யாது இப்படி இருக்கவும், அறஞ்செய்தற்கு அமைந்தோர் அருநியாக அவ்வறத்தைச்செய்தலும் கனவிடத்தின்றாய்ப்போகத் தாம் முயங்கிய மகளிருடைய முலையினிடையிலே அழுந்திய இன்பத்தே மயங்கி விரும்புகின்ற கணவரை மகளிர் (ங) ஊடலாற் பிரிதலும் அப்பொழுதே ஊடறுதீர்ந்து புணர்தலுமாகிய தம்மின் †† மாறான இன்பத்தைக் ‡‡கனவிடத்தே தருதலை விலக்காதாம்; இனி மிகுத்த காதலாற் கனவென்றுசொல்லப்பட்டது ஓர் அழகினையுடைத்தாகியநீர்மையையுடைத்தா யிருந்த தென்றான். எ - று.

---

க. 'உரிது' இந்நூற்பக்கம் சஅ௯: க-ஆம் குறிப்புப்பார்க்க.

உ. "சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது" (கலி. கஅ:௫) என்பதும் (ஆ) "மடியிலான் செல்வம்போன் மரனந்த" (கலி.௩௫: க.) என்பதும் அதன் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் ஈண்டு ஒப்பு

நோக்கற்பாலன.

௩. "ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப் பெறின்"
குறள். ௧௩௩௰.

(பிரதிபேதம்) *பொய்தலாமையேதோர், †கனவாய்ப்பருவம், ‡நிலையன்றலிக்கு, ||புனம்வளர், ÷ இருந்தார்க்கு, + தருதரவேயாதார் மற்று, × பொருள்வையிற் சென்று, **அரிதாவிருத்தலாலே, †† மாற்றுன, ‡‡கனவிடத்தே பொருதல.

## மூன்றுவது மருதம் உள். ருசக

என்றது "இன்பமும் பொருளும் அறனும்"(க)என் றவாசிரியர்கூறியஇலக்கணம்பற்றிச் சிறந்த இன்பத்தையே*தருவ வெனஅறனும்பொருளுந் தாராமற்

போயிற்று, † இக்கனவு; ஆதலால், அதனை ஓர் காரிகைகேட்டதென்றான்.

‡ பொருளுமென்ற உம்மை, சிறப்பு. மற்று, அசை.

௧௦ நனவினாற் போலு நறுநுதா லல்கற்
கனவினாற் சென்றேன் (உ)கலிகெழு கூடல்

(௩)வரைபுறழ் நீண்மதில் வாய்சூழ்ந்த (௪)வையைக்
கரையணி காவி னகத்து

எ - து: நறிய நுதலினையுடையாய்! ஆரவாரம்பொருந்தின || மதுரையினுடைய வரையை மாறுபடுகின்ற நீண்ட மதிலிடத்தைச்சூழ்ந்த வையையாற் றங்கரையை அழகுபெறுத்தின பொழிலினிடத்தே நனவிடத்தே சென்றாற் போல இராப்பொழுதிலே கனவிடத்தே சென்றேனென்றான். எ - று.

௧௪ உரையினி, (ரு)தண்டாத் தீஞ் சாய னெடுந்தகா யவ்வழிக்
கண்ட தெவன்மற்று நீ

எ - து: அதுகேட்ட தலைவி, அமையாத இனிய மென்மையினையுடைய (சு)நெடுந்தகாய்! பின்னைநீ அவ்விடத்துக்கண்டது எத்தன்மைத்து? ÷அதனை இனிச்சொல்லென்றாள். எ - று.

௧௫ கண்டது, உடனமர் ஆயமோ டவ்விசும் பாயு
மடநடை மாயின மந்தி யமையத்

திடன்விட் டியங்கா விமையத் தொருபா
லிறைகொண் ×டிருந்தன்ன நல்லாரைக் கண்டேன்
றுறைகொண் டுயர் + மணன் மேல், ஒன்றி நிறைவதை

எ - து: அதுகேட்ட தலைவன், யான்கண்டது கேள்; அன்னங்கள் தன்னிடத்தைவிட்டுப்போகாத இமயமலையிலொருபக்கத்தே அழகியவிசும்பிலே

௧. தொல். கள. ௫. ௧.

௨. "கலிகெழு கூடல்" சிலப். ௩௦: ௧௪௧.

௩. (அ) "கோடுறழ்க் கெடுத்த கொடுங்க ளிஞ்சி" பதிற். ௧௧: ௧. (ஆ) "கிடக்கை நாமவேலை யாமெழு, மேக மொண்டு கொண்டெழுந்து விண்டொடர்ந்த குன்றமென், றுகவொர்ந்திநின் றுதாரை யம்மதிற்கண் வீசுமே" கம்ப. நகரப். ௧௬.

௪. இந்நூற்பக்கம் ௧௪௪: ௧-(ஃ) குறிப்புப் பார்க்க.

௫. "தண்டாத்தீஞ் சாயற் பரத்தை வியன்மார்ப" கலி. ௧௫: ௨.

௬. இந்நூற்பக்கம் ௪௧: ௧-ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * தத்தமை மறுறுப், † காணாதலால், ‡ பொருதுஉறும்மை, || மதலையினை யுடைய, + அதனைச்சொல், × இருந்தன நல்லாரை. + மணன்மேல். எ-து.



இறைகவர்ந்த இளைப்பால் ஓய்ந்து பறக்கும் மடப்பத்தையுடைத்தாகிய நடையினையுடைய அன்னத்திரள் அந்திக்காலத்தே தங்குதல்கொண்டிருந்த தன்மையவாக, துறை தன்னிடத்தேகொண்டு உயர்ந்த மணற்குன்றிலே நல்லார், தம்முடனே அமர்ந்த ஆயதாருடனே பொருந்தி நிறைந்திருக்கின்ற தனைக் கண்டேனென்றான். எ - று.

மா + இனம் மாயினமென மருஉவான் (க) யகரவுடம்படுமெய் பெற்றது. அன்னவாகவெனவிரிக்க.

௨௧ (௨)ஓர்த்த திசைக்கும் பணைமுபானின் (௩)வெஞ்சத்து
வேட்டதே கண்டாய் கனை

எ - து: அதுகேட்ட தலைவி, கொட்டுகின்றவன் தன்மனத்தில் ஓர்த்த ஓசையைத் தானும் ஒலிக்கும் பறைபோல நின்னுடைய நெஞ்சத்து விரும்பின இன்பத்தையே கனவாகக் கண்டாயென்றாள். எ - று.

உரு கேட்டை, விரையனீ மற்று வெகுள்வாய்; யுறையாண்
டிதுவாகு மின்னகை நல்லாய் பொதுவாகத்
தாங்கொடி யன்ன தகையா ரெழுந்ததோர்
பூங்கொடி வாங்கி யிணர்கொய்ய வாங்கே
(ச)சினையலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனையரண் போல வுடைந்தன்றக் காவிற்
றுனைவரி வண்டி னினம்

---

க. 'கோயில்' 'மாயிருஞாலம்' என வருதலையும் நோக்குக.

உ. "ஓர்த்த திசைக்கும் பறை" என்னும் பழமொழியும் "இரட்டுறு முரச மென்ன விசைத்ததே யிசைக்கின் றுயை" என்னும் கம்பர் வாக்கும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

ந. "வானர மகளிரிற் றுனைவன் சுடா, முகைநலக் காந்தண் முகிழ்விர லேவைத், தகைமலர்ப் பொய்கைத்தண்செங்கழுநீர், செல்லெனப்பிடித்து மெல்லென விழித்து, நண்ண வருவோள் போலுமென்க,; றாற்றே னவட னஞ்சாந் திளமுலை, நோற்றே யாயினு நுகர்வல் யானெனத், தெய்வநல்யாழ் கையமைத் தியற்றிய, வைதேத் தல்கு லவந்திகை வீவு, முறுதுணைத் தோழ ரிறுதியு நினையான், மாண்ட சூழ்ச்சி மந்திர வமைச்சர், வேண்டுங் கொள்கைய னுகி நீண்ட, தடம்பெருங் கண்ணி தகைபா ராட்டி, யுறுவகை யன்ன நறுகண் பொருந்தறுங், கைவயிற் கொண்ட கழுநீர் கமழம்போது. கொய்மலர்க் கண்ணி கொடுப்போன் போலக், கனவிற் றேன்ற" பெருங். (ந) ஏ: சக - சகூ.

ச. "சினையலர் வேம்பன் தேரா னுகி" சிலப். பதிகம். உக.

மூன்றுவது மருதம் உஎ. நிறுக

எ - து: அதுகேட்ட தலைவன், நீவிளையாதேகொள்; பின்னைக் கோபிப்பா

யென்றான். அதுகேட்ட தலைவி மேல் உரையென்றாள். அதுகேட்ட தலைவன் இனிய நகையினையுடைய நல்லாய்! அன்பிற் பிறந்தது இதுவாயிருக்கும்; அதனைக்கேள்; கொடியையொத்த அழகினையுடையார் தாம் அக்கரவிடத்து எழுந்து நின்றதோர் பூங்கொடியை எல்லார்க்கும் பொதுவாகக் கொண்டு வளைத்து அதிற் கொத்துக்களைப் பறிக்க விரைந்த வரியினையுடைய வண்டின்திரள் கொம்புகள் அலர்ந்த வேப்பந்தாரினையுடைய (௧) * பொதியிலையுடையவன் பொருத பகைப்புலத்து அரண்போல அவ்விடத்தே உடைந்தது. எ - று.

உடைந்தன்றென்பது, றகரம்ஊர்ந்த குன்றியலுகரவீற்று முற்றுச்சொல்; "வந்தன்று" (௨)என்பதுபோல.

மற்றாங்கே, நேரிணர் மூசிய (௩)வண்டெல்லா மவ்வழிக்
காரிகை நல்லார் நலங்கவர்ந் துண்பபோ †லோராங்கு மூச
அவருள்,

---

௧. பொருப்பென்பது பொதியின்மலைக்குப் பெயராய் வருதலை இந்நூற் பக்கம் ௧௯௫: ௧ - ஆம் குறிப்பாலும் "பொருப்பு நறுஞ்சந் தனஞ்சேறு" (பிரபு. பிரபுதேவர். ௯௦.) என்பதனாலும் அறிக.

௨. கலி. ௨௬: ௨௫; ௩௨: ௧௮; ௩௩: ௮; ௩௬: ௧௦; ௧௪௩: ௪௧.

௩. (அ) "வண்டு வழிபடரும் வாட்கண்ணாய்" (ஆ) "பூப்பிழைத்து வண்டு புடையாடுங் கண்ணினாய்" (இ) "எதிர்நீர் தாவு மிளையோர் திருமுகத், தாழ மிகவா வரிபரந் தகன்ற, மாழை யுண்கண் மலரென மதித்துத், தண்செங் கழுநீர்த் ததைமலர்த் தாது, மொண்செந் தாமரைப் பைம்பொற் றூது, மாராய்ந் துழிதரு மஞ்சிறை வண்டின, மோராங்கு நிலைபெற் றுண்ணெகிழ்ந் தவிழ்ந்த, போரா விலையெனப் பேர்தல் செல்லா, மொய்த்தலின் மற்றவை மொய்ப்பி னீங்கத், தத்தரிநெடுங் கண்டகைவிரல் புதைஇப், புதுமணமகளிரிற் கதுமெனத் தோன்று, மதுர மழலை மடவோர்க் காண்மின்" (ஈ) "ஆட்டு குங்குமக் கொழுங்களி யளாயசெங் கமலஞ், சேட்டிளங்கதிர் முலையென வொழிர்துவெண் டிங்கள், காட்டு வாணுதற் கன்னிய ரெழுதுசாந் தழிந்த, மோட்டு வெம்முலை முளரியென் றளிகுல மொய்ப்ப" (உ) "விரும்பித் தேனுகர் வீகளை யுந்தொறுங், கரும்பிற் றேமொழிக் காரிகை யார்முலைச், சுரும்புற் றூர்ப்பவித் தோடவிழ் செவ்விய, வரும்பிற் றேனுமுண் பாமெனு

மாசையால்" (௩௩)"களையக் கைகளை பற்று தொடர்தோழி, லுனேயப் பூவென் ருெளிமுகம் பாய்வன, விளைமட் டேட்டவர் வீத னிழந்துமத், தெளிவைத் தேறிய போற்சிறை வண்டினம்" என்பவை இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * பொறியினையுடையவள். † ஞாங்காங்க மூச வவரும்.

## ௰௨. கலித்தொகை கூ௨.

ஒருத்தி, செயலமை கோதை நகை
ஒருத்தி, *பியவார் செருவிற் றொடியொடு தட்ப
௩.டு ஒருத்தி, தெரிமுத்தஞ் சேர்ந்த (க)†திலகம்
ஒருத்தி, ‡யரிமா ணவிர்குழை யாய்காது வாங்க
ஒருத்தி, வரியா ‖ரகலல்குற் காழகம்
ஒருத்தி, யரியார் ஞெகிழத் தணிசுறுத் தட்ப
(உ)ஒருத்தி, புலவியாற் புல்லா திருந்தா ளலவுற்று
வண்டின மார்ப்ப ÷விடைவிட்டுக் காதலன்
றண்டா ரகலம் புகும்

எ - து: பின்னை அப்படியே உடைக்க, தம்மிலொத்த இணர்களிலே மொய்த்த வண்டுகளெல்லாம் அவ்விடத்து நின்ற அழகினையுடைய மகளிர் கலத்தைக் கைக்கொண்டு நுகர்வனபோல, ×ஒருபடிப்பட மொய்க்கையினாலே அவ்வண்டின் போரிலே அவர்களில் ஒருத்தியுடைய பூமாலையும் பண்ணுத லமைந்த முத்தமாலையும் வேறொருத்தியுடைய அசைதலார்ந்த தொடியோடே தடுத்துக்கொள்ளாநிற்க, ஒருத்தியுடைய நெற்றியிற் றிலகத்தைச் சேர்ந்த தலையிற் கிடக்க தெரிந்த முத்துவடத்தை வேறொருத்தியுடைய அழகினை யுடைய காதிற்கிடந்த அழகுமாட்சிமைப்பட்ட விளங்குகின்ற மகரக்குழை துடக்கிக்கொள்ளாநிற்க, ஒருத்தியுடைய இதலைநிறைந்த அகன்ற அல்குலிற் றுகிலை வேறொருத்தியுடைய உள்ளிமெணியமைந்த சிலம்பிடத்திற் கிடந்த சுரு வடிவாகியமூட்டுவாயிரும்புகள்(?) தளைத்துக்கொள்ளாநிற்க, ஒருத்திபுலவியாலே கணவனைப் புல்லாதிருந்தவள் வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கையினாலே ✝வருத்தமுற்று அப்புலவியை நடுவேகைவிட்டுக் கணவன்வணங்குகையினாலே அவனுடைய குளிர்ந்த மாலையையுடைய மார்பிடத்தே முயங்கும். எ - று.

**செயவெனெச்சங்கள் புகுமென்னும் பிறவினை கொண்டன.

சஉ ஒருத்தி, யடிதாழ்(உ)கலிங்கந் தழீஇ யொருகை
முடிதா ழிருக்கூந்தல் பற்றிப்பூ வேய்ந்த
கடிகயம் ††பாயு மலந்து

---

க. திலகமென்பது சாந்துமுதலியவற்றைக் குழைத்தணியும்நெற்றிக்குறிக் கன்றியும் ஓரணிகலத்துக்கும் பெயரென்று தோன்றுகிறது; 'ஒண்ணுதல் யாத்த திலக வவிரோடை" கலி. கஎ: கக. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ)"அதிலேத்துகூத்தவொருகையிலேந்தியசைந்தொருகை,அதிலேந்தி" (தக்கை. உஎ.) என்பதும் (ஆ) "புதல்வரை யொருகையாற் றழீஇப்,

(பிரதிபேதம்) * இலைார், † திலதம், ‡ வரிமான், ‖ அகலல்குலிற்காழகம். ✕ ஒருபடிப் படிபொய்கையிலுலே.✢ வருத்தமுற்ற புலவியை. **செய்தெனெச்சங்கள், †† பாயுமலர்ந்து.

# மூன்றுவது மருதம் உஎ. ருரு௧

எ-து: ஒருத்தி, அடியிலே தாழ்ந்த *துகிலை ஒருகையாலே தழுவிக்கொண்டு மற்றைக்கையாலே முடித்த முடி குலைந்த கரிதாகிய கூந்தலைப் பிடித்துக்கொண்டு அலவுற்று மிகுதியையுடைய பூ வேய்ந்த குளத்திலே பாயாநிற்கும். எ-று.

சரு (க)ஒருத்தி, கணங்கொண் டவைமூசக் கையாற்றுள் பூண்ட
மணங்கமழ் (உ)கோதை பரிபுகொண் டோச்சி
வணங்குகாழ் வங்கம் புகும்

எ-து: ஒருத்தி, திரட்சிகொண்டு வண்டுகள் மொய்க்கையினுலே கையாற் கடியமாட்டாளாய் மணம் நாறுகின்ற மாலையை அறுத்துக்கொண்டு ஓட்டி, அதற்கு(ங) அவை போகாமை கண்டு விளைந்த தண்டுகள் தனக்கு உள் வலியாக உள்ளே பூண்ட ஓடத்தே பாயும். எ-று.

காழ்பூண்டவென்க. பரிபு, † செய்பெனெச்சம்.

சஅ ஒருத்தி: இறந்த களியா னிதழ்மறைந்த கண்ணாள்

பறந்தலை மூசக் கடிவாள் (௪)கடியு
மிடந்தேற்றாள் சோர்ந்தனள் கை

---

பவழஞ் சேர்ந்த பல்காழல்குல, ரவிழ்ந்த பூந்துகி லவ்வையி னசைஇ, நகைப்பூங் கோதையொடு நான்ற கூந்தற்கு, மிகைக்கை காணூ...... பொய்கை புக்கனர்" (பெருங். (௧)௩௩:௧௪௫-௧௫௨) என்பதும் காண்க.

௧. "பொறிவரி வண்டினம் புல்லுவழி யன்றியு, நறுமலர் மாலையின் வறிதிடங் கடிந்தாங்கு" என்புழி, புல்லுதல் என்பதற்கு, இன மென்று புல்லுத லென்று பொருள் கூறி, "ஒருத்தி கணங் கொண்டவை...... ...... கொண்டோச்சி", "ஒருத்தி, இறந்த............சோர்ந்தனள் கை" என்பவற்றை மேற்கோள்காட்டினர் அடியார்க்குநல்லார்; சிலப். ௧௪: ௧௩௪ - ௧௪௫. உரை.

௨. (அ) "வண்டேத வம்மருங்கு ஞேமென்று பூமாலை, கொண்டோச்சுங் காதலார்" (ஆ) "கற்பெனு மாலை வீசி நாணெனுங் கனிவண் டோப்பிச், சொற்பக ரின்றித் தோழிக் கேத்திடு ணுடரிவை நின்றாள்" சீவக. ௧௭௦௦, ௨௦௭௩.

௩. (அ) "நதியினுங் குளத்தும் பூவா ளினங்கள் குவளை யோடு, மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மாலைத் தும்பி, யதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன விலக்கப் போகா, புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்" கம்ப. பூக்கொய். ௩. (ஆ) "கோல நாண்மலர் கொய்பவ ளவளைவி, லோலி டுஞ்சுரும் போச்சவும் போகில, மாலுழர்து மறிந்து விழுவன" நைடத. போதுகொய். ௧௪.

௪. (அ) "நட்பாட றேற்றாதவர்" என்புழி, தேற்றாமை தன்வினையாய் நிற்றற்கு, "கடிவு, மிடந்தேற்றாள் சோர்ந்தனள் கை" என்பதுமேற்கோள்;

(பிரதிபேதம்) * துவிலின, † செய்தெனெச்சம்.

70

எ - து: ஒருத்தி அறிவுபோதற்குக் காரணமான (க)*கள்ளின்களிப்பால் இமை கூடுகையினாலே † பார்வை மறைந்த கண்ணையுடையளாய்ப் பறந்த வண்டுகள் மொய்க்க ஓட்டுகின்றவள் தன் களிப்பாலே அவற்றை ஓட்டுமிடம் அறியாளாய்க் கைசோர்ந்தாள். எ - று.

கைசோர்ந்தனள்; சினைவினை, முதலொடு முடிந்தது.

௬௧ ஆங்க, உரையசை ; அங்ஙனே ‡யெனநின்றது.

(உ)கடிகாவிற் காலொற்ற வொல்கி யொசியாக்
கொடிகொடி தம்மிற் பிணங்கி யவைபோற்
றெரியிழை யார்ப்ப மயங்கி பிரிவுற்றார் வண்டிற்கு
||வண்டலவர் கண்டே னியான்

எ - து: விளையாட்டையுடைய மகளிர், மிகுதியையுடைய பொழிலிலே காற்றடிக்க ஒதுங்கி வளைந்த கொடியுங் கொடியும் தம்மிற் பிணங்கியவை போலத் தெரிந்த அணிகள் ஆரவாரிப்பத் தம்மிலேமயங்கி அவ்வண்டுகளுக்குத் தேடுதலுற்றார்; யான் கனவைக்கண்டேனென்றான். எ - று.

௬௨ நின்னைநின் பெண்டிர் புலந்தனவு (௩)நீயவர்
முன்னடி யொல்கி யுணர்த்தினவும் பன்மாண்
கனவின் றலைபிட் டுரையல் சினைஇயான்
செய்வதி லென்பதோ கூறு

---

துறள். கஅஎ. பரி. (ஆ) "தேற்றாப் புன்சொ னோற்றிசிற் பெரும" புறம். உ0உ: கசு.

உ. (அ) "அந்தீந் தேறன் மாந்தினர் மயங்கிப், பொறிவரி வண்டினம் புல்லு வழி யன்றியு, நறுமலர் மாலையின் வறிதிடங் கடிந்தாங்கு" சிலப். கச: கநரு - கநகு. (ஆ) "கூடிய நறைவாயிற் கொண்டன விழிகொள்ளா, மூடிய களிமன்ன முடுகின நெறிகாணு, வாடிய சிறைமாவண் டந்தரி னிசைமுன்னுப், பாடிய பெடைகண்ணு வருவன பலகாணுய்" கம்ப. வனம்புகு. கரு.

௨. (அ) கடியென்னும் உரிச்சொல் காப்பு என்னும் பொருளில் வருதற்கு, 'கடிகா' என்பது மேற்கோள்; தொல். உரிச். ௫: அஎ. சேனா. (ஆ) "உறுகா லொற்ற வொல்கி" நற். ௩௦௦: ௩. (இ) "கடிகாவிற் காற்றொற் றொடிய வெடிபட்டு, வீற்றுவீற் றோடு மயிலினம்போ- லாற்றிசையுங், கேளி ரிழந்தா ரலமருப" களவழி. ௨௧.

௩. "நீ நீயே னலேனென்று மற்றவன், சேடி தோயா விறுத்தது" கலி. ௬௦; கஎ - க௮.

(பிரதிபேதம்) * களிப்பால், † பாவை மறைந்த. ‡ எனவென்றது, || வண்டலாய வாக்கண்டேன்,



எ - து: அதுகேட்ட தலைவி, நின்னை நின்னுடைய பெண்டிர் புலந்தன வற்றையும் நீ அவருடைய அடிமுன்னே வணங்கிப் புலவிதீர்த்தனவற்றையும் (௧)பலபடியாகக் கனவின்மேலிட்டுக் கூறுதல், யான் *சினந்து செய்வதொரு படியின்றென்பதனை உட்கொண்டோ? சொல்லென்றாள். எ - று.

உரையல், படுத்தலோசையாற் றொழிற்பெயராயிற்று.

பொய்கூறேன், †அன்ன வகையால்யான் கண்ட ‡கனவுதா
னன்வாயாக் காண்டை நறுநுதால் பன்மாணுங்;
(௨)கூடிப் புணர்ந்தீர் பிரியன்மி ||னீடிப்
பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல
வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி
லானா தகவும் பொழுதினான் மேவர
நான்மாடக் கூடன் (௩)மகளிரு மைந்தரும்
தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா
ரானா விருப்போ டணியயர்ப காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு

எ - து: அதுகேட்ட தலைவன், யான் பொய்சொல்லேன்; நறிய நுதலினை

புடையாய்! பல மாட்சிமையும் உண்டாய்ப் புணர்ச்சிர் பிரியாதேகொள்ளும்;

க. ‖இந்நூற்பக்கம் உஅஅ: ௩ - ஆம் குறிப்புப்பார்க்க.

உ. (அ) "புணர்ந்தீர் புணர்மி னோவென விணர்மிசைச், செங்க ணிருங் குயி லெதிர்குரல்பயிற்று, மின்ப வேனிலும்வந்தன்று"(ஆ)"பொதும்பு தோ டுல்கும் பூங்க ணிருங்குயில், கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க் கையிட், டகற லோம்புமி னறிவுடை யீரெனக், கையறத் துறப்போர்க் கழறுவ போல, மெய்யுற விருந்து மேவர நுவல" நற். உஉச: ச - கூ. உசங: ச - அ. (இ) "ஊடினீ ரெல்லா முருவிலான் றன்னாணை, கூடுமி னென்று குயில்சாற்ற - நீடிய, வேனற்பா ணிக்கலந்தாண் மென்பூத் திருமுகத்தைக், கானற்பா ணிக்கலந்தாய் காண்" சிலப். அ. இறுதி.

௩. (அ) "தேவியருந் திருமாலுஞ் செழுமலர்த்தார்த் தனஞ் சயனுந் தேவி மாரு, மேவியனந்தம்வேனில் விழவயர்வான் முரசறைந்து வீதிதோறு, மோவியமு முயிர்ப்பெய்த வுபேந்திரனுமிந்திரனுமுவமைசாலப், பூவின முஞ் சுரும்புமெனப் புரமுழுதும் புறப்படவன் பொறைசேர்ந்தார்" வில்லி. வசந்தகாவச: ச. (ஆ) "விருந்து வேனிலாற் செறிந்த விரை மலர்க் காவு, முருந்து வாணகை முகிழ்முலை மடைந்தையோ டாடிப், பொருந்த விண்ணிடைப் போகமுன் வேந்தனர்போன்றான்" நைடத. அரசாட்சி. கஙு. (இ) கலி. உவ: உச, ௩௰: கங - கச, கூ௫: கங-கச.

(பிரதிபேதம்) *களைத்த. †அமையமை‡களையுத்தர, எனவாகக்கண்டை‖ ¶கூடிப்புணர்தமின்.

௫௬௪ கலித்தொகை கூஉ.

புணர்ச்சி நீட்டித்து இடையே பிரிந்தீர்! கூடுதலைத் தருமினென்று கூறுவன் போல, கரியவாகிய குயில்கள் அரும்பு அவிழ்ந்த பூக்களையுடைய கொம்புக டோறும் இருந்து அமையாமற் பெடையை அழைக்கும் இளவேனிற்பொழு தின் கண்ணே காமற்கு விருந்திடுதலை மேவுதல்வர எதிர்கொண்டு கூடலின் மகளிரும் அவர் கணவரும் தேனினம் ஒலிக்குங் காவிலே கூடியிருந்து விளை யாட வேண்டி அமையாத விருப்பத்தோடே அணிகளை அணிவார்; ஆதலாற் பிரிதலும் புணர்தலுமாகிய கூற்றாலே யான்கண்ட கனவு நன்றாகிய உண்மை யாம்படி நெஞ்சாலே(க)கருதுவாயென்றான். எ - று.

கனவு(உ)செய்யுண்முடிவு. (ங)நான்கு மாடக்கூடலின், நான்மாடக்கூடலென்றுமிற்று; அவை: திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்.

---

க. காணுதல், கருதுதலென்னும் பொருளிலும் வருதல்: கலி. கo: உங.

உ. தொல். உயிர்மயங்கியல். சூ. ருஉ.

ங. (அ) "நான்மாடக் கூட லெதிர்கொள்ள" பரி. 'வானாரெழிலி' ங. (ஆ) "தென்னவ, னான்மாடக் கூட னகர்" பரி: உலகம்: ங - ச. (இ) "உம்பரு நாக ருலகந் தானு மொலிகடல் சூழ்ந்த வுலகத் தோரு, மம்புத நால்களா னீடுங் கூட லாலவா யின்க ணமர்ந்த வாறே" தே. (ஈ) "நன்றறிவார் வீற்றிருக்கு நான்மாடக் கூடல்வள நகரி யாளும், வென்றிபுனைவடிசுடர்வேன் மீனவனை" வில்லி. அருச்சுனன்தீர்த்த. உக. (உ) "வியர்தநான் மேகக் கூடல் விளங்கு நான் மாடக் கூடல்" (ஊ) "வாடுவோர் தம்மைப் போற்ற வயங்கொளி மாநகர்க்கட், கூடருமேக நான்கு மாடமாக் கூடலாலே, நாடவ ரதிசயிப்ப நான் மாடக் கூட லென்று, பீடுடை நகர்க்கு நாம மெங்கணும் பிறங்கிற் றன்றே" திருவால. திருநகர. க. நான்மாடக் கூடலான: கஉ. (எ) "முன்னவன் முன்போ னான்கு முகிலையு நோக்கி யின்ன, தொன்னக ரெல்லை நான்குஞ் சூழ்ந்துநான் மாட மாகி, வின்னெடு மாரியேழும் விலக்குமி னெனவி டுத்தான்", "வந்துநான் மாட மாகி வளைந்துநாற் றிசையுஞ் சூழ்ந்து, சந்துவாய் தெரியா தொன்றித் தாவொரு குடிலாய் மாடப், பந்திகோ புரஞ்செய் குன்றங் கால்கள் போற் பரிப்பப் போர்த்த, விந்துவார் சடையோ னேய வெழிலிமா நகரமெங்கும்", "அன்னநான் மாடத் துள்ளு நகருளா ரமைச்சர் வேந்தன், றன்ன நாற் கருவித் தானை சராசரம் பிறவுந் தாழ்ந்து, முன்னை நா டனினு மின்ப மூழ்கினர் இருந்தார்" திருவிளை. நான்மாடக் கூடலான. கச - கரு. என்பவைகளும் (ஏ) "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்............மதுரை" (மது. சஉக - சகக) என்பதற்கு, 'நான் மாடத்தாலே மலிந்த புகழைக் கூடுதலையுடைய மதுரை' என்று இவர் எழுதியிருக்கும் உரையும் (ஐ) இந்நூற்பக்கம் கசு: உ-ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

இனி, (க) கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்றுமாம். புணர்தம்மின்: "கல்லெயி லுழந்த *செல்வர்த் தம்மின்" (உ) என்றாற்போலத் திரிசொல்.

இஃது, † "உறலருங் குண்மைபி னூடன் ‡ மிகுந்தோளைப், பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்" (ங) என்பதனாற் பிறபிற பெண்பால் காட்டி || ஊடறீர்த்தது. புல்லாதிருந்தானென்றதலைன் ஊடன்மிகுதி கூறி, மகளிரும்மைந்தரும் விருந்தெதிர்கொண்டு அணியயர்வர்; நாமும் ÷ அதுசெய்ய வேண்டுமென்றவாறு காண்க.

இதனால், தலைவற்குக் கனவு முதற் றோன்றிப் பின்னர் விரைவு தோன்றிற்று. இது "யாறுங் குளனுங் காவு மாடி" என்னுஞ் (ச) சூத்திரத்தாற் காவிற் புணர்ந்திருந்தாட லியுங் கருதெனத் தலைவிக்குக் + கூறியது.

இஃது ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வந்த கலிவெண்பா; ஆசிரியத் தளையும் வந்தது. (உஎ)

(கலி.) வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
தமாடாத்திந் சாயற் பரத்தை வியன்மார்ப

---

க. (அ) "வடதிரு வாலவாய்திரு நடுவூர்..........கன்னிசெங் கோட்டங் கரியோன் றிருவுறை" கல். ககு. (ஆ) "காய்சின மயிடற் காய்ந்த கன்னிமுன் காக்கு மூதூர்" (இ) "கனகவெண் சங்கச் செங்கைக் கரியமால் காக்கு மூதூர்" (ஈ) "சீருடைக் காளி காமச செல்விமுன் காக்கு மூதூர்" (உ) "ஆலவாய்த் தரும மூர்த்தி, யெங்கலத் திலுமுயர்ந்த திக்கில மென்று தோன்ற, மன்னுமைக் குரைத்து மற்றை மாதிரங் காக்கு மூதூர்" திருவால. திருநகரச்சிறப்பு. கஉ - கடு.

உ. மது. எஙக.

ங. (அ) தொல். கற்பி. ௬. ௬. இதனுரையில், தலைவன் பிறபெண்டிரேதுவாக ஊடன்மிக்கவளை ஊடலுணர்த்தியதற்கு, "ஒருத்தி புலவியாற்... .........அகலம்புகும்" என்பதை மேற்கோள் காட்டினர் இளம்; (ஆ)

நச்சினார்க்கினியர் இதனோடு "அன்னவகையால்.... ......, கொண்டு" என்பதையுஞ்சேர்த்துக்காட்டி, 'புல்லாதிருந்தா னென்றதனுடன்

மிகுதிதோன்றவு ஃது, மகளிருமைக்கரும் வேனில் விழாச்செய்கின் றார்; நாமும்அதுசெய்யவேண்டுமென் றுகூறியவா றுகாண்க' என்றனர்.

௪. தொல். கற். சூ. ௬௦. (அ) இச்சூத்திரத்தின் இவருரையில் இச்சரிதகம் காவிற் புணர்ந்திருந்தாட கீயுங் கருதெனத் தலைவன் தலைவிக்குக் கூறியதற்கு மேற்கோள். (ஆ) தொல். புறத். சூ. ௯௨. இவருரையில், "இதனுள் ஆறுகூறினார்; 'புனவளர் பூங்கொடி' என்னு மருதக் கலியு மது" என்று காணப்படும் பகுதி இங்கே ஆராய்தற்பாலது.

(பிரதிபேதம்), * செல்வந்தம்பின். † உறலருங்குடைமையின், உறலருங்குரைமையின், ‡ மிகுத் தோன், || வேடமீர்த்தான், ÷ அதுவேண்டுமென்ற வாற்றுக்காண்க, ┼ கூறி றுன் இதை மூச்சிரமிக்கியும்.

௫௮ கலித்தொகை ௯௩.

பண்டின்னை யல்லைமன் னீங்கெல்லி வந்தீயக்
கண்ட தெவன்மற் றுரை;
௫ நன்றும், தடைஇய மென்றோளாய் கேட்டீவா வாயி
னுடனுறை வாழ்க்கைக் குதவி யுறையும்
கடவுளர் கட்டங்கி னேன் ;
௮ சோலை, மலர்வேய்ந்த மான்பிணை யன்னார் பலர்நீ
கடவுண்மை கொண்டொழுகு வார்;
௧௦ அவருள், எக்கடவுண் மற்றக் கடவுளைச் செப்பீமன்
முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்கா
லிப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய
வக்கடவுண் மற்றக் கடவு ளதுவொக்கும்
நாவு ளழுந்து தலைசாய்த்து நீகூறு

மாயமோ கைப்படுக்கப் பட்டாய்நீ கண்டாரை
வடி பாக யாங்கூற வேட்டிவாய் கேளினி ;
௨௰ பெறனசை வேட்கையி னிங்குறி வாய்ப்பப்
பறிமுறை நேர்ந்த நகாராகக் கண்டார்க்
கிறுமுறை செய்யு முருவொடு நும்மிற்
செறிமுறை வந்த கடவுளைக் கண்டாயோ ;

௨௧ நறுந்தண் டகரமு நானமு நாறு
நெறிந்த குரற்கூந்த னுளணிக் கொப்ப
நோக்கிற் பிணிகொள்ளுங் கண்ணொடு மேனுணி
பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ ;
௨௨ சாணிக் கேற்ற வொடியாப் படிவத்துச்
சூர்கொன்ற செவ்வேலாற் பாடிப் பலநாளு
மாராக் கனைகாமங் குன்றத்து நின்னொடு
மாரி யிறுத்த கடவுளைக் கண்டாயோ ;

௨௩ கண்ட கடவுளர் தம்முளு நின்னை
வெறிகொள் வியன்மார்பு வேறுகச் செய்து
குறிகொளச் செய்தார்யார் செப்புமற் றியாருஞ்
சிறுவரைத் தங்கின் வெகுள்வர் செறுதக்காய்
தேறினேன் சென்றீநீ செல்லா விடுவாயே
னற்று ரகலத்துக் கோர்சார மேனி.

மூன்றுவது மருதம் ௨அ. ௱௬௩

கெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு
முட்டுப்பா டாகலு முண்டு.

இது "காவற் பாங்கி னாங்கோர் பக்கமும்" (௧) என்புழி, ஆங்கோர் பக்கமான (௨) கடவுளைக்கண்டு தங்கினேனென்ற தலைவற்கு நீ கண்ட கடவுளர் இவரெனக் கூறிப் புலந்தது.

இதன் பொருள்.

(௩)வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
(௪)தண்டாத்தீஞ் சாயற் பரத்தை வியன்மார்ப
பண்டின்னை யல்லைமன் னீங்கெல்வி வந்தியக்
கண்ட தெவன்மற் றுரை.

எ-து: அமையாத இனிய மென்மையினையும் *பரத்தைமைக் குணத்தையு முடைய, வண்டுகள் ஊதுஞ்சந்தனத்தைக் கை வடுக்கொளப் பூசின அகற்சியை யுடைய மார்பனே! முன்பு இத்தன்மையையுடையையல்லை; (௫)அத்தன்மை போயிற்று; இவ்விடத்து இராக்காலத்தேவர நீ புறத்துப்போய்க் கண்ட வினைதம் எத்தன்மைத்து? பின்னை அதனைக் கூறென்றான். எ - று.

ஞ நன்றும், (௬)தடைஇய மென்றோளாய் கேட்டீவா யாயி
(௭)னுடனுறை †வாழ்க்கைக் குதவி யுறையுங்
கடவுளர் கட்டங்கி னேன்

---

க. தொல். அகத். சூ. ௩௧.

உ. கடவுளர்மாட்டுப் பிரிந்து வந்த தலைமகனைத் தலைவி புணர்ச்சி மறுத்தற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டி, இது புணர்ச்சிக்கு உடன்படாது கூறியதென்றும், கலித்தொகையில், கடவுட் பாட்டினுள் உரிப்பொருண்மைபற்றிவரும்பாட்டு மருதநிலத்துத் தலைமகன்பெயர் கூறாது பிறபெயர்படக் கோத்தமையானும் ஊடற்பொருண்மையின் வேறுபாடுண்மை அறிகவென்றும் கூறுவர் இளம்பூரணரும்; தொல். அகத். சூ ௩௪. 'ஒன்றாத்தமரினும்'

௩. 'வண்டூதுதல்' சீவக. ௧௭௦௦; நள. சுயம்: ௧௧; காஞ்சி. சித்திரசப். ௧.

௪. "தண்டாத்தீஞ் சாய னெடுந்த காய்" கலி. ௬௨: ௧௪.

௫. "கழிவே.........என்ப மன்னைச் சொல்லே" தொல். இடை. சூ. ௪.

௬. (அ) "அம்பணைத் தடைஇய மென்றோள்" நெடுநல். ௧௪௯. (ஆ) "தடைஇத் திரண்டநின் றோள்" அகம். ௨௪௮: ௮: என்பவையும் (இ) "தடையின திரண்டதோள்" (கலி. ௪௫: ௧௫.) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

எ. ["உடனுறை வாழ்க்கைக்கு கோற்றடம் பவேர்" மணி. உ: சஎ. (பிரதிபேதம்) * பார்த்தலை, † வாட்கை.



எ-து: அதுகேட்ட தலைவன், (க)பெரிதும் பெருத்த மெல்லிய தோளினையுடையாய்! யான் கூறுகின்றதனைக் (உ)*கேட்பாயாயிற்கேள்; யாம் இருவரும் போய் உடனே †துறவகத்திருக்கும்வாழ்க்கைக்குஉதவியாயிருக்குங்கடவுளரைக் கண்டு அவரிடத்தே தங்கினேனென்றான். எ - று.

இல்லறம் நிகழ்த்தி வானப்பிரத்தம் நிகழ்த்துங்கால் உடனுறைதலின் உடனுறைவாழ்க்கையென்றான். நூல்களான் உணர்த்துதலை உதவியென்றான். அது, "காமஞ்சான்ற" என்னும்(ங)சூத்திரத்தில், "சிறந்ததுபயிற்றல்‡இறந்ததன் பயனே" என்பதனா லுணர்க.

அ் சோலை, மலர்வேய்ந்த மான்பிணை யன்னார் பலர்நீ
(௪)கடவுண்மை கொண்டொழுகு வார்
அவருள், எக்கடவுண் மற்றக் கடவுளைச் செப்பீ மன்

எ-து: அதுகேட்ட தலைவி, கடவுட்டன்மை உண்மையாகக் கொண்டு நடத்துவார், சோலையில் மலரைச் சூடின மான்பிணைபோலும் நோக்கினையுடைய ||பார்த்தையர் பலருளர்; அப்பார்த்தையருள் நீ கூறிவந்தகடவுள் எந்தக் கடவுள்? அக்கடவுளைச் சொல்லுவாயென்றாள். எ - று.

மற்று, வினைமாற்று.

(௫)முத்தேர் முறுவலாய் நா(௬)மணம் ÷புக்கக்கா
+லிப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய
× எக்கடவுண் மற்றக் =கடவுள்

---

க. "நன்று பெரிதாகும்" "தடவும்... ...பெருமை" தொல். உரி. சரு, உஉ.

உ. இப்பொருளுக்கு மூலமாகிய "கேட்டிவாயாயின்" என்பது வினையெச்ச வினைத்திரிசொல்லுக்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. சுக.நச.

ங. தொல். கற்பி. சூ. ருக.

௪. கலி. கஅ: ௯ ௩-ஆம் அடிக்குறிப்பிலுளதாகும். அம்பிகாபதிகோவை. ௫௩௦-ஆம் செய்யுள் இங்கும் அறிதற்பாலது.

௫. (அ)"தொன்முதுகடவுள்" என்புழி, இருடியைக் கடவுளென்று கூறிய தற்கு, "முத்தேர்............மற்றக் கடவுள்" என்னும் பகுதியை மேற் கோள்காட்டினர் நச்; மது. ௪௦ - ௪௨. உரை. (ஆ) "முத்தேர் முறுவ லாய்" கலி. ௯௪: ௨௧; ௯௭: ௯. இந்நூற்பக்கம் ௩௧௦: ௨ - ஆம் குறிப்புப் பார்க்க.

௬. (அ)"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇ........ வந்தனன்" (கலி.௩௧:௪௯-௫௦) என்பதும் அதன் உரையும்,(ஆ)"பல்லா

(பிரதிபேதம்) *கேட்பையாயின்யாம். † துறக்கத்து. ‡ இறந்து, || பரத்தையர் அவருள்ளீ, ÷ புக்ககால். ┼ இப்பொழுது பொழுதென், × எக்கடவுள், = கடவுளது வொக்கும். நாவு.........கேளினி. எ - து. பின்னை.........உளவாகலின். அதுகேட்ட.........கூறினன், உவ்வேயமூர்து.

## மூன்றுவது மருதம் உஅ. ௩௪௧

எ - து: பின்னை அந்தக் கடவுள், முத்தையொக்கும் முறுவலையுடையாய்! நாம் மணத்தைச் செய்ய இப் பொழுது *முகுத்தமென்று (க)அம் முகுத்தம் வாய்ப்பச்சொன்ன அந்தக் கடவுள் காணென்றான். எ - று.

புக்கக்கால், காலீற்று வினையெச்சம். முற்கூறிய கடவுடன்னையே இவள் அறியுமாற்றான் மீட்டுங்கூறினன்; அவற்கு எல்லாக் கண்களும் உளவாகலின்.

அதுவொக்கும்

எ - து: அதுகேட்ட தலைவி, நீ கூறியது எனக்கும் ஒக்குமெனத் தன தோல்வாமை கூறினள். எ - று.

நாவு ளழுந்து தலைசாய்த்து நீகூறு
மாயமோ கைப்படுக்கப் பட்டாய்நீ கண்டாரை
வாயாக யாங்கூற†வேட்டீவாய் கேளினி

எ - து: ‡உள்ளே அழுந்துதாவுடனே தலையைச்சாய்த்து நீகூறுங்கூற்றே பொய்; ஆகையினாலே நீ எம்மால் அகப்படுக்கப்பட்டாய்; நீ கண்ட கடவுளரை உண்மையாக யாங்கள் சொல்லக் கேட்க விரும்பினேனே! இனி யாங்கள் கூறக்கேளென்றாள். எ - து.

கஎ பெற(உ)னசை வேட்கையி னின்குறி வாய்ப்பப்
(ங)பறிமுறை நேர்ந்த (ச)‖நகாராகக் கண்டார்க்

---

ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து கடிபுக்க - மெல்லியற், காதன் மனையாளும்" நாலடி. அக. (இ) "நாள் கூட்ட மூர்த்த மவற்றொடு நன்றாய, கோள் கூட்டம் யோகங் குண னுணர்ந்து - தோள் கூட்ட, லுற்றானு மல்லானு மைந்து முணர் வானுந், பெற்றானுட் கொள்க பெரிது" சிறுபஞ்ச. சச. (ஈ) "கணி மொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்" நள. சுயம்வர. கசஇ. என்பவைகளும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "புள்வாய்ப்புச் சொன்ன கணி" சிலப். கஉ: 'முருந்தேர்' (ஆ) "புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும்" பு - வெ. வெட்சி. கச.

உ. (அ) "நின்னசை வேட்கையின்" புறம். ங: உச; (ஆ) "நீர்நசை வேட் கையின்", மணி. உங: ககஉ.

ங. (அ) "செறிநிரை வெண்பலும் பறிமுறை நிரம்பின" குறுந். ஙஙஎ. (ஆ) "பல்லின், பறிமுறை பாராட்டினையோ" கலி. உஉ: சO - கக.

ச. நகாரென்பது எயிற்றின் பெயராதலை, "மடவோர், நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்" (சிறுபாண். ருக - ருஎ) என்பதனாலும் அதன் உரை யாலும் அறிக.

(பிரதிபேதம்) * முகூர்த்தமென்று வாய்ப்ப. † கேட்டிவாய் கேளினி, ‡ உள்ளேயழுந்த, உரையழுந்த. ‖ நகாரகக்கண்டார்க்கு, நகையாரக்கண்டார்க்கு.





இறுமுறை செய்யு முருவொடு நும்மிற்
செறிமுறை வந்த கடவுளைக் கண்டாயோ

எ - து: நின்னைப் பெறுதலை நச்சின ஆசையாலே நீசெய்த குறியிடத்தே

தப்பாமல் வந்த கடவுள்; கண்டவர்களுக்குஇறந்துபடும்நிலைமையைச் செய்யும் வடிவோடே (க)விழுந்தெழுந்த முறைமை சேர்ந்த எயிற்றினையுடையராய் நம்மனையிடத்தே சேரும் முறைமையோடே வந்த கடவுளரை நீ கண்டாயோ வென்றான். எ - று.

* நகர், ஆகுபெயர்.

(உ)பொருளதனைப் பெறுதல்நச்சின ஆசையாலே நின்மனத்திற் கருதிய கருத்துக்களெல்லாம் வாய்ப்பப் பறித்துபோம் முறைமையைச் சேர்ந்த † கடவுள்; மனவேட்கையை அடக்கும் ‡முறைமையை இகழாராய்த் தம்மைக் கண்டவர்களுக்குத் தீவினை இறும் முறைமையைக் கொடுக்கும் வடிவுடனே நம் இல்லிடத்தே வந்த கடவுளரைக் கண்டாயோ || வென வேறுமொரு பொருள் தோன்றியவாறு ÷காண்க.

வாய்ப்பப் பறிமுறையென்றார், வேரோடே பறிதலின். செறிதல்-அடக்கம்; + நகை, எள்ளல்.

உக நறுந்தண் டகரமு ஞானமு நாறு
நெறிந்த குரற்கூந்த லணிக் கொப்ப
நோக்கிற் பிணிகொள்ளுங் கண்ணொடு மேனாணீ
(ங)× பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ

---

க. "கூரெயிற்று முகை வெண்பல்" (கலி. ௯௮: ௪) என்பதும் அதன் உரையும் அவ்வுரையின் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. பொருளதனை யென்றும் படிக்கலாம்.

ங. (அ) "பூப்பலி செய்ம்மின்" (ஆ) "ஒண்டொடித் தடக்கையி னொண் மலர்ப் பலிதூஉய்" (இ) "பூப்பலி செய்து" (ஈ) "வெண் மருப் பிரட்டைய வேழ மீமிசைக், கண்மருட் டுறப்பன கமலப் பூப்பலி, விண்மருட் டுறப்பன வேந்தி வேதியர், மண்மருட் ரெப்பதோர் வகை யின் மன்னினார்" (உ) "பேரொளிப் பீதக வுடையர் பைம்பொனு, வாரொளிதழுவியவலர்செய்பூப்பலி, போரொளியானைமே னிரைத்துப் போர்த்தனர்" (ஊ) "நிரந்தன பூப்பலி" (எ) "நிரந்து தேனிமிர் பூப் பலி" (ஏ)"சக்கொடு சிலம்பு நூலும் பாதசா லகமுந் தாழப், பொங்கு

(பிரதிபேதம்) *சுகோருபெயர் பொருளினை, (கை ஆகுபெயர்களென்றும் பாடம்என்பது முன் பதிப்பு) † கடவுள், வாய்ப்பப்பதியென்றார் வேரோடே பறிதலின் மனவேட்கை ‡ முறையை, || என்று, ÷, காண்க செறிதல். + கை எவ்வல். × பூப்பலியிட்ட



எ - து: பார்வையாலே பிணித்தலைக் கொள்ளுங் கண் வருத்தத்தாலே கறிய [தென]குளிர்ந்த * மயிர்ச் சாந்தமும் புழுகும் நாறும் அறல்பட்ட (க) பற்றத்தையுடைத்தாகிய மயிர்க்கு நாட்காலத்து அணியும் அணிக்குப் பொருந்த நீ முதனாட் பூவைப் †பலியாகப்போகவிட்ட கடவுளரைக் கண்டாயோ வென்றாள். எ - று.

ஒடு, ஆலாக்குக. மேல், கடவுளென்றதற்கேற்பப் பலியென்றார். அருளைக்கின்றப் பிணியை வாங்கிக்கொள்ளும் ‡ கண்ணினராகையாலே கூந்தலையுடையாள் நாட்காலத்து அணிதற்கேற்பப் பூப்பலியைக் கைவிட்டு அர்ச்சித்த கடவுளரென்பதும் ஒன்று. கூந்தல், ஆகுபெயர். || பராசத்தியைப் பூவால் அர்ச்சித்த கடவுளரென்றுணர்க. நீ கண்டாயோவென்க.

உடு (உ)ஈரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச்
சூர்கொன்ற செவ்வேலாற் பாடிப் பலநாளு
மாராக் கனைகாமங் குன்றத்து நின்னொடு
மாரி யிறுத்த கடவுளைக் கண்டாயோ

எ - து: கெடாத விரதத்தாலே முகம் குதிரைமுகமும் உடல் மக்களுடலுமாகிய இரண்டு அழகுக்குப் பொருந்திய சூரபன்மாவைக் கொன்ற சிவந்த வேலையுடைய முருகனைப் புகழ்ந்து நிறையாத செறிந்த காம வேட்கையாலே திருப்பரங்குன்றினிடத்தே நின்னோடே மாரிக்காலத்தே பலநாளுந் தங்கின கடவுளரைக் கண்டாயோ வென்றான். எ - று.

இனி, பெண்ணும் ஆணும் ஆகிய இரண்டு× அழகினுக்கும் பொருந்திய செவ்வியதாகிய (ங)+ எழுச்சியையுடைய இறைவனை அமையாத செறிந்த வீடுபேற்றில் ஆசையாலே பலநாளும் புகழ்ந்து கொடுந்தொழில்களைக் கொன்ற

பன் முரச மார்ப்ப வில்லுறை தெய்வும் பேணிக், கொங்கலர் கூந்தற் செவ்வா யரம்பையர் பாணி.கொட்டி, மங்கள கீதம் பாட மலர்ப்பலி வகுக்கின்றனரை" என்று பூப்பலி பலநூல்களிலும் கூறப்படுதல்காண்க.

க. பற்றம் - கொத்து; கற்றையென்றும் கூறப்படும்.

உ. (அ) "இருபே ருருவி னொருபே ரியாக்கை.........மாமுத றடிந்த மறு வில்கொற்றத், தெய்யா நல்லிசைசெவ்வேற் சேஎய்" முருகு. ருஎ-சக.

(ஆ) "ஈருருவத் தொருபெருஞ்சூர் மருங்கறுத்த விகல்வெய்யோய்" தொல். செய்யு. கடுஉ. பேர். நச். மேற்கோள்; 'செஞ்சுடர்'

ங. எல் என்பது எர் என்பதுபோலவே எழுச்சி யென்னும் பொருளில் வருதலை(அ)'எல்பெற்று' (சீவக. ங0உ.) என்றதற்கு, இவர் 'எல்-மன வெழுச்சி' என்று சொற்பொருள் குறித்து உணர்ச்சிபெற்று, என்று கருத்துரைஎழுதியிருப்பதும் (ஆ)"எதிர்மலர்க்குவளையிடுநீர்சொரிந்து,

(பிரதிபேதம்) * மயிர்ச்சந்தனமும், † பலியாகவிட்ட, ‡ கண்ணிடையா ரகைபாலே, || பாசத்தினைப், × அழகுக்குப்பொருள்ள. + எழுச்சியுடைய,



கெடாத விரதத்தோடே மலைகளிலே மாரிக்காலத்திலேநின்னேடுஉறவுகொண் டிருந்த தவஞ்செய்த கடவுளரைக்கண்டாயோவென்பதும் ஒன்றுதோன்றிற்று. சத்தியுஞ் சிவனும் ஒன்றாகிய வடிவைப் பாடி என்க. நின்னெடென்ற ஒடு விற்கு உறவு கொண்டிருந்தவென ஒரு வினை வருவிக்க.

உகூ கண்ட கடவுளர் தம்முளு நின்னை
வெறிகொள் வியன்மார்பு வேறாகச் செய்து
குறிகொளச் செய்தார்யார் செப்புமற் றியாருஞ்
(க்)சிறுவரைத் தங்கின் வெகுள்வர் *செறுதக்காய்
தேறினேன் சென்றீநீ †செல்லா விடுவாயே
(உ)னற்ற ரகலத்துக்‡கோர்சார மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு
முட்டுப்பா டாகலு முண்டு.

எ - து: நீ கண்ட கடவுளர் தங்களுள்ளும் நின் மணத்தைத் தன்னிடத்தே கொண்ட அகலத்தையுடைய மார்பைப் பழையதன்மை குலைந்து பேரம்படி பண்ணிப் பிறர்முயங்காதபடி அடையாளமாக வடுப்படுத்துதலைச் செய்தார் யார் சொல்லு; ||பின்னை அப்பரத்தையர் யாவரும் சிறிதாகியகாலத்தளவு இங்கேதங்குவையாயின் ÷கோபிப்பார்; ஆகையினாலேஎம்மாற்செறுக்கத் தக்கவனே! நின் +பொய்மையெல்லாம் உள்ளபடி யான் அறிந்துதெளிந்தேன்; இனி அவர்பாற் செல்லாதொழிவையாயின், நினது நல்ல தாரையுடைய மார்பத்துக்கு ஒரு முட்டுப்பாடு உண்டாமது; நீ சாரும்படி நின்னை முயங்கிய செடிய ×கரியகூந்தலையுடைய பரத்தையரெல்லார்க்கும் முட்டுப்பாடு உண்டாதலும் உண்டு; ஆதலால் ஆண்டே செல்லெனப் புலந்து கூறினாள். எ - று.

தம்முளுமென்ற உம்மை, சிறப்பும்மை.

இனி, கடவுளர்தம்முளும் வியன்மார்பையுடைய நின்னை மனம் வேறாகப் பண்ணி வானப்பிரத்தத்தைக் குறித்தல் கொள்ளும்படி பண்ணின இருடிகள்

---

சேச் சந்தனந் தாதோ டப்ப, வேஎல் பெற்றெழுந் திருந்தன னுரைத்தென" (பெருங். (உ)க: கஙுச-கஙு௮) எனவருவதும் வலியுறுத்தும்.

௧. சிறுவரை - சிறிதுநாழிகை. அகம். கங: அ. பு-வே. பெருந். கஎ. இது, சிறிதுநாழிகைத்தூரமான இடமென்னும்பொருளிலும்வரும்ஐங்.௩அஅ.

௨. "இல்லது காய்தலென்பது, களவின்கட் போலாது தலைமகற்கு இல்லாததனை உண்டாக்கிக் கொண்டு காய்தல்; அது: 'நற்றாரகலத்து... ......முண்டு' எனவரும்; இது கடவுளரையே கண்டு தலைவி

(பிரதிபேதம்) * செறுத்தக்காய். † செல்லாய் விடு, ‡ கொளுசாரமேவிய. ||பின்னையாவரும். ÷அப்பரத்தையர் கோபிப்பார், + பொய்மெய்யெல்லாம், × கருங்கூந்தலையுடையசெல்லார்க்கும்,

பார்தான் சொல்லு; யாவரும் வெகுள்வர்; அவர்பாற் செல்லாதொழிவாயேல், நல்ல ஒழுக்கினையுடைத்தாகிய கடாவின்புறத்தே தோன்றும் விடைகளை யுடைய, (க)நீரைப் பலகாலுஞ் சாருதலாலே ஈரம்பொருந்திய நெடிய கரிய சடையினையுடைய இருடிகளெல்லார்க்கும் முட்டுப்பாடு பிறத்தலும் உண்டென்பதும் ஒன்று தோன்றுகின்றது. அவர்க்கு முட்டுப்பாடு நினக்குக் கூடும் பொருள்கள்*கூடாமையாலுள்ளமுட்டுப்பாடு. தார்-ஒழுங்கு(உ) அகலமென்றது, பரசமயத்தார் கூறுங் கடாவிற்கு விடையாகக் கூறும் †விகற்பங்களை. "தன்னூன் மருங்கினும் பிறநூன் மருங்கினுந், துன்னிய கடாவின் புறத்தோன்றும் விகற்பம், பன்னிய வகல மென்மனார் புலவர்" "தெள்ளிது" (ங) என்றதனால், நின்னை மார்பை வேறாகச் செய்தென்[றார்](றலுமாம்).

இதனால், தலைவிக்கு இழிவும் தலைவற்கு அசைவும் பிறந்தது.

"மரபுநிலைதிரியா‡மாட்சிய"என்னும்(ச)சூத்திரத்தில், தலைவிகடவுளைப் பரத்தையராகக் கூறுமென்பது கூறினும்.

இஃது ஐஞ்சீரடுக்கி வெண்பாவாய்வந்து இடைநிலைப்பாட்டுப் பெற்று வருதலிற் கலிவெண்பாவுறுப்பொத்துப் பாவேறுபட்டு வந்த கொச்சகம். (உ௯)

(௩௦.) என்னேற் றணைகொல்லோ
நீரு ணிழற்போ லுடங்கிய மென்சாய
லீங்குருச் சுருங்கி
யியலுவாய் நின்னே நொசிவுவே னின்றித்தை ;

---

னும், நெட்டிருங் கூந்தற் கடவுளையே கண்டா யென்று இல்லது சொல்லிக்காயுமாகலின் அப்பெயர்த்தாயிற்று" என்பர். பேர்; தொல். மெய்ப். சூ. உ௪ இ - வி. நூலாரும் இதன் முன் வாக்கியத்தை எழுதி இம்மெய்ப்பாட்டிற்கு இதனை மேற்கோள்காட்டினர்; இ-வி.சூ. ௬௪௦.

க. "நீர் பலகான் மூழ்கி" (பு - வெ. வாகை. க௪) "நெடுவரை யருவி யாடி.........புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே" (புறம். உ௫௧) என்னும் தாபதவாகைத்துறைச் செய்யுட்கள் இங்கே அறிதற்பாலன.

உ. அகலமென்பது சூத்திரத்துப் பொருளைத் தூய்மைசெய்தற்குக் கடாவிடையுள்ளுறுத்து உரைக்கும் உரையென்பர் இறையனாரகப்பொரு

ஞரைகாரரும.

ங. தோல். வேற்றுமைமயக்கியல். சூ. ௫.

ச. தோல். அகத். சூ. சஅ; இச்சூத்திரத்தினுரையில் இவர் இச்செய்யுளை, காவற் பாங்கினுங்கோர் பக்கத்தில் தலைவன் கூறியவற்றைக், கற்பியலுள், தலைவன்பகுதியினீங்கிய தகுதிக்கண் தலைவி, பரத்தையராகக் கூறியதற்கு மேற்கோளாகக் காட்டியிருக்கிருர்.

(பிரதிபேதம்) * கூழுமலாதுன்ன. † விகற்பங்கள், ‡மாட்சிமையென்னுஞ்.

௫.௯௪ கலித்தொகை ௯௪.

௫ அன்னையோ, காண்டகையில்லாக் குறளுழிப்போழ்தினு
ஞண்டலைக் கீன்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவ லென்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று ;

௯ மாண்ட, எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையோரா லென்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லே
னீகல்கி னுண்டென் னுயிர் ;

௧௩ குறிப்புக்காண், வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன
கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை
யில்லத்து வாவென மெய்கொளீஇ யெல்லாநின்
பெண்டி ருளர்மன்னோ கூறு ;

௧௭ நல்லாய்கேள், உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது ;

௨௨ போசித்தை, மக்கண் முரியேநீ மாறினித் தொக்க
மரக்கோட்டஞ்சேர்ந்தெழுந்த பூங்கொடிபோல
நிரப்பமில் யாக்கை தழீஇயின ரெம்மைப்

புரப்பேமென் பாரும் பலராற் பரத்தையென்
பக்கத்துப் புல்லியா யென்னுமாற் றொக்க
வுழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னி
னிழிந்ததோ கூனின் பிறப்புக் கழிந்தாங்கே
யாம்விழ்து மென்றுதன் பின்செலவு முற்றியாக்
கூனிகுறை யுக்குறைவு காண் ;

௩௧ யாமை யெடுத்து நிறுத்தற்றாற் றோளிரண்டும் வீசி
யாம்வேண்டே மென்று விலக்கவு மெம்விழுன்
காமர் நடக்கு நடைகாண் கவர்கணைச்
சாமனார் தம்முன் செலவு காண்க ;

## மூன்றாவது மருதம் உ௯. ௫௪௭

டுறி ஓலகாண், நம்மு ணகுதற் றொடீஇயர் நம்முனு
முசாவுவங் கோனடிதொட் டேன் ;

௩௭ ஆங்காக, சாயலின் மார்ப வடங்கினேன் ஏஎ
பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாமை வேண்டுவ
றண்டாத் தகநிருவ வேறுகக் காவின்கீழ்ப்
போத ரகடாரப் புல்லி முயங்குவேந்
தகடப்பு காட்சி யவையத்தா ரோலை
முகடுகாப் பியாத்துவிட் டாங்கு.

இஃது "அடியோர் பாங்கினும் * வினைவலர் பாங்கினுங், கடிவரை இலபுறத்தேன்மனூர் புலவர்"(க)என்பதனல் அடியோராகிய கூனுங்குறளும் .றழ்ந்து †கூறிக்கூடியது.

இதன் பொருள்.

என்னேற் றனைகொல்லோ
நீரு ணிழற்போ லுடங்கிய மென்‡சாய
||லீக்குருச் சுருங்கி

யியலுவாய் நின்னோ டுசாவுவே னின்றீத்தை

க. தோல். அகத். சூ. உ௫. (அ) இச்சூத்திரத்தின் உரையில் 'அடித்தொழில் செய்வாரும் வினைசெய்வாரும் அகத்திணைக்குரியரல்லர்; அகத்திணையாவது: அறத்தின் வழாமலும் பொருளின் வழாமலும் இன்பத்தின்வழாமலும் இயலல்வேண்டும். அவையெல்லாம் பிறர்க்குக் குற்றேவல் செய்வார்க்குச் செய்த' லரிதாகலானும் அவர் நாணுக் குறைபாடுடையராதலானும் குறிப்பறியாது வேட்கை வழியே சாரக் கருதுவ' ராதலானும் இன்பம் இனிது நடத்துவார் பிறரேவல் செய்யாதாரென்பதனானும் இவர் புறப்பொருட்குரியர்' என்று கூறி, இச்செய்யுளை மேற்கோள்காட்டி, 'இதனுள் ஒருவரையொருவர் இழித்துக் கூறினமையான் அடியாரென்பதூஉம் மிக்க காமத்தின் * வேறுபட்டு (* வேட்டு என்றும் பிரதிபேதம்) வருதலாற் பெருந்திணைப்பாற் படுமென்பதூஉம் கண்டுகொள்க. இதுதானே கைக்கிளைக்கும் உதாரணமாம்' என்றார் இளம்பூரணர்; (ஆ) இழிகுலத்தார்க்கு அகப்புறக் கைக்கிளை உரித்தென்பதற்கு இதனை மேற்கோள் காட்டினர் நாற்கவிராச நம்பியென்பவர்; நாற்கவி. சூ. உசஉ.

(பிரதிபேதம்) *வினைவல பாங்கினும், வினைவர் பாங்கினும், †கூடிக்கூறியது, ‡ சாயலினுஞ் சுருக்கி, ||சங்குச் சுருக்கி.



. எ - து: கரையில் நின்றதொன்றின் நிழல் நீருக்குள்ளே *நுடங்கினாற் போல நுடங்கிய மெல்லிய மென்மையோடே இவ்விடத்து உடலிலே கூன் †புறப்பட்டு நடக்கின்றவளே! நின்னோடு ஒருகாரியத்தை உசாவுவேன்; அவ்வனம் உசாவுதற்கு நீ என்ன நல்வினையைச் செய்தாய்‡காண்? இங்ஙனே நித்பாயாகவென்றான் குறளன். எ - று.

இயலுவாய்..................நின்றீத்தை, வினைத்திரிசொல்.

கு அன்னையோ, காண்டகை யில்லாக் ||குறளுழிப் போழ்தினை
(க) ஞண்டலைக் கின்ற பறழ்மகனே நீயெம்மை

வேண்டிலவென்று விலக்கினை நின்போல்வார்
நீண்டப் பெறுபவோ மற்று

எ - து: அதுகேட்ட கனி, அம்மையோவென இகழ்ந்து தன் நெஞ்சிற் கூறி, கண்ணுற் பார்க்குந் தன்மையில்லாத குறளாய்ப்பிறத்தற்கு ஏதுவாகிய நாழிகையின் முகூர்த்தத்தே (உ) ஆண்டலைப்புள்ளுக்குத் தன்பெடையீன்ற பறழாய மகனே! நீ எம்மை விரும்புவேனென்று போகாமற் றடுத்தாய்; நின்னைப் போற் குறளாயிருப்பார் பின்னை என்னைத்தீண்டப்பெறுவார்களோவென்றான். எ - று.

---

க. தலைமகன் தலைமகளாகிய இருவரும் இளமைப் பருவம் நீங்கியவழி அறத்தின்மேல் மனம்நிகழ்த்தலன்றிக் காமத்தின்மேல் மனம்நிகழ்த்த லாகிய இளமைதீர்திறப் பகுதியில், தலைமகன் இளமைதீர்திறத்திற்கு "ஆண்டலைக்கின்ற..............மற்று" என்பதும், தலைமகள் இளமை தீர்திறத்திற்கு "உக்கத்து மேலு...........சிறிது" என்பதும் மேற்கோள்; தொல். அகத். ரு. ருச. இளம்.

உ. (அ) ஆண்டலையென்பது பாழ்பட்டவிடத்தே வதியும் ஒரு பறவை; இகோட்டில்வதிவதாகப் பெரும்பாலுங்கூறப்படுகின்றது. (ஆ) இஃது "ஊண்டலை துற்றிய வாண்டலைக் குரலும்" (மணி. சு: எஎ) என் பதனாலும் (இ) "ஆண்டலை யடிப்பும்" (சிலப். கடு: உகக) என்பதற்கு, 'ஆண்டலைப்புள் வடிவாகப்பண்ணிப் பறக்கவிட உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பொறி நிரைகளும்' என்று அடியார்க்குநல்லார்

எழுதியிருக்கும்உரையாலும் தலைமூளையை உணவாகவுடையதென்றும் (ஈ) "யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பிலவழைக்கும்" (நீல. தரும.

ரு) என்பதனால் கள்ளிரவில் கூட்டமாகவந்து கத்துமியற்கையுடைய தென்றும் தெரிகின்றது. (உ) இஃது ஆண்மகன் றலைபோன்ற தலையை யும் புள்ளின் உடல்போன்ற உடலையுமுடையது; (ஊ) இஃது, இவ்

விடத்தும் திருமுருகாற்றுப்படையுரையிலும் இவரெழுதியகுறிப்பாலும்
(எ) "தூண்டருங் கணைபடத் துமிர்ந்து துள்ளிய, நீண்டரு நெடுந்தலை

(பிரதிபேதம்) * நடக்கிறும், † பிறப்பட்டு, ‡ நான். || குறைமொழிப்போறி குண்டலைக்
கேண்ட, ÷ முகுத்தத்தே.

## மூன்றுவது மருதம் உக. ௨௪௧

"பறமெனப் படினு முறழாண் டில்லை" (க)என்பதனால், பறழ் பறவைக்
ாகாதாயினும் இவனை, 'யாமையெடுத்து நிறுத்தற்றால்' என ஊர்வனவாகக்
டறலிற் பறழென்றார். தலை, ஆண்டலையா யிருத்தல் பற்றி ஆண்டலைக்கு
'ன்ற மகனென்றான்.

க * மாண்ட, எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன † நிறையோ லென்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் ‡ பொறீஇ நிறுக்கல்லேன்
னீநல்கி னுண்டென் னுயிர்

எ - து: அதுகேட்ட குறளன், மாட்சிமைப்பட்ட கலப்பையிற் றைக்கும்
உ)படைவாள்போலே திரிடங் கூனுய்ப் புறப்பட்டு திரிடம்முன்னே வளைந்து
வலிய முறித்து விட்டாற்போன்ற நிறைந்த அழகாலே என்னைப் பொறுக்
கல்லாத காம நோயைச் செய்தாய் ; யான் ஆற்றிநிறுக்கமாட்டேன்; நீ அருளு
வாயாயின் என்னுயிருண்டு; இனி நின்னினைவைக் ||கூறவாயென்றான். எ-று.

பொறியும் பாடம்.

கஉ: குறிப்புக்காண், (ஈ)வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன
கல்லாக் ÷ குறள கடும்பகல் வந்தெம்மை

---

தழுவிச் சேர்ந்தன. பூண்டெழு 'கரதலம் பொறுக்க வாதன, வாண்
டலை நிகர்த்தன வெருவை யாடுவ" என்னும் கம்பர்வாக்காலும் அறிய
வாகும். (ஏ) இச்சொல்லுக்குப் பொருள் 'யானைமுகன்' 'ஓடியிடை'

என்பவற்றிற்குப் பொருள் கொள்ளுதல்போலக் கொள்க. (ஐ)"நீண்ட பலிபீடத்தி லரிக் தலைத்த நெடுங்குஞ்சிச் சிரத்தைத்தன் வினமென் றெண்ணி, யாண்டலைப்புள் ளருகிருந்து பார்க்கு மாலோ வணைதலு மச் சிரமச்ச முறுத்து மாலோ" என்று சயங்கொண்டார் கூறுதலால், இப்புள்ளே ஆண்மகன் றலைபோன்றதென்று கூறுவாரும் உளர்.

க. தொல். மரபியல். சூ. எ.

உ. இதுகொழுவென்றும்காறென்றும்கூறப்படும்; குத்தியென்பாருமுளர்.

ந. (அ)"வல்லென்கிளவி தொழிற்பெய ரியற்றே" "காயும் பலகையும் வருஉங் காலே, யாவயி னுகரங் கெடுதலு முரித்தே, யுகரங் கெடுவழி யகர நிலையும்", (தொல். புள்ளி. சூ. எஅ - எக) என்புழி, கெடுதலு மென்பதில், "உம்மை எதிர்மறை யாதலான் உகரங் கெடாதே நின்று ........'வல்லுப் பலகை' என வருதலுங் கொள்க" என்பர். நச்; (ஆ) "வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும், பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்" (நன். மெய்யீற். சூ. உஅ) என்பதனுரையில்

(பிரதிபேதம்) * மாண்ட, † கிளையோர, ‡ போதிறக்கல்லேன், || கூறென்றுள், + குமனே.

72



யில்லத்து *வாவென மெய்கொளீஇ யெல்லாநின்
பெண்டி †ருளர்மன்னோ கூறு

எ - து: அதுகேட்ட கூனி, இவன் மனக்குறிப்பைப் பாராமெ நெஞ் சொடேறி, (க)நெத்தப்பலகையை எடுத்து நிறுத்தினைப்போன்ற, மகளிரைக் கூடும் முறைமையைக் கல்லாத குறளனே! (உ)மக்கள் இயங்காத உச்சியம்பொழு திலே வந்து எம்மைக் கையைப்பிடித்து நின்னில்லத்தே வாவென்று சொல்லு தற்கு எடா! மிகவும் நின்னுடைய பெண்டிராயிருப்பார் சிலருளரோ? சொல்லாயென்றாள். எ - று.

கஎ நல்லாய்கேள், உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
‡கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் ||புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளத்துப் புல்லலு மாற்றே னருளிமோ
பக்கத்துப் ÷ புல்லச் சிறிது

எ - து: அதுகேட்ட குறளன், × நல்லாளே ! தலைக்குமேலும் நடு வில்லை யாய் வாள்போன்ற வாயையுடைய கொக்கை உரித்தாற்போன்ற வளைந்த + மடுப்பையுடையாய் ! யான் கூறுகின்றதனைக் கேள்; நின்னை யான் மார்

---

'அவ்வுமென்ற உம்மையான், உகரப்பேறே வலியுடைத்தென்க' என்று மயிலைநாதரும் அவ்வுமென்பது இறந்தது தழுவிய வெச்ச வும்மையென்றவிருத்தியுரையாசிரியரும் இராமாநுசகவிராயரும் கூறி, வல்லென்பது பலகை யென்பதனொடு புணர்வுழி வேற்றுமையில் உகரச்சாரியை பெற்று வந்ததற்கு, 'வல்லுப் பலகை' என்பதை மேற் கோள் காட்டினர். இதற்கு வல்லினது அறைவரைந்த பலகை என்று பொருள் கூறுவர்.

௬. சூதப்பலகையென்பது வல்லினது அறைகீறிய பலகையென்னும் பொருளிலே கன்னடத்தில் இருவகை வழக்கிலும் பண்டும் இன்றும் சிறிது திரிந்துவழங்குகின்றதென்பர்.

௨. தடியென்பது விளக்கமென்னும் பொருளில் வருதற்கு தடும்பகவென் பது, தொல். உரி. ௯. அஎ: சே; அடு. நச். மேற்கோளாகக் காட்டப் பட்டிருக்கிறது; ஆயினும் இவ்விடத்துக்கு அதனினும் வரைவென்னும் பொருள் சிறந்ததென்றுகொண்டு இவ்வாறு கூறினர்போலும். 'இவ் வுரிச்சொல் பெரும்பாலும் திரிந்து நிற்கும்' என நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * வாயென்றமைக்கொழியவெல்லா, † உளமன்னோ, ‡ கொக்கரித்தன்ன, || புல்லினெஞ்சுனெஞ்ச, ÷ புல்லல் சிறிது, × நல்லோளே, + மடிப்பை யுடையாய்.

பிடத்தே சென்று புல்லுவேனாயின் என்னுடைய நெஞ்சிலே அச்சுடன் கன்றும்; முதுகிலேபுல்லுவேனாயின்முதுகிற் சுடன்(க)அக்குளுக்காட்டுதலை உடைத்து; ஆதலால், கூடுதலேயன்றி முயங்குதலையுஞ் செய்யமாட்டேன்; இனிப் பக்கத்தே சிறிது முயங்கும்படியாக வருவாயாகவென்றான். எ - று.

நடுவுயர்ந்தென்றது "கோன் †'புயர்ந்தது" என்றாற்போல நின்றது.

உஉ (உ) ‡போ(ங)சித்தை

எ - து: அதுகேட்ட கூனி, சீ! கெட்டதன்மையையுடையவனே! நீ எம்மிடத்தினின்றும் போவென்றாள். எ - று.

மக்கள் (ஆ)முரியேநீ மாறினி,ந் தொக்க
மரக்கோட்டஞ் சேர்ந்தெழுந்த பூங்கொடி போல
நிரப்பமில் யாக்கை ‖தழீஇயின ரெம்மைப்
புரப்பேமென் பாரும் பலராற் பரத்தையென்
பக்கத்துப் புல்லீயா யென்னுமாற் றொக்க

---

க. அக்குளுக்காட்டுதல் - கக்கமுதலிய உறுப்பில் தீண்டிக் கூச்சமுண்டாக்குதல்; இஃது, அக்குளுப்பாய்ச்சுதலெனவும் வழங்கும்; இப்பொருளில் இக்காலத்து, கிச்சுக்கிச்சுமூட்டுத லென்னும்சொல், பெருவழக்காக உள்ளது.

உ. உயர்திணை அஃறிணையாய்ச் சேறலின்கட் டிணைமயக்கவந்ததற்கு, 'போய்ச் சித்தை வந்தது; போயிற்று' என இ - வி. சூ. உகக - இல், ஒருமேற்கோள் காணப்படுகின்றது; செய்யுளின்பத்துக்கும் அதுவே சிறந்ததாக வுள்ளது; அவ்வாறு பிரதிபேதமுமுள்ளது; அந்தப் பிரதியிலுள்ளஉரையும் போசித்தை யென்னுமூலத்திற்கேபொருந்துகின்றது.

ங. (அ) சித்தையென்பதற்கு, இக்குப்போலவே கலி. அச: கஅ-இல் கைவிடப்படுமவனென்றும் கலி. அக: ஙo - இல் கைவிடப்பட்டவனென்றும் அன்பாலாகப் பொருள் கூறப்பட்டிருக்கிறது; (ஆ) "குரவன் மேலவா ஞயினுங் குணமிழி சித்தை, விரவு சிடனாய் விடினவன்

எ - து: அதுகேட்ட குறளன், யாம் நின்னை விரும்புவேமென்று கூறித் தன்பின்னே செல்லுதல் செய்தேயும் அதற்கு மனம்பொருந்தாத கூனி நம் அருகுநின்றும் அவ்விடத்தே போய் நடக்கும் நடக்கத்தை நெஞ்சே பாராயென அவன் கேட்பக் கூறினன். எ - று.

உற்றீயா, பெயரெச்சமறைத்திரிசொல்.

௩௧ யாமை யெடுத்து நிறுத்தற்றோளிரண்டும் வீசி
யாம்வேண்டே மென்று விலக்கவு மெம்வீழும்
+காமர் நடக்கு நடைகாண்(௪) கவர்கணைச்
சாமனார் தம்முன் செலவு × காண்க

---

க. "உழுந்தினும்............பிறப்பு" என்பது ஒப்பின் வகை பத்தனுள், பிறப்புவகையின் பாற்படுமென்பர் பேர்; தோல். மெய்ப். சூ. உ௫.

உ. பரத்தை யென்பது பேதை யென்பதுபோல உயர்திணை யொருமை யிரண்டிலும் வரும்போலும். கிடைத்த பிரதிகளிலெல்லாம் 'பரத்தை யென்' என்றே உள்ளது.

௩. 'நயக்கப்பட்டிருக்கின்ற' என்றும் படிக்கலாம்; 'இருக்கின்ற' என்பது வருவிக்கது போலும்.

௪. (அ) "கவேதொடைக் கவர்கணைக்காமன்" சீவக. ௧௨௧௮. (ஆ) "கவர்கணை சோன்சிலைக் காமனியனெறு, மையலுள்ளமொடு" பெருங். (உ) ௧௫:

(பிரதிபேதம்) *கேட்டதிலைவகுருளின், † பக்கத்தைப் புல்லுநமே, ‡ நின்றும். || தம்பின் செலவு, + காமீடீடக்கு நடைகாண்க வார்கேன். × என் கண்பது.

## மூன்றாவது மருதம் உகூ. ருள்ச

எ-து: அதுகேட்ட கூனி, வருகின்ற(க)யாமையை எடுத்து* நேரேநிறுத் தினாற்போல நெடியனைத் (உ)தோளிரண்டையும் விலாவுக்குள்ளே வீசி, யாம் நின்னை விரும்பேமென்று விலக்காநிற்கவும் எம்மை விரும்பி வருகின்ற காம

ஞர் நடக்கும் நடையை நெஞ்சே காணுயென்றாள்; அதுகேட்ட குறளன் ஒருவரை ஒருவர் மூயக்குதற்குக் காரணமான கணையினையுடைய(ங)சாமனார் தமையனாகிய காமனார் நடையை நீ காணுயென நடந்து†காட்டினன். எ - று.

௩௫ ஓஒகாண், ‡நம்மு ணுகுதற் றொட்டு இயர் நம்முணு

‖முசாவுவம் கோனடிதொட் டேன்

எ - து: அதுகேட்ட கூனி, ஓஒ! ÷இவன் நடையைப்பாராயென நெஞ்சொடு கூறினள்; அதுகேட்ட குறளன் நம்முள்ளே நாம் கூடி மகிழ்தற்கு யான் நின் மெய்யைத் தீண்டுதற்குக் குறி யிடம் + இன்ன இன்ன இடமாமென்று நம்முள்ளே நாம் உசாவக்கடவேம்; இனி நின்னை இகழ்ந்த கூருமைக்கு அரசன் (௩)அடியைத் தொட்டுச் சூளுற்றேXனென்றான். எ - று.

௩௯, இகழ்ச்சிக்குறிப்பு.

---

௧௧-௧௪. (இ) "காமவேள் கவர்கணை" (ஈ) "காமனு, ரைதுவாங் கவர்கணை" (உ)"அனங்க னைம்மலர்க், கவர்கணை" சூளா. நகர. ௧௪. குமார. ஙி;௧௧. எனப் பலவிடத்தும் வருவன ஒப்புநோக்கற் பாலன. (ஊ) "கவர்வு விருப்பாகும்" என்பது தொல். உரி. ரு. ௬௪.

௧. (அ) "நீலத் தெண் ணீர் நீந்து மாமையிற், கோலக் குறுக் கை வாட் கூட்டுட் கழீஇப், பாலிகை பற்றிய குறள்வழிப் படரவும்" பெருங்.(௧) ௪௬: ௨௧௧ - ௨௧௩. (ஆ)"கொட்டுப் பிடிபோலுங் கூனுங் குறளாமை, விட்டு நடப்பனபோற் சிந்தும்" சீவக. ௨௧௧௪.

௨. "வீரம் படக்கையை மெய்வழி வீசித், தேரை நடப்பன போற்குறள் சிந்திளே, டோரு நடந்தன" (சீவக. ௬௩௧.) என்பதும் அதில்,

"கையை மெய்வழி வீசி" என்பதற்கு, 'விலாப்புடைக்குள்ளே கையை வீசி' என்று எழுதியிருக்குமுரையும் இங்கே அறிதற் பாலன.

௩. காமனுக்குச் சாமனென்ற தம்பி யொருவனுண்டென்பதை, இந்நூற் பக்கம், ௪௭௪: ௩-ஆம் குறிப்பால் அறிக.

௩. (அ) "ஐய சூளி னடிதொடு குன்றேறி, வையைக்குத் தக்க மணற்சேர் குன் கூறல்" பரி. அ: ௭௦ - ௭௧. (ஆ) "நின் னடிதொடு கடனிது" (இ) "குமரிநின் னடிதொடு படிகட னிது" சிலப். ௧௨: 'கடவோர்' 'அடி யொடு' (ஈ) "மதிவாணன் முகத்து மணிமேகலைதனை, யொழியப் போகே னுன்னடி தொட்டேன்" மணி. ௧அ: ௧௭௦ - ௧௭௧.

(பிரதிபேதம்) *கோலிறுத்தினும், †காட்டினுள் ஒரிகழ்ச்சிக்குறிப்புஅதுகேட்ட, ‡ம்முறு மறைம்பெருமதிய, || [illegible], [illegible]. + [illegible], + [illegible], × [illegible] சாயலின்,

௧௭ ஆங்காக, (௧)சாயலின் மார்ப *வடங்கினேன் ஏஎ
பேயும் †பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் ‡கண்டார் நகாமை வேண்டுவ
||றண்டாத் தகடுருவ! வேறாகக் ×காவின்கீழ்ப்
+போத ரகடாரப் புல்லி (௨)முயங்குவேந்
துகடபு காட்சி யவைபத்தா ரோலை
முகநீ**காப் பியாத்துவிட் டாங்கு

எ - து: அதுகேட்ட கூனி, அப்படியேயாகுக; யானும் மென்மையால் இனிய மார்பனே! இகழ்ந்து கூறுதலைத் தவிர்ந்தேன்; இனி இக்கோயிலுட் கண்டவர்கள் நம்மை ஏஎயென ††இகழ்ந்து பேயும் பேயுந் தம்மிலே துன்று தலை இக்கூனுங் குறளும் உறுகிற்குமெனக் கூறி நகாதிருத்தலை விரும்புவேன்; ஆதலால், அமையாத பொற்றகடுபோலும் உருவத்தினையுடையாய்! கோயிலுக்கு நீங்கலாகக் காவின்கீழே போதருவாயாக; ‡‡ துகளறுகின்ற அறிவினையுடைய அவையிலுள்ளார் இரட்சிபொருந்தின ஓலையின்றலையைக்கட்டி அதன் தலையிலே (௩) ||||அரக்கிலச்சினை யிட்டுவிட்டாற்போல கிரம்பாத உடலின் உள்வாய் முயக்கம் பெற்ற நிறையும்படி இறுகப் புல்லிக் கூடக்கடவே ××மென்றான். எ - று.

---

௧. "இன்சாயன் மார்பன்" கலி. ௬௫: ௯. என்பதும் அதன் குறிப்பும்

"சாயலின் மார்பின்" கலி. ககஉ: உகஎன்பதும் ஒப்புநோக்கற்பாலன.

உ. இங்குள்ள பிரதிபேதத்தை நோக்கின், "கண்டார் நகாமை வேண்வெ றண்டா" என்பதை ஓரடியாக்கி, பிற்பகுதியைக் கசாவெதுகை நயம் பொருந்தின நான்கடியாகப்பிரிக்கலாம். உரை இடங்கொடுக்கவில்லை.

௩. (அ) "ஓலை, யரக்குப்பொறி யொற்றி யாணையிற் போக்கி" பெருங். (க) ௩௭. உ௦அ - உ௦௯. (ஆ) "அரக்கிலச் சினையின் வைத்த, வெஞ் சலி லோலை காட்ட" சூளா. தூது. அஉ. எனவும் (இ) "பொறியுடை யோலை" (க) "ஓலைத்தலையிற், பெரும்பொறி யண்ண லரும்பொறி யொற்றி" (உ) "பொறியொற் றோலையோ டறியப் போக்கி" பெருங். (க) சகு. ௩௦, ௫அ: அக - அஉ, (ரு) எ: எக. எனவும் (ஊ) "புன்புல வழியடைத் தரக்கிலச் சினைசெய்து" நாலாயிர. திருச்சந்த. எகூ. எனவும் வருவன காண்க.

(பிரதிபேதம்) * வணங்கினேன் என, பேயும் பேயந்தன்ன, † பேயுமீந்தன்னல், ‡ கண் டோர் நகாமல், ‖ கண்டாய்தகவே, × ஞாயிற்கிழ்ப், + போதியபடார, ** [illegible] யப்பியாத்த. †† [illegible], ‡‡ [illegible], ‖‖ [illegible], ×× [illegible].

## மூன்றாவது மருதம் உகூ. [illegible]

ஆங்கு, அசை. போதரு, போதரென விகாரமாயிற்று. "தோடே மடலே" என்னும்(க)சூத்திரத்தால் ஓலையென்றார்.

இதனால், இருவர்க்கும் முன்னர் நகைபிறந்தது; பின்னர்ப் புணர்ச்சி யுவகை பிறந்தது.

இதனுள்,(உ)'கோனடிதொட்டேன்' எனவும் 'கோயிலுட்கண்டார் நகாமை வேண்டுவல்' எனவுங் கூறலின், அடியோரென்பதுபெறுதும்.(௩)'கொக்குரித் தன்ன' எனத் தோல்திரைத்தமைகூறலின்,இளமைதீர்திறமாகியபெருந்திணை யாயிற்று. இது "வேட்கைமறுத்து" என்னும் (ச) பொருளியற்சூத்திரத்தால் வேட்கைமறுத்துக் கூறியபெருந்திணை. இஃது (ரு) ஊடற் பகுதியாகலின் மருதத்துக்கோத்தார்.

இஃது 'என்னேற்றனைகொல்லோ' எனவும் 'சுங்குருச்சுருங்கி' எனவும் மூட்டடியின்றிக் குறைவுசீர்த்தாகிய சொற்சீரடியும் வந்து, இரண்டடியான் இற்றதோர் கொச்சகமும் ஐஞ்சீரடுக்கிவந்த வெண்பா ஐந்தும் ஐஞ்சீரடியான் வந்த கொச்சகம் ஒன்றும் இரண்டடிக்கொச்சகம் ஒன்றும் ஆசிரியத்தளை விரவின கொச்சகவெண்பாவும் பெற்று வெண்கலிப்பாவின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலிப்பா. (உக)

---

க. தொல். மரபி. சூ. அக. இச்சூத்திரத்தின் பேராசிரியருரையிலும் ஓலையென்பது அகக்காழல்லாத ஓரறிவுயிராகிய புல்லின் உறுப்பாய் வருதற்கு, "துகடபுகாட்சி யவையத்தா ரோலை" என்பது மேற்கோள்.

உ. அடியோர் பாங்கினும் தலைமக்களுண்டென்பதற்கு, "எம்மணைகுதல் .........தொட்டேன்" "பேயும் பேயுந்.........வேண்வேல்" என்னும் பகுதிகளை மேற்கோள்காட்டி, இது பெருந்திணைக்கண் அடியோர் தலைவராக வந்தது; என்னை? கோனடி தொட்டேனென்றமையானும் கோயிலென்றமையானும் இவர்கள் குற்றேவன்மாக்களாயிற்று என்றனர் இவ்வுரைகாரர்; தொல். அகத். சூ. உங.

ங. "உக்கத்து............சிறிது" என்பது கொக்குரித்தன்னவென்பதனால் தோல் திரைந்தமை கூறலின் இளமை நீர்ந்ததாகிய பெருந்திணையென்பர், நச்; தொல். அகத். சூ. ருக. இந்நூற்பக்கம் ருஅ: க-ஆம் குறிப்பும் பார்க்க.

ச. தொல். பொருளி. சூ. கஎ. இச்சூத்திரத்தின் இவருரையிலும் "எறித்த படைபோல்.........லுயிர்" "உழுந்தினுந்.........பிறப்பு" என்பவை அடியோர் தலைவராக வேட்கைமறுத்துணர்த்தியதற்கு மேற்கோள்.

ரு. "உரிப்பொருளல்லன மயங்கவும் பெறுமே" என்னும் தொல். அகத். கங - ஆம் சூத்திரத்தின் இவருரையிலும், கூனுங் குறளும்............ உறழ்ந்து கூறும் பெருந்திணை யடற்பகுதியதாதலின் மருதத்துட் கோத்தாரென்னும் குறிப்பு உள்ளது.

## ஙஎஅ கலித்தொகை கூ.

(கூரு.) நில்லாங்கு நில்லாங் கிவர்தர வெல்லாநீ

காறிருங் கூந்தலா ரிற்செல்வா யிவ்வழி
யாறு மயங்கினை போறிநீ வந்தாங்கே
மாறினி நின்னுக்கே நின்சே வடிசிவப்பச்
செறிந்தொளிர் வெண்பல்லா யாம்வே றியைந்த
குறும்பூழ்ப்போர் கண்டே மனைத்தல்ல தியாது
மறிந்ததோ வில்லைநீ வேறோர்ப் பது ;
அ குறும்பூழ்ப்போர் கண்டமை கேட்டே னீயென்றும்
புதுவன வீகை வளம்பாடிக் காலிற்
பிரியாக் கவிகைப் புலையன்றன் யாழி
னிகுத்த செவிசாய்த் தினியினிப் பட்டன
வீகைப்போர் கண்டாயும் போறிமெய் யெண்ணிற்
றபுத்த புலர்வில புண் ;
கச ஊரவர் கவ்வை யுளைந்தியா யல்கனின்
றாரின்வாய்க் கொண்டு முயங்கிப் பிடிமாண்டு
போர்வாய்ப்பக் காணினும் போகாது கொண்டோடும்
பார்வைப்போர் கண்டாயும் போறிநின் றோண்மேலா
மீரமாய் விட்டன புண் ;
கசு கொடிற்றுப்புண் செய்யாது மெய்ம்முழுதுங் கையிற்
றுடைத்துநீ வேண்டினும் வெல்லாது கொண்டோடு
மொட்டியபோர் கண்டாயும் போறி முகந்தானே
கொட்டிக் கொடுக்குங் குறிப்பு ;
உக ஆறி னறிமா யன்னவை யானுங் கறியாமை
போற்றிய நின்மெய் தொடுகு ;
உரு அன்னையோ, மெய்யைப்பொய் யென்று மயங்கிய கையொன்
றறிகல்லாய் போறிகா ணீ ;
உஎ நல்லாய், பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி ;

௨௯ அருளகம் யாம்யாரே மெல்லா தெருள
வளித்துநீ பண்ணிய பூமெல்லா மின்னும்
விளித்துநின் பாணனோ டாடி யளித்தி

## மூன்றுவது மருதம் ௯0. ௩௭௭

விடலைநீ நீத்தலி னோப்பெரி தேய்க்கு
கடலைப்பட் டெல்லாநின் பூழ்.

இது "கோடியோர் கோடுமை சுடுமேன வோடியாது, நல்லிசை நயந்தோர் *சொல்லொடு தொகைஇப், பதனி னீங்கிய தநதிக்கண்" (௧) தலைவி (௨)பரத்தையைப் (௩)பூழாக்கிக் கூறியது.

இதன் பொருள்.

நில்லாங்கு நில்லாங் கிவர்தர லெல்லாநீ
காறிருங் கூந்தலா ரிற்செல்வா (௪)†யிவ்வழி
யாறு மயங்கினை போறிநீ வந்தாங்கே

மாறினி நின்னைங்கே நின்(௫)‡சே வடிசிவப்ப

எ - து: எடா! நீ நாறுகின்ற கரிய கூந்தலையுடைய பரத்தையரில் லின்கட் ||செல்கின்றாய் இவ்விடத்துப்போகின்றவழி தப்பிவந்தாய்போலே இருக்தாய்; நீ இவ்விடத்துப் பார்த்துபாராதேகொள்; ÷ அவ்விடத்தே நில், அவ்விடத்தே நில்; இனி நின்னுடைய பரத்தையர் மனைக்கண்ணே நின் (௬)சிவந்த அடி மிகச் சிவக்கும்படி ×வந்தாற்போலப் போவென்றாள். எ - து.

செறிந்தொளிர் வெண்பல்லா யாம்வே றியைந்த
(௭)╋குறும்பூழ்ப்போர் கண்டே மனைத்தல்ல தியாது
மறிந்ததோ வில்லைநீ வேறோர்ப் பது

---

௧. தொல். கற்பியல். ௬. ௬.

நபுத்த புலர்வில புண்

எ - து: அதுகேட்ட தலைவி, நீ எக்காலும் குறும்பூழினது போரைக் கண்டபடியை யான் கேட்டேன்; அது கூறக் கேள்; ஒருநாட் † கொடுத்தாற் போலன்றிப் புதிய வாயிருக்கின்ற கொடையினது பெருமையைப் பாடி நின் னிடத்தினின்று நீங்காத, யாழ்வாசித்தலாற் கவிழ்ந்த கையினையுடைய பாணன் தன்னுடைய யாழோசையாலே முன்பு தாழ்க்கப்பட்ட செவிகளை அவன் ÷ கூறுகின்றவற்றைக்கேட்டற்கு அவர்சாய்க்கையினாலே இப்பொழுது அக்கூற்றாலே புதிதாக அகப்பட்டனவாகிய பூழினுடைய புதிய போர்களைக் கண்டாயும்போலே இருந்தாய்; அதனை உண்மையாக எண்ணிப் புலர்ச்சி யிலவாகிய புண்கள் உன்னைக்கொன்றன; இதனை ஆற்றியவா றென்னென் றான். எ - று.

---

(ஆ) அது கோழியும் சிவற் (செல்வல்) காடையும் கவுதாரியும் போலப் போர்த்தொழிலிற் சிறந்த பறவையென்பது, "கறுவொடு மொன்றோடொன்று காரணமின்றிச் சீறிப், பொறியுடைக் குறும்பூழ் தம்மிற் போர்செயப் பொருத்து மோதை, செறிமயிர்த் தகர்க டம்மிற் றீயெழத் தாக்க னோக்கி, யறைகழல் வீரரார்க்கு மமலையை யவிக்கு மன்றே" என்பதனாலும் (இ) அதன் போர் காணல் ஆடவர்க்குரியமா பென்பது இச்செய்யுளாலும் "கலையின் வென்றியுங் கரிபரி யிரதமே காலாண், மலையும் வென்றியுஞ் சுட்டிடை வாரணங் குறும்பூ, ழலைய மோதுவன் கடாப்பிற போரிடை யுறுத்திக், குலவும் வென்றியுங் கொண்டன வாடவர் குழுக்கள்" என்பதனாலும் அறியலாகும். (ஈ) குறும்பூழ் என்பது ஒரு பறவைச்சாதிப் பெயரென்றும் இனஞ் சுட்டியதன்றென்றுங்கூறுவர் உரையாசிரியர்; தொல். களவி. சூ. கஅ. குறும்பூழ், காடையென்று வழங்கப்படும்.

(பிரதிபேதம்) * இதுகேட்ட, † குறும்பூழினதுபோரை, ‡ கேட்டனன். || புவியன், ✝ கொடுத்தாப்போலன்றி, ÷ கூறுகின்றனவற்றைக்,

இனி நின் மெய்யிற் *புலர்வில்லாப் புண்கள், எண்ணிப்பார்க்கில் அவ் வெண்ணைக் கெடுத்தனவென்றவாறு. இனி என்றும் புதியனவாகிய பூழினது வளப்பத்தை யாழோசைபோலே பாடி அப்பூழ் பொருந்துமிடத்து விட்டு நீங்காத புலையனென்று புலையனுக்கு அடைகூறினான். யாழோசைகேட்டாரை அகப்படுக்குமாறுபோல இவன் பாட்டும் அகப்படுத்தலின் யாழ்ப்பாடியென் றான். †பூழைத் தடவிக் கவிழ்ந்த கையினையுடைய புலையன்-‡ பூழ் பொருந்து மவன்; புலையன் றன்னுடைய இப்பொழுதிப்பொழுது அகப்பட்டனவாகிய பூழ், தத்தஞ் செவிகளைச் சாய்த்து இவன் கூறும் (க)மந்திர முதலியன கேட் கையினாலே அவன் தன்வசமாகத் தாழ்க்கப்பட்ட பூழ்; அப்பூழின்போரைக் கண்டாயும்போறியெனப் பூழிற்கும் எற்பதோர் பொருளுந்தோன்றநின்றது. இனி, யாழின் இருத்த செவிக்கு, யாழைப்போலும் (உ)மந்திரத்தாற் றாழ்ந்த செவியென்பாருமுளர்.

கச (ங)ஊரவர் கவ்வை யுளைந்தீயா யல்கனின்
றாரின்வாய்க் கொண்டு முயங்கிப் ||பிடிமாண்டு
போர்வாய்ப்பக் காணினும் போகாது ||கொண்டாடும்
பார்வைப்போர் கண்டாயுர் போறிநின் றோண்மேலா
வீரமாய் விட்டன புண்

எ - து: ஊரிலுள்ளார் கூறும் அலருக்கு வருந்தாயாய்த் தங்குதலை யுடைய நின் மார்பிற் றாரிடத்தே கையாலே அணைத்துக்கொண்டு தழுவி அகப்படுத்துதலாலே மாட்சிமைப்பட்டு வேறுஞ் சிலரை அகப்படுத்திக் கொண்டு வருதற்குப் பார்வையாகப் போகவிட்ட மகளிராலே உண்டான ஊடற்போரை வாய்ப்பக் × கண்டாராகிலும் அதற்குஊடிப்போகாதேஉன்னைக் கைக்கொண்டு நுகருங் கலவிப்போரைக் கண்டாயும்போலே இருந்தாய்; நின் தோளிற் புண்களெல்லாம் புலராமல் ஈரமாயே கிடந்தனவென்றான். எ - று.

இனி, ஊரிலுள்ளார்எக்காலமும்பூழ்பொருத்தித் ‡ திரிவையென்று கூறும் ஆரவாரத்திற்கு வருந்தாயாய் மார்பிலே அணைத்துக்கொண்டு முயங்கித்

---

க. "சொல்லுஞ் சுவட்டவர் சொல்லுக சொல்லுகாற், சொல்லும் பலவுள சொன்னபின் - வெல்லும் ..... ..... .....பூழ்" என்பதும்

'சொல்லக்கடவ மந்திரம் பலவாவன: நீற்றும் அரிசி தூவு மந்திரமும், புச்சிலே பிசைந்து தடவும்போது சொல்லு மந்திரமும், செவியுள் ளூதுந்து மந்திரமும்' என்று எழுதியிருக்கும் அதன் விசேடவுரையும் கண்டு அறிதற்பாலன; பு - வெ. பெருந்திணை. வென்றிப் க.

உ. "மந்திரங் கேட்குஞ் செவிய போல" பெருங். (ச) ௩: அஎ.

௩. "ஊரவர் கௌவை" குறள். ககசஎ.

(பிரதிபேதம்) * புலர்விலபுன்கள், † அப்பூழைத்தடவி. ‡ பூழ்ப்பொருத்த. || கொள் லேயெ. + வருத்தற்குப்பார்வை, × கண்டார்களாயினும். ╪ நின்செல்வு



தசை கரையும்படி கையாற் பிடித்தலாலே மாட்சிமைப்பட்டுத் தனக்கு மாறுகிய பூழின் போரை வாய்ப்பக் காணினும் அதற்கு அஞ்சிப் போகாதே போர்செய்தலைத் தன்னிடத்தேகொண்டு * பின்னும் போர்செய்யும் பார்வையாகிய பூழின் போரைக் † கண்டாயும்போறியென வேறுமோர் பொருள் தோன்றி நின்றவாறு காண்க.

கூ. கொடிற்றுப்புண் செய்யாது மெய்ம்முழுதாங் கையிற்
றுடைத்துநீ வேண்டினும் வெல்லாது ‡ கொண்டாடு
மொட்டியபோர் கண்டாயும் போறி (க)முகந்தானே
கொட்டிக் கொடுக்குங் குறிப்பு

எ-து: இவட்கு வருத்தமாகவுங்கூடுமென்றுகருதிப் புணர்ச்சிக்காலத்துக் கவுளிடத்துச் செய்யும் வடுக்களையுஞ் செய்யாமல் மெய்ம்முழுதையும் கையாலே எப்பொழுதுந் தடவி நீ விரும்பினும் நீ தன்னை வெல்லாமற் கொண்டு புணரும் ஒட்டுதலையுடையானது கலவிப்போரைக் கண்டாயும் போலே இருந்தாய்; நின் மனக்குறிப்பை நின் முகந்தானே || காட்டிக் கொடாநிற்குமென்றாள். எ - று.

---

க. (அ) "முன்னங்காட்டி முகத்தினுரையா" (ஆ) "முன்ன முகத்தி

னுணர்ந்து" (இ) "ஒருவன், முகனுரைக்கு முண்ணின்ற வேட்கை" (ஈ) "முன்ன, முகம்போல முன்னுரைப்ப தில்" (உ) "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டுமுகம்" (ஊ) "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங், காயினுந் தான்முந் துறும்" (எ) "முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி, யுற்ற துணர் வார்ப் பெறின்" (ஏ) "ஒளிப்பினு முள்ளம், படர்ந்ததே கூறுமுகம்" (ஐ) "நோக்கி யறிகல்லாத் தம்முறுப்புக் கண்ணாடி, நோக்கி யறிப வதுவேபோ-னோக்கி, முகனறிவார் முன்ன மறிப" (ஒ) "முகத்தினுற் பொருண்முடிவு கண்ணினன்" (ஓ) "தூத னின்முகப் பொலிவி னுற் சுடர்க், காது வேலினன் கருமமுற்றுற, வோதி ஞானிபோ லுணர்ந்த பின்" (ஔ) "நோக்கின னவர்முக நோக்க நோக்குடைக், கோக்கும ரகுமடி குறுக" (ஃ) "அற்றந்தான், மனங்கள் போல முகமு மறைக்குமே" (அஅ) "சிந்தை புண்ணெடுஞ் சீற்றந் திருமுகந், தந்தளிப்ப" (ஆஆ) "அகத்தியன் முகத்திற் காட்ட" (இஇ) "முழையுறு சிய மன்னன் முகத்தினு லகத்தை நோக்கிக், குழையுறமெய்யன் பைய வரன் முறை கூற லுற்றான்" (ஈஈ) "உளத்தனவாண் முகத்தனவா யுதிக்குமவை குறிப்பினுற், றெளித்துரைத்தல் சீர்மைத்தே" (உஉ) "உள்ள முகத்திற் சுடர்கிற்ப" (ஊஊ) "அகத்தி னழகு முகத்திற்றெரியும்."

(பிரதிபேதம்) * பின்னும்பின்னும்போர். † கண்டாய்போறி. ‡ கொண்டோமே. || கொட்டிக்.

## மூன்றாவது மருதம் க0. ரு அக

<u>தான் விரும்பிய நீர்விளையாட்டுமுதலியவற்றிலே உன்னை ஒட்டுதலை யுடையான்.</u>

இனி <u>மருத்திடுதற்குச்</u> செவியின் ‡ <u>மயிரைப் பறிக்குங்காற்</u> புண்ணுகப் பறியாதே மெத்தெனப் பறித்து மெய்யைமுழுக்கப் பலகாற்றுடைத்து நீ இவ்வாறு * கொண்டாடினுந் தான் எதிர்ந்த பூழினை வெல்லாமல் அப்பூழினைக்கொண்டு போர்செய்யும் (க) இயக்கனுகிய பூழின் போரைக் கண்டாயும் போறியென வேறுமொரு பொருள்தோன்றி நின்றவாறு காண்க.

உக. ஆயி ழையிழா யன்னவை யானுங் கறியாமை
† போற்றிய நின்மெய் தொடுகு

எ - து: அதுகேட்ட தலைவன், அப்படியாயின், ஆயிழாய்! நீ கூறுகின்ற அத்தன்மையவான குறிகளை யான் அவ்விடங்களிற் செய்தறியாமையை நின் னெஞ்சிடத்தே போற்றுதற்கு நின் மெய்யைத் தொட்டுச் சூளுறவே னென்றான். எ - று.

தொடுமென்றும் பாடம்.

உ௫ அன்னையோ

எ - து: அதுகேட்ட தலைவி, ‡அம்மையோவென இகழ்ந்து கூறினள். எ - று.

மெய்ம்மைப்பொய் யென்று மயங்கிய கையொன்
றறிகல்லாய் போறிகா ணீ

எ - து: அதுகேட்ட ||தலைமகன், யான் கூறுகின்ற மெய்யைப் பொய் யென்று மயங்கிய நீ உலகவொழுக்க மொன்றும் அறியாய்போலே இருந்தாய் காணென்றான். எ - று.

உஎ நல்லாய், (உ)பொய்யெல்லா மேற்றித் தவறு(௩)தலைப்பெய்து
கையொடு ÷ கண்டாய் பிழைத்தே னருளினி

க. இயக்கன்-இயக்குபவன்; "இயக்கலி னியக்கி யாகுமே" சீவக. ௧0௧௫.

உ. (அ)"பொய்யெல்லா மேற்றி......அருளினி" என்பதை இவ்வுரைகாரர் (தொல். கற்பி. சூ. ௫.) மேற்கோள் காட்டி, இது தலைவன் நின்றானி பிரிவி னஞ்சிய பையுளில் அடங்குமென்றார். (ஆ) "பரத்தைபி னகற் சியிற் பிரிந்தோட்குறுகி, யிரத்தலும் தெளித்தலும்" என்பதன் உரை யில், இப்பகுதியை இரத்தற்கு மேற்கோள்காட்டினர் இளம்பூரணர்; தொல். அகத். சூ. ௪௪. 'ஒன்றாத் தமரினும்'

௩. (அ) "பண்டு மொருகாற் கண்டகத் தடக்கிய, வையப் புரத்தையைக் கையொடு கண்டே, யினிப்பொய் புணர்த்து மேழைய மவ்வம்" பெருங்.

(பிரதிபேதம்) * கொண்டாடிற்றுத் தானெறிர் புழினை வெல்லாமல்புழினைக். † போற் றியர் நின்மெய். ‡ அம்மெயோவென, || தலைவன் ÷ கண்டே.

எ-து: பின்னும் நல்லானே! யான் * செய்த தவறுகளை என் தலையிலே †யிட்டு என் பொய்களையெல்லாம் எனக்கு ஏறத் தெளிவித்து என் னைக் கையோடே பிடித்துக்கொண்டாய்; யானும் நின்னைத் தப்பினேன்; இனி எனக்கு அருளென்றான். எ-று.

௨௬ ‡அருளுகம் யாம்யாரே மெல்லா தெருள
வளித்துநீ பண்ணிய பூழெல்லா மின்னும்
விளித்துநின் பாணனோ டாடி ||யளித்தி
(க)விடலைநீ ÷நீத்தலி னோய்பெரி தேய்க்கு
நடலைப்பட் டெல்லாநின் பூழ்

எ-து: அதுகேட்டு அவள், எடா! யாம் நீ கூறியவாறே × அருளுவேம்; அங்ஙனம் அருளுதற்கு யாம் யாராந் தன்மையையுடையேம்? விடலாய்! நின் பூழெல்லாம் நீமுன்னர் அளித்துப் பின்னர்க் கைவிடுதலின் ÷நின்னடிப்பிலே அகப்பட்டு நோயைப் பெரிதாகப் பொருந்தும்; அவை வருந்தாதபடி நீ உனக்கு ஆம்படி பண்ணின பூழெல்லாவற்றையும் இன்னும் நின் பாண னாலே அழைத்துவிட்டு அவற்றின்மனந்தெளியும்படி அளித்து **ஆவோயாக வென்றாள். எ-று.

எனவே, பரத்தையர்க்கும் பூழிற்கும் ஏற்ப நின்றது.

இதனால், இருவர்க்கும் புணர்வாகிய உவகைபிறந்தது.

"கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி, யடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக், காத லெங்கையர் காணி னன்றென, மாதர் சான்ற வகையின் கண்ணும்"(உ)என்றதனுன் அருளினியென அடிமேல் வீழ்ந்தவாறும், ††அரு ளுகம் யாம்யாரேமெனக் காதலமைந்தவாறும், அளித்தியெனப் பணிவை நின் பெண்டிர் கொள்வரென்றவாறும் காண்க.

---

(௧) ௬௦: சகடு - சக௨. (௨) "தான்முன் கண்ட தவற்றின னாதலிற், சென்ற வாயிற் கொன்றல னூடி" பெருங். (௧) ௬௫: ககஎ - ககஅ.

௧. "பரத்தையி னகற்சியிற் பிரிந்தோட் குறுகி, யிரத்தலுந் தெளித் தலும்" என்பதனுரையில் 'விடலை நீ நீத்தலின்..............நின்பூழ்'

என்பதை மேற்கோள்காட்டி, இதில் மருதநிலத்திற்றலைமகன் விடலை யெனப்பட்டா னென்பர் இளம்பூரணர்; தொல். அகத். சூ. ௪௪. 'ஒன்றாத்தமரினும்'

௨. தொல். கற்பி. சூ. ௯. இச்சூத்திரப்பகுதியி னுரையில் (அ) 'கல்லாய் ..............பூழ்' என்பதை மேற்கோள்காட்டி, "இதனுட் 'கையொடு கண்டாய் பிழைத்தேனருள்' என அடிமேல்வீழ்ந்தவாறும் 'அருளுகம்

(பிரதிபேதம்) * செய்யாத, † இட்டெனப்பொய்களை. ‡ அருளுக யாம்யாரே யெல்லா, || அவிழ்தவிடலை, + சேக்கின், × அருளுகம் அம்மனம் + அடிப்பிலே, ** அருளாபக, †† அருளுகம் பரிசைக்காதலையாக்தவாறும் காண்கபிற.

## மூன்றாவது மருதம் ௧௧. ௫௮௧

இது பல கொச்சகங்களும் வருதலிற் கலிவெண்பா வுறுப்பின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. (௯௦)

(௯௩.) எங்கெழின் மார்ப வெதிரல்ல நின்வாய்ச்சொற்
பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை
சாந்தழி வேரை சுவற்றாழ்ந்த கண்ணியை
யாங்குச்சென் றீங்குவந் தீத்தந்தாய் கேளினி
ஏந்தி, எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்
குதிரை வழங்கிவரு வல்;
௭ அறிந்தேன் குதிரைதான்
பால்பிரியா வைங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவன்
மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வுளை
நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ்
ஞாலியன் மென்காதிற் புல்லிகைச் சாமரை
மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற
வுத்தி யொருகாழ்நா லுத்தரியத் திண்பிடி
நேர்மணி நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்
தார்மணி பூண்ட தமனிய மேகலை

நூபுரப் புட்டி லடியொ டமைத்தியாத்த
வார்பொலங் கிண்கிணி யார்ப்ப வியற்றிநீ
காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை
யாய்சுதை மாடத் தணிநிலா முற்றத்து
௨௦ ளாதிக் கொளீஇய வசையினை யாகுவை
வாதுவன் வாழிய நீ;

---

யாம் யாரேம்' எனக் காதலமைந்த வாறும் நீ நீத்தலின் பூமெல்லாம் கடலைப்பட்டு நோய்பெரிதேய்க்கும், அவற்றைஇன்னும்விளித்து நின் பாணனோடு ஆடியளித்துவிடு என இப்பணிதல் நின் பெண்டிர்க்கு நன்றுமென்றவாறும் கூறியவாறு காண்க. 'ஈண்டுப்' பூமென்றது, குறிப்பினாற் பரத்தையரை" என்பர். இளம்பூரணர்; 'அவனறிவு' (ஆ) நச்சினார்க்கினியர் "மெய்யைப் பொய்யென்று............பூம்." என்றபகுதியை மேற்கோளாகக்காட்டி, இங்கே தாமெழுதியிருக்கும் விசேடக் குறிப்பையும் எழுதியிருக்கிறார்.



௨௨ சேகர, கதிர்விரி வைகலிற் கைவாரூஉக் கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போலநின் மெய்க்கட்
குதிரையோ வீறி யது;
௨௫ கூருகிர் மாண்ட குளம்பி னதுநன்றே
கோரமே வாழிகுதி ரை;
௨௭ வெதிருழக்கு நாழியாற் சேதிகைக் குத்திக்
குதிரை யுடலணி போலநின் மெய்க்கட்
குதிரையோ கவ்வி யது;
௩௦ சித்தை, பயமின்றி யீங்குக் கடித்தது நன்றே
வியமமே வாழிகுதி ரை;
௩௨ மிகநன், றினியறிந்தே னின்றுநீ யூர்ந்த குதிரை

பெருமணம் பண்ணி யறத்தினிற் கொண்ட
பருமக் குதிரையோ வன்று பெருமநின்
னேதில் பெரும்பாணன் றூதாட வாங்கேயோர்
வாதத்தான் வந்த வளிக்குதிரை யாதி
யுருவழிக்கு மக்குதிரை யூரனீ யூரிற் பரத்தை
பரியாக வாதுவனு யென்றுமற் றச்சார்த்
திரிகுதிரை யேறிய செல்.

*இது "கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது, நல்லிசை நயந்தோர் சொல்லொடு †தொகைஇப் பகுதியி னீங்கிய தகுதிக்கண்" (க)‡தலைவி பரத்தையரைக் குதிரையாக்கிக் கூறியது.

இதன் பொருள்.

---

க. (அ)தொல். கற்பி. சூ. ௬. இச்சூத்திரப் பகுதியினுரையிலும் நச்சினார்க்கினியர் இச்செய்யுளை மேற்கோள் காட்டி, "இதனுள் பாணன் றூதாட வாதத்தால் வந்த குதிரை யென்பதனால், அவன் கூட்டிய புதிய பரத்தையர் என்பதூஉம் அவன் பகுதியினின்று நீங்கியவாறும் குதிரையோ வீறியதென்பது முதலியவற்றாற் கொடுமை நெஞ்சைச் சுடுமென்றவாறும் அதனை நீக்கிய பரத்தையரைக் குதிரையாகக்கூறித் தானதற்குத் தக்குநின்றவாறும் காண்க" என இதனிறுதியிலுள்ள குறிப்புக்குச் சிறிதுவேறுபட ஒரு குறிப்பும் எழுதியுள்ளார். (ஆ) இந்நூற்பக்கம் லேவ: உ - ஆம் குறிப்பு இங்கும் அறியத்தக்கது.

(பிரதிபேதம்) * இது பகுதியினீங்கிய, † தொகைஇயபகுதி, ‡ தலைவிகூறியது.

## மூன்றாவது மருதம் ௩௧. ௰௮௰

(க)ஏந்தெழில் மார்ப வெதிரல்ல நின்வாய்ச்சொற்
(உ)பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை
சார்ந்தஃதி வேரை சுவற்றூழ்ந்த கண்ணியை
யாங்குச்சென் (௩)றிங்கு†வந் தீத்தந்தாய்

எ - து: உயர்ந்த அழகினையுடைய மார்பனே! நின் வாயிற்சொல் எனக்கு மாறல்ல; நின் தன்மைகண்டு வினவுகின்றேன்; நீ மடிவிரிந்து கரை யற்று முரிந்த (ச) ‡புடைவையையுடைய அமையாத வலியினையுடையை; சந்தனம் அழிதற்குக் காரணமான ‖ வேர்வையையுடையை; தோட்கட்டிலே கிடந்து நிறங்குறைந்த கண்ணியையுடையை; ஆகையினாலே எவ்விடத்தே சென்று இவ்விடத்தே வந்தா‡யென்றான். எ - று.

ரு கேளினி

ஏந்தி, (ரு)எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்

குதிரை வழங்கிவரு வல்

×எ - து: அதுகேட்ட தலைவன், யான் கூறுகின்றதனை இப்பொழுது கேள்; உயர்ந்து தன்னில் இணையொத்த நீலப்பூவைத் தொடுத்தாலொத்த கண்ணினையுடையாய்! குதிரையேறி வருவேனென்றான். எ - று.

---

க. "ஏந்தெழின் மிக்கான்"

உ. (அ)ஆய்தலென்பது உள்ளத னுணுக்கமாகிய குறிப்புணர்த்து மென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உரி. சூ. ௩௨. சேனா; சூ. உக. 'ஓய்தல்' தெய்வச். சூ. ௩உ. நச்; நன். உரி. சூ. ௧௮. இரா; இ-வி. சூ. உ௮௧. (ஆ) "பாய்ந்தாய்ந்த மா" பதிற். ௧௧: ௭.

௩. "சங்குவந் தீத்தக்தாய்" என்பது முன்னிலை முற்று வினைத்திரிசொல்லுக்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. ௬௧. நச்.

௪. புடைவையென்பது ஆண்பாலாருடைக்கும்பெயராய்ப் பண்டுவழங்கிற்றென்பது; முல்லைப். ௩௪. மது. ௫௧௮. பு - வே. வாகை. ௧௪; பெருங். பெண்பாற். ௧௮. உரையாலும், "மெய்தருவா னெறியடைவார் வெண்புடைவைமெய்சூழ்ந்து" என்னும்சேக்கிழார்செய்யுளாலும் அறியலாகும்.

௫. (அ)"நீலத், தெதிர்மலர்ப் பிணைய லன்னவிவ ளரிமதர் மழைக்கண்" (ஆ)"நெடு நீர் பயந்த நிரையிதழ்க் குவளை, யெதிர்மல ரிணைப்போ தன்னதன், னரிமதர் மழைக்கண்" எனவும், (இ) "மலர்பிணைத் தன்ன

மாயிதழ் மழைக்கண்" (௯) "மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன,

(பிரதிபேதம்) * வைக்கிளைச் சாந்தழி. † வத்தித்தாய் கேளினி; எ - து. ‡ புடவை யோடே அமையாத, || வேர்ப்பைபுடைவை, + என்றும் பிள்ளார்த்தலைவர்யாள் கூறு கின்றதின இப்பொழுதுகேள் எதி, x எ - து: உயர்ந்த தன்னில்,

74



அறிந்தேன் குதி[illegible]* தான்
பால்பிரியா (க)வை[illegible]ந்தற் பன்மயிர்க் கொய்சுவல்
மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வுளை,
நீல மணிக்(உ)கடிகை வல்லிகை, யாப்பின்கீழ்
ஞாலியன் மென்காதிற் புல்லிகைச் சாமரை,
†மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற
வுத்தி யொருகாழ்நூ ‡லுத்தரியத் திண்பிடி,
நேர்மணி நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்,
தார்மணி பூண்ட தமனிய மேகலை,

நூபுரப் புட்டி லடியொ டமைத்தியாத்த

வார்||பொலங் கிண்கிணி யார்ப்ப ÷வியற்றிநீ
காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை
யாய்சுதை மாடத் தணிநிலா முற்றத்து
ளாதிக் +கொளீஇ யசையினை யாகுவை
வாதுவன் வாழிய நீ

---

மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு" (௨) "தாமலர்த் தாமரைப் பூவி னங்கண், மாயிதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன, திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்" (௩) "குவளையின் பிணையல் செற்று......செவ் வரிபொதிந்த வாட்கண்" (எ) "கொங்கிவருங் கருங்குழலி பெருந் தடங்க ணிருங்குவளைப் பிணையல் போல.........இளைத்த வன்றே" எனவும் (ஏ) "முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளி, னெதிர்மலர்

மற்றவன் கண்ணெக்கும்" (ஐ)"கண்ணே, புகழ்சா ஞமரை யலரிணைப் பிணையல்" எனவும் வருவனகாண்க.

௧. (அ) "ஐங்கூந்த லுளர" கலி. ௧௦௫: ௬௩. (ஆ) "நாறைங் கூந்தற்... ........மகளிர்க்கு" (இ) "இருளைங் கூந்த லின்றுயில்" (ஈ) "இல் லைங் கூந்தல்" அகம். ௧௫: ௧௮ - ௨௦; ௨௩௩: ௧௫; ௨௯௯: ௩. (உ) "நாறைங் கூந்த னணித்தென" (ஊ) "புயலைங் கூந்தல்" (எ) "நா றைங் கூந்த னடுக்குறுய செய்த" சிலப். ௧௦: ௭௩; ௧௧: ௧௦௩, ௧௫: ௧௭.

௨. களிகையென்பது, கடிகையெனத் திரிக்குகின்றது; களிறு செளி றென்பன கடிறு செடிறெனத் திரிந்து வருதலுங் காண்க; வட மொழியில் திரிந்துவந்ததென்றலுமாம். "கண்ணார் களிகை" "திருக்

(பிரதிபேதம்) * தான் எ - து: அதுகேட்டதலைவி நீ எறிகை குதிரைதான் யானறிந்தேன் அத னைக்கேள் பால்பிரியா, † பத்திகைகண் இறை. ‡ உத்திரிபத், || பொலைக் கின்னிலி, ÷ பயிற்றி. ÷ கொளிஇய வகைவிலை யாகுவா யாதுவன்.

மூன்றுவது மருதம் ௯௧. ௫௮௭

*எ - து: இதுகேட்ட தலைவி, நீ எறி[illegible]குதிரைதான் யானறிந்தேன்; அதனைக்கேள்; ஐம்பாற் பகுதி நீங்காத ஐங்[illegible]கையினையுடைய கூந்தலாகிய

பலமயிர்களைப் பலகாலுங் கத்திரிகையிலே(க)†கேசரியின்மயிரினையும், மயிர் முடியின்மேலே விரித்து நிலைபெறுத்தின ‡ துஞ்சாகிய சிவந்த தலையாட்டத் தினையும்,||நீலமணியைத் தோலிலேவைத்துத் தைத்துச்செய்த,கட்டுவடமாகிய கழுத்திற் கட்டுதலையுடைய÷வல்லிகையினையும், மெல்லிய காதிற் கிடக்கும்

(௨)புல்லிகையென்னும்பூணுகிய கிழேசாலும் இயல்பையுடைய (௩) கன்ன சாமரையினையும், (௪) தெய்வவுத்தியென்னும்பூண்'னருகே துவக்கிஒருவடமாய் நாலுஞ் சுட்டியாகிய, குதிரை கண்ணுற்கண்டு அஞ்சும்படியாக விட்டுவைத்த அழகுபெற்ற (௫) சம்மட்டியினையும், நூலாற்செய்யப்பட்ட உத்தரியமாகிய

கேழ்க் களிகை" என்பவை பெருங்கதை. இதனைக் கண்டிகையின் சிதைவென்பாருமுளர்.

க. கேசாரியென்பது, இங்கே குதிரையின் பிடரிக்குப் பெயராய் வந்துள்ளது; கேசரம் - பிடரிமயிர்; அம்மயிரையுடைமையால் இதற்குக் கேசரியென்ற பெயராகி அது இடையே நீண்டுவந்ததுபோலும்; வடமொழியில் குதிரைக்குக் கேசரியென்ற பெயர் சிறுபான்மை வழங்குமென்ப. கேசாரியென்னுஞ் சொல் "சுவல்" (மது. ௬௬௬.) என்பதற்கும் 'உளை' (நெடுநல். ௯௩.) என்பதற்கும் பொருளாக இவ்வுரைகாரரால் ஆளப்பட்டிருக்கிறது.

௨. புல்லிகை - கன்னப்பூவென்னும் அணிகலம்; குடைக்கடுக்கனெனினும் ஒளியெனினும் பொருந்தும்.

௩. கன்ன சாமரை - குதிரையின் காதிலணியும் சாமரை.

௪. (அ) "தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்து" முருகு. ௨௩; (ஆ) "தெய்வ உத்தி ... ழுந்ர் வலம்புரி..............மையீ ரோதிக்கு மாண் ...து" சிலப். ௬: ௧0௬ - ௧0௮.

௫. சம்மட்டி - சவட்டை; இது சாட்டையென வழங்கும்; சவுக்கென்பதும்இது. நன்றாக அடிப்பது (அடித்து ஓட்டுவது) என்னும் பொருட்டாகிய ஸம்மர்த்தியென்னும் வழக்காறற்ற வடசொற்சிதைவுபோலும்; மத்திகையென வருதலும்நோக்குக. இச்சொல் மலையாளத்திலும் சம்மட்டியென்றேவழங்கும்; கன்னடத்தில் 'சம்மட்டிகெ' என ஒருசொல் உண்டென்றும் அதுசாமபட்டிகையென்பதன் திரிபென்றும் கூறுவர்.

(பிரதிபேதம்) * எ - து: பால்பிரிசுவல் - ஐம்பாற்பகுதி, † கேதாரியின்மயிரினையும் சுவலாகுபெயர்; சிகழிகை மேல்விரித்தியாத்த செவ்வுளை-மயிர்முடியின், ‡ ('குஞ்சியாகிய' என்பதுமுன்பதிப்பு) || நீலமணிக் கடிகை யாப்பின் வல்லிகை - நீலமணியாற் செய்த ÷ வல்லிகையினையும்; அது நீலமணியைத் தோலிலே வைத்துத் தைத்தது. மென்காதிற் புல்லிகைக்கீழ் ஒலியல் சாமரை - தன்மெல்லிய காதிற் ........கன்னசாமரையும், உத்தியொருகாழ் கண்ணுறையாகக்கின்பெற்ற மத்திகை - தெய்வவுத்தியென்னும்.........சம்மட்டியினையும், நூலுத்திரியத்தின்பிடி - நூலாற் செய்யப்பட்ட

திண்ணிய(க)*குசையினையும் இனமொத்த மணிகளாற்செய்த தன்னிலொத்த முக்கண்டன் கட்டுவடமாகிய பலபலநிறத்தையுடைய † கண்டிகையினையும், பொன்னாற்செய்தமேகலையாகியகழுத்திலேகட்டினசதங்கைத் ‡ தண்டையினையும், அடியிடத்தேசமைத்துக்கட்டின ஒழுகினபொன்னாற்செய்த (உ) சதங்கையும்" அடியிடத்தே சமைத்துக்கட்டின (௩) சிலம்பாகிய (௪) செச்சையும் ஆரவாரிப்பச் செலுத்திநீகாதலித்தஏறினவிருப்பத்தையுமுடையகுதிரையைச் (ரு) செண்டு வெளியிலன்றி அழகினையுடைய சாந்து வாரின மாடத்தில் அழகினையுடைய (சு) நிலாமுற்றத்தே (எ) ஆதியென்னும் நெடுஞ்செலவை அதற்குக் கொளுத்தி இளைத்தாய்; ஆகையினாலே நீமேல்(அ)நல்ல ஆரசவாரிய னானாவை; நீ வாழ்வாயாகவென்றாள். எ - று.

---

க. குசை - கடிவாளம்.; குதிரைக்கயி றென்றலுமாம்.

உ. "தாரும் புட்டிலு மாற்றுவ" சீவக. கஎஉ.

௩. நூபுரமும் சிலம்பும் வெவ்வேறணிகலமாகவும் கூறப்படும்; "நூபுரம் புலம்பிடச் சிலம்பு நொக்தழ" என வருதலும் காண்க.

௪. செச்சை, வாயில்லாச் சதங்கை யென்பர்.

ரு. செண்டுவெளி-வையாளிவீதி; இது யானை குதிரைகளைப்பயிற்றுதற்கும் கதேச்செலுத்துதற்கும் உரிய இடம்.

சு. நிலா முற்றம் - நிலவின்பயன்கொள்ளுதற் குரித்தாய் மேலே வேயாத மேற்றளம்; இது வடமொழியில் சந்திர சாலை யென வழங்கும்; வழக்கில் மொட்டை மாடியெனப்படும்.

எ. "அடிபடு மண்டிலத் தாதி போகிய, கொடிபடு சுவல விடுமயிர்ப் புரவியும்" மது. ௩௯௦ - ௩௯௧.

அ. 'நல்ல வாசவாரியன்' என்றே ஏடுகளிலிருப்பதை நோக்க, நல்ல வாசி வாரியனென்றிருக்க வேண்டுமோ வென்று உண்டான ஐயத்தை

இச்செய்யுளின் சுற்றயல் வரி உரையாகிய 'நீ யூசவாரியனாய்' என்ற தொடர் நீக்கி அரசவாரியனென்று துணியச்செய்தது.

(பாதிபேதம்) குசையினையும், கோர்மணி ......கண்டிகை - இனமொத்த.†கண்டிகையினையும்; அது தோளிலே மூன்றுநிரையாகப் பலநிறத்து மணியைவைத்துத்தைத்துக் கழுத்திற்கட்டுவது; தமனிய மேகலை பூண்டமணித்தார்-பொன்னாற்‡தண்டையினையும், அடியொடமைத்தியாத்த நூபுரப்புட்டில் - அடியிடத்தே சமைத்துக்கட்டின சிலம்பாகிய கெச்சையும்; ஒடு, உருபுமயக்கம். அடியொடமைத்தியாத்த வார்பொலக்கிண்கிணி-அடியிடத்தே............சதங்கையும்; சதங்கை பரத்தைக்குங் குதிரைக்குமொக்கும். ஆர்ப்பவியற்றி - புட்டிலுஞ் சதங்கையும் ஆரவாரிப்பச் செலுத்தி யென்க. நீ காதலித்தூர்ந்த காமக்குதிரை - நீகாதலித்துப் புணர்ந்த நின்னுடைய காமத்தையுடைய பரத்தையை யெனவும் நீகாதலித்தேறின............குதிரையெனவும் நின்றது. சென்று வெளியிலன்றி......கொளுத்தவினைத்தாயாகையினுமே.

## மூன்றாவது மருதம் ௩௧. ௫அ௯

ஆதி(க)மாதியென்பவற்றுள் ஆதி-நெடுஞ்செலவு. நீ காதலித்தூர்ந்தமயிர் முதலியவற்றையுடைய, காமக்குதிரையை ஆர்ப்ப இயற்றி ஆதிக் *கொளீஇ அசையினை யென்க.

கவல், ஆகுபெயர். ஒடு, உருபுமயக்கம். 

சிகழிகைமேல் விரித்தியாத்த செவ்வுளையெனமாறுக. நீலமணிக்கடிகையாப்பின்வல்லிகையென்க. மென்காதிற் புல்லிகைக்கீழ் ஞாலியல் சாமரையெனவும், உத்தி யொருகாழ் 'கண்ணுறையாகக் கவின்பெற்ற மத்திகையெனவுங் கூட்டுக. தமனிய மேகலைபூண்ட மணித்தாரெனமாறுக.

கண்டிகை, தோளிலே மூன்று நிரையாகப் பலநிறத்து மணியைவைத்துத்தைத்துக் கழுத்திற் கட்டுவது.

அடியொடமைத்தியாத்த என்பதனை வார்பொலங்கிண்கிணி நூபுரப்புட்டில் இரண்டற்குங்கொள்க.

சதங்கை, பரத்தைக்குங் குதிரைக்கும் ஒக்கும்.

நீ காதலித்தூர்ந்த நின்காமக்குதிரை எனபதற்கு, நீகாதலித்துப் புணர்ந்த நின்னுடைய காமத்தையுடைய பரத்தை[யெனினுமாம்.] (எனவுங்கொள்க.)

௨௨ சேகா, கதிர்விரி வைகலிற் கைவாரூஉக் கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போலநின் மெய்க்கட்
குதிரையோ வீறி யது

எ - து: ஞாயிற்றின் கதிர் விரிகின்ற விடியற்காலத்தே கையிற் பிடித்த அலகாலே (௨) தூரால வாருதல்கொண்ட மதுரையிற் பெரிய முற்றம்போல நின்மெய்க்கட் கீறியது †குதிரையோ ? எ - று.

சேவகா, சேகா எனத் திரிந்து நின்றது; விகாரமெனினுமாம்.

‡வாருதலென அலகும் பெற்றது; வீறுதல் - கீறுதல்.

௨௫ கூருகிர் மாண்ட ||குளம்பின தன்றே
கோரமே வாழிகுதிரை

எ - து: அக்குதிரை கூரிய உகிராலே மாட்சிமைப்பட்ட குரத்தினை ÷யுடையது; ஆதலின், மிகவுங் கொடிதே; ✝அதனை ஏறுகின்ற நீ தப்பின்றி வாழ்வாயாக. எ - று.

---

௧. மாதி - வட்டமாயோடல்.

௨. தூரால் - செற்றை குப்பை.

(பிரதிபேதம்) * சொல்லியமைசவினைபொங்க, சேகா, சேவகாவென்பது......விகாரமுமாம். கதிர்விரியாவைகலில், †குதிரையோ வாருதலென அலகும்பெற்றது வீறுதல்.

‡ (வாரூ வாரூஉவென அலகுபெற்றது என்பது முன்பதிப்பு) || குளம்பினது வன்றே. ÷ உடையதுவாதலின், ✝ இதனை.



௨௭ வெதிருழக்கு நாழியாற் சேதிகைக்(௧)குத்திக்
குதிரை (௨)யுடலணி போலநின் மெய்க்கட்

குதிரையோ கவ்வியது

எ-து: மூக்கி(௩)லுழக்காலும் நாழியாலும்(௪)சேதிகையென்னும்பெயரை யுடையதொழில்களாக வண்ணங்களைத் தோய்த்துக்குத்தின குதிரையுடலிற் (௫)பக்கரைபோல நின்மெய்க்கட் கவ்வியது குதிரையோ கூறுயென்றான்.எ - று.

௯௦ சித்தை, பயமின்றி யிருக்கக் கடித்தது நன்றே
வியமமே வாழிகுதி ரை

எ - து: சீ! கெட்டது; தனக்கொரு பயனின்றியிருக்க வடுப்படுத்தற்கு உரித்தல்லாத இடத்தே வடுப்படுத்திற்று; ஆதலால், இக்குதிரை பெரிதும் †வியப்பே; அக்குதிரையை எறின நீ தீங்கின்றி வாழ்வாயாக. எ - று.

வியவென்னும் உரிச்சொல்‡முதனிலையாகப்பிறந்து வியமமெனப் பெயர் படுகின்றது; அம் அசை. உரிச்சொன் முதனிலையாக எல்லா நிலைகளும் பிறக்குமாறுணர்க. இனி விஷமமென்னும் வடமொழியென்பாரும் உளர். அது ஷ டகரம் பெற்றே வருமென உணர்க.

"வேட்கை மறுத்துக் ||கிளத்தாங் குரைத்தன், மரீஇய மருங்கி னுரித் தென மொழிய"(௬)என்பதனுள்,ஒன்றெனமுடித்தலால், மரீஇயவாறு ஏனைய வற்றிற்குங்கொள்கவென்று அதனுன் இழிந்தோர்கூற்றைஉயர்ந்தோர்கூறுவன அமைத்தாம். அவை: வீறுதலுங் கவ்வுதலும்.

---

௧. 'குத்திக்குதிரை' என்றே பிரதிகளிலுள்ளது; 'குத்தின குதிரை' என்னு முரையைநோக்க, 'குத்தீ குதிரை' என்றிருக்கலா மென்று தோற்றுகிறது.

௨. "புடைப் போர்ப் புளகத் துடப்புமறை பருமத்து" பெருங். (௧)௪அ:எ

௩. உழக்கு நாழி யென்பவை முகத்தலளவைக் கருவிகள்.

௪. சேதிகையென்பது, யானைக்கு உரித்தாகக் காளிதாஸ மஹாகவியாற் கூறப்பட்ட பதிச்சேதம்போலக், குதிரைக்கு உரித்தானதொரு சித்திர விசேடமாயிருக்குமென்று அறிஞர் கூறுகின்றனர்.

௫. பக்கரையென்பது குதிரைச்சேணமென்னும் பொருளினதாய், (சீவக. ௩௭௭௨. குணா. கல்யாண. ௧௪. அரசியற் ௨௩௦.) செய்யுணடையிலும் (பெரும்பாண். ௪௯௨; முல்லை. ௭௨; நெடுநல். ௧௭௯, சீவக. ௫௬௭) உரை நடையிலும் பயின்று வருதல்காண்க.

௯. தோல். பொருளி. சூ. ௬௭. இச்சூத்திரத்தின் இவுருரையிலும் இக் குறிப்போடு "குதிரையோ வீறியது" என்பது மேற்கோள்.

(புதம்) * யன்னங்களே. † வியமமே இக்குதிரையை, ‡ முதனிலையாக எல்லா நிலைகளும் பிறக்குமாறுணர்க. அதனியமமெனப் பெயர்படாநின்றது அம்மனை வியமென்றும் வடமொழி, || சேர்ந்தாங்கு.



௩௨. மிகநன், றினியறிந்தே னின்றுநீ யூர்ந்த குதிரை
பெருமணம் பண்ணி யறத்தினிற் கொண்ட
(௧)பருமக் குதிரையோ வன்று ※ பெருமநின்
னேதில் பெரும்பாணன் றாதாட வாங்கேயோர்

† வாதத்தான் வந்த வளிக்குதிரை யாதி
யுருவழிக்கு மக்குதிரை யூரனீ யூரிற் பரத்தை
பரியாக ‡வாதுவனு யென்றுமற் றச்சார்த்
திரிகுதிரை யேறிய செல்

எ - து: இன்று நீ ஏறிய குதிரை மிகவும் ||நன்றாயிருந்தது ; அதனை இப்பொழுதறிந்தேன் ; அது × தான் அறநூல் கூறிய வழியாற் பெரியமணஞ் செய்துகொண்ட (௨) மேகலையையுடைய காமக்கிழத்தியாகிய குதிரையோ அன்று; பெருமா! பாண்டொழிற்கு ஏதிலனாகிய பெரிய பாணன் தூதாய்ச் (௩)செல்ல, அவ்விடத்துப்பரத்தையருடனே உண்டான மாறுபாட்டாலேவந்த

(௪)காற்றுப்போற்கடிய குதிரை; அதுதான் நினது பழையஉருவை முற்கூறிய ...றே கெடுக்கும்; ஆதலால், அக்குதிரையை இனி ஏறுதேகொள்; அன்றி அப் ...த குதிரையாக நீ அரசவாரியனும் எந்நாளும் ✝ ஏறில்மேல் ஈண்வோராக் ...ல திரி; இனி ஈண்டுத் ÷ தாழ்க்கவில்லாதே அக்குதிரையை ஏறுதற்குப் போ... த் தலைவி புலந்துகூறினாள். எ - று.

க. பருமமென்பது, குதிரைச்சேணத்துக்குப்பெயராய்வருதல்: (நெடுநல். கஎக, நாலடி. கஈக, கள. கக. பெருங். (க) சஅ: எ, (உ) கஅ: கஉ) இவற்றாலும் அறியலாகும்.

உ. மேகலையுள், பருமமென்பது ஒன்று; அது பதினெட்டுக் கோவை யுடையது; "பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குல்" (முருகு. கசக.) என்பதும் அதனுரையும்பார்க்க. பதினன்கு கோவையுடையதென்று கூறுவாரும் உளர்.

ங. ஆடுதலென்பது செல்லுத லென்னும் பொருட்டாய் வருமென்பதை, "நின்றாதாடித் துறைச்செல்லாள்" கலி. எஉ: கங. என்பதனாலும் இந்நூற்பக்கம் சகூ: ச-ஆம் குறிப்பாலும் அறிக.

ச. (அ) "கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவி" (ஆ) "கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல லிவுளி" (இ) "காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி" (ஈ) "காலியக்கன்ன கதழ்பரி"(உ)"காலியற்புரவி" (ஊ) "வளிநடந் தன்ன வாச்செல லிவுளியொடு" (எ) "காலியற் கலிமா" (ஏ) "வளிதொழி லொழிக்கும் வண்பரிப்புரவி"(ஐ) "காலிய லிவுளி"

(பிரதிபேதம்) * பெருமானின், † வாதத்தால், ‡ வாதுவரும்மற்றச்சார். || கன்றுவிருத்தலை × தானதால், ┼ எதிரசண்டு, மேல்சண்டு, ÷ தாழ்க்கவில்லாதே.

## ருகஉ கலித்தொகை கள.

இதனுட் (க)'பாணன்றாதாடவந்த' என்றதனன் அவன் கூட்டிய புதிய பரத்தையரென்பதூஉம்'அறத்தினிற்கொண்டகுதிரையோவன்று'என்பதனல், காமக்கிழத்தியன்றென்பதூஉம் அவன் பகுதியி னீங்கியதூஉம் மேனியில் வியக்கன் நெஞ்சினைச் சுடுகின்றதூஉம் பரத்தையரைக் குதிரையாகக் கூறித் தான் அதற்குத் தக்குநின்றதூஉங் கூறியவாறுணர்க. "மாபுநிலை திரியா *மாட்சிய"(உ)என்பதனல், தலைவி அன்னனக்கூறும்வழு அமைத்தாம். இதனுள் மடன் அழிந்த †வழுவமைதி, "தன்வயிற் கரத்தலு மவன்வயின் வேட்டலு, மன்ன விடங்க ளல்வழி யெல்லா, மடனொடு நிற்றல் கடனென மொழிப" (ங.)என்பதனுள் அமைத்தாம்.

இதனல், இருவர்க்கும் புணர்ச்சிபுவகை பிறந்தது.

இது ‡சொற்சீரடி பெற்று ஐஞ்சீரடிக்கிவக்ககலிவெண்பா. (௩௧)

(௩௭.) அன்னை கடுஞ்சொ லறியாதாய் போலநீ
யென்னைப் புலப்ப தொறுக்குவேன் மன்யான்
சிறுகாலை யிற்கடை வந்து குறிசெய்த
வவ்வழி யென்றும்யான் காணேன் றிரிதர
வெவ்வழிப் பட்டாய் சமஞக விவ்வெள்ளல்;
சு முத்தேர் முறுவலாய் நம்வலைப் பட்டதோர்
புத்தியானை வந்தது காண்பான்யான் றங்கினேன்;
அ ஒக்கும்;
அவ்வியானை வனப்புடைத் தாகலுங் கேட்டேடன்
அவ்வியானைதான், சுண்ணநீ றாடி நறுநறு நீருண்
டொண்ணுதல் யாத்த திலக வவிரோடைக்
தொய்யில் பொறித்த வனமுலை வான்கோட்டுத்
தொய்யகத் தோட்டிக் குழைதாழ் வடிமணி

---

௧. இந்நூற்பக்கம் ௫௮௪: ௧ - ஆம் குறிப்புப் பார்க்க.

௨. தொல். அகத். ௬௭௬; இந்நூற்பக்கம் ௫௭௭: ௨-ஆம் குறிப்புப்பார்க்க.

௩. தொல். பொருளி.௬. ௧௧.இச்சூத்திரத்தின்இவருரையில், "இவ்வீரிடத்தும் மடனழிதலுடையவென வழுவமைத்தார்; அது 'குதிரைவழங்கி வருவல்' என்று அவன் கரந்தவழி அதனை மெய்யெனக் கோடலன்றே மடமை; அன்னைக் கொள்ளாது 'அறிந்தேன் குதிரைதான்' எனப் பாத்தையர்சட் டக்கிறுயெனக் கூறுதலின், இது மடனழிந்த வழுவமையாயிற்று" என்னும் குறிப்புக் காணப்படுகின்றது.

(பிரதிபேதம்) * மாட்சிமைய, † வழுவமைத்தத்தன். ‡சொற்சீரடியும்பெற்று.

யுத்தி பொறித்த புனைபூண் பருமத்து
௧௫ முத்தேய்க்கும் வெண்ப லுகைதிறந்து
நன்னகர் வாயிற் கதவ வெளில்சார்ந்து
தன்னலங் காட்டித் தகையினாற் காறட்டி வீழ்க்குந்
தொடர்தொட ராக வலந்து படர்செய்யு
மென்றேட் டடக்கையின் வாங்கித்தற் கண்டார்
௨0 நலங்கவளங் கொள்ளு நகைமுக வேழத்தை
யின்றுகண் டாய்போல வெவனொர்ந்தைப் பொய்ப்பதுநீ;
௨௨ எல்லா, கெழீஇத் தொடிசெறித்த தோளிணை தத்தித்
தழீஇக்கொண் டேர்ந்தாயு நீ;
௨௪ குழீஇ, அவாவினாற் றேம்புவா ரிற்கடை யாறு
வுவாவணி யூர்ந்தாயு நீ;
௨௬ மிகாஅது, சீர்ப்பட வுண்ட சிறுகளி யேருண்க
ணீர்க்குவிட் டேர்ந்தாயு நீ;
௨௮ சார்ச்சார், நெறிதா ழிருங்கூந்த னின்பெண்டி ரெல்லாஞ்
சிறுபாக ராகச் சிரற்றாது நொல்ல
விடாஅது நீயெம்மில் வந்தாயல் வியானை
கடாஅம் படுமிடத் தோம்பு.

இது "கொடியோர் கொடுமை சுடுமென.................பததியி னீங்கிய ததிக்கண்" (க) தலைவி (உ)பரத்தையரை யானையாகக் கூறிப்புலந்தது.

இதன் பொருள்.

(௩)அன்னை கடுஞ்சொ லறியாதாய் போலநீ
†பென்னைப் புலப்ப தொறுக்குவேன் மன்யான்
(௪)சிறுகாலை யிற்கடை வந்து குறி ‡செய்த

---

க. தொல். கற்பியல். ௬. ௯.

உ. இந்நூற்பக்கம் ௫௭௭: உ-ஆம் குறிப்புப்பார்க்க.

௩. "அன்னை கடுஞ்சொல்............என்னல்" என்பது பரத்தையர் அன்பி னற் * கூடியதற்கு (* கூறிய, 'ருஎன்றும் பிரதிபேதம்) மேற்கோள்; தொல். களவி. சூ. கருகூ. இளம்.

௪. (அ) "ஒருபாற் கிளவி யேனைப்பாற் கணும்" என்னுஞ் சூத்திரத்திற்கு, 'ஒருபக்கத்துக் கூறிய பொருண்மை ஒழிந்த பக்கத்துக் கண்ணும் (பிரதிபேதம்) * புலர்ந்தன, † என்னைபுலப்பது, ‡ செய்தவழி யென்றயான் காண.

75

இகசு கலித்தொகை கள.

வவ்வழி யென்றும்யான் காணேன் றிரிதர
வெவ்வழிப் பட்டாய் சமனுக விவ்வென்னல்

எ - து: நீ தலைநின்று ஒழுகுகின்ற பரத்தை, யான் புணர்தற்கு நீ குறித்தல்செய்த *அவ்விடத்து எக்காலும் உன்னைக் காணேனாய்ப் பலகாலுந் திரிதலைச் செய்ய, நீ எவ்விடத்தே போனாயென்று நாட்காலத்தே எம்முடைய மனையின் வாசலிலே வந்து கடுஞ்சொற் சொல்லி உன்னைப் புலக்கின்ற தொழிலை நீ அறியாதாய்போல இப்பொழுது நடுவாக நின்று இங்ஙனம் எம்மை இகழ்கின்ற இகழ்ச்சியிடத்து யான் என்னை மிகவும் ஒறுத்துக்கொள் வேன்; நீ எக்காலும் அத்தன்மையையென்றான் தலைவி. எ - று.

௯ (க)முத்தேர் முறுவலாய் நம்(உ)வலைப் பட்டதோர்
(௩)புத்தியானை வந்தது † காண்பான்யான் றங்கினேன்

எ - து: அதுகேட்ட தலைவன், முத்தையொக்கும் முறுவலையுடையாய்! நம்வலையிலே அகப்பட்டுவந்த தொரு புத்தியானை ஈண்டு வந்தது; அதனை யறிக் ‡காண்பதாக யான் தங்கினே னென்றான். எ - று.

வருவகைதாம் வழக்கு நெறி யென்று கூறுப' என்று பொருளும் 'மனையோண்மாட்டும் காமக்கிழத்திமாட்டும்நிகழும்புணர்ச்சியும் பிரிவும் ஊடலும் பரத்தையர் மாட்டும் நிகழும்' என்று விளக்கமும் எழுதி, "சிறுகாலை..........காணேன்" என்ற பகுதியைப் புணர்வுகுறித்து

வந்ததற்கு மேற்கோள் காட்டினர் இளம்; தொல். பொருளி. சூ. உ௬. (ஆ) "சிறுகாலைப் பட்ட பொறியும்" (இ) "சிறுகாலை, யட்டில் புகாதாள்" நாலடி. ௩௧௦, ௩௯௩.

௩. (அ) தலைமகன், தனதொழுக்கத்தைத் தலைமகன்மாட்டுக்கூர்ந்துணர்த்தும் வழி அவள் மடனழிய நின்றதற்கு, "முத்தேர் முறுவலாய் நம்வலை... ............... கேட்டேன்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, "முத்தேர்............... தங்கினேன்" என்றவழி, அதற் குடம்படாது "அவ்வியானை வனப்பு............... கேட்டேன்" எனப் பொய்கூறினு னென்னும் கருத்தினளாகிக் கூறுதலின் மடனழித வாயிற்றென்பர் இளம்; தொல். பொருளி. சூ. ௩௦. 'தன்வயிற்' (ஆ) "முத்தேர் முறுவலாய்" இந்நூற்பக்கம் ௩௩௦: உ - ஆம் குறிப்புப்பார்க்க.

௩. "மும்மதத்துவாவை, வலையை வீசியே பிடித்திட மதித்தனரென்ன"

௫. "காவற் பாகி ைனுங்கோர் பக்கமும்" என்புழி, "புத்தியானை வந்தது காண்பான் யான் றங்கினேன்" என்பதனால், யானையைக் காத்தற்குப் பிரிந்தேனெனத் தலைவன் கூறினனென்பர் ௩௪; தொல். அகத். சூ. ௪௧.

(பிரதிபேதம்) * இடத்த † காணபான் றங்கினேன், ‡ காண்பதாயாள்,

## மூன்றாவது மருதம் ௩௨. ருகு௭

அ ஒக்கும்
(க) அவ்வியானை வனப்புடைத் தாகலுங் கேட்டேன்
அவ்வியானைதான், சுண்ண (உ) நீ றாடி (௩) நறுநறு நீருண்
டொண்ணுதல் யாத்த திலக வவி*ரோடைத்
(ச) தொய்யில் பொறித்த வனமுலை வான்கோட்டுத்
தொய்யகத் தோட்டிக் குழைதாழ் வடிமணி
யுத்தி பொறித்த புனைபூண் பருமத்து
கடு முத்தேய்க்கும் †வெண்ப னகை திறந்து
(ரு) நன்னகர் வாயிற் கதவ வெளில் ‡சார்ந்து

தன்னலங் காட்டித் தகையினுற் காறட்டி வீழ்க்குந்
தொடர்தொட ராக ‖வலந்து படர்செய்பு
மென்ருேட் டடக்கையின் வாங்கித்தற் கண்டார்
நலங் × கவளங் கொள்ளு நகைமுக வேழத்தை
யின்றுகண் டாய்போ லெவனெம்மைப் பொய்ப்பது நீ

எ - து: அதுகேட்ட தலைவி, நீ கூறியது ஒக்குமென நெஞ்சொடு கூறி, பின்னர் அவன் கேட்ப + அத்தப் புத்தியானை, ஒள்ளிய நெற்றியிலே நிலை பெறுத்தின (௬)திலகமாகிய விளங்கிய ≈ பட்டத்தினையும், தொய்யில் எழுதின

---

௧. கலி. ௧அ: க௩-ஆம் அடிக்குறிப்பின்க ணுள்ள அம்பிகாபதிகோவை. (௩௯௦.) செய்யுள், ஈண்டும் அறியத்தக்கது.

௨. "நீருடிய களிறுபோல" பட். ௨அ.

௩. "தெண்கட் டேறன் மாந்தி" அகம். ௩௩௪: ௯.

௪. "தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை" மது. ௪௧௧.

௫. நன்னகரென்பதனை இவ்வடியின் முன்னடிக்கும் தன்னலமென்பதனை இவ்வடிக்கும்சுற்றுச்சிராக்கிஇம்மூன்றடியையும் அளவடியாக்கலுமாம்.

௬. திலகமென்பது நெற்றியிலணியும் ஓரணிகலமுமாம்; இதனை (அ) "ஒருத்தி தெரிமுத்தஞ் சேர்த்த திலகம், ஒருத்தி யரிமா னவிர்குழை யாய்காதுவாங்க" (கலி. ௬௨; ௩௫-௩௬).என்பதனுலும்(ஆ)உதயனன் வாசவதத்தையின் அணிகளைக் கண்டு புலம்புமிடத்து, "அந்தியுண் முளைத்த வெண்பிறை போலச், செந்நீச் சிறுநுதன் மூழ்கத் தீட்டு, திலமிசை மருங்கின் வீழ்த்தனை யோவெனத், திலக நோக்கிப் பலபா ராட்டியும்", (பெருங். (௨) ௯:௮௪-௯௬.) என்று கூறுதலானும் அறிய

(பிரதிபேதம்) *ஓடை தொய்யில. †வெண்பன்னகை. ‡சாய்ந்து, சாய்த்து. ‖ வலந்துபடர், × வேழக்கொள்ளும், + வத்தபுத்தியானை, ≈ வட்டத்தினையும்.

அழகினையுடையமுலையாகிய வெண்மையையுடைய கோட்டினையும், (க) தொய்யகமென்னுந் தலைக்கோலமாகிய தோட்டியினையும், தாழ்ந்த மகரக்குழையாகிய வடித்த மணிகளையும், திருவைப் பொறித்துவைத்த புனைந்த தலைப்பணியாகிய கழுத்துமெத்தையினையும் உடைத்து; ஆகையினாலே அழகுடைத்தாகவும் பிறர் கூறக் கேட்டேன்; அந்த யானைதான் சுண்ணமாகிய நீற்றை அணிந்து கூறிய கள்ளாகிய நீரை உண்டு நல்ல மனைவாசலிற் கதவமாகிய கம்பத்தைச் சேர்ந்து அதனோடே துவக்குண்டுகே தனக்குச் சங்கிலியாகக் கட்டுண்டு தன்னழகைக் காட்டி அவ்வழகாலே ஒருவரும் போகாதபடி காலைத் தடுத்து வீழ்க்கும்; அதுவேயுமன்றிப் பிறர்க்கு வருத்தத்தைச் செய்யும் மெல்லிய தோளாகிய தடக்கையாலே வாங்கிக்கொண்டு தன்னைக் கண்டாருடைய நலமாகிய கவளத்தை முத்தையொக்கும் நகையினையுடைய வெண்பல்லைத் திறந்து கொள்ளும்; அந்தச் சிரிப்பை † முகந்தேயுடையபழைத்தை இன்று கண்டாய்போலே நீ எம்மைப் பொய்யாக்குவது என்ன ‡பயனையுடைத்தென்றாள். எ - று.

"பருமப் பணையெருத்திற் பல்யானை புண்கூர்ந்து" (உ) என்றார் பிறரும். ஆடியென்பது முதலிய செய்தெனெச்சங்கள் வீழ்க்குமென்னும் முற்றுச் சொல்லோடு || முடிந்தன. அதுவேயுமன்றிக் கவளமுங் கொள்ளுமெனப் பின்னும் முற்றாக முடிக்க. ÷ நகைமுகவேழமென்றது சுட்டாய் நின்றது.

உஉ எல்லா, நெடிஇத் தொடிசெறித்த ✝தோளிணை தத்தித்
தழீஇக்கொண் டூர்ந்தாய நீ

எ - து: எடா! ×தொடியைச்செறித்த தோளாகிய மருமத்தே கெழுமித் தழுவிக்கொண்டு பின்னர்த் தகதி ஏறினையும் நீ எ - று.

இது முயக்கமும் புணர்ச்சியுங் கூறிற்று. யானையாதலின், தத்தியூர்ந்தாயென்றாள்.

உச குழீஇ, அவாவினுத் தேம்புவா ரிற்கடையாறு
வவாவணி யூர்ந்தாய நீ

லாகும். (இ) "சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின்" (ச) "தாரா ரோடைத் திலகநுதற் சயிலம்" வில்லி. கிருட்டினன். கக. கான்காம்போர். கூஉ. என்புழி யானைநெற்றியிலும் திலகம் கூறப்படுகின்றது.

௧. "தொய்யகம்" கலி. ௨அ: ௧. இதற்கு, பூரப்பாளை யென்று பொருள் கூறுவர் அடியார்க்கு நல்லார்; சிலப். ௧: ௧௦௭.

௨. களவழி. ௩அ.

(பிரதிபேதம்) * நதிநாகிய, † முகத்தையுடைய, ‡ பயநுண்டத்து, || முடியும் அதுவேய மன்றிக் கவழமுக், ÷ கைகவேழமென்றது. + தோளிணைத் தந்திந்தழிஇ, × தொடிநிறைந்தோள.



எ - து: நின்மேல் வேட்கையால் எதிர் கொண்டுவந்து கூடிப் பின்னர் வருந்துகின்ற பரத்தையருடைய மனையின் வாயிலே வழியாகக் கொண்டு போய் அவ்வியானையை அழுகுண்டாக எறிவாயும் நீ. எ - று.

உவாவென்றதனை இளையமகளிராகவும் யானையாகவுங் கூறுக. அது யுகம் உகமாயினாற்போல் நின்றது.

௨௭ மிகாஅது சீரப்பட வுண்ட சிறுகளி மாருங்க
ணீர்த்துவிட் டெறிதாயு நீ

எ - து: நின்னை மிகாமற் சீர்மைப்பட நுகர்ந்த சிறிய களிப்பினையுடைய அழகினையுடையவாகிய மைபுண் †கண் அழும்படி சிலநாள் விட்டுப் பின்னர்க் கூடினையும் நீ. எ - று.

நின்னைக் கைகடவாமல் ஓர் அளவிற்பட மதம் பிறத்தற்கு வேண்டுவன வற்றை உண்ட, சிறிய களிப்பையுடைய, மங்க லழுகை உண்டற்குக் காரணமான கண்ணினையுடைய (௧)யானையை நீர்க்கு விட்டு எறிவாய் நீ என்றும் ஒரு பொருள் தோன்றுகின்றது. அழுகையுண்டல்-அவலரைக் கொல்லுதல். கண், ஆகுபெயர்.

௨அ ‡சார்ச்சார் (௨) நெறிதா ழிருங்கூந்த னின்பெண்டி ரெல்லாஞ்
சிறுபாக ராகச் (௩)சிரற்றாது ||சொல்ல

---

௧. "நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறைபறைந் தல்லது செல்லற்க" கலி. ௫௬: ௩௨ - ௩, என்பதும் இந்நூற்பக்கம் ௩௭௧:

சு-ஆம் குறிப்பும் இங்கே கருதத்தக்கன.

உ. (அ) எல்லாமென்னுஞ்சொல் உயர்திணைக்கண் உளப்பாட்டுத்தன்மைக்கே வருமென்றும் அது "நெறிதா ழிருங்கூந்த னின்பெண்டி ரெல்லாம்" எனப் படர்க்கையின் வருதல் இலக்கணவழக்கன்று; நின் பெண்டி ரெல்லாரு மென்னுஞ்சொல் எல்லாமென மரூஉவழக்காகி வந்த தென்றும் அதனைச் செய்யுண்மருங்கினுமென்னும் அதிகாரப்புறனடை யாற் பிறனுன் முடிபெனத் தழீஇக் கோடலுமாமென்றும் கூறுவர் தெய்வச்சிலையார்; தொல். பெயரி. சூ. கஉ. 'எல்லாமென்னும்'
(ஆ) எல்லா மென்பது "தன்னுளுறுத்த பன்மைக்கல்லது உயர்திணை மருங்கினுக்கமில்லை" என்பதனுல், சிறுபான்மை முன்னிலைக்கண்ணும் படர்க்கைக்கண்ணும் வருமென்றுகொண்டு, "நெறிதா ழிருங்கூந்த னின்பெண்டி ரெல்லாரு, சிறுபாராக" என்பதனைப்படர்க்கைக்கண் வந்ததற்கு (தொல். பெயரி. சூ. கக.) நச்சினார்க்கினியரும், (இ) இ-வி. சூ. ககக. இ-வி. நூலாருமேற்கோள் காட்டுவர்; (ஈ) இதனை, சேனவரையர் இடவழு வமைதியென்பர்; தொல். பெயரி. சூ. கக.

௩. செற்றுதவென்பது சிறுதவென்றும்வரும்; உடற்றுதல் உடறுதவென வருவதும் காண்க.

பிரதிபேதம்) * சிலைபட. † என்னைஅழும்படி. ‡ சாஅர்த் சஅத். || மெல்லவிட.

குகூ) கலித்தொகை கூஅ.

விடாஅது நீயெம்மில் வந்தாயவ் வியானை
கடாஅம் படுமிடத் தோம்பு.

எ - து: சார்த்த சார்த்த இடங்களிலுள்ள அறல்தங்கின கரிய கூந்தலை யுடைய நின் பெண்டிரெல்லாரும் நின்னைக் கோபியாதபடி எம்முடைய இல்லிலே வந்தாய்; *அதற்கு அப்புத்தியானை நீ ஏறமாட்டாத(க)பாகனும்படி யாக நின்னைக் கைகடந்து மதம்படும்; அவ்விடத்து விடாதே அதனை மெல் லெனப் பரிகரித்துக்கொள்ளெனப் புலந்துகூறினள். எ - று.

புதிய பரத்தையரைப் †புணர்தற்கு ஏனைப் பரத்தையர் கோபியாதபடி அதற்குப் பரிகாரமாக‡சண்வெந்து என்பால்அடைந்தாய்; தலைவி மனைக்கண் தங்கினனென்று அவர் கருதுவாராக நினைத்தாயென்றாள்.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது தாவுகொச்சகங்களும் சொற்சீரடிகளும் வெண்பாக்களும் விரவி வந்த கொச்சகக்கலி. (கூஉ)

(கூஅ.) யாரைநீ யெம்மில் புகுதர்வா யோரும்
புதுவ மலர்தேரும் வண்டேபோல் யாழ
வதுவை விழவணி வைகலுங் காட்டினையாய்
மாட்டுமோட் டோடி மகளிர்த் தரத்தரப்
பூட்டுமான் றிண்டேர் புடைத்த மறுகெல்லாம்
பாட்டாதல் சான்றநின் மாயப் பரத்தைமை
காட்டிய வந்தமை கைப்படுத்தேன் பண்டெலாங்
கேட்டு மறிவேன்மன் யான்;
தெரிகோதை யந்நல்லாய் தேறியல் வேண்டும்
பொருகரை வாய்சூழ்ந்த பூமலி வையை
வருபுன லாடத் தவிர்ந்தேன் பெரிதென்னைச்
செய்யா மொழிவ தெவன்;
ஓஒ, புனலாடி னாயெனவுங் கேட்டேன் புனலாங்கே
நீணீர் செறிகதுப்பு வாரு மறலாக
மாணெழி லுண்கண் பிறழுங் கயலாகக்

---

க. பாகனென்னும், உரையைநோக்க, பாகரென்பதை ஈற்றில் அர்பெற்று வந்த பாகென்னுஞ் சொல்லாகக் கொண்டனரென்று தோற்றுகிறது.

(பிரதிபேதம்) * அதற்குப்புதுப்பியானே. † புணர்த்தந்து ‡ ஈன்வேக் தாயென்பாக்கத்தயன் றென்முன்றமேனி.



## மூன்றாவது மருதம் க௯.

கார்மலர் வேய்ந்த கமழ்பூம் பரப்பாக
நாணுச் சிறையழித்து நன்பகல் வந்தவிவ்

வியாணர்ப் புதுப்புன லாடினுய் முன்மாலைப்
பாணன் புணையாகப் புக்கு;
௨௦ ஆனாது, அளித்தமர் காதலோ டப்புன லாடி
வெளிப்படு கவ்வையை யானறித லஞ்சிக்
குளித்தொழுகி னுயெனவுங் கேட்டேன் குளித்தாங்கே
போர்த்த சினத்தாற் புருவத் திரையிடா
வார்க்கு ளெகிழத்தா னன்னீர் நடைதட்பச்
சீர்த்தக வந்த புதுப்புன னின்னைக்கொண்
டீர்த்துய்ப்பக் கண்டா ருளர்;
௨௭ சீர்த்தது, உரைசால் சிறப்பினின் னீருள்ளம் வாங்கப்
புரைதீர் புதுப்புனல் வெள்ளத்தி னின்றுங்
கரைகண் டதூஉ மிலை;
௩௦ நிரைதொடீஇ, பொய்யாவாட் டானைப்புனைகழற்காற்றென்னவன்
வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்ததைத்
தெய்வத்திற் றேற்றித் தெளிப்பேன் பெரிதென்னைச்
செய்யா மொழிவ தெவன்;
௩௪ மெய்யதை, மல்கு மலர்வேய்ந்த மாயப் புதுப்புனல்
பல்கா லுமாடிய செல்வுழி யொல்கிக்
களைஞரு மில்வழிக் காலாழ்ந்து தேரோ
டிளமண லுட்பட லோம்பு முனைநேர்
முறுவலார்க் கோர்நகை செய்து.

இது பரத்தையிற்பிரிந்துவந்த தலைவன் ஆற்றாமையே வாயிலாகச் சென்றுழி அவனைக் கண்டு நீ தாழ்த்த காரணமென்னென, புதுப்புனலாடித் * தாழ்த்ததென்ன, தலைவி இன்ன புதுப்புனலே ஆடியதென நகுங்கிக் கூறியது.

இதன் பொருள்.

(க)†யாரைநீ யெம்மில் புகுதர்வா யோரும்
புதுவ மலர்தேரும் வண்டேபோல் யாழ

---

க. (அ) "யாரைநீ யெம்மில் புகுதர்வாய்" என்பது தலைவி அகமலி யூடலகத்திக்கண் வேற்றுக்கிளவி கூறியதற்கு மேற்கோள்; தொல். கற்பி.

'ருதிபேதம்) * தாழ்த்தேனைத்தவி நீ யின்னபுதப்புனலோவர்டியது. † யாரையோ லெம்பில்.



(க)வதுவை விழவணி வைகலுங் காட்டினையாய்
மாட்டிமாட் டோடி(உ)மகளிர்த் தரத்தரப்
௫ பூட்டமான் றிண்டேர் புடைத்த மறுகெல்லாம்
பாட்டாதல் சான்றநின் மாயப் பரத்தையை
(௩)காட்டிய வந்தமை கைப்படுக்கேன் பன்டெலாங்
கேட்டு மறிவேன்மன் யான்

†எ - து: (ச)புதியனவாகியமலர்களைஆராய்ந்து நுகரும்வண்டுபோலே நீ புதிய பரத்தையரை நுகர்தற்கு விரும்புதலின் அவரைக் கொண்டுவருதற்கு

அவரிருக்கின்ற இடந்தோறும் இடந்தோறும் ஓடிச் சென்று அப்பரத்தையரைக் கொண்டுவருகையினாலே எப்பொழுதும் பூட்டப்படும் குதிரையை

௬. சக. 'அவன் குறிப்பு' இனம். (ஆ) "யாரைநீ சொல்லுகென்றலும்" (இ) "யாரைநீ தேற்றேன்" கந்த. மார்க்கண்ட. உகஅ. அசுரர்யாக. உஎ. (ஈ) "நீயாரை நின்னிலே, சொல்லுதி" (உ) "யாரைநீ, யென்னைநீ யியம்பியது" கம்ப. விபீடண. ௫௬. மீட்சி. ௬௦. (ஊ) "யாரைநீ செப்புகென" (எ) "ஆரைநீயென" கூர்ம. இராமன்வனம். ௩௬, ௬௦எ. (ஏ) "யாரைநீ .........போந்தவென்னை" நைடதம். பிரிவுறு உ௬. என்பவற்றிலும் (ஐ) "நீயாரை" கலி அஅ: ௩: என்பதிலும் அதன் குறிப்பினுள்ளவற்றிலும் யாரை என்பதில் ஐகாரம் முன்னிலை விளக்கிவருதல் காண்க; ஐ, அசையென்பாருமுளர்.

க. "அறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானே" கலி. சஉ: கஅ.

உ. (அ) "இவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி, யெவ்வூர் நின்றன்று மகிழ்நநின் றேரே" ஐங். சஉ. (ஆ) "கல்லாலா நெடுநேர்த் தந்துநின்,

நேர்பூண்ட நெடுநெடுமான் றெண்மணிவக் தெட்ப்புமே" (இ) "தேர் மபங்கி வந்த தெரிகோதை யக்கல்வார்" கலி எ௦: கஎ-க௮, ௮௮: க௮. (ஈ) "தேர்தர வந்த நேரிழை மகளிர்" அகம். ௩௩௬: கக.

௩. "செவியிற் கேட்பினுஞ் சொல்லிறந்து வெகுள்வோன், கண்ணிற் காண்' னென்னை குவள்கொல்............பலர்படிக் துண்ணுநின் பரத்தை மார்பே" ஐங்குறு. ௮௪.

௪. (அ) "வண்டு புதிதுண்ண" கலி. கஎ: க௫. என்பதும் (ஆ) அதன் குறிப்பும் இந்நூற்பக்கம் ௨௩௪: ௪-ஆம் குறிப்பில் (இ)இச்செய்திக்குப் பொருந்துவனவும், (ஈ) "தேனிப் புதுமது வருந்தி யார்த்து" கந்த. சரம்புகு. ௨௮. (உ) "பூக்துகள் விரவித் தோற்றுப் புதுமதுக் கவர்ந்து தேனீ, மாந்துதன் மாந்தி" திருவானைக். ஆரஞ். கக. என்பனவும் இங்கே ஒப்புநோக்கற் பாலன.

(பிரதிபேதம்) * பரத்தமை, † எ - து: ஒருமனை, புதியன.

## மூன்றாவது மருதம் ௩௩. ௬௦௯

யுடைய திண்ணியதேர் ஆரவாரித்த தெருவுகளெல்லாம் நின் (க)பரத்தைமை கூறிய பாட்டு உண்டாதற்குப் பொருந்தின நின் பொய்யாகிய பரத்தைமைக் குணத்தை யான் முற்காலமெல்லாம் மிகவுங் கேட்டும் அறிந்திருப்பேன்; அதுவேயன்றி நாடோறும் வரைந்து கொள்ளும் *கல்யாணமாகிய விழாவா லுண்டாகிய ஒப்பனையை என்னை ஒழிந்தவர்களுக்குக் †காட்டுதற்கு நீ வந்து இப்படி வருவையென நெஞ்சிலே தெளிந்துவிட்டேன்; (உ) எம்முடைய இல்லிலே புகுதலைச் செய்வாயாகிய நீ எமக்கு ஆராந்தன்மையையுடையை ‡ யென்றான். எ - று.

ஒரும், அசை. கேட்டுமென்னும் உம்மை, எச்சம். யாழ, அசை. (௩)கைப் படுத்துதல், ஈண்டுத் தெளிதலை உணர்த்துகின்றது. புகுதருவாயென்பது, (௪) புகுதர்வாயெனத் திரிந்துநின்றது; உகரம் விகாரத்தாற்||றொக்கதெனினுமாம்.

௩ (௫)தெரிகோதை யக்கல்லாய் ×தேறீயல் வேண்டும்
பொருகரை வாய்சூழ்ந்த (௬)பூமலி (எ)வையை
வருபுன லாடத் தவிர்ந்தேன் (அ)பெரிதென்னைச்
செய்யா மொழிவ தெவன்

எ - து: அதுகேட்ட தலைவன், தெரிந்த மாலையினையும் அழகினையு

முடைய நல்லாய்! யான் செய்யாதனவற்றைப் பெரிதாக என்னைச் சொல்வது என்னபயனையுடைத்து? தன்னிடத்தேசூழ்ந்த பூக்கள் மிக்க நீர்பொருகின்ற கரையையுடைய வையையாற்றில் வருகின்ற நீரையாடுதற்குத் தங்கினேன்; அதனை நின் னெஞ்சால் ✢ (௯)தெளிதல்வேண்டுமென்றான். எ - று.

---

க. "மகிழ்நன் பரத்தைமை பாடி யவிழிணர்க், காஞ்சி நீழற் குரவை யயரும்" அகம். ௩௩௬: அ - க.

உ. "எம்மனை, வாரனீ வந்தாங்கே மாறு" கலி. அ௧: உ - ௩.

௩. "கைப்பதுதி" (சீவக.௧௯௦௦.) என்பதற்கு, 'காண்பை' என்று பொருள் செய்திருத்தலும் இங்கே கருதற்பாலது.

௪. "திரிதர் வாய்" பரி. ௧௦: ௧௨௧.

௫. "தெரிகோதை யந்நல்லார்" கலி. அஅ: ௧அ.

௬. "வையை யென்ற பொய்யாக் குலக்கொடி,.............புண்ணிய நறு மல ராடை போர்த்து,.................புனல்யா றன்றிது பூம்புனல் யாறென" சிலப். ௧௩: ௧௭௦ - ௧௭௪.

எ. "வையை வருபுன லாட லினிது கொல்" தொல். மெய்ப்பாட். ௫. ௧௧. இளம். மேற்கோள்.

அ. கலி. ௬அ: ௩உ - ௩௩.

௯. 'தெருதல் வேண்டும்' (குறள். ௪௫௩) என்பதற்கு, தவிர்க வென்று பொருளெழுதி யிருப்பதும் 'காத்தல் வேண்டும்' (சீவக. உ௦௧.)

(பிரதிபேதம்) *கல்லியாணமாவிய, †காட்டுதற்குச்சிலம்பிப்படியையுனெ, ‡என்றுன்கேட்பேம், || தொக்கது. தெரி, × தெரிதல்வேண்டும். ✢ தெளிதல்வேண்டும்.





௧௩ ஒஒ! என, கூறிய பொய்யை வியந்து நெஞ்சொடு கூறினள்.

புனலாடி னுயெனவுங் கேட்டேன் (௧)புனலாங்கே
நீணீர் நெறி(உ)கதுப்பு வாரு மறலாக
மாணெழி லுண்கண் பிறழுங் கயலாகக்
கார்மலர் வேய்ந்த கமழ்பூம் பரப்பாக
நாணுச் சிறைஅழித்து (௩)நன்பகல் †வந்தவவ்
வியாணர்ப் புதுப்புன லாடினாய்(௪)முன்மாலைப்

பாணன் புனையாகப் புக்கு

எ-து: அவ்விடத்தே புனலாடினை ‡யென்றுங் கேட்டேன்; நீ ஆடிய புனல்தான் ஒழுகும் அறல் நீண்ட தன்மையையுடைய நெறித்த மயிராக, ஆண்டுப் பிறழுங் கயல்கள் மாட்சிமைப்பட்ட அழகினையுடைய உண்கண்ணாக, ‖ கருமை மலர்தல் பொருந்தின கமழ்கின்ற பூக்களையுடைய சோலையிடத்தே காணுகிய அணையை முறித்துப் பலருங் காணும்படி பகற்பொழுதிலே × வந்த அந்தப் புதுவருவாயையுடைய புதுப்புனலைப் பாணன் வாயிலாக [illegible] = தீர்த்து மாலைக்காலத்திற்கு முன்னே சென்று ஆடினையென்றாள். எ-று.

மலர்தல், பரத்தற்பொருட்டு. ✝

---

என்பதற்கு, காப்பாயாகவென்று பொருள் கூறி வேண்டுமென்பது உம்மீற்றான்வந்தசொல் எவல்கண்ணிய வியங்கோள்; "வாழ்தல்வேண்டு மிவண் வரைந்த வைகல்" (புறம். ௩௯) என்றூர் பிறரும் என்று மேற்கோள்காட்டியிருப்பதும் "நடக்கல் வேண்டும்" (சீவக. ௨௩௭) என்பதற்கு, போவாயாகவென்று பொருள் கூறி வேண்டுமென்பது ஒரு வியங்கோளென்று எழுதியிருப்பதும் ஈண்டு அறிதற்பாலன.

௧. "தேனுகர் வண்டு மூமிறுஞ் சுரும்புஞ் செறிகுவளைப், பூகமு தண்புனற் பொய்கைநல் லூர புதுப் புனலும், கானமர் புள்ளுங் கடவுளும் வாசியும் காய்சினமால், யானையு மாவர்கொல் லோகாணு நாளும்வந் தெய்கையரே" அம்பிகாபதி. ௫௬௦.

௨. "விலக்குதிமிர்க் தொழுகிய கருங்கய னெடுங்கண், விரைமலர் நீங்கா வவிரறற் கூந்த, லுலகுபுரந் தூட்டு முயர்பே ரொழுக்கத்துப், புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி, வையை யென்ற பொய்யாக் குலக்கொடி" சிலப். ௧௩: ௧௭௦ - ௭௦.

௩. இந்நூற்பக்கம் ௪௬௫: ௨-ஆம் குறிப்புப் பார்க்க.

௪. முன்மாலையென்பது இரவின் முன்னதாகிய அந்திக்கும் பின்மாலையென்பது இரவின் பின்னதாகிய அந்திக்கும் பெயராகுமென்றும் கூறுவர்.

(பிரதிபேதம்) * அழிந்த. ✝ வந்தவில்லிபாணர்ப். ‡ என்று, கேட்டேன், ‖ கருமைமலர்தல் × வந்த புதுவருவாயை. = தீர்த்த. ✝('புதுவருவாயையுடையது புதுப்புனல்' என்பது முன் பதிப்பு.)

௨௦ ஆறாது, அளித்தமர் காதலோ டப்புன லாடி
வெளிப்படு கவ்வையை யானறித லஞ்சிக்

(க)குளித்தொழுகினாயெனவுங் கேட்டேன் குளித்தாங்கே
போர்த்த சினத்தாற் புருவத் திரையிடா
வார்ந்து ஞெகிழ்த்தா னன்னீர் நடைதட்பச்
சீர்த்தக வந்த புதுப்புன லின்னைக்கொண்
டீர்த்துய்ப்பக் கண்டா ருளர்.

எ - து: மேன்மேலே தலையளிசெய்து அமர்ந்த காதலோடே அப்புனலை ஆடுதலால் வெளிப்படுகின்ற அலரை யான் அறிதலை அஞ்சி மறைந்து நடந்தாயென்று பிறர் சொல்லவும் கேட்டேன்; அதுபொறாமல் மெய்யை மறைத்த சினத்தோடே புருவமாகிய *திரையையிட்டு நல்லநீர்மையையுடைய நின் ஒழுக்கத்தைத் தடுக்கும்படி கனம்பட வந்த சிலம்பொலியாலே ஆரவாரிக்கும் புதியபுனல் நீ குளித்த அவ்விடத்தே நின்னைக் கைக்கொண்டு இழுத்துச் செலுத்தக் கண்டாரும் உளரென்றாள். எ - று.

குளித்த கடைக்குறைந்தது. குளித்தொழுகவென்று நீரிற் பிறக்குந் தொழிலுந் தோன்றநின்றது. கோபத்தாற் பல்காலும் புருவம் ஏறி முரிவதனைத் †திரையிடாவென்றாள். ஒழுகினாயெனவுமென்ற உம்மை, எச்சவும்மை; பாணன் புணையாக ஆடியதே ‡யன்றி யென நிற்றலின்.

௨௭ ஈர்த்தது, (உ)உரைசால் சிறப்பினின் னீருள்ளம் வாங்கப்
புரைதீர் புதுப்புனல் வெள்ளத்தி னின்னுங்
கரைகண் டதூஉ மில்லை

எ - து: அவ்வனம் இழுத்த நீர், புகழமைந்த தலைமையினையுடைய நினது நீர்மையையுடைய நெஞ்சை வாங்கிக்கொள்கையினாலே குற்றமற்ற

அப்புதுப்புனலினுடைய பெருக்கினின்றும் கரையேறுதற்கு இன்னும்‡ கரை கண்டதுதானும் ||இல்லையென்றான். எ - று.

இன்னுமென்ற உம்மை, சிறப்பு. கண்டதுமென்ற உம்மை, காணாமையே யன்றிக் கண்டதுமில்லையென எதிர்மறை.

௩௦ நிரைதொடீஇ,(௩)பொய்யாவாட்டாளைப் புனைகழற்காற்றென்னவன் வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்ததைத்

௧. குனித்தல் - மறைதல். "மயின்மயிற் குளிக்குஞ்சாயல்" சிறுபாண். ௧௩.

௨. "உரைசால் சிறப்பின், மன்னன் மாறன்" சிலப். அ: ௫-௬.

௩. இப்பொருளில், "ஊய்வாள்" என்ற சொல்லாட்சியே பெரும்பாலன.

(பிரதிபேதம்) *நிலையைவிட்டு. † நிரைபிடவென்றான். ஒழுகிருபென்றவும்மை ‡ அன்றி நிற்றலின், || இல்லையென்றான்.



(௧)தெய்வத்திற் றேற்றித் தெளிப்பேன் பெரிதென்னைச்
செய்யா மொழிவ தெவன்.

எ-று: அதுகேட்ட தலைவன், *நிரைதொடியினையுடையாய்! (௨) தப்பாத வாட்டாளினையும் புனைந்த கழற்காலினையுமுடைய பாண்டியனது வையை யாற்றின் வந்த புதிய புனலை ஆடுதற்குத் தங்கினபடியை வார்த்தையாற் றெளிவித்து, பின்னர்த் தெய்வத்தாற் றெளிவிப்பேன்; நினக்கு யான் செய்யாதனவற்றை என்னைப் பெரிதாகச் சொல்லுகின்றது என்னபயன்தரு மென்றான். எ - று.

இந்நிலத்திற்கு உரியதெய்வம் (௩)இந்திரன்.

௩௪ (௪)மெய்யதை, †மல்கு மலர்வேய்ந்த மாயப் புதுப்புனல்
பல்காலு மாடிய செல்வுழி யொல்கிக்
கனைஞரு மில்வழிக் காலாழ்ந்து தேரோ

டிளமண ஆட்பட லோம்பு முளைநேர்
முறுவலார்க் கோர்நகை செய்து

எ - து: ‡பெருகிய மலரைச் சூடின பொய்யையுடைய புதிய புனலைப் பலகாலும் ஆடவேண்டித் தேரோடேசெல்லுமிடத்து (ரு)முளையொத்த முறுவலையுடையார்க்கு ஒரு சிரிப்பை உண்டாக்கி நின்னைப் பிடித்துக் கரையேற விடுவாரில்லாதகாலத்தே இளமணவினுள்ளே || கால்நிலை தளர்ந்து கழுமி அகப்படுதலைப் பாதுகாப்பாயாகெனத் தலைவி நெருங்கிக்கூறினள். எ - று.

---

க. "செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவ, னையத்தா லென்னைக் கதியாதி நீநின்மை, தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு" கலி. கக: க-அ.

உ. தப்பாத வாள் தானை - தவறாமல் வெட்டுகின்ற வாட்படை.

ங. "ஊடலுங் கூடலுமாகிய காமச்சிறப்பு நிகழ்தற்கு, மருத நிலத்திற்குத் தெய்வமாக 'ஆடலும் பாடலு மூடலு முணர்தலும்' உன்னிட்ட இன்ப விளையாட்டு இனிதினுகரும் இமையோர்க்கும் இன்குர லெழிலிக்கும் இறைவனாகிய இந்திரனை ஆண்டையோர் விழவுசெய்து அழைத்தலின் அவன் வெளிப்படுமென்றார். அது 'வையைப் புதுப்புன............ தேற்றித் தெளிக்கு' என இந்திரனைத் தெய்வ மென்றதனாலும்......... உணர்க" தொல். அகத். சூ. ரு. கச.

ச. மெய்யதையென்பதற்கு, உரை காணப்படவில்லை.

ரு. காணன் முளையை மகளிர்பல்லுக்கு உவமைகூறுதல் தமிழ்நூன் மரபு; "இனையரி காணற் கிழங்கு மணற் கீன்ற, முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்" (அகம். உகஉ: ச-ரு.) என வருதல்காண்க.

(பிரதிபேதம்) * கிளைத்ததொடியின. † மல்லிமலர்பெய்ந்த. ‡ பெருகுமலரை. || தாள்நிலை தளர்ந்து கழுமி அகப்படுத்ததலைப் பாதுகாப்பாய்யாயென.



இதனால், இருவருக்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது தரவும் போக்கும் ஐஞ்சிரடுக்கிய பாட்டும் இடையிடைத்த கலிவெண்பா. (க) (கூகூ)

(கூசு.) நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கு மவைவயெடுத்
தறவினை யின்புறூஉ மந்தண ரிருவருந்
திறம்வேறு செய்தியி னூனெறி பிழையாது
குழவியைப் பார்த்துறூஉந் தாய்போ லுலகத்து
மழைசுரந் தளித்தோம்பு நல்லூழி யாவர்க்கும்
பிழையாது வருதனின் செம்மையிற் றாவாய்ந்த
விழையணி கொடித்திண்டே ரிணமணி யானையாய்;
அ அறனிழ லெனக்கொண்டா யாய்குடை யக்குடைப்
புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றாளை;
கக பொய்யாமை நுவலுநின் செங்கோலச் செங்கோலின்
செப்தொழிற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா
காமநோய் கடைக்கூட்ட வாழுநாண் முனிந்தாளை;
கச ஏமமென் றிரங்குநின் னெறிமுரச மம்முரசி
னேமத் திகந்தாளோ விவளிவட் காண்டிகா
வேய்நல மிழந்ததோள் கவின்வாட விழப்பாளை;
ஆங்கு;
கஅ நெடிதுசே ணிகந்தவை காணினுந் தானுற்ற
வடுக்காட்டக் கண்காணா தற்றாக வென்றோழி
தொடிகொட்ப நீத்த கொடுமையைக்
கடிதென வுணராமை கடிந்ததோ நினக்கே.

*இஃது அரசன் தலைவனுயவன்தலைவியைநீங்கி இருந்ததற்குத் தலைவி புலவிநீட்டித்து ஆற்றளாயவழி அவட்கு நீகழ்ந்த (க) காமத்துமிகுதிறத்தை அவ்வரசனை நோக்கிச் சான்றோர் கூறியது. இது பெருந்திணை.

---

க. காமத் பாங்கி னுங்கோர் பக்கத்திற் றலைவன் கூறியவற்றைத் தலைவி பாத்தையாராக்கிக் கூறுவதற்கு இதுவும்மேற். தொல். அகத். சூ. சுஇ.

உ. இச்செய்யுள் காமத்து மிகுதிறத்தான் அரசனை நோக்கிச் சான்றோர் கூறியதாதலின் மருதத்துக் கோத்தாரென்பது. (தொல். அகத். சூ. கரு. ௯ச.) காணப்படுகின்றது.

(பிரதிபேதம்) * இது அரசன்.

## கூ0கூ கலித்தொகை கூகூ.

### இதன் பொருள்.

நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கு மவையெடுத்
தறவினை யின்புறூஉ மந்தண ரிருவருந்
திறம்வேறு செய்தியி னூனெறி பிழையாது
குழவியைப் பார்த்துறூஉந் தாய்போ லுலகத்து

மழைசுரந் தளித்தோம்பு (க)நல்லூழி யாவர்க்கும்
பிழையாது ×வருதனின் செம்மையிற் றவாய்ந்த
(உ)விழையணி கொடித்திண்டே ரினமணி யானையாய்

எ - து: கள்ளை உண்ணல் ஆகாதென்று நீக்கின †தேவர்க்கும் அதனை உண்டலை நீக்காத அசுரர்க்கும் (ந) வரைதலும் வரையாமையுமாகிய அவ் விரண்டினையும் கைக்கொண்டு அறத்தொழிலாக இன்பமுறுத்தும் வியாழமும் வெள்ளியுமாகிய ‡குரு இருவருஞ் செய்த வழி வேறாகிய தொழில்களையுடைய

---

க. (அ) மழைதொழி லுதவ மாதிரங் கொழுக்க... ..... ..நல்லூழி யடிப் படரப், பல்வெள்ள மீக்கூற, வுலக மாண்ட வுயர்ந்தோர் மருக" மது. க0-உந. (ஆ) "உரவிப் பெருங்கலித் துன்பங்கள் போய்முத லூழி யின்பம், வரவிப்படிதன்னை வாழ்வித்தவாணன்" தஞ்சை.உ.அசு. என் பவை "நல்லூழி......யானையாய்" என்பதனோடு ஒப்புநோக்கற்பாலன.

உ. (அ) "இழையணிக் தியல்வருங் கொடிஞ்சி நெடுந்தேர்" குறுந். நசுகூ. (ஆ) "இழையணி நெடுந்தேர்" (இ) "இழைகிளர் நெடுந்தேர்" புறம். கஉந: ச; நகுக: கரு.

௩. வியாழமும் வெள்ளியுஞ் செய்த அரசியனூல்கள் முறையே பாருகற்பத்திய சூத்திரமென்றும் சுக்கிரநீதியென்றும் பெயர்பெறும்; கன்னுண்டல் பல நூல்களிலும் விலக்கப்பட்டுள்ள 'தென்பது உலகமறிந்ததொன்று; 'பிறவற்றாற் றீராப் பிணிதீர வேண்டி, நறவைத்தானுண்டாற்கு நற்றீர்-வுறவைத்தான், பண்டுபொன்னேன் றத்த பராகசார்தாயணைப் பேர், கொண்ட கிருச்சிரங்கள் கொண்டு.' இதனால் வியாழத்துக்கும் கொள்கை அதுவாதல் புலனாகும். சுக்கிரநீதியில் அளவு கடவாத மத்தியபானம் பிரதிபையையும் புத்தித்தெளிவையும் தைரியத்தையும் சித்தநிச்சயத்தையும் உண்டாக்குமென்று கூறப்பெற்றிருக்கிறது; வேறு விளக்கமாக அந்நூலிற் கண்டாலும் உசனஸ்மிருதியிற் கண்டாலும் பின்பு அச்செய்தி குறிக்கப்பெறும்; யாக்ஞியவற்கியர் மத்தியபான சுராபான நிஷேதம் அந்தணர்க்கே யென்றும் அரசர் முதலியோர்க்கன்றென்றும் மக்கட்பிரிவுக்கு வகுத்துக் கூறியுள்ளார்; அஷ்டாங்க ஹ்ருதயம் சிகித்ஸாஸ்தானம் ஏழாவது அத்தியாயத்தில் நறவின் சிறப்பும் அதன் வகையின் பெயர்களும் பயனும் மற்றும் பலவும் விரித்துரைக்கப்பட்டிருத்தல் இங்கே அறியத்தக்கது.

(பிரதிபேதம்) * வருத்தலின், † தேவர்களுக்கும். ‡ அந்தணரிருவரும்.



அரசியலைக் கூறும் நூல்வழியைத் தப்பாமல், குழவியைப் பார்த்துஇன்புறுஉந் தாய் (௧) அதற்கு முலைசுரந்து கொடுக்குமாறுபோல, (௨) மழையானது தன்னை(௩)வேண்டின காலத்தே பெய்து(௪)உலகை அளித்துப் பாதுகாக்கும் நல்ல முறைமையை எல்லார்க்குந் தப்பாது வருதலை நினது நகரிலமை

---

"வெள்ளியும் பொன்னு மென்போர் விதிமுறை மெய்யிற் கொண்ட, வொள்ளிய ராளி னல்ல வோரையி னுலகமூன்றூர், தள்ளினர் குனிப்ப மௌலி-சூடினான் கடவில் வந்த, தெள்ளிய திருவுந் தெய்வப் பூமியுஞ் சேருந் தோளான்" கம்ப. திருவபிடேக. ௩௮. என்பதும் இவ்விருவரும் அரசியனூல் செய்தன ரென்பதனை வலியுறுத்தும்.

க. (அ) "புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச், சுரந்த காவிரி மரங் கொன் மலிநீர், மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருநன்" புறம். சுஅ: அ - க0. (ஆ) "சரயு வென்பது தாய் முலை யன்னதிவ், வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்" கம்ப. ஆற்று. கஉ. (இ) "ஈன்ற குழவி முகங்கண் டிரங்கித், தீம்பால் சுரப்போ டன்முலை போன்றே, ................அவர், முகங்கண்டுசுரத்தல் காண்டல் வேட்கையேன்" மணி. கக: ககச - ககஅ. என, பிறவற்றுக்கும் உவமையாய் கூறப்பட் டுள்ளது.

உ. (அ) "வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்..................இங்கண் மும் மாரிக்கு வித்து" திரிகடுகம். கஅ. (ஆ) "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு" குறள். ருசுக. (இ) "மழைவளஞ் சுரக்கு மாறும் வயனிலம் விளையு மாறும்,............ .....பிறழ்தாக் கோலி னாகும்" விநாயக. அரசியற்கைப். அக. என்பனவும் (ஈ) "முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி யொல்லாது வானம் பெயல்" குறள். ருருக. (உ) "கோனிலை திரிந் திடிற் கோணிலை திரியுங், கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்" மணி. எ: அ-க. (ஊ) "செங்கோல் கோடியோ..........நலத்தகை நல்லாய் நன்று டெல்லா, மலத்தற்காலை யாகியதறியேன்" மணி. உஅ கஅஅ - கககக. (எ) "நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப்,... ..................வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்" சீவக. உருரு. (ஏ) "வேந்தன் முறைதிறம்பின்................மாந்தர் பசியா லுணங்க மழைவறந்து, பாந்தண் முடிகிடந்த பாரின்விளை வஃகு மால்" பிரமோத்தர. பத்திராயுவுக்கு. கஅ. என்பனவும் இங்கே ஒப்பு நோக்கற்பாலன.

ங. "முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண், டுறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே" புறம். ருகூ: கரு - கசு.

ச. "மன்னுடை ஞாலம் புரவெதிர் கொண்ட, தன்னிய லெழிலி" பதிற்: கஅ: க - க0.

கூ0அ கலித்தொகை கக.

யாலே உலகத்திற்குத் தரும்படியாக வாய்த்த இழையணிந்த கொடியினை யுடைத்தாகிய திண்ணியதேரினையும்(க)மணிகட்டின இளமாயையானையினையு முடையாய்! எ – று.

ஊழ் ஊழியெனத் திரித்தது.

அ (உ)அறனிழ லெனக்கொண்டா யாய்குடை யக்குடைப்
புறத்திழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் †காண்டிகா
பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றளே

எ – து : ‖ நின் அழகிய குடையினது நிழல் அறத்தைச் செய்யுமென்று எடுத்தாய்; அந்தக்குடையினது நிழலின்புறத்தே இவளகப்பட்டாளோ? அதிற் பட்டவளல்லள்; இவ்வனம் பிறைபோலும் நுதல் பசப்புப் பரப்பப் பெரிய (ங)நடுக்கமுற்ற இவளை இவ்விடத்தே அருளிப்பாராய். எ – று.

×காண்டியென்னும் முன்னிலைவினையோடு (ச)காவென்னும் அசைநிலை யிடைச்சொல் நின்றது.

---

க. "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்று" இன்னா. கச.

உ. (அ) "வெண்குடை, நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற, வேம முரச மிழுமென முழங்க, நேமி யுய்த்த........கவரியர் மருக" புறம். ங: க – ரு. என்பதும் (ஆ) "மன்னுயிர் காக்குமிம் மன்னனு மென் கொலோ, வின்னுயி ரன்னளைக் காட்டி யெனத்தொன்று, மென்னுயிர் காவா தது" கலி. கஎங: ரு – ங. (இ) "மண் காவல் கொண்ட வடிநெடு வேன்முடி மன்னவர்க்குப்,பெண்காவல் கொள்கை பெரும்பழி போலும் பெருந்தகையே" அம்பிகாபதி. ருஉ0. என்பவையும் (ஈ) "முன்னமே மொழிந்தா யன்றே யிவன்குறை முடிப்ப தைய, பின்னிவன் வினையின் செய்கை யதனையும் பிழைக்க லாமோ" கம்ப. வாலிவதை. கஉஎ. (உ) "வானும் வையமுங் காத்து வரம்பிலா, ஆனு மாவிபு மோம்பிய மாயற்கு, மீனும் வேலும் வெருவருங் கண்ணியும், யானுமோபிற ரென்றுளங்கன் றுமால்" திருக்கழுக்குன்ற. காராயணச். கச. என இதனிழலாய் வருவனவும் இங்கே அறிதற்பாலன.

௩. விதுப்பென்பதற்கு, புறநானூற் றுரையாசிரியரும் நடுக்க மென்றே பொருள் கூறினர். இவர்கள்கொள்கை, இச்சொல் விதிர்ப்பின் மரூஉ வென்பதுபோலும்; விதும்பலென்பதற்கு விரைதலென்ற பொருள் கூறுவர் பரிமேலழகர்.

௪. காவென்னுமிடைச்சொல் அசைநிலையாய்வருதற்கு "அறனிழ......... ......காண்டிகா" என்பது நன். இடை. ௬: ௨௨. மயிலை. விருத்தி.

(பிரதிபேதம்) * நின்னுடையக். † கிழப்பட்டானோ. ‡ கண்டிகா. || நின்னுடையினது. × கண்டி.



௧௩ பொய்யாமை நுவலுநின் *செங்கோலச் செங்கோலின்
செய்தொழிற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் †காண்டிகா
காம‡ நோய் கடைக்கூட்ட வாழுநாண் முனிந்தாளை

எ - து: (௧) நினது || செங்கோலினுடைய உயர்ந்த நடுவுநிலைமை தப்பாமையை உலகம் புகழ்ந்து கூறாநிற்கும்; அந்தச் செங்கோலினுடைய இனிய செய்தொழிலுக்குக் கீழாகிய கொடுந்தொழிலின்கண்ணே இவள் அகப்பட்டாளோ? அதிற்பட்டவளல்லள்; இங்ஙனம் காமநோய் இறந்துபாட்டைச் சேர்த்துகையினலே தான்உயிர்வாழும் ÷நாளை வெறுத்த இவளை இவ்விடத்தே அருளிப்பாராய். எ - று.

௧௪ ஏமமென் றிரங்குநின் னெறிமுரச ரம்முரசி
+னேமத் திகந்தாளோ விவளிவட் × காண்டிகா
வேய்நல மிழந்ததோள் கவின்வாட விழப்பாளை

எ - று: நின்னுடைய எறிகின்ற முரசம் இவ்வுலகத்திற்குக் காவலென்று கூறும்படியாக ஒலியாநிற்கும்; அந்த முரசினது காவலினின்றும் இவள் நீங்கினளோ? நீங்கினவளல்லள்; இங்ஙனம் மூங்கில் தன்னலனிழத்தற்குக் காரணமான தோள் பழைய அழகுகெடும்படி வருந்துகின்ற **இவளை இவ்விடத்தே அருளிப்பாராய். எ - று.

ஒகாரங்கள், எதிர்மறை.

ஆங்கு, அசை.

அ நெடிதுசே ணிகந்தவை காணினுந் தானுற்ற
(உ)††வடுக்காட்டக் கண்காணு தற்றாக வென்றோழி

---

முு - வி. சூ. உளஎ. இவற்றிலும் "புறநிழற்..........காண்டிகா" என்பது தோல். இடை. சூ. ௩க. சேனு; கச். சூ. ௩௦. 'யாகா' தெய்வச். நன். இடை. சூ. உஉ. இரா; இவற்றிலும் மேற்கோள்.

க. "கடைதனக்குக், கோடாமொழிவனப்புக் கோற்கதுவே" சிறுபஞ்ச. எ. என்பதும் "தெரிவுகொள்செங்கோல் அரசரென்பதனுன் அரசரெல்லாம் தந்நாட்டு நன்றுந்தீதும் ஆராய்ந்து அதற்குத்தக்க தண்டஞ்செய்தற்கு உரிமையும் அறுவெனக்கொள்க" (தோல். மரபு. சூ. எக. பேர்) என்பதும் இங்கே அறிதற்பாலன.

உ. (அ) "தன்வழிக் குற்றங் காணுக் கண்ணெனத் தான்செய் குற்ற, முன்னிடா தவனைக் கோபித்து" மேருமந்தா. உசுக. என்பதும்,

(பாடபேதம்) *செங்கோலைச் செங்கோலின், †கண்டிகா. ‡ கோய்க்கடைக் கூட்ட, ||செங்கோலினையுடைய, ÷ கான்வெறுத்த, ┼ எமத்தினிகத்தானோ, × கண்டிகா, ** இவளையருளிப்பாராய். †† வடுக்காட்டிற்கண்.





தொடிகொட்ட நீத்த கொடுமையைக்
கடிதென வுணராமை கடிந்ததோ நினக்கே

எ - து: கண் * சேணெடிதாக நீங்கின பொருள்களைக் காணினும் தான் தன்னிடத்தே உற்ற வடுவைப் பிறர்காட்டவுங் காணுத தன்மைத்தாக † என்னுடையதோழியினது தொடிகள்சுழன்று கழலும்படியாக நீ கைவிட்ட கொடுமையை நீகடிதென்று உணராதிருத்தல் நினக்குச் (க) சான்றோரால் கடியப்பட்டவற்றில் ‡ ஒன்றோ! அஃதின்றேயென்றான். எ - று.

இதனைக் (௨)கைக்கிளையென்பார்க்குச் சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாது சிற்றலிற் கைக்கிளை || யாகாதெனவும், இதனைக் (௩) குறுங்கலியென்பார்க்கு அகத்தியனாருந் தொல்காப்பியனாருங் கூறாமையின் அப்பெயர் +பொருந்தா தெனவுங் கூறி மறுக்க.

(ஆ) "காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா, வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்" (இ) "கற்ற கல்வியுங் கண்ணகத் தஞ்சனம் புறத்தே, யுற்ற வொண்பொருள் விளக்கியுண் கண்ணினுக் குதவாப், பெற்றி யொப்புற" என வடிவினிலையில் அஞ்சனத்தையும் சேணிகத்த வற்றினிலையில் பிறபொருளையும் நிறுவி ஒருவாறாக அமைத்திருத்தலும் இங்கே அறிதற்பாலன.

௧. "கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா, முடிந்தாலும் பீழைதரும்" என்பது இங்கே அறிதற்பாலது; குறள். ௬௫௮.

௨. 'கலிவெண் பாட்டே' என்னுஞ் சூத்திர வுரையில், ‡"அறனிழல்... ...........விதுப்புற்றனை" என்பதை மேற்கோள் காட்டி, இது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாக் கைக்கிளை வந்ததாமெனின், அற்றன்று; தலைமகன் அன்பின்மை மெய்யாகினன்றே அன்னதாவது; இஃது அன்னதின்றி ஊடல் காரணமாக அன்பிலனென்று இல்லது சொல்லினமையின் இஃதொருதலை யன்பாகாதென்பர் பேராசிரியர்; தொல். செய். சூ. ௧௫0; நச்சினார்க்கினியரும் இதனையே தழுவி யெழுதுவர்.

௩. குறுங்கலியென்பது அகப்புறத்திணையுளொன்றாகிய பெருந்திணையின் துறை பத்தனுள் ஒருதுறையென்று வீரசோழிய உரையாலும் அத்திணையில் அத்துறையில் "காதிருவ கூர்தன் மகளிரை நயப்ப, வேறுபடு வேட்கை வீயக் கூறின்று" என்று புறப்பொருள்வெண்பாமாலையாலும் தலைவனால் துறக்கப்பட்ட தலைவியை அவனொடு கூட்டல் வேண்டிச் சான்றோர் அவன்பாற் கூறுவதென்று புறநானூற்றுரையாலும் அறியப்படுகிறது.

(பிரதிபேதம்) *கண்கள், †என்னுடைய தொடிகள், ‡ஒன்றே வன்றே என்றும், || ஆகாது இதனைக்குறுங்கலி யென்றல் அகத்தியனாரும். + பொருந்தாது. இது முடி.

இஃது எழடித்தரவும் மூன்றடித்தாழிசையும் தனிச்சொல்லும் நாலடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (௩௫)

(௧00.) ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள்சீக்குஞ் சுடரேபோல்
வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையு
நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக்
காண்டகு மதியென்னக் கதிர்விடு தண்மையு
மாண்டநின் னொழுக்கத்தான் மறுவின்றி வியன்ஞாலத்
தியாண்டோருந் தொழுதேத்து மிரங்கிசை முரசினாய்;
௭ ஐயந்தீர்ந் தியார்கண்ணு மருந்தவ முதல்வன்போற்
பொய்கூறா யெனநின்னைப் புகழ்வது கெடாதோதா
னல்கிநீ தெளித்தசொ னசையெனத் தேறியாள்
பல்லிதழ் மலருண்கண் பனிமல்கக் காணுங்கால்;
௧௧ சுரந்தவான் பொழிந்தற்றாச் சூழநின் றியாவர்க்கு
மிரந்தது நசைவாட்டா யென்பது கெடாதோதான்
கலங்களு ருற்றநின் கமழ்மார்பு நசைஇயா
ளிலங்குகோ லவிர்தொடி யிறையூரக் காணுங்கால்;
௧௫ உறைவரை நிறுத்தகோ லுயிர்திறம் பெயர்ப்பான்போன்
முறைசெய்தி யெனநின்னை மொழிவது கெடாதோதா
னழிபடர் வருத்தநின் னளிவேண்டிக் கலங்கியாள்
பழிதபு வாண்முகம் பசப்பூரக் காணுங்கால்;

ஆங்கு;

௨0 தொன்னல மிழந்தோணீ துணையெனப் புணர்ந்தவ
ளின்னுறல் வியன்மார்ப வினையையாற் கொடிதென
நின்னையான் கழறுதல் வேண்டுமோ
வென்னோர்க ளிடும்பையுங் களைந்தீவாய் நினக்கே.

இதுவுமது.(௧)

இதன் பொருள்.

ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள் *சீக்குஞ் சுடரேபோல்
†வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்தகொடுமையு

க. காமத்து மிகுதிறத்தான் ஆசனே நோக்கிச் [வெ]ச(ா)ன்றோர். கூறிய தாகலின் மருதத்துக் கோத்தாரென்பர். நச். தொல். அகத். சூ. கங. (பிரதிபேதம்) * சீக்கும். † ஒண்டாதார்.

கஉ கலித்தொகை க00.

நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக்
காண்டகு மதியென்னக் கதிர்விடு தண்மையு
மாண்டநின் னொழுக்கத்தான் மறுவின்றி வியன்ஞாலத்
தியாண்டோருந் தொழுதேத்து மிரங்கிசை முரசினய்

எ - து: குற்றமற்ற மாட்சிமைப்பட்ட நின் ஒழுக்கத்தாலே கடலின்மீதே தோன்றி இருளைக்கெடுக்கும் (க)ஞாயிறுபோல இவ்வுலகத்திலுள்ள பகைவர் * நெஞ்சம் அஞ்சும்படி வெருவுதல்வந்த கொடுந்தொழிலையும் நெடிதாய்த் தோன்றுகின்ற (உ) வினையவற்றின் உயர்ந்தகுடையைத் †தமக்கு நிழலென்று கருதிச் சேர்ந்தவர்கட்குக் காட்சிதருங் கதிரைச் சொரியும் (ங)மதியையொத்த குளிர்ச்சியினையும், அகற்சியையுடைய உலகில் எவ்விடத்துள்ளோரும் வணங்கிப் புகழும் இரங்குகின்ற ஓசையினையுடைய முரசினையுமுடையாய்! எ - று.

ஈண்டு - இவ்வுலகம். எத்துமென்னும் பெயரெச்சம், முரசின்மேலன்றி ‡அதனையுடைய மன்னவனென்னும் பெயரோடு முடிந்தது.

எ ஐயந்தீர்ந் தியார்கண்ணு (ச) மருந்தவ முதல்வன்போற்
பொய்கூரு யெனநின்னைப் புகழ்வதுகெடாதோதா

1(அ) "ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையுந், திங்க ளன்ன தண் பெருஞ் சாயலும்...... .......உடையை யாகி" (ஆ) "ஞாயி றனையை நின் பகைவர்க்குத், திங்க ளனையை யெம்ம னோர்க்கே" புறம். இஉ:

௩௩ - ௬௩; ௩௬: ௬ - ௭.(இ) "நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள, நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள" பரி.௪: ௨௫ - ௨௬. (ஈ) "கண்ணூர் பகைவரென் றிவர்க்கு நாளினுந், தண்ணியன் வெய்யனத் தானே மன்னனே" தளா. நகர. ௬௭. என்பன இங்கே ஒப்புநோக்கற் பாலன.

௨. "இருகுடை பின்பட வோங்கிய வொருகுடை, யுருகெழுமதியி னிவந்து சேண் விளங்க" புறம். ௩௩: ௩ - ௪.

௩. "திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும், கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடை போன்றிவ், வங்க ணுலகளித்த லான்"

என்பதும் அதன் உரையில் இது பண்பும் பயனுங் கூடின உவமமென் றெழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன. சிலப். ௧: ௧ - ௩.

௪. இங்கே அருந்தவ முதல்வனென்றது சிவபெருமானைப் போலும்; (அ)"தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே" புறம். ௧: ௧௩. (ஆ)"நற்றவனைப் புற்றரவ நாணினானை" (இ)"நற்றவனை நான்மறைக ளாயி னானை" (ஈ)"நற்ற வாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே" (உ) "நற்ற வன்காண்"(ஊ)"மாதொர்கூறுடை நற்றவனை"

(பிரதிபேதம்) * செஞ்சஞ்சம்படி, செஞ்சஞ்சமெய்படி. † தாழ்க்குழலென்று. ‡ அருந் தவமுன்னவன்,

## மூன்றாவது மருதம் ௩௫. ௬௩௩

ஒல்கிநீ தெளித்தசொ னசையெனத் தேறியாள்
பல்லிதழ் மலருண்கண் பனிமல்கக் காணுங்கால்

எ - து: அன்புற்று நீ நின்னிற் பிரியேனென்று தெளிவித்த சொல்லை இது தான் நச்சப்படும் வார்த்தையென்று கருதித் தெளிந்தவளுடைய பல இதழையுடைய *மலர்போலும் உண்கண் நீர்நிறைய நீ காணுமிடத்து அரிய தவத்தையுடைய(க) அறம்வளர்த்த நாயனாரைப்போலயாவரிடத்தும்(உ)பொய் கூறுமென ஐயமற்று உலகம் நின்னைப் புகழ்கின்றதன்மைநினக்குக்கெடாதோ தான்? எ - று.

கக சரந்தவான் †பொழிந்தற்றுச் சூழநின் றியாவர்க்கு
(ரு)மிரந்தது நசைவாட்டா யென்பது கெடாதோதான்

---

தே. (எ) "அருந்தவ னதிசயித்து" திருவால. ௩௦: ௯. எனவும் (ஏ) "பனிவெண் பிறைநறுங்கொன்றைச்சடைபவிதேரியற்கை,முனிவன்" பதினோராந். மூத்தநாயனார். ௯. (ஐ) "முனிவன்" திருவால. காப்பு. ௨. எனவும் வருவன பார்க்க.

௧. சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தியாயிருந்து அறமுரைத்தா ரென்று தேவார முதலியவற்றிற் கூறப்படுதலும் அறமெல்லாம் வளர்க்கும்படி உமாதேவியாருக்கு அருளினரென்று காஞ்சிப்புராண முதலியவற்றிற் கூறப்படுதலும் இங்கே அறிதற்பாலன.

௨. "நெற்றி, யிமையா நாட்டத் தொருவரங் கொண்டு, விலக்கென விண்ணோர் வேள்வி முதல்வன்,விரிகதிர்மணிப்பூ ணவற்குத்தா னீத்த, தரிதென மாற்றான் வாய்மைய னாதலி, னெரிகனன் றானக் குடாரி கொண் டவனுருவு, திரித்திட்டோன்" பரி. ௫: ௨௬ - ௩௫. என்பதும் "நெற்றிக்கண் இமையா நாட்டத்தையுடைய அவன் பக்கலிலே இந்திரன் ஒரு வரத்தைக் கொண்டு 'இந்தப் புணர்ச்சியாற் றோன்றிய கருவை யழிப்பாயாக' என, மழுப்படையைத் தரித்தவன் வாய்மைய னாதலின் அவ்விந்திரனுக்குத் தான் கொடுத்த வரத்தைச் செய்தற்

கரிதென மாற்றாதே இவ்வுல கேழும் தன் மெய்ம்மையை வியக்க அதனுருவைப் பலகண்டமாகச் சேதித்தான்" என்னுமதனுரையும். "மன்னினோர் தம்மைப் போல்வார் மாட்டதே யன்று வாய்மை, நன்னினார் திறத்துங் குற்றங் குற்றமே நல்ல வாகா, விண்ணினோர் புகழ்தற் கொத்த விழுமியோ னெற்றி போழ்ந்த, கண்ணினன் கண் டர்தன்மேற் கறையையார் கறையன் றென்பார்"சூண்டல. "சாதத்தி னரனை யொப்பார்" திருக்கழுக்குன்ற. ௬௭௪. ௨௦. என்பவைகளும் இங்கே நோக்கற்பாலன.

௩. (அ)"மாரி பொய்க்குவ தாயினுஞ், சேர லாதன் பொய்யல னசையே" பதிற். ௧௮: ௧௧-௧௨. (ஆ) "இரவலர்க் குன்னிய, நசைபிழைப் பறியாச்

(பிரதிபேதம்) * மலர்போதுண்கண். † பொழிந்தற்றுச்சூழ

கலங்களு ருற்றநின் கமழ்மார்பு நசைஇயா
ளிலங்குகோ லவிர்தொடி யிறையூரக் காணுங்கால்

எ - து: மனங்கலங்குகின்ற வருத்தத்தையுற்ற நின்னுடைய கமழ்கின்ற மார்பை நச்சினவளுடைய விளங்குகின்ற கோற்றொழில் விளங்குந் தொடி இறையினின்றுங் கழல நீ காணுமிடத்து நீரைச் சுரந்த (க)மேகம் அந்நீரைப் பொழிந்ததன்மைத்தாக நின்னைச் சூழ்ந்து இரந்த பொருளை நச்சுதலை யாவர் சிலர்க்குங் கெடாவென்று உலகங் கூறும் வார்த்தை நினக்குக் கெடாதோதான்? எ - று.

௧0 உறைவரை நிறுத்தகோ (உ)லுயிர்திறம் பெயர்ப்பான்போன்
முறைசெய்தி யெனநின்னை மொழிவது கெடாதோதா
னழிபடர் வருத்தநின் னளிவேண்டிக் கலங்கியாள்
பழிதபு (௩)வாண்முகம் பசப்பூரக் காணுங்கால்

---

கழறொடி யதிகன்" (இ) "ஆர்வுற், றிரந்தோர்க் கியா தீட்டியோன் பொருள்போற், பரந்து வெளிப்படா தாகி, வருந்துக" அகம். ௧௧௨: ௧௭ - ௮, ௨௪௬: ௧௨-௫. (ஈ) "நின்னசை வேட்கையி னிரவலர் வருவ ரது, முன்னமுகத்தி னுணர்ந்தவ, ரின்மை தீர்த்தல் வன்மையானே" (உ) "ஒல்லுவ தில்லென மறுத்தலும்..........இரப்போர் வாட்டல்" புறம். ௩: ௨௦-௬; ௧௯௬: ௭ - ௯. (ஊ) "நகையழுங்க, நின்றொடிப் பொய்த்தனிரைதொடீஇ செய்ந்நன்றி, கொன்றாரிற் குற்றமுடைத்து" நாலடி. ௧௧௧. (எ) "பசைகொண் டவனிற்பப் பாத்துண்ணு ளாயி, னசைகொன்றான் செல்லுலக மில்" பழ. ௨௭. (ஏ) "தருவமென்று முன் சாற்றி மறுத்தவர், நரகஞ்சேர்ந்து நலிகுவ ரென்றுமுந், துறை செய்தாய்" பாகவத. (ஐ) வாமனவதார. ௩௬. என்பனவைகளும் (ஐ) இந்நூற்பக்கம் ௧௭௭. ௧-ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௧. (அ) "நின், சுரத்தலும் வண்மையு மாரியுள" பரி. ௪: ௨௭; (ஆ) "வானத் தன்ன வண்மையும்" (இ) "மாரி யன்ன வண்மைத், தேர்வே ளாயை" (ஈ) "உள்ளி வந்த பரிசில னிவனென, நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு, மணிக்கல னிறைந்த மணநாறு தேறல், பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு, மாரி யன்ன வண்மையிற் சொரிந்து" புறம். ௩௩: ௪௩; ௧௩௩: ௧ - ௭; ௩௯௭: ௧௨-௮.

௨. (அ) தெரிகோன் "ஞமன்ன் போல வொருதிறம், பற்ற லிலியரோ" புறம். ௬: ௯ - ௧௦. (ஆ) "கூற்றமும் விழையக் கோலினி தோச்சிக், கோட்ட மின்றிக் குடிபுறங் காத்து" பெருங். (இ) அ: ௧௧ - ௨௦.

௩. "மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே" கலி. ௭: ௮.

(பிரதிபேதம்) * நிறம்பொய்ப்பான்போல்.



எ - து: நெஞ்சழிகின்ற நினைவு வருத்துகையினாலே நினதருளை விரும்பிக் கலங்கினவளுடைய பழித்தலறும் ஒளியினையுடைய முகம் பசப்புப் பரப்ப நீ காணுமிடத்து உயிரை உடம்பிடத்தே நிற்கும்பேர்க்கும் (௧) கூற்றுவினைப்போல, யாவரையும் உலகத்துறையும் எல்லைதனிலே நிறுத்தின கோலாலே முறைமைசெய்கையென்று உலகம் நின்னைக் கூறும் வார்த்தை நினக்குக் கெடாதோதான்? எ - று.

ஆங்கு, அசை.

தொன்னல மிழந்தோணீ துணையெனப் புணர்ந்தவ
(௨)ளின்னுறல் வியன்மார்ப வினையையாற் கொடிதென
நின்னையான் கழறுதல் வேண்டுமோ
(௩.)*வென்னோர்க ளிறம்பையுங் களைந்திவாய் நினக்கே

எ - து: † எத்தன்மையுடையோர்களுடைய ‡ வருத்தமும் களைகின்ற அதனால் இனிய மூயக்கத்தையுடைய வியன்மார்பனே ! நீ புணருந் துணை யென்று கருதிப் புணர்ந்தவள் தனது இயற்கைநலத்தையும் இழந்தாள் ; நீ இத்தன்மையையாய் இராநின்றாய் ; இது நினக்குக் கொடிதென்று நின்னை யான் கோபித்தல்வேண்டுமோ ? நீயே அளிப்பாயாகவென்றாள். எ - று.

||இழந்தோள்: ஆ, ஓ்வாய்கின்றது.

இதனால், தலைவற்கு அசைவுபிறந்தது.

இஃது ஆறடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடி யாசிரியச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (ருக)

× மருதக்கலி முற்றும்.



---

க. நிறத்துத்தலைக் கூற்றின் றொழிலாகப் பொருத்திக் கொள்ளின், "செயிரிற் குறைநாளாற் பின் சென்று சாடி, யுயிருண்ணும் கூற்ற மும் போன்ம்" கலி. ௧0௫: ௩௭ - ௩௮. என்பதும் அதன் குறிப்பும் ஒப்பு நோக்கற்பாலன.

௨. "இன்னுறல் வியன் மார்ப" கலி. ௮: ௨௪.

௩. "என்னோர் மருங்கினு மேத்தி" என்புழி என்னோருமென்பதற்கு எல்லோரு மெனப் பொருளெழுதி யிருத்தல் ஈண்டறிதற் பாலன. சீவக. ௨௧௨௮. உரை.

பிரதிபேதம்) * ஒன்னோர்கள், † எத்தன்மையையுடையோர்களுடைய. ‡ வருத்தங்களை கின்ற, || இழ்ந்த தோள், × மருதப்பாட்டு முற்றும், மருதத்துக்கு நச்சினார்க் கினியார் செய்தவுரைமுடிந்தது இது ஆசிரியன்பாரத்துவாசிகக. நனிபெறு.

உ
திருமால் துணை.

# கலித்தொகை

## மூலமும்

### நச்சினார்க்கினியருரையும்.

### நான்காவது முல்லைக்கலி.

(௧0௧.) தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்ற
முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமுங்
களிபட்டா னிலையேபோற் றடவுபு துடுப்பீன்று
ஞெலிபுட னிரைத்த ஞெகிழிதழ்க் கோடலு
மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறுமார்
சீறரு முன்பினேன் கணிச்சிபோற் கோடுசீஇ

யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னொருங்கு;
அவ்வழி, முழக்கென விடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ;
மேற்பாட் டுலண்டி னிறனொக்கும் புன்குருக்க
ணேக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா



ணஞ்சி ரசையியல் கூந்தற்கை நீட்டியா
னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்;

௨௧ சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர்கூளிக் கார்த்துவான் போன்ம்;
௨எ செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணிரு ளென்னு னருங்கங்குல் வந்துதன்
றுளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்;
எனவாங்கு;
௩௪ அணிமாலைக் கேள்வற் றரூஉமா ராயர்

மணிமாலை யூதுங் குழல்;

௩௬ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சர் வேற்றை
விடாஅதுநீ கொள்குவை யாயிற் படாஅகை
யீன்றன வாயமக ளோள்;

௩௭ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்;

௪௰ கோளாள ரென்னொப்பா ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட்
கோளாள னாகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்;

## நான்காவது முல்லை க. ௬௱௧௰௭

௪௧ ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு.

இஃது "ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய, ராவயின் வரூஉங் கிழவரு முளரே" என்னும் (க) சூத்திரத்தில் 'திணைநிலைப்பெயராகிய கிழவருங் கிழத்தியரும் உளர்' என்னும் விதியாற்கொண்ட அத்தலைவிக்கு அவள் தோழி ஆயர் ஏறுதழுவுகின்றமைகாட்டி அவள் அதுகண்டு வருந்தாமல் ஆண்டுப் பெற்ற நன்னிமித்தங் கூறித்தெளிவித்து, *அதனை அவ்விதியாற்கொண்ட தலைவற்துங்கூறி, மீட்டும் அத்தலைவிக்குத் தந் சுற்றத்தார் கூறியிருக்குங் கூற்றினையுங் கூறி, தலைவனும் இன்னும் ஒருஞான்று ஏறு தழுவி நம்மை வரைந்துகோள்வனென்று ஆற்றுவித்தது.

இதன் பொருள்.

தளிபெறு தண்புலத்துத் (உ)தலைப்பெயற் கரும்பின்று

முளிமுதற் பொதுளிய (ங) முட்புறப் பிடவமுங்
களிபட்டா னிலைபோற் (௪) றடவுப (௫) துடுப்பீன்று
ஞெலிபுட னிரைத்த †ஞெகிழிதழ்க் (௬)கோடலு

---

க. தொல். அகத். சூ. உக.

உ. "தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத், திருள்படப் பொதுளிய பாரரை மராஅத்து" முருகு. ௯-௧௦.

ங. பிடாவென்பதுமுட்காலையுடையதொரு புதல்; மழைக்குத் தளிர்த்து அரும்பிக் குலையாகப் பூப்பது; இதன்பூ நீண்ட காம்பையும் வெண்ணிறத்தையுமுடையது (அ) "முட்பிடவார்சிறுநெறி" (ஆ) "வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக், கான்பிசிர்கற்பக்கார்தொடங்கின்றே" (இ) "சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல், கண்ணியின் மலருந் தண்ணறும் புறவில்" (ஈ) "குறும்புதற்பிடவி னெடுங்காலலரி" (உ) "நிலவெனத், தொகுமுகை விரிந்த முடக்காற் பிடவின்" எனவருதலும் காண்க. பிடாவென ஒரு மாமும் உண்டென்பர்.

௪. "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" தொல். உரி. சூ. உங.

௫. (அ) "காந்தட் டுடுப்பிற் கமழ்மடல்" மலை. ௩௩௯. என்பதும் (ஆ) கலி. ௪௩: ௩-௪ வது அடிக்குறிப்பில் காந்தட்டுடுப்பென வந்திருப்பதையும் ஈண்டு அறிதற்பாலன.

௬. கோடலென்பது பெரும்பாலும் முல்லைநிலத்துக்குரித்தாகக் கூறப்படும்ஒருபூங்கொடி; இதன்குலைக்குப் பாம்பின் படமெடுத்தநிலையும்

(பிரதிபேதம்) * இதன், † ஞெகிழிதழ்க் கோடலும்.



௫ (க)மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறமார்
சீறரு முன்பினேன் (உ)தணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னொருங்கு

எ - து: மழையைப் பெறுகின்ற குளிர்ந்த நிலத்தே நின்ற கார்காலத்து முற்பட்ட மழைக்கு *அரும்பீனுகின்ற முன்புஉலர்ந்த முதலிடத்தே தழைத்த முள்ளைப் புறத்தேயுடைய பிடவம்பூவும், (ரு.) கள்ளுண்டு†களித்தலுற்றவ னிலைமைபோல அசைந்து ‡ வளைந்து துடுப்புப்போலும் முகையை முன்னர்

---

இதன்பூவுக்கு விளக்கும் உவமையாகக் கூறப்படுகின்றன; இஃது இடையராற் சூடப்படுவது; இது பெரும்பாலும் வெண் காந்தளுக்கே பெயராய்வருமென்பர்; இங்குச்செங்காந்தட்கு வந்திருப்பது புண்டரீக மென்பது செந்தாமரைக்கு வருவதுபோல அருகியவழக்கு; (அ) "குருவுடையன கொடியிடைவொடு குலைவிரிவன கோடல்" (ஆ) "வெஞ்சின வரவின் பையணந் தன்ன, தண்கமழ் கோட லூதுபிணி யவிழ" (இ) "அணர்த்தெழு பாம்பின் றலைபோற் புணர்க்கோடல், பூங்குலையீன்ற புறவு" (ஈ) "கோடலங் நீப மேந்தி" (உ) "வரிவெண்கோடல் வாங்குகுலை வான்பூப், பெரிய சூடிய கவர்காற் கோவலர்" என்பவற்றால் இவை விளங்கும்; இதுவும் மகளிர்வளையலும் ஒன்றற்கொன்று உவமையாதல் இந்நூற்பக்கம் சகூ: ௧-ஆம் குறிப்பால் அறியலாகும். தோன்றி யென்பதும் இதன்வகைபோலும்.

௪. (அ) "மணிக்காயா" பொருந. ௨0௧. (ஆ) "மணியெனத், தேம்படு காயா மலர்ந்த" ஐங். ௪௨0.

௨. கணிச்சி, மழுவின் வேறுபட்டதொருபடை; இதனை, "கையது கணிச்சியொடு மழுவே மூவாய், வேலு முண்டத் தோலாதோற்கே" என்பது வலியுறுத்தும்.

௩. (அ) "காளா தந்து நறவுகொடை தொலைச்சி, யில்லடு கள்ளின் றேப்பி பருகி..........தோளோச்சி வலன் வளையூஉப், பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை" பெரும்பாண். ௧௪௧ - ௧௪௬. (ஆ) "தசும்பு துளங்கிருக்கையென்றது தன் களிப்புமிகுதியால் தன்னை யுண்டா ருடல்போல அத்தசும்பிருந்து ஆடும்படியான இருப்பென்றவாறு இச்சிறப்பான், இதற்கு, 'தசும்புதுளங்கிருக்கை' என்றுபெயராயிற்று" பதிற். ௪௨: ௧௧.உரை.(இ) "துழந்தடு கள்ளின் றேப்பியுண் டயர்ந்து, பழஞ்செருக் குற்ற வனத்தர்ப் பாணியும்" மணி. ௭: ௭௧ - ௭௨. (ஈ) "அரிய லார்ந்த வனத்தர்" தணிகை. திருநாட்டு. ௧00.

(பிரதிபேதம்) * அரும்பிவீரு நின்ற, † கவித்ததும்பலனவிலை ‡ வினைத்தலைப்பு.



ன்று, பின்னர்த்(௧)தீயைக் கடைந்து, அதிற்பிறந்த நெருப்பைச்சேரநிரைத் ரத்போன்ற அலர்ந்த இதழினையுடைய செங்காந்தட்பூவும், நீலமணியை யாக்கும் நிறத்தினையுடையவாகிய(௨)*காயாம்பூக்களும் பிறவும் அழகுகொள் நம்படி சூடிய கண்ணியையுடையவர் சேரத்தொக்கு ஏறுதழுவுவாரோடே றுபடுதலை ஏறட்டுக்கொண்ட தம் மைந்தினைச் சேரநிறுத்துதற்கு மகட் காடை சேர்ந்த ஆயர் சேரக்கூடி, பிறரால் சீறுதற்கரிய வலியினையுடைய )றைவனுடைய குந்தாலிப்படைபோலே கூரிதாகக் கொம்புகளைச் சீவி, ஏறு ளைச் சேரத் தொழுவிடத்தே புகுதவிட்டார். எ - று.

தண்புலத்துநின்ற பிடவும் காந்தளும் காயாவும் பிறவுமென்க. இவை ௩.)முதற்பொருட்கேற்ற அடையடுத்துநின்ற ஆகுபெயர். ஈன்றென்பதுநிகழ் ாலமுணர்த்துஞ் செய்தெனெச்சம். (௪) ஞெகிழியுடனென்றது ஞெலிபட னென எச்சமாகக்கூறுதலின் இவ்வாறு பொருள் †கூறினும். "ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழி" (௫)என்பதனானும் இது வினைச்சொல்லாம்.

அவ்வழி, முழக்கென விடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
(௬)துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ

எ - து: அவ்விடத்து ஏறுகளைத் தழுவிப் ‡போக்கும்படியை உட்கொண்டு வந்து வந்து திரண்டு மழைமுழக்கென்ன இடியென்ன நடுவானநிலத்தின்

---

க. "தீயி னன்ன வொண்செங் காந்தட்,... ............... நெருப்பி னன்ன பல்லிதழ்" மலை. ௧௪௫-௧௪௬.

௨. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவராடையை" கலி. ௧௦௮: ௧௦.

௯. "தனிபெறு......................பிடவமும்" என்பது பூங்குமிழென்பது முதலாகிய தன் பொருட்கேற்ற அடையடுத்து நின்றதோராகுபெய ரென்பதற்கும் (கோவையார். ௧: பேர்.) செய்தென்னும் வினை யெச்சத்திற்கு நிகழ்கால வாய்பாடும் சிறுபான்மையுண்டென்பதற்கும் (தோல். வினை. சூ. ௯௧. நச்.) உகரவீறுசிறுபான்மை நிகழ்காலம் பற்றி வருமென்பதற்கும் (இ - வி. சூ. ௨௪௬.) மேற்கோள்.

௧௦. "சொடு மழைக் காற்று தங்கட் குளிர்பெயன் மாறவெண்ணி, நெடு மலை யெடுத்துக் காட்டு நெட்டிதழ்க் காந்தட் கொள்ளி"

௧௧. பெரும்பாண். ௧௭௮.

௧௨. (அ) "யாறுங்குளனும் வேறுபல் வைப்புஞ், சதுக்கமுஞ் சந்தியும் புதுப் பூங் கடம்பும்" முருகு. ௨௨௪-௨௨௫. (ஆ) "ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவுங், கால்வழக் கறுநிலைக் குன்றமும்பிறவு, மவ்வவை மேய வேறு

(பிரதிபேதம்) * காயாம் பூக்களுமழுகொக்ளும்படி, † கூறிற்று. செவிகோத், ‡ போகும் படியை யுரைகொண்டு வந்து வந்து.

## ௬௨௨ கலித்தொகை ௧௦௧.

முன்னே ஆரவாரமெழப் புகையொடு தூகள் எழ ஏறுதழுவினார்க்குக் கொடுத் தற்கு நல்லமகளிர் இரண்டுநிற்ப * நீர்த்துறையிலும் (௧) ஆலமரத்தின்கீழும் பழையவலியினையுடையமராமரத்தின்கீழும் உறையுந்தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைப் பரவித் தொழுவிலே பாய்ந்தார். எ - று.

"வளிவழக் கறுத்த வங்கம்" (௨) என்றாற்போல வழக்குப் போக்குதல் மேல்நின்றது. (௩) இடி எற்றின் இடிப்பிற்கு உவமம். அவர்பாய்ந்த அளவிலே தோழி தலைவியை அழைத்துக்காட்டுகின்றாளாக மேற்கூறுக.

௧௫ மேற்பாட் டுலண்டி னிறனெக்கும் புன்குருக்க
ணேக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா
ணஞ்சீ ரசைஇயல் கூந்தற்கை நீட்டியா
(௫)னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்

எ - து: உயர்ந்த கொம்பிடத்தே வைத்த(ரு)உலண்டினது நிறத்தை யொக்கும் புல்லியநிறத்தைத் தன்னிடத்தேயுடைய ஏருத்தினது நோக்கை அஞ்சானாய் அதின்மேலே பாய்ந்த இடையனைச் சுழலக்குத்திக் கொம்பிடத்தே எடுத்துக்கொண்டுடலைக்குலைக்கின்றதனுடையதோற்றரவைக்காணாய்; அழகிய

வேறு பெயரோ, யெவ்வயி னோயு நீயே" பரி. ச: சஎ - எ0. (இ) "துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்" சிலப். உச. 'குறமகள்'

க. (அ) "ஆலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட" கலி. ௧0௬: உ௬. (ஆ) "கடவுளாலத்து" நற். ௩௪௩: ச; புறம். ௧௯௯: க.

உ. புறம். ௩௬அ: க.

௩. "உருமி னதிருங் குரல்போற் பொருமுர, னால்லேறு" கலி. ௧௧௩: உச - உ௫. என்பதும் அதன் குறிப்பும் இங்கே நோக்கற்பாலன.

ச. "நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவேட்டன், வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்" என்பது 'இட்டு' என்னு மிடைச்சொல் அசைநிலையாய் வருதற்கு மேற்கோள். நன். இடை. சூ. உஉ. மயிலை; விருத்தி; இரா. இ - வி. சூ. உஎஎ.

௫. உவண்டென்பது தான் வெளிப்படுதற்கு வழியின்றித் தன்னுடம்பைத் தானூற்கு நூலாற் சுற்றிக் கூடாக்கிக் கொண்டு அதனுளிருந் திறக்கும் இயற்கையையுடையதொரு புழு; அந்நூலியற்ற அதுவே வல்லது. அது காட்டிலமிர்தென்று சிறப்பிக்கப்படுவது; அதனூலால் சிறந்த ஆடை செய்தலுண்டு; இவை (அ) "வரியுடல் குழக்குடம்பை னுறெற்றிப், போக்குவழி படையா துன்னுயிர் விடுத்தலி, னறிவு புறம் போய வுலண்டது போல" (ஆ) "போக்குவழி கண்டிடை

(பிரதிபேதம்) * கீர்த்தறையும் குலத்தின் மேழம்.



லமையினையுடைய மணமசைந்த இயல்பினையுடையளாகிய துரோபதையது ய்ய கூந்தலிலே கையை நீட்டிய* துச்சாசனனுடையநெஞ்சைப் பிளந்து ாசட்டுப் பகைவர்நடுவே தான்சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச்செய்த மசேனனைப்போலும். ¹எ - று.

போலும் போன்மெனத் திரிந்தது. † "னகாரை முன்னர் மகாரங் குறு ம்" (க)என்பதனுன் மகாரங் கான்மாத்திரையாய் நின்றது. புன்குருக்கண், துபெயர். சாவக்குத்தியென்பது "சாவ வென்னுஞ் ‡செயவெ னெச்சத் றுதி வகரங் கெடுதலு முரித்தே" (உ) என்பதனுல் வகரங்கெட்டது.

டக (ரு.)சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய(ச)வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர் ‖கூளிக் கார்த்துவரன் போன்ம்

---

புகாதுற முலண்ட, மாக்கியிடு கூடதனை யாத்திடுதல் போல" (இ) "குடம்பையுளுலண்டுபோலக்கோட்படும்வினையன்"(ஈ) "வாலுலண்டு கோற்றருத, றேன்புரிந்து யார்க்குஞ் செயலாகா" (உ) "அரக்குலண்டு செந்தே னணிமயிற்பீலி, திருத்தகு நாவியோடைந்து" (ஊ) "நூலினு முலண்டினு நாரினு மியன்றன" என்பவற்றால் அறியப்படுகின்றன; இங்கே அதனிறம் புற்கென்றநிறமென்று சொல்லப்படுகிறது. இவ் வகை ஆராய்ச்சியால் இது படப்பூச்சி யென்பது விளக்கும்.

க. தொல். மொழிமரபு. சூ. கக.

உ. சாவ வென்னும் எச்சத்து இறுதிக்கணின்ற வகரஉயிர்மெய் கெட்டு நிற்றற்கு, "கோட்டிடைச் சாக்குத்தினன்" என்பது (தொல். உயிர் மயங்கு. சூ. எ. நச்; இ - வி. சூ. அகூ) இவற்றிலும், 'சாக்குத்தினன்' என்பது (தொல். உயிர்மயங்கு. சூ. எ. இளம்.நன். உயிரீற்று. சூ. கக. மயிலை. விருத்தி. இரா); இவற்றிலும் மேற்கோளாகக் காணப்படுகின் றன. 'சாக்குத்தினன்' என்பதனை முதனிலைவினை வினைமாத்திரை யாய் நில்லாது வினையெச்சப் பொருட்டாய் நின்றதென்பர் பிரயோக விவேக நூலார். பிரயோக. கரு.

ரு. "வன்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோலத், தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும்" கலி. கoரு: க-கo.

௪. (அ) "எற்றெருமைநெஞ்சம் வடிம்பினிடர்திட்டு" கலி. ௧0௩: ௩௨. என
வும் (ஆ) "எற்றெருமை புகைத்தடரு மிருணிறத்த வெரிகுஞ்சிக்,
ரதிபேதம்) * தச்சைவரசனுடைய, † 'ஙகர முன்னர் மகரக்குறுகும்' ‡ செய்தெனெச்சத்
திறுதி, || கூளிக் காத்தவான். .

௬௨௪ கலித்தொகை ௧0௧.

எ - து: மதிவிரிந்தாற்போன்ற சுட்டியை நெற்றியிலேயுடைய கரிய
எருது முழைஞ்சினையுடைய மலையிற்பூவாற்செய்த அழகையுடையகண்ணியை
யுடைய பொதுவனைத் * துகைத்துக் குடர்சரியும்படி குத்திக் கோட்டிடைக்
கொண்டு குலைப்பதனுடைய தோற்றரவைக் காணாய்; பல்லுயிரும் வருத்
தத்தை அணிகின்ற ஊழிமுடிவிலே (௧) பசியநிறத்தைத் தன்பாகத்தேயுடைய
உருத்திரன் வருத்தத்தைச்செய்து ஏறுகிய எருமையையேறுகின்ற (௨) கூற்றுவ
னுடையநெஞ்சைப் பிளந்துபோகட்டு அவன் குடரைக் கூளிக்கிட்டு அவற்றின்
வயிற்றை நிறைவிக்கின்றவனைப்போலும். எ - று.

எருமை, † ஆகுபெயராய்க் கூற்றுவனை உணர்த்திற்று.

௨௭ (ங) செவிமறை நேர்மின்னு நண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணிரு ளன்ன னருங்கங்குல் வந்துதன்
றுளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்

எ - து: செவிமறுவாயிருக்கின்ற விளங்கும் நுண்ணிய சிவந்த பொறி களையுடைய ஆயர் நேர்ந்துவிட்ட வெள்ளை யெருத்தினது கோபத்தை ‡அஞ்சா ஞய் அதன்மேலே பாய்ந்த பொதுவனை நுதியைத் துகைத்து முனையினை யுடைய கோட்டாலெடுத்துக் குலைப்பதனுடைய தோற்றரவைக் காணாய்; வருதற்கரிய கங்குலிலே அரிய இருளென்று கருதாஞய் வந்து துரோணு சாரியனைக் கொன்ற (ஈ)சிகண்டியைத்,தன்முயற்சியாலே வென்று கொன்று தன் தோளால், தலையைத் திருகும் || அச்சுவத்தாமாவைப்போலும். எ - று

கூற்றம்" நைடத. போர்புரி. கஒ. (இ)"கூற்றினெருமை யேறணிந்த கண்டையொலி" காசி. மணிகன்னிகை.கஅ. எனவும் வருதல் காண்க.

க. பசிய நிறமென்றது அந்நிறத்தையுடைய உமாதேவியாரை.

உ. "சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா, வுடறிய சேவடி யான்" தேவாரம்.

ங. (அ)"செம்மறு வெள்ளை" (ஆ) "சில்லைச் செவிமறை தொண்டவன்" கலி. ,கOஇ: கஉ, கOஎ: ங. (இ) "நுண்பொறி வெள்ளை யடர்த் தாற்கே", "பொற்பொறிவெள்ளை யடர்த்தாற்கே", "தூநிறவெள்ளை யடர்த்தாற்கு" சிலப். கஎ: ச, ஞ, எ.

ச. துரோணனைக்கொன்றவன் திட்டத்துய்மனும்வீமனைக்கொன்றவன் சிகண்டியுமாதலால் இங்கே சிகண்டியை யென்பது திட்டத்துய்மனை (பிரதிபேதம்) * தொகைத்து. † ஆய்பெயராய்க், ‡ 'அஞ்சாஞய்த் தன்மேலே பாய்ந்த பொதுவனைத் துகைத்து முன்னிலது தனிபோலும் முனையினையுடைய'என்பது முற்பிய பதிப்பு. || அசுவத்தாமாவைப்போலும்.

## நான்காவது முல்லை க. கஉஇ

சேர்வெள்ளையென்க. நுதியென்றது முனை; எனவே, தலை யென்பது தோன்றிற்று. *"நுதிக்கோலஞ்செய்து"(க) என்றாற்போல.

எனவாங்கு அசை.

இங்ஙனம் தோழி காட்டக்கண்டு நங்கணவற்கும் இங்ஙன மாகுமோ வென்று அஞ்சின தலைவியது அச்சத்தை ஆண்டுப்பெற்ற நன்னிமித்தங்கண்டு தோழி †போக்குவானாக மேற்கூறுகின்றான்.

கச அணிமாலைக் கேள்வற் றரூஉமா (உ)‡சாயர்
மணிமாலை யூதுங் குழல்

---

யென்றிருக்க வேண்டியதென்று தோற்றுகிறது. வியாஸபாரதத்தில் அசுவத்தாமா திட்டத்துய்மனை அவனுறங்குகையில் காலாலுதைத்து நிலத்தில்தேய்த்துத் தன்வில்லின் நாண்கயிற்றினால் அவன் கழுத்தைக் கட்டி இழுத்து அவனை மிதித்து வருத்தாநிற்க, அவன் வலியற்று, 'குரவன் காதலா! யான் புண்ணிய வுலகடையுமாறு என்னைப் படைக் கலத்தால் விரைந்து கொல்' என்று வேண்டவும், 'குரவனைக்கொன்ற பாவிகட்கு நல்லுலகங்கள்கிடையா; ஆதலால் நீ படைக்கலத்தால் கொல்லத் தக்காயல்லை' என்று மறுத்து மீட்டும் தன்கால்களால் உயிர் நிலைகளில் உதைத்துக் கொன்றான்'' என்று காணப்படுஞ் செய்தியும் பின்பு, "வீடுமனைக்கொன்ற சிகண்டி எதிர்த்துப் புருவங்களுக்கிடையே வில்லால் அடிக்க, அவனைக் கத்தியால் இருதுணியாகத் துணித்தா னென்று காணப்படுஞ் செய்தியும் இங்கே அறிதற்பாலன. வில்லிபுத் தூராரும், "பருவாலகற்றி யிருவர்வீரரையும் பாசறை வாயிலினிறுத்தி, மருவருங் கமல மாலையான்கடப்ப மாலையானெனமனங் களித்துப், பொருவரு முனைக்குக் குரிசிலா யெல்லாப் போரினும் புறமிடா தடர்த்த, துருபதன் மதலை வரிசிலைத் திட்டத் துய்மனை மணித்தலை துணித்தான்'', "கயில்புரி கழற்காற் றந்தையைச் செற்ற காளையைப் பாளையத் திடையே, துயில்புரி யமையத் திமைக்குமுன் சென்னி துணித்தனன் சுதனெனக் கலங்கி, வெயில்புரி வதன்முன் வல்விரு ளிடையே புணர்ந்தவர் வெருவுட னரற்றப், பயில்புரி சிலைக்கைச் சிகண்டியை முதலோர் பலரும்வந் தனர்கள்பாஞ் சாலர்'', "உத்தமோ சாவு முதாமனு முதலிட் டுள்ளவர் யாவரும் பிறருந், தத்த மோ கையினால் வந்தெதிர் மலைந்தோர் தலைகளாத் பலமலையாக்கி'' என்று கூறியிருக்கிறார்; வில்லி. பதினெட்டாம். உகஅ - உகூ.

க. கோவையார். உகo.

௨. "அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன், குழல்போலுங் கொல்லும் படை" குறள். ௧௨௨௮.

(பாடபேதம்) * அடிக்கோலஞ் செய்ததென்றற்போல. † போக்கினளாக மேற்கூறுக. அணிமாலைக். ‡ ஆயன்.

79



எ - து: ஆயர் ஊண்டு ஊதுகின்ற குழல் நீலமணிபோலுங் காயாம்பூவாற் செய்த மாலையினை அணியும் இயல்பினையுடைய கேள்வனை நமக்குத் தருதற்கு நன்னிமித்தமாக இசைத்தது காண்; நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ - று.

அது, மங்கலமான பண்ணைத் தருதலின் நிமித்தமாயிற்று.

௯௪ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா வேற்றை
விடாஅதுநீ *கொள்குவை யாயிற் படாஅகை
யீன்றன †வாயமக டோள்

எ - து: தோழி, தலைவனிடத்தே சென்று ஆண்டுச்செய்த நிமித்தத்தை ஆராய்ந்துபார்க்கில், மதத்தையுடைய களிற்றினுங்காட்டிற் றறுகண்மையையுடைய ஏற்றை நீ கைநெகிழவிடாது கொள்வை; இப்பொழுது இவ்வாயமகள் ‡தோள் வினைமகளிர் தோள்களிற்காட்டில் ||வெற்றிக்கொடியை உண்டாக்கினவாமென்றாள். எ - று.

௯௫ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்

எ - து: பின்னர்த் தலைவியிடத்தே வந்து எம்முடைய பலவான கரிய கூந்தலினையுடையவளை யாம் கூடுதற்குக் கொடுப்பேம்; கொல்லேற்றைச் சாடு

தற்குச்சமைந்திருந்தவர்களுக்கென்று ÷நமர்கூறி, கூற்றம் தலைவனையொழிந்த பகற்பொழுதிலேஅலர்ந்த கண்ணியையுடையவன் வருத்தத்தையுடைத்தாகிய குழலினையுடையவன் × கவலின்மேலே கோலைவைத்தகையையுடையவனாகிய வினைவலபாங்கினோர்க்கு அயலதாயிருக்குங்காலமென்றாள். எ - று.

அயலதென்றது ஏறுதழுவுதற்கு அரிதென்னும் + பொருட்டு. இம்மூன்று பெயரும் ஏறுதழுவினவர்களை நோக்கிக் கூறிற்று.

சகூ (க)கோளாள ரென்னொப்பா **ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட்

---

க. "தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன், வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணாதான், கோளாள னென்பான் மறவாதா னிம் மூவர்,கேளாக வாழ்த லினிது" (திரிகடுகம்.கஉ.) என்னுஞ் செய்யுளி லும் இப்பகுதியிலுமுள்ள எதுகைச்சொற்கள் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * கொல்லையாயிற், † ஆயர்மகன், ‡ தோள்மகளிர், தோள்வீரமகளிர், ‖ வெற்றிக்கொம்பையுண்டாக்கின, ÷ நமர்கூடிக்கூறுந்தலைவன × கவன் மேலேகோலைவைத்த கையையுடையவனுமொழிந்தவினையல, + பொருட்டா யிற்று. இம்மூன்று, ** இல்லே நம்மானுட்.

நான்காவது முல்லை க. கூஉஎ

*கேளாள னாகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்

எ - து: யான் முற்கூறிய நிமித்தமேயன்றித் தலைவனைக் கண்டு என் கண்கள் உபகாரத்தைச் செய்கையினாலே ஏறுகொள்ளவல்லார் என்னை யொப்பார் பிறரில்லை யென்று நம்முடைய பசுத்திரளிலே நின்று தனது ஆளாண்மையைக் கூறுந் தலைவன் பின்பு ஒருநாளிலேயாயினும் ஏறுதழுவி நம்மைத் தனக்குக் கேளாக ஆளுந் தன்மையையுடையனாகாமை இல்லை யென்றாள். எ - று.

தாளாண்மை - முயற்சியை. ........ஆண்டு ‡போதுவன். நம்மை, நமக்கு;
ருபுமயக்கம். கண் வேளாண்மை செய்தலாவது, (க)இடக்கண் துடித்தல்;
லக்கண் || துடிக்கவாதிருத்தலும் நன்னிமித்தமாதலிற் செய்தனவெனப்
ன்மையாற் கூறினன்.

ஈன X ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
(உ)நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
(ஙூ)முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு

எ - து: அவ்விடத்தில் ஏறுகளும் வருந்தின; இடையரும் புண்மிக்கா
ரன்று எல்லாம் (விலக்குகையினுலே) தம்மைக் கொள்ளுதற்கு நின்ற

---

க. (அ) "கண்ணகி கருங்கணு மாதவி செங்கணு, முன்னிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன, வெண்ணுமுறை யிடத்திலும் வலத்திலுந் துடித்தன" சிலப். டு: உ௩எ - உ௩௧. (ஆ) "போக மகளிர் வலக் கண்க டுடித்த" சீவக. உ௩எ௩. (இ) "நலந்துடிக் கின்றதோ நான் செய் தீவினைச், சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ, பொலந் துடி மருங்குலாய் புருவங் கண்முதல், வலந்துடிக் கின்றில வருவ தோர் கிலேன்" (ஈ) "நஞ்சனை யான்வனத் திழைக்கு நாளிடை, வஞ்சனை யால்வலந் துடித்த வாய்மையா, லெஞ்சல வின்றோ ளிடந் துடித்ததா, வஞ்சலென் றிரங்குதற் கடுப்ப தியாதென்றாள்" கம்ப. காட்சிப். ௩உ, ௩டு. என்பவைகளும் (உ) கலி. ௪௪: ௧௧ - உஉ. அடிக் குறிப்பில் இடந்துடித்தல் நன்மைக்குறியென்பதை யறிவிக்கும் மேற் கோள்களும் ஈண்டு அறிதற்பாலன.

உ. (அ) "நாந்தாஅ திருங்கூந்தல்" (ஆ) "நாறிருங் கூந்தலார்" கலி. ௫௪: டு, ௬டு: உ.

௩. "முல்லையந் தண்பொழில்" நாற். கு. ௯. மேற்கோள்.

நதிபேதம்) *கோளாளெனுகாமை, † தம்மைக்கொள்ளுதல்யாளும், ‡ பொதுவன்தன்மை நமக்கு, || துடித்தலாயிருத்தலும், X ஆங்க.

பொதுவரோடே தாம் புணர்தற்கு வேண்டும் நிமித்தங்களைப் பெற்ற காயா வின்ற கரிய கூந்தலையுடைய பொதுமகளிரெல்லாரும் முல்லையையுடைய குளிர்ந்த பொழிலிடத்தே விளையாடுதற்குப் புக்கார்; நாமும் பொழிலிடத்தே விளையாடுதற்குப் போதுவாயாகவென்றான். எ - து.

அச்சூத்திரத்துட் பொதுவனென்னும் பெயர் முதலியனவும் அச் சாதியிற் றலைவர்க்கு வருதலைக் கொண்டவாறுணர்க. "புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல, அகத்திணை மருங்கி னளவுத லிலவே" என்னும் (க) சூத்திரத்திற் கைக்கிளை பெருந்திணைக்கும் தலைவருந் தலைவியரும் பலராய் வருமென்றலின், இதன் சரிதகத்துத் தலைவருந் தலைவியரும் பலராகக் கூறினர். இது சிறப்பில்லா அசுரமாகிய கைக்கிளை.

இதனால், தலைவிக்கு * நினைதல் பிறந்தது.

இது கொச்சகம் இரண்டும் வந்தமையிற் கலிவெண்பாவின் †வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. (க)

(கOஉ.) கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தேற்ற
தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையு
மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று;
ஓஒ இவள், பொருபுக னல்லேறு கொள்பவ ரல்லாற்
றிருமாமெய் தீண்டல ரென்று கருமமா
வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரப்பட் டவள்;
சொல்லுக, பாணியே மென்று ரறைகென்றார் பாரித்தார்

மாணிழை யாருகச் சாறு ;

---

௪. தோல். அகத். சூ. ௫௩. இச்சூத்திர வுரையிலும் அகப்புறமாகிய கைக்கிளை பெருந்திணைக்குச் சிறபான்மை தலைவரும் தலைவியரும் பலராகவருவ ரென்று கூறி, "ஏறும் வருந்தின.........." புணர்குறிக் கொண்டு" என்பதை மேற்கோள் காட்டினர்; நச்.

(பிரதிபேதம்) *கவிழ்த்தல். † வேறுபாட்டியைந்த.

## நான்காவது முல்லை ௨. ௩௨௩

6 சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து நோக்கும்வா யெல்லா மிடைபெறி னோராத் தகைத்து ;

7 நகைவகை மிசைமிசைப் பாயிய சார்த்துட னெதிரெதிர் சென்றார் பலர் ;

8 கொலைமலி சிலைசெறி செயிரயர் சினஞ்சிறந் துருத்தெழுந் தோடின்று மேல் ;

5 எழுந்தது துகள்

ஏற்றனர் மார்பு

கவிழ்ந்தன மருப்புக்

கலங்கினர் பலர் ;

9 அவருள், மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள் பிணைஇ

யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் றோன்றி வருத்தினான் மன்றவவ் வேறு ;

7 ஏறெவ்வங் காணு வெழுந்தா ரெவன்கொலோ வேறுடை நல்லார் பகை ;

10 மடவரே நல்லாயர் மக்க ளொருந லடலேற் றெருத்திறுத்தார்க் கண்டுமேற் நின்று முடலேறு கோட்சாற்று வார் ;

௩. ஆங்கினி,

தண்ணுமைப் பாணி தளரா தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்
திண்டோட் டிறலொளி மாயப்போர் மாமேனி
யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை.

*இஃது ஆயன் தலைவனும் ஏறுதழுவினமை †சுற்றத்தார் கண்டுநின்று ரியது.

இதன் பொருள்.

‡(பிபேதம்) * இவை. † சுற்றத்தார்க்கண்டு.

௸௩.௦ கலித்தொகை ௧0௨.

கண்(க)ணக விருவிசும்பிற் கதழ்(உ)பெயல் *கலந்தேற்ற
தண்ணறும் (௩)பிடவமுந் தவழ்(ச)கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் (ஞ)வயங்கிணர்க் கொன்றையு
† மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
ஞ தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து ‡திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
‖ருடம்பொ டென்னுயிர் புக்கவ ளின்று

எ - து: இடமகன்ற பெரிய விசும்பிலே விரைந்துவருகின்ற மழை தன் னிடத்தே கலக்கையினாலே அதனை ஏற்றுநின்ற ‡தண்ணிய நறிய பிடவமும் படர்கின்ற கொடியினையுடைய முல்லையும் நிறத்தினையுடைய வளவிய (ஞ) தோன்றியும் விளக்குகின்ற கொத்தினையுடைய கொன்றையும் இவை

க. (அ) "அகலிரு விசும்பில்" பெரும்பாண். க. (ஆ) "அகலிருவானத்து" மது. உகஎ; மணி. கக: கக.

உ. "தண்ணிளிக் கேற்ற பைங்கொடி முல்லை, முகைதலை திறந்த நாற்றம் புதன் மிசைப், பூமலர் தளவமொடு தேங்கமழ்பு" குறுந். ௩அ௨.

௯. "தனிபெற தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்ற, முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும்" கலி. ௧0௧: ௧-௨.

௪. "கொடித்தளவமே" சீவக. ௧௧௭௧.

௫. "கொன்றை யொள்வீனர்", "நீகிகரி யிணர் சுடர்வீக் கொன்றை" நற். ௨௨௧: ௪; ௩0௨: ௨.

௬. தோன்றி, ஒருபூக்கொடி. மழைக்குத்தளிர்க்கு மியற்கையையுடையது; அதன் மலர் செக்கர்நிறமானது. அம்மலருக்கு விளக்கும் பவழமும், கோழிச்சேவலின் றலைக்கு அம்மலரும் உவமையாகக் கூறப்படுகின்றன. இவற்றை, (அ) "விடுகொடிப் பிறந்த மென்றலைத் தோன்றி, பவழத் தன்ன செம்பூத் தாஅய்" (ஆ) "கார்க்கேற், றெரிவனப் புற்றன தோன்றி" (இ) "கலவிரு காரத்திகை காட்டிய கிட்ட, தலைநாள் விளக்கிற் றகைபுடைய வாகிப், புலமெலாம் பூத்தன தோன்றி" (ஈ) "வான்றோன்றி, வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநாடு" (உ) "மாகநத் தண்டிற் றோன்றி விளக்கெடுப்ப" (ஊ) "தோன்றி தோன்றுபுபுதல் விளக்குறுஅ" (எ) "ஒண்சுடர்த் தோன்றி" (ஏ) "தோன்றி யொண் பூவன்ன, தொகுசெம் மெற்றிக் கணக்கொள் சேவல்" என வருவன வற்றால் அறிக.

பிறதிபேதம்) * கலங்கொற்றுத் தன்னையும், † இன்னவும் பிறவும், ‡ நிலவியபதி, || உடம் போடின்றுயிர், + கள்ளவிட.

## நான்காவது முல்லை ௨. ௩௩௩

ல்லனபிறவும் பூத்த பலமலர்கள் நெருங்கும்படி (௧) தழையும் கோதையும் ழுபுமென்று சொல்லுகின்ற இவற்றைக் கட்டினராய் அணிந்துமகிழ்ந்து ரத்து விளையாடும், மடப்பத்தையுடைத்தாகிய மொழியினையுடைய, ஆயத்தா ளே * இன்று உடம்போடே என்னுயிர்க்குள்ளே புக்கவளாகிய இவள் தானென்றான் தலைவன். எ - று.

இழை, பூண்வடிவாகக் கட்டினது.

. † ஒஒ இவள், (௨) ‡ பொருபுகல் நல்லேறு கொள்பவ ரல்லாற்

௩. இச்செய்யுள் ஆம்போதரங்கவொருபோகென்று கூறி, "கண்ணகன் ...... ......நின்ற" இது தரவு. "நறுஇவர் ..........தகைத்து" இவை கொச்சகம். "தகைவகை ........மேல்" இவை அராகம். "எழுந்தது ...........பலர்" இவை சிற்றெண். "அவருள் ...........வேறு" இது முடுகியலடிவந்த கொச்சகம். "ஏறெவ்வம் ..........சாற்றுவார்" இவையுங் கொச்சகம். "ஆங்கு" தனிச்சொல். "தண்ணுமை ................துறை" இது சுரிதகம்." என்று பிரித்துக்காட்டி, தரவு, கொச்சகம், அராகம், சிற்றெண், சுரிதகமென்னும் ஐந்துறுப்பும் முறையானே வருதலின்றிச் சில மிக்கு வந்தன என்பர் இளம்பூரணர்; தொல். செய். ௬. ௧௪௯. 'எருத்தே கொச்சகம்'.

(பிரதிபேதம்) * அலர்மலி மணிப்புனை சிமிர்தோள் மிளிர்மென அறிமிடி.



௨0 பனிமலை வாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ;
௨௨ தொழூஉவினுள், புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின வேறு;
௨௪ ஏற்றின், அரிபரி பறுப்பன சுற்றி
வெரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்க
ணுருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர் வலந்தன;
௨௮ கோட்டொடு சுற்றிக் குடர்வலந்த வேற்றின்முன்
னாடிநின் றக்குடர் வாங்குவான் பீடுகாண்
செந்நூற் கழியொருவன் கைப்பற்ற வந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம்;
௩௨ இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோட்டினத் தாயர் மகனன்றே மீட்டொரான்

போர்புக லேற்றுப் பிணரெருத்திற் றத்துபு
தார்போற் றழீஇ யவன் ;

௩௬ இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோளினத் தாயர் மகனன்றே யோவான்
மறையேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி
யூர்வான்போற் றோன்று மவன் ;

௪௦ தொழீஇஇ, காற்றுப்போல் வந்த கதழ்விடைக்காரியை
யூற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன் றகைகண்டை
யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டுச்
சீற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்கொல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு ;

௪௬ இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கண்
மறுப்போற் பொருந்தி யவன் ;

நான்காவது முல்லை ௩. சூங் ௭

௫௦ ஓவா வேகமோ டொருத்தத்தன் மேற்சென்ற
சேஎச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
காயாம் பூங்கண்ணிப் பொதுவன் றகைகண்டை
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான் றின்னன்கொ ன்
மாயோனென் றுட்கிற்றென் னெஞ்சு ;

௫௬ ஆங்கு, இரும்புலித் தொழுதியும் பெருங்களிற் றினமு
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரு
மேறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்
பயிலிதழ் மலருண்கண்

மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்
தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ ;
௬௬ கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே யாய மகள் ;
௬௭ அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து
நைவாரா வாயமக டோள் ;
௬௮ வலியா வறியா வுயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினார் தோய்தற்
கெளியவோ வாயமக டோள் ;
௭௧ விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின் ;
௭௨ ஆங்கு;
குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர்ப் பரந்த தொன்னில
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.
௬௯ கலித்தொகை ௧௦௩.

*இஃது ஆயர் ஏறுதழுவிநின்றமையைத் †தோழி தலைவிக்குத் தனித் தனியே காட்டிப் பின்னர் அவர் ஏறுதழுவிவிட்டுக் குரவையாடுகின்றமையுங் கூறி ஆண்டு யாமுஞ்சென்று நின்னை ஏறுதழுவிக் ‡கோடற்கு நிற்கின்ற தலைவன் கேட்டு ஏறுதழுவிக்கொள்ளுமாறு நமக்குச் சுற்றத்தார் கூறிக் கிடக்கின்ற முறைமையைப் பாட்டிலே தோன்றப் பாடிக் குரவையாடி வழுதிவாழ்கவென்று தெய்வம்பராவுதும்; நீயும் அங்ஙனம் பாடுதற்குப் போதுவாயாகவெனக் கூறியது.

## இதன் பொருள்.

(க)மெல்லிணர்க் (உ)கொன்றையு மென்மலர்க் காயாவும்
புல்லிலை வெட்சியும்(ங)பிடவுந் தளவுங்
குல்லையுங் ||குருந்தும் (ச)கோடலும் (ரு)பாங்கருங்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்
(சு) பல்லான் +பொதுவர் கதழ்விடை கோட்காண்பார்
(எ)முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த

---

க. தரவு ஈற்றடி குறைந்து வருதலையு முடைத்தென்பதற்கு "மெல் லிணர்க்.........மிடை" என்பது மேற். தொல். செய். சூ. கசக. நச்.

உ. "அவிழ்தளவி னகன்றோன்றி, நகுமுல்லை யுகுதேறுவீப், பொற் கொன்றை மணக்காயா, நற்புறவி னடைமுனையின்" பொருந. கசக - உ0உ. என்பதனாலும் முல்லைநிலத்துவாழ்வார் பலமலர் சூடு மியல்பினர் என்பது அறியலாகும்.

ங. "பிடாவுந் தளாவும்" தொல். உயிர்மயங்கு. சூ. உஎ.

ச. இந்நூற் பக்கம் சுகக: க-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. (அ) "பாங்கரு, முல்லையுந் தாய பாட்டங்கால்" (கலி. ககக: ங - ச.) என்பதனால் பாங்கர், ஒரு பூங்கொடியென்று தோற்றுகிறது. (ஆ) "வண்டு பாடு பாங்கரோடு" சூளா. சீயவதைப். உகக. (இ) "குருந்து பொற் கூவிளம் குல்லை பாங்கரும்" காஞ்சிப். கழுவாய்ப். கரு. (ஈ)"வகுள ஞெமையரை பாங்கர்" திருவானைக்காப். சம்புமுனி. க. (உ) "கூத நாகம்வழை பாங்கர் குருந்து" விநாயக. கௌசனனர் திருவவ. கூ, என இது பயின்று வருதலுங்காண்க. பாங்கரென்பதை ஓமையென்பாருமுளர். அஃது ஒரு மரமென்று தெரிகிறது.

சு. (அ) "முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன, பல்லும்" கலி. க0அ: கரு-கச. (ஆ) "முருக்தொடு முல்லைசாய்த்த முகிழ்நகை யாயர்மாதர்" பாக. (க0) வேய்க்குழல். கக. (இ) "முல்லையு முருந்து நிரைத்தன

(பிரதிபேதம்) * இடைகுயர், † தோழியொரு தலைவிக்கு, ‡ கொண்டற்கு, || குருந்தகோட லும், ┼ பொதுவாததழ விடைக்கோட் காண்குவார்,



சொல்லர் சுடருங் (க)கனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை

எ - து: பலபசுவையுடைய பொதுவர் கல்லிடத்தனவுங் காட்டிடத்தனவு
ய மெல்லியதொத்தினையுடைய (உ)கொன்றைப்பூவாலும் மெல்லியமலரை
டைய காயாம்பூவாலும் புல்லியஇலையையுடைய வெட்சிப்பூவாலும் பிடவம்
லும் முல்லைப்பூவாலும் (ந) கஞ்சங்குல்லைப் பூவாலும் குருந்தம்பூவாலும்
ற்பூவாலும் *பாங்கர்ப்பூவாலுஞ்செய்த கமழுங்கண்ணியைச் சூடினராய்
ரந்தஎற்றைத்தழுவுதலைக்காணவேண்டி முல்லைமுகையும்(ச)பீலிமுருந்தும்
த்தாலொத்த பல்லினையுடையராய்ப் பெரிய குளிர்ச்சியையுடைத்தாகிய
ணினையுடையராய் மடப்பம்பொருந்தின சொல்லினையுடையராய் விளங்
பொன்னாற்செய்த மகரக்குழையையணிந்த காதினராய் ஆயர்மகளிர்
ர பரணைக் கைக்கொண்டார். எ - று,

மிடை - பரண்.

அவர்மிடைகொள,
(ரு)மணிவரை மருங்கி னருவி போல

வணிவரம் பறுத்த வெண்காற் காரியு

மீன்பூத் தவிர்வரு மந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும்

போன்று..............நகைக்குமென் னகையாள்" சீற. நபுல்வத்துக்.
தசைக்கட்டியை. உந.
இந்நூற்பக்கம் சாஉ: க-ஆம் குறிப்புப் பார்க்க.
(அ) "மன்றலம் கொன்றை மலர்மலைந்து ०००, என்று திரியு மிடை
மகனே" எனவும், (ஆ) "மணிநிரை யோம்பி சேரும் வல்விடை
தழுவித் தோய்ந்த, வணிநிரை மகளிர் கூந்த வலங்கலங் கொன்றை

சூட்டிப், பிணித்பு மாயர்செய்கை" எனவும், (இ) "வென்றி மழவிடை யூர்ந்தாற் குரியளிக், கொன்றையம் பூங்குழ லாள்" எனவும் வருஞ் செய்யுட்களை நோக்குக.

கஞ்சன் குல்லை - கஞ்சா; இச்சொல், கஞ்சம், குல்லையென இரண்டாகவும் கொள்ளப்படும்.

பீலிமுருக்கு - மயிலிறகின் அடி.

(அ) "மணிவரை யிழிதரு மணியிள ரருவி" தொல். செய். சூ. ௭௮. பேர். மேற்கோள். (ஆ) மணிவரை யென்பதற்கு, இங்கே எழுதியிருக்கும் பொருளோடு "மணிநிகழ் விறன்மலை" (கலி. ௨0: ௫.) என்பதும் இந்நூற் பக்கம் ௨௪௯: ௪ - ஆம் குறிப்பில் பொருந்துவனவும் ஒப்பு நோக்கற்பாலன.

பேதம்) * பாங்கர்ப்பூவாரும்.



(௧)கோலவன் சூடிய (௨)குழவித் திங்கள்போல்
*வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் (௩) புகலேறு பலபெய்
தரிமாவும் பரிமாவுங் களிறுங் காரமும்
(௪)பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்
(௫)படு(௬)மழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ

எ-து: அவர் தத்தம்மிடையைக் கைக்கொள்ள ஆயர்(௭)மணிகளையுடைய (அ)மலையிடத்தினின்றும் வீழ்கின்ற அருவிகள்போல அழகினது எல்லையைப்

௧. "எற்றுவல லுயரிய வெரிமரு ளவிர்சடை, மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோனும்.........நால்வ ருள்ளும், கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்" புறம். ௫௬: ௧- ௧௧. என்புழி 'மணிமிடற்றோனைக் கூற்றமென்

றது அழித்தற்றெழிலுடைமையான்' என்னும்விசேடவுரைப் பொருளாட்சியும், "கொலைவன் 'யார்கொலோ கொலைவன்மற்றிவன்' புறம். கஉ௨: அ. "கொலைவனல்லையோ 'கொற்றவை ஞயினே" மணி. உ0. கஎச. என்னும் சொல்லாட்சியும் ஈண்டு அறிதற் பாலன.

உ. குழவி யென்பது குத்திரத்துக் கூறப்படாத பிறிதின்மேலும் வருமென்பதற்கு, "குழவித் திங்கள்" என்பது மேற்கோள்; தொல். மர. சூ. உச. பேர்; மயிலைநாதர் குழவியென்பது மதிக்கும் உரித்தாய்வரு மரபிற்றென்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது; நன். பொது. சூ. கஎ.

௩. "போர்புக லேற்றுப் பிணரெருத்தில்" கலி. க0௩: ௩௪.

௪. (அ) "பெருமலை விடாகத்து" (ஆ) "பெருமலை விடாகத் தருமிளை" புறம். ௩எ: ௪; ௬௪: அ.

௫. படுதல் என்பது பெய்தல் என்னும் பொருளில் வருதல், (அ) "படுமழை யடுக்கத்த" (ஆ) "பாடுபெயல்" கலி. ௪அ: ௪; ௬0: ௬. என்பவற்றாலும் 'பாட்டம்' என இருவகைவழக்கினும்வழங்கும் சொல்லாலும் அறியலாகும்.

௬. "ஊர்பெழு கிளர்புனர் புயர்மங்குலி னறைபொங்க" கலி. க0௫: உ0.

எ. மணிவரை என்பதற்கு நீலமணி போன்றமலை யெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

அ. (அ) "அயமிழி யருவிய வணிமலை" (ஆ) "இலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலை" (இ) "ஆமிழி யணிமலை" (ஈ) "அயனந்தி வணிபெற வருவியார்த் திழிதரும், பயமழை தலைஇய பாசொல் விறல் (பிரதிபேதம்) * வண்புமலிந்த.

நான்காவது முல்லை ௩. ௬௪௬

*போக்கின வெள்ளிய கால்களையுடைய காரியாகிய ஏற்றினையும், மீன் பொலிவு பெற்று விளங்குதல்வரும் அந்திக்காலத்து மேகத்தையுடைய சிவந்த ஆகாயம்போலே அழகிய ஒளிபரந்த புள்ளிகள் வெள்ளையாயிருக்கின்ற சிவந்த ஏற்றையும், கொலைத் தொழிலையுடைய இறைவன் சூடிய இளையதாகிய திங்களைப்போல வளைந்து நிறைந்த கொம்பை அணிந்த சிவந்த ஏற்றையும், பொருகின்ற†மாறுபாட்டினையும் வலியினையுமுடைய கொண்டாடுகின்ற பிற ஏறுகள் பலவற்றையும் தொழுவினுள்ளே விடுகையினாலே ஒழுங்குபட்ட புகைசூழ்ந்த அத்தொழு, சிங்கமாகிய மாவும் குதிரையாகிய மாவும் களிறுகளும் (க)முதலையிலொருசாதியாகிய கராமும் பெரிய மலையின் முழையிடத்திலே சேரத் திரளப்பட்டுப் பெய்கின்ற மழை ஒருங்குதிரியும் மலையிடத்தை யொக்கும். எ - று.

௨௨. தொழுவினுள், (உ)புரிபு புரிபு புக்க பொதுவரைத்
(ங)தெரிபு தெரிபு குத்தின வேறு

எ - து: அத்தொழுவினுள்ளே அவ்வேறுகளைத் தழுவுதற்கு விரும்பி விரும்பிக் குதித்த பொதுவரைத் தெரிந்து தெரிந்து அவ்வேறுகள் குத்தின. எ - று.

உ.ச ஏற்றின், (ச)அரிபரி பறுப்பன சுற்றி
யெரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்க
வெற்ப" (கலி. சக: க. உரு; சஅ: க; ருக: க - ஏ.) என்பவற்றால் மலையை அருவி அழகுறுத்துவதாகக் கூறுதல்அறியப்படும்.

க. (அ) "ஓங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்குங், கொடுந்தாண்முதலையு மிடங்கரும் கராமும்" (குறிஞ்சி. உருசு - உருஎ.) என்பதனால், கராம் முதலைச்சாதி விசேடமென்பது அறியலாகும்.

உ. "எழுசீ ரடியே முடுகிய நடக்கும்" என்பதன் பின்னுள்ள 'முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும்' என்னும் (தொல். செய். கக) சூத்திரத்தி னுரையில் முதலீரடிக்குமென்ற வும்மை எச்சவும்மை யாதலால், நாற் சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்று கூறி, "புரிபு புரிபு புக்க பொதுவரைத், தெரிபு தெரிபு குத்தின வேறு" என்பதை மேற்கோள் காட்டுவர். பேர்.

ங. 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் தன் வினைமுதல் வினை கொண்டு முடிந்ததற்கு, "தெரிபுதெரிபு குத்தினவேறு" என்பது மேற்கோள்; நன்.வினை. சூ. உ௫. மயிலை. விருத்தி: இரா. இ-வி. சூ. உசக.

ச. கலிப்பாவுறுப்பில் முதலடி முடுகியலாயும் முதலடியும் மூன்றமடியும் முச்சீராயும் வந்ததற்கு, "அரிபரிபு..........குடர்வலந்தன" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௯௦. கச.

(பிரதிபேதம்) * போக்கினவொள்ளிய. † மாறுபாட்டினையுமுடைய.

81



ஊருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர் வலந்தன

எ-து: அவை குத்தினபொழுது, எரி சுற்றிவிளங்குகின்ற (க)கணிச்சிப் படையையுடைய இறைவன்சூடிய (உ) பிறையிடத்துக்கிடந்த (ங) சிவந்த நிறத்தையுடைய *மாலைபோலப் பகையான ஏறுகளை விரும்பிப் போக்குவன வாகிய†ஏற்றினங்களின் குருதிதோய்ந்த கொம்புகளுடனே குடர்கள் சுற்றிப் பிணித்தன. எ - று.

உ அ ‡கோட்டொடு சுற்றிக் குடர்வலந்த வேற்றின்முன்
ஆடியின் (ச)றக்குடர் வாங்குவான் பீடுகாண்
(௫)செந்நூற் கழியொருவன் கைப்பற்ற (௬)வந்நூலை
||முந்நூலாக் கொள்வானும் போன்ம்

எ - து: அங்ஙனம் கொம்புகளோடே சுற்றிக் குடர்கள் பிணித்த ஏற்றின் முன்னே நின்று ஆடி அக்குடரை இரண்டுகையாலும் வாங்கி வயிற்றிலே

க, கணிச்சியென்பது மழுவின் வேறாயதொரு படைக்கலத்துக்கும் பெயராயினும் 'எரிதிகழ்' என்னும் அடைமொழியை நோக்க இங்கே மழுவென்னும் பொருளில் வந்ததென்றே தோற்றுகிறது.

உ. இச்செய்யுள் கഥ - கசு. அடிகளிலும் ஏற்றின் கொம்புக்குப் பிறை உவமையாய் வந்திருத்தல் காண்க.

ந: "தணவிர மாலை கைக்கொண்டென்ன, நிணநீடு பெருங்குடர் கையகத் தேந்தி" மணி: ௫: சஅ-சகூ.

ச. "மாயா தவர்தலை வாவரங் காவட மாமதுரை, மாயா தவரண்டர் வர் தடைந் தான்மழு வாளிபிர, மாயா தவர்செய்வர் முக்நூல்செக் நூல் கொண்ட வண்ணமொப்ப, மாயா தவரத் தனைக்குடல் கோத்தநன் வாணகமே" திருவரங்கத். அஎ.

ரு. லகரந்திரிந்த னகரத்தின்முன் மகரம் தன்மாத்திரையிற் குறைந்து வருமென்பதற்கு, "செந்நூற்கழி............போன்ம்" என்பது மேற்கோள்; இ - வி. சூ. உஉ.

சு. செய்யுட்கண் போலுமென்னுஞ் சொல்லின் இறுதியில் னகாரம் மகாரம் வந்து ஈரொற்றுடனிலையாய் நிற்குமென்பதற்கு, "அந்நூலை மூந்நூலாக் கொள்வானும் போன்ம்" என்பது மேற்கோள்; தொல். மொழி. சூ. கஅ. கச.

(பிரதிபேதம்) * மாலையறபகையான, † ஏற்றினங்களினுடைய குருதி ‡ கோடொடு, || முன்னூலாம் கொள்வானும்.

## நான்காவது முல்லை ங. கூசங

இதென்றவன், சிவந்த நூற்கழியை ஒருவன் இரண்கையிலும் கோத்துப் பிடித்திருக்க அந்நூலை மூன்று நூலாகக் கொள்கின்றவனையும் ஒக்கும்; இவ னுடைய பெருமையைப் பாராயென்று தோழிதலைவிக்குக் காட்டினள். எ-று.

கஉ (க) இதுனை யிஃதொன்று கண்டை (உ)யிஃதொத்தன்
கோட்டினத் *தாயர் மகனன்றே மீட்டொரான்
போர்புக லேற்றுப் பிணரெருத்திற் றத்துபு
தார்போற் றழீஇ யவன்

எ - து: போரைக்கொண்டாடுகின்ற ஏற்றினது † சர்ச்சரையையுடைய கழுத்திலே பாய்ந்து அதற்கு இட்ட மாலைபோலே அதனைத் தழுவினவன் வருமைத்திரளையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலான் இனி அதன்வலியை மீளப்பண்ணி அதனை நீக்கான்; இளையோளே! இஃதொரு வலியைப் பாராய்; இவனொருத்தன்காணென்று காட்டினள். எ - று.

இவனொருத்தனென்றது, ‡வியந்தது.

௩௬ (௩) இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோவினத் தாயர் மகனன்றே யோவான்
மறையேற்றின் மேலிருந்தாடித் துறை(௪)யம்பி
யூர்வான்போற் றோன்று மவன்

எ-து: (௫)மறுவினையுடைய ஏற்றின்மேலேயிருந்து ஆடிவிட்டுப் பின்னர் நீர்த்துறையிடத்துத் தெப்பத்தின்மேற் கிடந்து அதனைத் தள்ளுகின்றவனைப்

---

௧. "தையலோ டின்னன பெண்பாற் பெயரே" என்புழி, இன்னன வென்பதனாலே இகுளை யென்பது உயர்திணைப் பெண்பாற் சொல் லென்று நன். பெயரி. சூ. ௨௦. மயிலை. விருத்தி, இரா. இ - வி. சூ. ௧௭௮. உரைகளிலும், தோழியை இகுளை என்பது மலாடர் சொல் லென்று (நன். பெயரி. சூ. ௧௬) மயிலை.உரையிலும், தெகாட்டார்சொல் லென்று விருத்தி. இரா. உரைகளிலும் காணப்படுபவை இங்கே அறி தற் பாலன.

௨. இந்நூற்பக்கம் ௩௪௬: ௩-ஆம் குறிப்புப்பார்க்க.

௩. இச்செய்யுளில் ௩௨, ௪௬-ஆம் அடிகளும் இப்படியே அமைந்துள்ளன.

௪. "தங்கார் பொதுவர் கடலுட் பரதவ, ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு" கலி. ௧௦௬: ௨௨ - ௨௩.

௫. மறை யென்பது மறுவென்னும் பொருளில் வருதல், "செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளை" (கலி. ௧௦௬: ௨௭) என்புழி 'மறை' என்பதற்கு எழுதியிருக்கும் உரையாலும அறியவாகும்

(பிரதிபேதம்) * ஆய மகனென்றே விட்டொரான். † சாசரையுடைய, ‡ வியந்த இகுளை.

போலே தோன்றுகின்றவன் பசுத்திரளையுடைய ஆயர்மகனல்லனோ? ஆதலால், இவன் இக்கனம் செலுத்துந் தொழிலை ஒழியான்; இவளோவெனின் இஃதொரு வலியைப் பாராய்; இவளொருத்தன் காவினையென்று காட்டினுள். எ - று.

௪௦ *தொழீஇ

எ - து: காண்டற் றொழிலை புடையவளே. எ-று.

இஃது "அளபெடை மிகூஉ மிகரவிறுபெயர்". (௧)

(௨)காற்றுப்போல் வந்த †கதழ்விடைக் காரியை
ஆற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன் றகைகண்டை
(௫)யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடாந்திட்டுச்

---

௧. தொல். விளி. சூ. அ. இச்சூத்திர வுரையில் 'இவ்வளபெடைப் பெயர் விளியேற்கும்போது தன்னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரைபெற்று நிற்கும்; என்றது ழகர வீகாரத்தின் பின் இரண்டு இகரவுயிரும் மூன்று இகரவுயிரு மெழுதப்படவேண்டுமென் பதை' என்றுகூறுவர், சே. கல். நச். இசசொல்லுக்குத் தொழில் செய்கின்றவளேயெனப் பொருளும் எழுதுவர் நச்சினார்க்கினியரும் இ-வி. உரையாசிரியரும். இ - வி சூ. ௨௦௮. இச்சூத்திரத்தினுரையும் மேற்கோளும் எழுதுவோராலும் அவற்றை ஊன்றிப்பாராது அச்சிடுவோராலும் எளிதின் உண்மையறிய இயலாதவாறிருக்கின்றன. இச்சூத்திர வுரையில் "தொழீஇ என்பது பெயர்; விளியு மஃதே யெனக்கொள்க. இஃதியல்பு. இயற்கைய வென்று பன்மை கூறிய வதனான், இவ்வள பெடை மூன்று மாத்திரையின் நிமிர்ந்து நிற்கு மென்பது கொள்ளப் படும். செயற்கையவென்றதனான் இவ்வளபெடைப்பெயர் எழுதும்வழி ஐந்தெழுத்திட்டும் எழுதுப" என்பர் கல்லாடர். ஏனைய உரைகள் அச்சிடப் பட்டுள்ளன. "தொழீஇ" கலி. ௧௦௪: ௬௮. "தொழீஇ புடனுண்ணார்"சிறுபஞ்ச. ௫௮. என இச்சொல் பிறவிடத்து வருதலுங் காண்க.

௨. "எற்று மருப்பு மிலங்கிழையாகத் திபமருப்பும், கூற்று மருப்பெழுங் கோலக் தாட்கொரு கோடிசுரும், பாற்று மருப்பொலி தாரண்ணை லார்முன் னணிந்து விட்டார், காற்று செருப்புங் கலந்த தென் னுவ ரும் காரிகைத்தே" அம்பிகா. உடு.

௩. (அ)எருமைச்சாதியின் ஆண் ஏறெனப்படுமென்பதற்கு "எற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடர்திட்டு" என்பதுமேற்கோள்; தொல். மரபு. சூ. ௩௩, பேர். சூ. ௩௮. ௩௪. (ஆ) இந்நூற்பக்கம் ௩௨௩: ௪-ஆங் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * தொழில்இறு, (என்பது முன்பதிப்பு), † மூவிடை.

## நான்காவது முல்லை ௩. ௩௪௫

சீற்றமோ டாருயிர் கொண்டனுான் பின்னன்கொல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு

எ - து: சுறுகிய எருமையையேறுகின்ற கூற்றுவனுடைய செஞ்சை (க) வடிம்பாலே பிளத்துபோகட்டுச் சினத்தோடே அரிய உயிரை வாங்கின அஞ்ஞான்றை, இறைவன் இத்தன்மையையுடையவன்கொலென்று கூறும் படியாகக் காற்றின் விசைபோல் ஓடிவந்த விரைந்த ஏறுகிய காரியதனைப் பலரும்வந்து சேர்தலையுடைய களத்தே வலியடகைத் தழுவி வருத்தி அதன்மேலே தோன்றின்ற பொதுவனது அழகைப் பாராய்; அதனைக் கண்டு என் னெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள். எ - று.

௪௩ இருளே *யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
(௨)புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கண்
மறுப்போற் பொருந்தி யவன்

எ - து: மற்றைப் புள்ளிகள் செறிந்த†வலியையுடைய வெள்ளேற்றினது அழகையுடைய பக்கத்தே திங்களிற் கிடக்கின்ற மறுப்போலே பொருந்திக் கிடந்தவன் ஆட்டினத்தையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலால் இவ னெருத்தன்காண்; இளையோளே! ‡ இஃதொரு வலியைப் பாராயெனக் காட்டினாள். எ - று.

ஔவா வேகமோ ருத்துத்தன் மேற்சென்ற

||சேஎச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
(௩)காயாம்பூங் கண்ணிப் பொதுவன் றகைகண்டை

|மேவார் விடுத்தந்த(௪)கூந்தற் குதிரையை

---

௧. வடிம்பு - கால் விளிம்பு; (அ) "மா வுடற்றிய வடிம்பு,". (ஆ) "கமோ கடைஇய விடுபரி வடிம்பின்" (இ) "ஆழி வடிம்பலம்ப நின்றானும்" (ஈ) "வேலைவடிம்பலம்ப நின்றான்" (உ) "கடல்வடிம்பலம்ப நின்ற கைதவன்" என வருவனநோக்குக.

௨. (அ) "புல்லினத் தார்க்கும" (ஆ) "புல்லினத் தாயர் மகளிரோடு" (இ) "புல்லினத் தாயர் மகனேன்" (ஈ) "புல்லினத் தாயனை" கலி. ௧0௭: ௨; ௧௧௧: ௫; ௧௧௩: ௭, ௮.

௩. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை" கலி. ௧0௮: ௧0.

௪. "கூந்த லென்னும் பெயரொடு கூந்த லெரிசினங் கொன்றோய்" (பரி. ௩: ௩௧-௩௨.) என்பதும் 'கூந்தன்மா என்றுகண்டார்சொல்லும் வடிவொடு வந்த கேசியது கனலின்ற சினத்தை யழித்தோய்;

(பிரதிபேதம்) *இருதொன்று, †வல்லையுடையவேற்றினதழகை,‡இல்லுதொகு.||சேஎசெவி.



## கலித்தொகை ௧0௩.

'வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான் *றின்னன்கொன்
|மாயோனென் றுட்கிற்றென் னெஞ்சு

எ - து: கஞ்சன்முதலியோர் ஏவவிட்ட கழுத்தின்மயிரினையுடைய குதிரையை வாயைப் பிளந்துபோகட்டுக் கையால் † அடித்த அஞ்ஞான்றைக் கண்ணன் இத்தன்மையன்கொல்லென்று கூறும்படியாக ஒழியாத கோபத்தோடே வெவ்விதாய்த் தன்மேலே சென்ற சிவந்த ஏற்றைச் செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு அதன்வலியை மீட்டுத் தழுவும், காயாம் பூவாற்செய்த கண்ணியையுடைய பொதுவன் அழகைப்பாராய்; ‡அவனைக் கண்டு என்னெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள். ஏ - று.

௫௬ ஆங்கு, (௧)இரும்புலித் தொழுதியும் (௨)பெருங்களிற் றினமு
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரு
மேறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்
பயிலிதழ் மலருண்கண்
மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்
(௩)தாதெரு மன்றத் தயர்வர் (௪)தழூஉ
௬௩ (௫)கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ||யாய மகள்

---

† கூந்தலையுடைய மாவைக் கூந்தலென்றும் பெயரினையுடையவடிவைப் பெயரென்றுங்கூறினர்; ஆகுபெயரான். 'கேசி-குதிரையாய்வந்துபொருதானோரசுரன், இப்பெயர் கேசமென்னும் வடமொழி முதனிலையாக முடிந்தமையின் அதன்பொருண்மைபற்றிக் கூந்தலென்றார்' என்னும் அதனுரையும்; "கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்" (முத்தொள்.) "கூந்தல்வாய் கீண்டானை" (நாலாயிர. இயற்பா. ௨-ஆம் திருவந்தாதி. ௧௩.) என்பவைகளும் ஈண்டு அறிதற் பாலன.

௧. சிறுத்தைப்புலியும்உண்மையின்வேங்கைப்புலியைஇரும்புலியென்றார்.
௨. பன்றியும்களிறெனப்படுமாதலின் யானையைப் பெருங்களிறென்றார்.
௩. "தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" சிலப். ௧௭. 'மாயவன்றன்'
௪. "தழூஉப் பிணையூஉ, மன்றுதொறு நின்ற குரவை" மது. ௬௧௪-௬௧௫. என்பவாதலால், குரவைக்குத் தழூஉவென்று ஒரு பெயரிட்டார்.

௭. "கொல்லேற்று ...............ஆயமகள்", "வளியா வறியா............ஆயமகடோள்" என்னும் பகுதிகள் ஏறுதழுவினாற்கு உரியளிவளெனவந்த கைக்கிளைகட்கு மேற்கோள்; தொல். அகத். சூ. ௧௩. நச்.

(பிரதிபேதம்) * இன்னகோள், † அடித்தயன்றைஞான்றை. ‡ அதனே, || ஆயர்மகள்.



௬௫ அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து
நைவாரா வாயமகடோள்

௬௮ வளியா வறியா வுயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினர் தோய்தற்
கெளியவோ வாயமகடோள்

௭௧ விலை*வேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின்

௭௪ ஆங்கு
(௧)குரவை தழீஇயா மரபுளி பாடித்
†தேயா(௨)விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்
மாசில்வான் முந்நீர் பரந்த தொன்னிலம்
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியவிம் மலர்தலை யுலகே.

எ - து: அவ்விடத்தே அப்படிக்காட்டி (௩)மயிலினது கழுத்தை மாறுபடுகின்ற அணியப்பட்ட காயாம்பூவாற் செய்த கண்ணிகள் பவளம்போலும் நிறத்தையுடைய சிவந்த நிலத்தே மாறுபட்டுக்கிடக்கும் பொதுவரும் பெரிய புலித்திரளும் பெரிய களிற்றுத்திரளும் தம்முண் மாறுமாறாய்ப் பொருதாற்

க. "முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன்றருதற்கு மாயோன் ஆகுதிபயக்கும் ஆபல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படுமென்றார்" (தொல். அகத். சூ. ரு. நச்.) என்பது ஈண்டு அறிதற் பாலது.

உ. (அ) "புகழொத் தீயே யிகழுந ரடுநனை" (ஆ) "புகழ்ந்த வுலகிற்றோர்க்கு மாயோ னன்ன, வுரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற" புறம். ருசு: கரு, ருஎ:உ-ரு;(இ)"உரைசால் சிறப்பி னெடியோன்" சிலப். உஉ:சுo.

ரு. (அ) "கருவிளைக் காயா கணமயி லவிழவும்" சிறுபாண். ககசு. (ஆ) "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென்மயி லெருத்திற் றோன்றும்" குறுந். கஅரு. (இ) "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" சீவக. கசுஎஅ. எனவும், (ஈ) "பூவை மலர்புரை யெருத்து மஞ்ஞை" காஞ்சிப். கழுவாய்ப். கஅசு.(உ) "பறவாப்பூவை (பிரதிபேதம்) * வேண்டாரெம்மிளையாயர், † தொய்யாவிழுப்புகழ்.



போலப் பொருது ஏற்றைத் தழுவிக்கொண்டு சேரத் தொழுவை விட்டுப் போனார்; அவர் போன அப்பொழுதே நெருங்கிய இதழ்களையுடைய மலர்போலும் உண்கண்ணினையுடைய காதலையுடைய மகளிரும் அவர் கணவரும் வலியுற்றுத் தாதாகிய எருவையுடைய மன்றத்திலே குரவைக் கூத்தை ஆடுவார்கள்; ஆண்டு யாமுஞ் சென்று அக்குரவைக் கூத்தின் கண்ணே கூடிக் கொல்லுகின்ற ஏற்றினுடைய கோட்டிற்கு அஞ்சும் பொதுவனை மறுபிறப்பினும் ஆயர்மகள் தழுவாளென்றும், ஆயர்மகள் தோள், அஞ்சாராய் உயிரைத் துறந்து கொலைக்தொழிலையுடைய ஏற்றைக்கொள்பவர் *செறியுமவையல்லது வருந்துதல்வர்து தழுவுதற்கு நெஞ்சில்லாதவர்கள் செறிதற்கரியவென்றும், உயிராவது ஒரு காற்றாக உணராதே அதனைக்

காவல்கொண்டு †அதனுடனே ஒரு செறிவாயேற்றின் மருப்பினை அஞ்சும் நெஞ்சினையுடையார் செறிதற்கு ஆயர்மகளிருடைய தோள் எளியவாயிருக்குமோவென்றும், கொலைத் தொழிலையுடைய ஏற்றினது கொம்பினிடையிலே தாம்விரும்பும் மகளிருடைய மார்பின் முலையிடையிலே விழுமாறுபோல வீழில், எம்முடைய இனத்தில் ஆயர் தத்தம் மகளிர்க்கு ‡முலைவிலை வேண்டாரென்றும், யாம் சுற்றத்தார்கூறும் முறைமையைப் பாடிக் குரவைக் ||கூத்தாடி அவ்விடத்துக் குற்றமில்லாத அழகையுடைய கடவுட்கே பரந்து இடக்கின்ற பழைய நிலத்தையாளும் உரிமையோடே பொருந்தின எம்முடைய பாண்டியன் இந்த அகன்ற இடத்தையுடைய உலகின்கண்ணே வாழ்வானாகவென்று அவ்விடத்துக் ÷கெடாத சீரிய புகழையுடைய தெய்வத்தைப் பரவுவோம்; நீயும் அங்ஙனம் பாடுதற்குப் போதுவாயாகவென்றாள். எ-று.

"மரபுநிலைதிரியா" என்னும் (க) சூத்திரத்து "விரவும்பொருளும் விரவும்" என்றதனால், குரவையாடல் ஏறுகோடற்கைக்கிளையுள் விராய்வருமென்றும் தெய்வத்தையன்றி அரசரை வாழ்த்திய வாழ்த்தும் விராய்வருமென்றுங் +கூறலின் இப்பனக்கூறினார். இவ்விதிஇவ்வாறே மேல் × வருவனவற்றிற்குங் கொள்க.

இதனால, தலைவிக்கு ** நினைதல் பிறந்தது.

இது "குட்ட மெருத்தடி††யுடைத்து மாகும்" (உ) என்பதனாற் குட்டம்பட்டதாவும் 'புரிபுரிபு ............வேறு' என இரண்டடி முடுகியலும், 'அரிபரி

மலர்க்கிளைய பசியகழுத்து மயில்" உத்தரகோச. தீர்த்தசிறப்பு. கக எனவும் வருவன இங்கே நோக்கற்பாலன.

க. தொல். அகத். சூ. சஙு. இச்சூத்திரத்தின் இவருரையில் இக்குறிப்பினுள்ள செய்திகளோடு 'விரவும் பொருள் விரவும்' எனவே ஆய்ச்சியர் குரவைக்கூத் தல்லது வேட்வெறிக்குரிய வெறியாட்டு விரவாதென்றுணர்க' என்னுஞ் செய்தியும் காணப்படுகின்றது.

உ. தொல். செய். சூ. ககசு.

(பிரதிபேதம்) * செய்யுமதல்லது, † அத்தடனே. ‡முலைவிலே வேண்டார், || கூத்தையாடி யவ்விடத்து, ÷ கொடாத சீரிய, × கூறலினைக் கூறினர், + வருவனவற்றிற்கும், ** நினைத்தல். †† உடைத்துமென்றதனால், குட்டம் தரவும்.

புறப்பனசுற்றி' எனவும் 'உருவமாலைபோல' எனவும் மூச்சீரான்வந்த சொற்சீரடிபெற்ற கொச்சகமும், ஓரடியான்வந்த அம்போதரங்கங்களும் *'பயிலிதழ் மலருண்கண்' எனச் சொற்சீரடிபெற்ற கொச்சகமும் வந்து கலிவெண்பா வுறுப்பின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. "மூச்சீர் முரற்கையு ணிறையவு நிற்கும்" (க)என்பதனான் மூச்சீரடியும் வந்தன. (௯)

(௧௦௪.) மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்
றொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்
வானுற வோங்கிய வயங்கொளிர் பனைக்கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்
பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்
திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு
மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த சேயு மாங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ ;
அவ்வழி, முள்ளெயிற் றேஎ ரிவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான் ;
ஒள்ளிழை, வாருறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவ னீரரி
வெரூஉப்பிணை மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
குரூஉக்கட் கொலையேறு கொள்வான் வரிக்குழை

வேயுறழ் மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
௨௫ சேஎய் சினனஞ்சான் சார்பவ னென்றுங்
கறைவனர் நல்லாரை யாயர் முறையினு
ணுண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி;
௨௯ அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கோளொரு செடுத்த
நறைவலஞ் செயவிடா விறுத்தன வேறு;
௩௨ அவ்வேற்றின்,
மேனிலை மிகவிகலின் மிடைகழி பிழிபு மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்
பானிற வெள்ளை யெருத்தத்துப் பாய்ந்தானை
நோனாது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம்;
௩௩ இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோட்டழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று
வெருவரு தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம்;
௪௫ தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது

மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம் ;
ஆங்க, செறுத்தறுத் துழக்கி யேற்றெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசைபி னியமெழுந் தார்ப்ப

நான்காவதுமுல்லை ௪. ௧௦௧

பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ ;
தொழூஉவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழி னல்லாரு மைந்தரு மல்லலூ
ராங்க ணயர்வர் தழூஉ ;
பாடுகம் வம்மின் பொதுவன் கொலையேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு ;
நெற்றிச் சிவலை நிறையழித்தா னிண்மார்பிற்
செற்றார்கண் சாயபான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப வதுபெரி
துற்றீயா ளாயர் மகள் ;
தோழீஇ, ஒருக்குநா மாடுங் குரவையு ணம்மை
யருக்கினான் போனோக்கி யல்லனோப் செய்தல்
குருஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுங்
தருக்கன்றோ வாயர் மகன் ;
கேரிழாய், கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே

யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூராரை யுச்சி மிதித்து ;

என ஆங்கு;

தொல்கதிர்த் திகிரியாற் பாவுது மொல்கா
வுருமுறழ் முரசிற் றென்னவற்
கொருமொழி கொள்களிவ் வுலகுட னெனவே.

இது "நாடகவழக்கினும்" என்னும் (க)சூத்திரத்துப் "பாடலுணமையாத" என்றதனல் ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக்

---

க. தொல். அகத்.ருு. இச்சூத்திரத்தின் இவருரையிலும் இச்செய்யுள் மேற்கோளாக இக்குறிப்பு, சிறிதுவேறுபாட்டோடெவிளக்கமாக உளது.



கூறி, இக்கூாவையுள் அவனைப் பாடுகம் வாவென்றழைத்து, அவன் உடம்பாட்டினன், தான் அலரச்சம் நீங்கினமையும் அவன் தன்னை வருத்தினமையுங் கூறிப் பாடி, பின்னர்த் தோழி தமர் அவற்கு நின்னைக்கொடைநேர்ந்தாரெனக்கூறியது.

இதன் பொருள்.

(க)மலிதிரை யூர்ந்துதன் (உ)மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
(ங) *புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினன் வணக்கிய (ச)வாடாச்சீர்த் (ரு)தென்னவன்
(௬) றொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்

(௬)வானுற வோங்கிய வயங்கொளிர் (௭)பனைக்கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்

---

௧. தாவுசுற்றடிகுறைத் தும்வருமென்பதற்கு "மலிதிரை.........தொழுஉ" என்னும் பகுதி மேற்கோள். தொல். செய். சூ. ௧௧௧. நச்.

௨. "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு, தென்றிசை யாண்ட தென்னவன்" சிலப். ௧௧: ௧௭ - ௨௨. என்பதும் 'அங்ஙனமாகிய நிலக்குறைக்கு சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானாட்டுக்குண்டூர்க் கூற்றமுமென்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்டதென்னவன்' என்றெழுதிய உரையிலுள்ள செய்தியும் ஈண்டு அறிதற்பாலன.

௩. அரசர் பிறவரசரிடம் வலியாற்கொண்ட நாட்டைத் தமதென அறிவித்தற்காக அங்கே தம் கொடியைப் பலருமறியப் பொறித்தல் மரபு; இதனை, 'கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி, நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த, குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே" (புறம். ௫௮: ௱௦ - ௱௨) என்பதனாலும் அறிக.

௪. "வரட்டருஞ்சிர்" சிலப். ௧: ௪௧.

௫. "வீவில் குடிப்பி னிருங்குடி யாயரும்" கலி. ௧௦௫ ௭.

௬. "தேம்படுபனையின்றிரள்பழத்தொருவிதை, வானுறவோங்கி" வெற்றி.

௭. பனைமன் கொடிவரின் ஐகாரங் கெடாமைக்கு, "பனைக்கொடி" என்பது மேற்கோள்; தொல். உயிர். சூ. ௮௩. இளம். நச்.

(பிரதிபேதம்) * புவிவொடு.

## நான்காவது முல்லை ௪. ௫௫௩

பொருமுரண் மேம்பட்ட ௨பொலம்புனை புகழ்நேமித்
(௧)திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு

(உ)மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராஅ
மா(ங)கடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்

வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த †சேயு மாங்கப்

கடு பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொல்ரூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ

---

க. "திருமறு மார்பநீ யருளல் வேண்டும்" பரி. க: நகூ. திருமறு—ஸ்ரீ வத்ஸம்.

உ. "உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக், கண்ணணங் கவிரொளிக் கடவுள்" பெருங். (க) இரு: கடு - கக.

ங. (அ) "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" திருமுரு. சடு - சசு. (ஆ) "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச், சேயுயர்பிணிமுக மூர்ந்தம ருழக்கித், தீயழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து, நோயுடை நுடங்குசூர் மாமுத றடிந்து, வென்றியின் மக்களு ளொருமையொடு பெயரிய, கொன்றுண லஞ்சாக் கொடுவினைக் கொற்றகை, மாய வவுணர் மருங்கறத் தபுத்தவேல்" பரி. இ: க-எ. (இ) "கட்டுடைச் சூருடல் காமங்கொண்டு, பற்றியுட் புகுந்து பசுங்கடல் கண்டு, மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேற், சேவலங் கொடியோன்"-(ஈ) "விண்ணுடைத் தண்ணும் கண்ணிலா வொருத்தன், மறிதிரைக் கடலுண் மாவெனக் கவிழ்ந்த, களவுடல் பிளந்த வொளிகெழு திருவேற், பணிப்பகை யூர்தி" (உ) "மேல்கடற் கவிழ்முகப் பொரியுடன் மாவு, வெடுங்கடற் பரப்பு மடுந்தொழி லரக்கரு, மென்னுளத் திருளு மிடைபுகுந் துடைத்த, மந்திரத் திருவேன் மறங்கெழு மயிலோன்" (ஊ) "கடுவினை யங்குரங் காட்டியுள் ளழுக்கா, றெண்டிசைச் சாகைகொண் டிருண்மனம் பொதுளிக், கொடுங்கோலை வகுத்துக் கடும்பழிச் சடையலர், திரண்

டைஞ்ஞூறுதிரண்டவக்காவதஞ், சுற்றுடல்பெற்றத் துணைப்பதிறையிர, மற்றதி னீண்டு மணியுடற் போகி, யைம்பது நூறுட னகன்றுசுற் றொழுக்கிப், பெருங்கவி னிணர்தக் தலைமிழ்க் குலவிய, வடன்மாக் கொன்ற செவ்வேற் குளவன்" கல். கக: ச - எ; கக: உஎ - ஙo; எங: உ - ஒ; அக: க - க. என்பவைகளும் (எ) "கனியிரும் பரப்பின் மாக் (பிரதிபேதம்) * புலம்புனே, † சேவுமாக்க.



எ - து: தன் நாட்டைக் கடலினுடைய மிக்க திரையேறிக் கைக் கொண்டவிடையினாலே தனக்கு நாடு இடமுண்டாம்படியாக மனத்தின் இளைப்பின்றாய்ப் பகைவரைத் தன் வலியினாலே தாழ்க்கவேண்டி அவர்மேலே சென்ற அவருடைய புலிப்பொறியையும் விற்பொறியையும் அவர் நாட்டி னின்றும் போக்கி விளங்குகின்ற கயலை அவ்விடத்தே பொறித்த புகழை யுடைய கெடாத தலைமையினையுடைய பாண்டியனுடைய பழைய புகழை நிலைபெறுத்தின குடியோடு ஒக்கத் தோன்றின பசுவினத்தில் ஆயரெல்லாரும் சேரத் திரண்டு விளங்குகின்ற வானிலேயுறும்படி *ஓங்கிய ஒளிபெருகுகின்ற (க)பனைக்கொடியினையுடைய(உ)பாலின துநிறத்தையுடைத்தாகிய நிறத்தினை

கடன் முன்னி, யணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சினவிறல்வேள்" (பதிற். கக: ரு-க) என்பதும் அதில் சூருடை முழுமுதலென்பதற்கு, "சூரவன்மா, தனக்கு அரணாகவுடைய மாவின்முதலென்றவாறு; இனி, சூரவன்மா, தான் ஒருமாவாய் நின்றானென்று புராணமுண்டாயிற் சூரனைத் தன் மையையுடைய மாவின் முதலென்றவாறாம்" என்று எழுதியிருக்கும் உரைப்பகுதியும் (ஏ) "போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக், கா ரெதிர்ந் தேற்ற கமஞ்சூ லெழிலிபோ, லீர்கிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச், சூர்கிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" (பரி. கஅ: க-ச) என்பதும் அதன் உரையும், (ஐ) "கவிழிணர், மாமுத றடிந்த மறுவில் கொற்றத், தெய்யா நல்லிசை செவ்வேற் சேஎய்" திருமுரு. இக - கக.

என்புழி, "மாமுத நடிக்த" என்பதற்கு 'அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்த்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினன்' என்று எழுதியிருக்கும் விசேடவுரையும் ஈண்டு அறிதற்பாலன.

௪. (அ) "அடல்வெங் காஞ்சிற் பனைக்கொடி யோனும்" புறம். ௫௬: ௪. (ஆ) "பொற்பனை வெள்ளையைப் போற்று தொழுகின்ற" இன்னா. க. (இ) "மடற்பனை யுயர்த்த மதிநிறப் பெருமனுக்கு" (ஈ) "கார், வெண் டோட்டினம் பனைமிமிசை யுயர்த்தோனென விளர்த்த" (உ) "வானுற்ற தண்பனை யுயர்த்தவன்" (ஊ) "கள்ளவிழும் வெண்டோட்டுக் கரும் பனைமீ மிசையுயர்த்த, வெள்ளிவரை யனையானும்" (எ) "போர்க்கை மீதுயர்த்த வென்றிப் புரவலன்" பாகவத. (ஏ) சையாதி, உச. (௧0) வேய்ங்குழல். கக. உருக்குமிணி மண. க. பிரத்துமனன் மணம். கச. சுபத்திரைமணம். கஅ.

உ. (அ) "பானிற வண்ணனேக்கிற் பழியுடைத்து" சீவக. உ0௬. (ஆ) "பான்மேனியான்" பழ. கரு.

(பிரதிபேதம்) * நல்லிய பனைக்கொடி.

## நான்காவது முல்லை ச. ௩௬௫

புடையவனைப்போலே பழித்தலற்ற வெள்ளையேற்றையும் பொருகின்ற மாறு பாட்டினலேவனையவற்றின்மேலான பொன்னுற்பனைத்தபுகழையுடைத்தாகிய சக்கரப்படையையுடைய திருவாகிய மறுவையுடைத்தாகிய மார்பனைப் போலே அமைந்த கரிய ஏற்றையும் மிக்குவிளங்குகின்ற தாழ்ந்த (௩) சுடை

வினையும்ஒருபாகத்திலேமேவுதல்வ நம்பிறைபோன்றநுதலினையுடையாளையு முடைய மூன்றுகண்ணையுடையானுடைய நிறம்போலே மாறுபாடு மிக்க சூரவேற்றையும் பெருமையையுடைய கடல் கலக்கமுறும்படி உள்ளேசென்று மாமரத்தைவெட்டின மீளாத †போரையுடைய வேலை ஏந்திய (உ)முருகனது நிறம்போல அச்சம்வரச் சிவந்த எல்லாவற்றையும் அவ்வொப்புவரும் குணத்தினை யுடைய வற்றையும் ஒப்பில்லாத பிறவற்றையும் வடிவையுடையவாகியபல மேகங்கள் திரண்டதைப்போல முழுத்தும்ப உ விரும்பி விரும்பித் தொழுவிலே புகுதவிட்டார். எ - று.

கஅ அவ்வழி, (ங)முன்னெயிற் றேன (ச)சிலம்பிப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடைந்த வான்

எ - து: ‡அவ்விடத்து இந்த ஒப்பில்லாத வெள்ளிய ஏற்றின் கழுத்திலே கிடக்குமவன் கூரிய எயிற்றினையும் அழகினையுமுடைய இவளைக்கூடும். எ-று.

---

க. (அ)“பிறைநுதல் வண்ணமாகின்று” (ஆ) “கறைமிடற்றண்ணல் காமர் சென்னிப், பிறைநுதல் விளங்கு மொருகண்போல” (இ) “பால்புரை பிறைநுதற் பொலிந்தசென்னி. நீலமணிமிடற் றொருவன்” புறம். க:க. ருகு: ச - ரு கூ: ரு - க (ஈ) “பிறைநெற்றியோடுற்ற முக்கண்ணினார்” (உ) “பிறைகாலு நெற்றியர்” (ஊ) “பிறைசேர் நுதலிடைக் கண்ணமர்ந் தவனே” (எ)“திங்க டிலகம் பதித்த நுதலர்” தேவாரம். என வருதலால், பிறைநுதலென்பதற்கு, பிறையணிந்த நுதலென்று பொருள்கொண்டு ‘சடைமேவரும்’என்பதற்கு அதற்கேற்பப்பொருள் கொள்ளினும் அமையும்.

உ. முருகவேள் செந்நிறமுடையவரென்பதை, ‘செவ்வேள்’ ‘சேய்’ என வழங்கும் பெயர்களும் வலியுறுத்தும். “உருவு முருவத்தீ யொத்தி” என்பது பரி. கக: கக.

ங. (அ) ஏறுதழுவினுக்குரியவளெனவந்த கைக்கிளைக்கு, “முன் னெயிற்றோள்...... .....கொன்பவன்” என்னும் பகுதி மேற்கோள் தொல். அகத். சூ. கரு. உச. (ஆ) முன்னெயிறு இந்நூற்பக்கம் கக: க-ஆம் குறிப்புப் பார்க்க.

௪. "இவளைப் பெறுமிதோர்..........சார்பவன்" இவ்வடிகளோடு "காரி கதனஞ்சான் பாய்ந்தானைக் காமுறுமிவ், வேரி மலர்க்கோதை யாள்...

(பிரதிபேதம்) * பாகத்தேமேவுதல், † போலையுடைய முருகனது,‡ அவ்விடத்து நல்லவ ரிந்த வொப்பில்லாத.



## கலித்தொகை ௧௦௪.

௨௦ ஒள்ளிழை, வாருறு(க)கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
(உ)காரி கதனஞ்சான் கொள்பவன்

எ - து: கூரிய கொம்பையுடைய கரிய ஏற்றினது கோபத்தை அஞ் சாது அதனைத் தழுவுமவன் இந்த ஒள்ளிய இழையினையுடையாளுடைய வாருதலுற்ற கூந்தலிலே துயிலுதலைப் பெறும். எ - று.

௨௧ ஏரதி
*வெரூஉப்பிணை (ங)மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
||(ச)குரூஉக்கட் கொலையேறு கொள்வான்,

எ - து: குரால் †நிறத்தவாகிய கண்ணினையுடைய கொலைத்தொழிலை யுடைய ஏற்றைத் தழுவுமவன், வெருவுதலையுடைய பிணையாகிய மானைக்குப் போலும் நோக்கினையுடைய இரண்டாகியகண்களையுடைய இந்த ‡நல்லாளைக் கூடும். எ - று.

(ரு)அரி, ஆகுபெயர்.

௨௫ வரிக்குழை,
வேயுறழ் (சு)மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
||சேஎய் சினனஞ்சான் சார்பவன்

---

.........பூவைப் புதுமல ரான்" (சிலப்.௧௭: கொளு, ௧ - ௭.) என்னும் பகுதிகள் ஒப்புநோக்கற் பாலன.

௧. (அ) "மகளிர், விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து" பதிற். ௧௬:

௧௮ - ௧௧. (ஆ) "இருளேங் கூந்த லின்றுயில்" (இ) "கூர்தன் மெல்லணைத் துஞ்சி" அகம். ௨௩௩: ௧௫, ௩௦௮: ௧௩. (ஈ) "இருண்மென் கூந்த லேமுறு துயிலே"

௨. "காரி கதனஞ்சான்" கலி. ௧௦௪: ௭௪.

௩. "மாஸ்பிணை யன்ன மகிழ்மட நோக்கே"

௪. "குருஉக்கட் கொலையேறு" கலி. ௧௦௪: ௭௧.

௫. அரி, செவ்வரி கருவரி; இச்சொல் இங்கே அவற்றையுடைய கண்ணை உணர்த்தி நிற்றலான் ஆகுபெயரென்றார்.

௬. ஆடவர் தம்மனைவியர்தோளிற் றுயில்வதாகக் கூறல் மரபு: (அ) "அரிவை தோளிணைத் துஞ்சிக், கழிந்த நாளிவண் வாழு நாளே" குறுந். ௩௨௨. (ஆ) "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல், றாமரைக் கண்ணா னுலகு" குறள். ௧௧௦௩.

(பிரதிபேதம்) * வெருப்பின, † நிறத்தையுடையனவாகிய, ‡ கல்லோடே உடம்பரிக்குமே. ‖ சேவினைஞ்சான்.



எ - து: வெய்ய வலியினையுடைய சிவந்த ஏற்றினது சினத்தை அஞ்சானும் அதனைத் தழுவுமவன், வரியினையுடைத்தாகிய குழையினையுடையாளுடையமூங்கிலையொக்கும் மெல்லியதோளிலே* துயிலுதலைப் பெறும். எ-று.

வரி - (௧) அருப்புத்தொழில்.

௨௫ என்றாங்

கறைவணர் நல்லாரை யாபர் முறையினு
ணண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி

எ - து: †என்று நல்லாயர் தமக்குரிய முறைமையாலே‡சுற்றுவனவாகிய நாளாகிய மீன்கள் தன்னிடத்தைச் சூழப்பட்டமதிபோலே அவ்விடத்திலிட்ட பரண்களின்மேலே தத்தம் மகளிரைத் திரளாக ஒப்பித்து நிறுத்தினர். எ - று.

(௨) மீனும் மதியும், ஆயத்திற்கும் மகளிர்க்கும் ‖உவமை.

௨௬ அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்

குறையா மைந்தர் கோளெதி ரெடுத்த
நறைவலஞ் செயவிடா விறுத்தன வேறு

எ - து: அவ்விடத்துப் புகை வலம்வர விடப்பட்டு இறுத்தப்பட்டன வாகிய எறுகள், பறை மிக்கொலிக்கையினாலும் பலரும் ஆரவாரிக்கையினாலும் வலிகுறையாத ஆயர்கோடற்றொழிற்கு எதிரே என்றன. எ - று.

௩௨ அவ்வேற்றின்
(௩)மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிபு மேற்சென்று
வேனுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்

---

௧. அருப்புத்தொழில் என்றது ஆபரணங்களில் நுண்ணிதாகச் செய்யும் சிறிய அரும்புபோன்ற வேலைகளை. "தாள் களங்கொலக் கழல்பறைந் தன" (புறம். ௪: ௩) என்புழி 'கழல்பறைந்தன' என்பதற்கு, 'வீரக்கழ அருப்புத்தொழில் பறைந்தவை' என்று எழுதியிருக்கும் உரை ஈண்டு அறிதற்பாலது.

௨. "தாரகையோடு 'ஆயத்தார்க்கு ஒத்த பண்பு, பன்மையும் ஒன்றற்குச் சுற்றமாய் அதனிற் றாழ்ந்து சிறறலும்.........மதியோடு தலைமகட்கு ஒத்த பண்பு, 'கட்கினிமையும் சுற்றத்திடை 'அதனின்' மிக்குப் பொலிதலும்" என்று (கோவையார். ௧௨௪) பேராசிரியர் எழுதியிருக் கும் விசேடவுரை இங்கே அறிதற்பாலது.

௩. "ஐஞ்சீரடி முடிவியலோடொன்றாய் வந்த வெண்பா,கலிக்கு உறுப்பாய் வருதற்கு, "மேனிலை மிகலிகலின்..........வன்னையும் போன்ம்" எனனும பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. ௯௭, ௩௪.

(பிரதிபேதம்) * தயிலைப்பெறும் என்றும் கறையன கல்லாரை, † என்று தமக்குரிய, ‡ சுற்றுவனராயிய,|| உவமைஆகியாகுபெயர். வரி அருப்புத்தொழில் அவ்வழி.

88



பானிற வெள்ளை யெருத்தத்துப் *பாய்ந்தாளை
னோணுது குத்து மிளங்காரித் தோற்றங்காண்

பான்(க)மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம்

எ - து: அந்த ஏறுகளின்மேலே நிலைபெறும் மிகுதலையுடைத்தாகிய மாறுபாட்டினலே மிடைமிசையினின்றும் இழிந்து அதனைவிட்டுச்சென்று வேலினது முனையையொக்கும் †முனையையுடைய கொம்பினது விரலாகிய திறத்தினையுடைய மாறுபாட்டிற்கு அஞ்சாதுவிப் பாணிறம்போலும் வெள்ளிய ஏற்றினது கழுத்திலே ‡பாய்ந்தானைப்பொருதே மேற்சென்று குத்தும் இளைய காரிய ஏற்றினது தோற்றரவு, பால்போலும் மதியைச் சேர்ந்து மறைத்த பாம்பினை அது மறைத்ததன்மையை விடுவிக்கும் நீலநிறம்போலும் || நிறத்தை யுடையவனையும் ஒக்கும்; அதனைப் பாராயென்றாள். எ - று.

வண்ணன், மாயோன்.

கக. (உ)இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர் சோரக் குத்திக்கன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
(ங)÷வாடில் வெகுளி யெழிலேறு கண்டை +யிஃதொன்று

---

க. (அ) "மாமதிகோள், முன்னம் விடுத்த முகில்வண்ணன்" பெரிய திருமடல். கக. (ஆ) "தேம்பலினர்திங்கட் சிறைவிடுத் தைவாய்ப், பாம்பினணைப் பள்ளிகொண்டாய்" பெரியதிருமொழி. (கக) அ: எ.(இ)"கோள்வாய் மதிய நெடியான்விடுத் தாங்கு" சீவக. சஙுச. (ஈ) "பான்மதி விடுத்தனே" யா - வி. மேற்.

உ. நாற்சீரடியும் ஐஞ்சீரடியும் முடுகியலடியாக வந்ததற்கு (அ) "இரிபெழு..........தலைச்சென்று" என்னும் அடிகள் தோல். செய். சூ. கடுகு. பேர். உரையிலும் (ஆ) "இரிபெழு..... .......கண்டை யிஃதொன்று என்னும் அடிகள் தோல். செய். சூ. சுசு. பேர். உரையிலும் முடுகுவண்ணத்திற்கு (இ) " இரிபெழு பதிர்பதிர் பிகந்து" என்பது தோல். செய். சூ. உகஙு. நச். உரையிலும் மேற்கோள்.

௩. வாதேல் குறைதலென்னும் பொருளில் வருதலை "வாடற்க வையை நினக்கு" (பரி. ௯: ௭௦௯) என்பதன் உரையாலும் அறிக.

(பிரதிபேதம்) * பாய்ந்தாலைக் கோதை குத்த, † முனையுடைய கொம்பினை விறலாற் றுதலையுடைய, ‡ பாய்ந்தவனைப், || நிறத்தையுடையவனையும், + வடோ வெருளி, ++ இஃதுதொன்று, அஃதொன்று.

## நான்காவது முல்லை ௪. ௯௰௯

வெருவரு (௧) தூம மெடுப்ப வெருண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம்

எ - து: பலரும் எழுந்திருந்து சென்று அதிர்ந்து அதிர்ந்து கெட்டு அவ்விடத்தைக் கடந்து சேர நீங்கும்படியாக *எலும்பு முறிந்து குடர்களற்றுக் கவிழும்படி குத்திவிட்ட பின்பு தன் கொம்பின் †வலியழியத் தழுவினவனை

அலைத்துக்கொண்டு திரிந்து தகைக்குங் குறையாத கோபத்தினையுடைய அழ கினையுடைய ஏறு, வெருவுதல் வருதற்குக் காரணமான மருந்திறைப் புகைக்க அதற்கு வெருண்டு திரிதருங் கொல்கின்ற களிற்றையும் ஒக்கும்; இஃதொன் றைப் பாராயென்றாள். எ - று.

௪௰ தாளெழு துணிபிணி யிசைத்‡தவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமர் நாள்
(உ)வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம்

௧. தூமமெடுத்தலால் களிறு வெருளுமென்பது உதயணன் சரித்திரத்து, யூகி பிரச்சோதனன் நகரைக்கலக்குதற்கு யானைக்குத் தூமமூட்டிய செய்தியைக்கூறும் "ஆனைதன் னிலைகண் டெய்தி யகிலிடும் புகையு மூட்டிச், சேனைமன் னகர புக்குச் சிறைவீடென் கடனே யென்று,

மானநல் யூகி யானைச் செவியின்மஃ திரத்தைச் செப்ப, யானைதன் மதக்கம் பத்தி லருந்தலை யுதறிற்றன்றே'' என்னும் (உதயணகுமார (க) உஞ்சைக்காண்டம். அ௫ - ஆம்) செய்யுளாலும் அறியலாகும்.

௨. (அ) "வடுவாழ் மார்பி, னம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது, தும்பை சூடாது மலைந்த மாட்சி யன்னார் பெரும" (ஆ) "ஒன்னார் மெலிவிடத்தும்............செல்லாமை தான்றலையே" (இ) "மங்கை மங்கை வுறையேனேல் வானமருட், பங்கப்பட் டார்மேற் படை நினைந் தே னுமென்றான்" (ஈ) "கைப்படை யொன்றுமின்றிக் கைகொட்டிக் குமர னார்ப்ப, மெய்ப்படை வீழ்த்த காணி வேழமு மெறிதல் செல் லான், மைப்படை நெடுங்கண்மாலை மகளிர்தம் வனப்பிற்சூழ்ந்து, கைப்படு பொருளிலாதான் காமம்போற் காளைமீண்டான்" (உ) "கைத் துயிர் குடிப்ப னென்று வெற்றொ னிடதுகையான், மெய்த்தலைச் சூலமோச்சான் வெறுங்கையா னென்று வெஃகி" (ஊ) "சென்றவன் றன்னைநோக்கிச் சிரித்துநீ சிறுமையை யுன்னை, வென்றவு மும்மை யெல்லாம் விளிட்பெறேன்" (எ) "எனைக் காற்ற லார்மேன், யாகால் விரிவெஞ்சிலைப்போடும் வளைத்த போது, சேகாகும்" என்பவை, ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * எறும்பு மெறும்பு முலிக்க, † வலிகெடத் தழுவினவனை ‡ தவிர்விளறி.



எ - து: தோள்வலியாலே துணிந்த ஏறுதழுவுதல் எக்காலமும் மனத் தைச் செலுத்துதலின் அம்மனம் பிணித்த முயற்சியாலே எழுந்து துணிந்த இசை தவிர்தலன்றி அதனிடத்தே சென்று மற்றுள்ளார் தழுவுமாற்றைக் கடந்து சேர்ந்து மெய்யைத்தழுவித் தான்கொள்ளும் நிலையைத்தப்பித் தன் முன்னே வீழ்ந்தவன்மேலே செல்லாமல் *மீளுகின்ற புகர் நிறத்தையுடைய எற்றினது தோற்றரவு, மிக்குச்செல்லும் பொருள் தன்கையில் வாளோடே அகப்பட்டவனை எனக்கு ஒவ்வானென்று வெட்டாமல் மீளும், கூற்றுவனை யொத்த மறவனையும் ஒக்கும்; இதனைப் பாராயென்றான். எ - று.

ருக ஆங்க, செறுத்தறுத் துழக்கி †யேறெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்

தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசையி னியமெழுந் தார்ப்பப்
௫௫ பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
‡கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
(க)வரிபுனை (உ)வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ

எ - து: அன்னம் கொம்பு மார்பிற்படுதலை மார்புகொடுத்து ஏற்றுக் கொள்பவரோடும் மேலே பாய்ந்து ‖ஏறுபவரோடும்கோட்டிடையிலே சென்று புகுவாரோடும் ஏறுகொள்ள வல்லேனென்று சாற்றுவாரோடும் ஏறுகள் பொருது பின்பு பொருவாரை அறுத்துச் செறுத்து எதிரேநிற்க அதனைப் பொறாமல் மைந்தர் விலக்குமவரை †மறுத்துமறுத்துச் சென்று தழுவுகையி னாலே என்புகள் முறிந்து முறிந்து தசைகளற்றுப் பரந்தனவாய்க் கிடக்க (௩) இடியோடே மாறுபடுகின்ற ஏற்றினது முழக்கோடே வாச்சியங்கள் மிக்கு ஆரவாரிக்க அத்தொழு, போரைவிரும்பி மேலேசென்ற துரியோதனாதிகள் படும்படி வரிந்து புனைந்த வலிய வில்லையுடைய தருமன் முதலியோர் கொன்ற பொருகின்ற களத்தையொக்கும். எ - று.

---

க. "வரிப்புனை பந்தொடு" முருகு. கூஅ.

உ. (அ)"வல்வி லோரி கொல்லிக் குடவரை" நறுந். ௧00.(ஆ) "கொல்லி யாண்ட வல்வி லோரியும்" புறம். ௧௫அ ௫. (இ) "வல்வி லிராமன்" நாலா. பெரியதிருமொழி. (இ) ௧: ௭.

௩. "உருமி னதிருங் குரல்போற் பொருமுரா, ணல்லேறு" (கலி. ௧௧௩: உ௩ - உஎ.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * மிகுகின்ற சிறந்தது, † ஏற்றெதிர், ‡ கோட்டிடை, ‖ ஏறுமவரோடு, மறுத்துச் சென்று.

## நான்காவது முல்லை ௭. ௬௬௯

௬0 தொழூஉவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர் வாங்குெழி னல்லாரு மைந்தரு மல்லலூ

ராங்க ணயர்வர் தழூஉ

எ - து: அத்தொழுவிடத்துத் தழுவிக்கொண்ட ஏறுகளெல்லாம் மேயும் நிலத்தேபோக அமையாத சீரினையும் நோக்கினார் கண்ணை வாங்கிக்கொள்ளும் *அழகினையுமுடைய ஆய்ச்சியரும் ஆயரும் வனப்பத்தையுடைய ஊரிடத்தே குரவையாடுவரெனத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறினள். எ - று.

கூஉ பாடுகம் வம்மின் பொதுவன் கொலைமேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு

எ-து: கூறி, பொதுவனுடைய கொலைத்தொழிலையுடைய ஏற்றினுடைய கொம்புகள் குறியிட்டுவிட்ட மார்பைப் பாடுவேமாக வாருங்கோளெனத் தலைவியையும் ஆயத்தையும் நோக்கிக் கூறினள். எ - று.

கூரு நெற்றிச் சிவலை †நிறையழித்தா னீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப வதுபெறி
துற்றீயா ளாயர் மகள்

எ - து: அதுகேட்ட தலைவி, நெற்றியிலே சிவந்த சுட்டியினையுடைய ஏற்றைவிரவி நிறைதலைக்கெடுத்தவனுடைய நீண்ட மார்பிலே பகைத்து அலர் கூறுகின்ற மகளிர் நம்மை இகழ்ந்து பார்க்கும் கண்கள் இகழ்ந்து பாராதிருக்கும்படியாக யான் சாராமல் அமைந்திரேன்; இனி, பசுவையுடைய ஆய்ச்சியர் அலர்கூறுவதற்குப் பெரிதும் வருத்தமுறேன் யானென்றாள். எ - று.

ஆயர்மகளென்று தன்னைப் பிறர்போற் கூறினள்.

சுகூ (க)தொழீஇஇ

எ - து: தொழில்செய்கின்றவளே. எ - று.

(உ)ஒருக்குநா மாடுங் குரவையு ணம்மை
(ங)பருக்கினன் போனேக்கி யல்லனேய் செய்தல்

---

க. இந்நூற்பக்கம் கசச: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. புகுமுகம்புரிதல் கைக்கிளைக்கண் வந்ததற்கு, "ஒருக்குநாம்........... மகன்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். மெய்ப். சு. கக. பேர். ஓ - வி. சு. ருஅo.

௫. ‖“அருக்கு மங்கையர் மலரடி” திருப்புகழ்.

(பிரதிபேதம்) * அழகினையுடைய, † கிளையழித்த நீண்மார்பிற் சென்றார்.

௩௪௨ கலித்தொகை ௧0௪.

(௧)குரூஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ வாயர் மகன்

எ - து: ஆயர்மகன் ஆயத்தோடே நாம் ஆடுங் குரவைக்கூத்திலே நம்மை அருமைசெய்தான்போலே நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செய்தல் *நிறத்தையுடைய கண்ணையுடைய கொலையேற்றையான்கொண்டே னென்னும் மனச்செருக்கன்றோ? அது வேறொன்றல்லவே என்றான். எ - று:

எஅ நேரிழாய், †கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூசாரை (உ)யுச்சி மிதித்து

எ - து: அதுகேட்ட தோழி, ஒப்ப இழையினையுடையாய்! கொல்லுத லரிதாக நஞ்சுற்றத்தார் நிறுத்தின கொலைத்தொழிலையுடைய எருதாகிய காரியினது கோபத்திற்கு அஞ்சானாய்த் தழுவின பொதுவனுக்கே எம்முடைய சுற்றத்தார் ‡மகிழ்ச்சிநிறைதலுற்று அலரை மிகக் கூறிய ஊரிலுள்ளாரைத் தலையிலே மிதித்துக் கொடுத்தலைப்பொருந்தினார்; இனி வருந்தாதே கொள் ளென்றாள். எ - று.

‖எமரென்றாள்; “தாயத்தினடையா” என்னும் (௩)சூத்திரவிதியால். அவர் அலர் கூறிய அவர்கே கொடுத்தலின். அவர் உச்சியிலே மிதித்த தன்மைத் தென்றாள்.

எள ஆங்கு

தொல்கதிர்த் திகிரியாற் பரந்து பொல்கா
வருமுறம் (ச)முரசிற் றொங்கலர்

(ஞ)கொருமொழி கொள்கவிவ் வுலகுட÷னனவே

க. "குருஉக்கட் கொலேயேறு" கலி. க0ச: உங.

உ. உச்சியிலே மிதித்தலென்றது இழிவுபடுத்தலே: "மிதித்திறப் பாரு மிறக்க மதியா, மிதித்திறப்பாரு மிறக்க" என்பது; நாலடி. கக.

ங. தொல். பொருளி. சூ. உஎ.

ச. பாண்டிடத்கு முரசாற் சிறப்புக் கூறுதலே. "முரசுமுழ ங்குதானை மூவருள்ளும் ...ன் பஞர்" (கலி. கங உ: ச) என்பதனும் அதன் குறிப்பாலும் அறிக.

ரு. "குமரியொடு வடவி மயத், தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்கு" சிலப். உக.

(பிரதிபேதம்) * சிறத்தையுடைத்தாகிய, † கோளரியாக, ‡ மகிட்சி, || எமரென்றன் தாய் தாயத்தி, ÷ என்னவே.

## நான்காவது முல்லை ச.

எ - து: கெடாத (க)உருமேற்றை மாறுபகின்ற முரசினையுடைய அவ் விடத்திற் பாண்டியனுக்கு இவ்வுலகுசேர அவனுடையஒருமொழியைக்கேட்பதாகவென்றுகூறிப் பழைதாகிய கதிரையுடைய சக்கரப்படையையுடையானை வாழ்த்துதும்; அதற்கு நீயும் வருகவென்றான். எ - று.

ஒருமொழி, ஆணை. தென்னவற்கென்னும் நான்காவது இவ்வுலகம் நடப்பதாகவென்று போக்த பொருளோடு முடியும்.

இதனுல், தலைவிக்குப் புணர்ச்சியுண்மை பிறந்தது.

"ஆயர் வேட்டுவர்" என்னும்(உ)சூத்திரத்தில்† ஆயரிலும்கிழவரும்கிழத்தியரும்,உளரென்ற‡ாதலான், இவர்க்குங் களவொழுக்கம் நிகழு||மென்பதாம். "நாடகவழக்கினும்" என்னும் (ங)சூத்திரத்திற் பாடலுள் அமையாதனவாய்க் களவொழுக்கம் நிகழ்ந்து ஏறு÷தழுவி வரைவுடன் பட்டாராகக் கூறினர். மேலும் இங்ஙனம் களவு நிகழ்ந்து ஏறுதழுவி வரைகின்றதாகக் கூறும் ‡பாட்டுக்களுக்கெல்லாம் இதுவே விதியாகக் கொள்க.

இது தரவும் ஐஞ்சீரடிப்பெற்ற குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற கொச்சகமும் ×வழியசைபுணர்த்த சொற்சீரடியும் முடுகியலோடு தொடர்ந்த கொச்சக வெண்பாவும் நாற்சீரடி முடுகியலோடு தொடர்ந்து ஐஞ்சீரடியும் வந்த கொச்சகவெண்பாவிரண்டும் ஐஞ்சீரடியும் ஆசிரியத்தளையும் விரவி ஈறு வேறோர் சீரான் இற்ற கொச்சக வெண்பாவும் **ஐஞ்சீரடுக்கியவற்றிற் குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய நெடு வெண்பாட்டிரண்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றுவந்த கலிவெண் பாவின்வேறுபட்ட (ச)கொச்சகம். "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு,

க. (அ) "உருமிடி முரசமொடு" (ஆ) "இடிமுரசியம்ப" (இ) "இடியுமிழ் முரசம்" (ஈ) இடியென முழங்கு முரசின்" (உ) "உருமின் முர செழுந் தியம்ப" (ஊ) உருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு" (எ) "உருமி னிரங்கு முரசின்" (ஏ) "முரசம் ........உருமி னாறபு சிலைப்ப" (ஐ) "உருமிசை முரசம்" (ஒ) "முர சிடியுமிழ் தழங்கென முழங்க" (ஓ) "உருமி னிடிமுர சார்ப்ப" என முரசினொலிக்கு உரு மொலி உவமையாய் வருதல் காண்க.

உ. தொல். அகத். சூ. உக.

ங. தொல். அகத். சூ. ௫ங.

ச. (அ) "மலிதிரை யூர்ந்து" என்னு முல்லைப்பாட்டின், "இரிபெழு பதிர் பதிர் பிகத்துடன் பலர் நீங்க" 'தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றி' எனவு முடுகுதலிற்கொச்சகமாயிற்று; இதனுட் சொற்சீரடியும் வந்தது என்பர் நச்; தொல். செய். சூ. கடுஉ. (ஆ) இச்செய்யுள்

(பிரதிபேதம்) * வாழ்த்துமதற்கு, † ஆயரிறும் கிழத்தியரும், ‡ ஆதலின், || மெண்ட்டூட காடக, ÷ தழுவ வரைவு, ╪ பாட்டுக்களுக்கு மிதவே, × வழியசைப் புணர்த்த, ** ஐஞ்சீரடுக்கிய வெண்பாட்டிரண்டும் தனிச்சொல்லும்.



மைஞ்சீ ரடியு முளவென மொழிப" (க) என்பதனுன் மூவகைப் பாவிற்கும் ஐஞ்சீரடிவருதல் பெற்றும். (ச)

(கOரு.) அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த

றூரைசகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குச்
சீர்மிகு சிறப்பினோன் றொல்குடிக் குரித்தெனப்
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
வார்கலி யுவகையா லொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்
வீவில் குடிப்பிறப் பிருங்குடி யாயமுந்
தாவி லுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுரு வேணியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்குஞ் சரிநெற்றிக் காரியு
மொருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்
பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
விரும்பின ரெருத்தி னேந்திமிற் குராலு
மணங்குடை வச்சிரத்தோ னாயிரங் கண்ணேய்க்கும்
கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் டுகிலேய்ப்ப
வாலிது கிளர்ந்த வெண்காற் சேயுங்
கால முன்பிற் பிறவுஞ் சால
மடங்கலுங் கணிச்சியுங் காலனுங் கூற்றுந்
தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றுயி ருணீஇய
வுடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ;
அவ்வழி,
காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
வூர்பெழு கிளர்புளர் புயர்மங்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்
சீர்கெழு சிலைநிலைச் செயிரிகள் மிகுதியிற் சினப்பொதுவர்

புணர்தற்பொருண்மைத்தாயினும் முல்லைக்குரிய கருப்பொருளான் வருதலின் முல்லையாயிற்றென்பர் இளம்; தொல். அகத். சூ. ௨௪.

௯. தொல். செய். சூ. ௧௩:



தார்பெழு துதைபுதை துகள்விசும் புறவெய்த
வார்புடன் பாய்ந்தா ரகத்து;
௩0 மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயு
மெருத்திடை யடங்கியு மிமிலிறப் புல்லியுந்
தோளிடைப் புகுதந்துந் துதைந்துபா டேற்று
நிரைபுமேற் சென்றாரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன வேறு;
௩௫ கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறாஅக் குரூஉச்சேகில் காணிகா
செயிரிற் குறைகாளாற் பின்சென்று சாடி
யுயிருண் ணுங் கூற்றமும் போன்ம்;
௩௯ பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா
நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்;
௪௩ இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயும் வெள்ளேறு கண்டைகா
வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்;
௪௭ ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று மாறா
விருபெரு வேந்தரு மிகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ;
௫0 வெல்புக ழுயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துளங்கிமி
னல்லேறு கொண்ட பொதுவன் முகனோக்கிப்

பாடில வாயமகள் கண்;
௫௫ நறுநுதா லென்கொலோ கூந்த லுளரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகி
யொல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம்;
௫௭ நெட்டிருங் கூந்தலாய் கண்டை யிஃதோர்சொல்;



௬௦ கோட்டினத் தாயர் மகனொடியாம் பாட்டதற்
கெங்க ணைமரோ பொறுப்பர் பொருதார்
தங்கண் பொடிவ தெவன்;
௬௧ ஒண்ணுதால்;
இன்ன வுவகை பிறிதியாது யாயென்னைக்
கண்ணுடைக் கோல ளலைத்ததற் கென்னை
மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
யலர்செய்து விட்டதிவ் வூர்;
௬௪ ஒன்றிப் புகரினத் தாயமகற் கொள்ளிழா
யின்றெவ னென்னை யெமர்கொடுப்ப தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் னெஞ்சு;
என,
௭௧ பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகோ ளேமியாற் பரவுது நாடுகொண்
டின்னிசை முரசிற் பொருப்பன் மன்னி
யமைவர லருவி யார்க்கு
மிமையத் தும்பரும் விளங்குக வெனவே.

*இஃது ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, அவன் ஏறுதழுவிய தலைவனை விருப்பொடு நோக்கியவற்றைத் தன்னுள்ளே

கூறி, முன்னர்க் களவின்கண் தமர்கோபித்ததனையும் அயலார்பொறாதிருந்த தன்மையினையும் தலைவிக்குக் கூற, அவளும் அவர் அலர்கூறியது நன்றென்று கூறி, †அன்றே என்னெஞ்சு கலந்துவிட்டது; இனி அவர் கொடுப்பதாகக் கூறிய நாளிற் செய்வதென்னென மகிழ்ந்து ‡கூற, அதுகேட்ட தோழி யாம் அங்ஙனங் கூடி இனிதிருக்குமாறு காக்கின்ற பாண்டியன் நீடு வாழுமாறு தெய்வத்தைப் பரவுகம் வாவெனக் கூறியது.

இதன் பொருள்.

(க)அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த
முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குத்

க. (அ) அரைசு என்பது உயர்திணை யாண்பாலை யுணர்த்தி வருதற்கு 'அரைசுபடக் கடந்தட்டு' என்பது மேற்கோள்; தொல். சொல். ரு.

(பிரதிபேதம்) * இது முதலியவற்றைத் தோழி. † இன்றே, ‡கூறுமதுகேட்ட.

## நான்காவது முல்லை ரு.



சீர்மிகு சிறப்பினோன் (க)றொல்குடிக் குரித்தெனப்
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
வார்கலி *யுவகைய ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்
(உ)வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்
(ங)தாவி னுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்குஞ் (ச)சுரிநெற்றிக் காரியு
(ரு)†மொருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்

ஷெ. கச. (ஆ) "அரசுபடக் கடந்த வானுச் சீற்றத்தவன்" பரி. உஉ: ரு. (இ) "அரைசுபடக் கடக்கு முரைசா ரோன்றல்" புறம். உகக: க.

௧. "சொல்லு நீரு மெல்லார்க்கு மெளியவென, வரைய சாந்தமுந் திரைய முத்தமு, மிமிழ்குரன் முரசு மூன்றுட னாளுந், தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே" புறம். ருஅ: ௧௦ - ௧௩.

௨. "தொல்வினை நட்ட குடியொடு தோன்றிய, நல்வினந் தாயர்" கலி. ௧௦௪: ௫-௬.

௩. இப்பகுதி 'தூவி லுள்ளமொடு' என்றும் படிக்கும்படி ஒரு பிரதியி லுள்ளது; தாவென்னுஞ் சொற்போலவே தூவென்னுஞ் சொல்லும் வருத்தமென்னும் பொருளை யுடையதாயின் மோனை நயமுற, "தூவி லுள்ளமொடு" என்றுங் கொள்ளலாம்.

௪. "சரிகெற்றிக் காரி" கலி. ௧௦௧: ௨௧.

௫. (அ) பலராமன் யமுனையால் அளிக்கப்பட்டதும் மிகச் சிறந்ததுமான ஒரு குண்டலத்தை அணிந்தனனென்பது புராணகதை; (ஆ) அவனிலையைக் கூறுவதாகிய "கண்களியா" என்னு முதலையுடைய வெண்பாவிலுள்ள 'ஒண்குழையொன் றொல்கி யெருத்தலைப்ப' என்பதை இனைத்தெனவறிந்தபொருள்வினைப்படுதொகுதியின்உம்மைபெற்றுவருமென்பதற்கு மேற்கோள்காட்டி, (தொல். கிளவி. சூ. ௩௩) சேனாவரையரும் (நேமி. சொல். ௧௭) நேமிநாத வுரைகாரரும் (நன். பொது. சூ. ௩௮) மயிலைநாதரும் 'ஒன்றும்' எனற்பாலது, 'ஒன்று' என உம்மையின்றி வந்தது செய்யுள் விகாரமென்றும் (தொல். கிளவி. சூ. ௩௩) நச்சினார்க்கினியர் (குழை) ஒன்றேனும் இனைத்தென அறிந்தபின் உம்மை வேண்டும்; அது விகாரத்தாற் றொக்கதென்றும் எழுதியிருப்பவையும் இவன் ஒரே குழையினனென்பதை வலியுறுத்தும். (௫)

(பிரதிபேதம்) * உடலையார். † ஒருகுழை யொருவன் மார்பிணெண்டார்.

 கலித்தொகை ௧௦௫.

பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
விரும்பிணை ரெருத்தி னேர்திமிற் குராலு

மணக்குடை வச்சிரத்தோ னுயிரங் கண்ணேய்க்குங்
கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
*வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் டுகிலேய்ப்ப
வாலிது கிளர்ந்த வெண்காற் சேயுங்
(க)கால முன்பிற் பிறவுஞ் சால
மடங்கலுங் கணிச்சியுங் (உ)†காலனுங் கூற்றுந்
தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றாயி ருணீஇய
வுடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ

எ-து: ‡அரசுகள் படும்படியாக வென்று கொன்று நெறியாலே கொண்டுவந்த தலைமையிருக்கின்ற || சிறப்புக்களையுடையோனுடைய பழைதாகிய குடிக்குரித்தென்றுகூறிய, பாண்டிமண்டலம் பயந்த விளைவுகளும் ஒலிக்கும் ÷கடலில் வளர்ந்த முத்தத்தோடே மற்றும் பயந்த பொருள்களும் (௩)மூன்று ×முரசமுங் கெழுமும் முதிய குடியிற்பிறந்த மாறுபாடு மிகுகின்ற

---

"ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்" கலி. ௨௬: ௧. (ஈ) "காதொரு குழையோ னிளவலே" வில்லி. இராசசூய. ௧௪௧. (உ) "எரிமணிக் குன்றிரண் டென்ன வேந்துதோ, ளொருகுழை யொருவனும்" (ஊ) "கங்கையிற் றிருவ மாநகர், வாவொரு குழையி னன் வாங்க" (எ)செக்கர்மாமணி, யொருகுழை யுலாவரு வலங்கொ ளொளினன்" (ஏ) "திருநகர் ..................கங்கையில் வீழ்தல் போன்றமத், தொருகுழை யவன்வலியுணர்ந்து நின்றதால்" பாக. (ஐ) அக்குரூரன் வந்த. ௨௨. சாம்பன்மணம்புரி. ௫0, ௫௩, ௫௪. என வருபவையும் இங்கே அறிதற்பாலன.

௩. (அ) "காலமுன்ப" புறம்: ௨௩: ௧௭. (ஆ)"ஆற்றல் காலனோ டொக்கும் ... ........கேள்வியன்" பெருங். (௧) ௩௪: ௪00 - ௪0௨. (இ) "வெந் திறற் காலனே" கந்த. மார்க்கண்டேய. ௨௧௬.

உ. (தென் புலத்திறைவன்) "செற்றியிற் காவன் செல்ல நீள்பெருங் கால பாச, மற்றைவெங் கால தண்டம் வந்திரு மருங்குஞ் செல்ல, வுற்றபே ரூழிக் காலத் துருத்திர மூர்த்தி யொப்பச், சுற்றிய சேனை யோடுந் தோன்றின னுலகத் தாட்க" இராமா. திக்குவிசயப். கூகூ.

ங. "முரைசுமூன் றாள்பவர்" கலி. கநஉ: ச. என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * வேல்வல்லான். † காலமுங்கூற்றும். ‡ அரைசுகளம்படும்படியாக, || சிறப் புக்களையுடைய பழையதாகிய, + கடல்வினைக்கழுத்தத். × முரசுங்செழுமும்.



அச்செல்வனுக்குத் தீதின்றிப்பொலிவனவாகவென்று உட்கொண்டு, தெய்வத் திற்குச் சிறப்புக்களைச் செய்தற்கு அவனுடைய கேடில்லாத குடியின்பின்பு தோன்றிய பெரியகுடியிற் பிறந்த ஆயரும், ஒருங்குகிலைநந்த செருக்கினை யுடைய உவகையராய்ச் சேரக்கூடி, ஏறுதழுவுங்காற் பிறர்க்குத் துன்பம் நிகழுமென்னும் வருத்தமில்லாத உள்ளத்தோடே நிறைந்து ஏறுகளை ஆராய்ந்து, வள்ளிய உருண்ட நேமிப்படையவன் ஊதிய சங்குபோலத் தெள்ளிதாக விளங்குஞ் சுட்டியையுடைத்தாகிய நெற்றியையுடைய கரிய ஏற்றையும், (க)நம்பிமூத்தபிரானுடைய திருமார்பில் ஒள்ளிய சிவந்த(உ)மாலை போல ஒளிமிகும்படியாகவெப்புமிகநீண்டு பொருந்திய சிவந்தமறுவினையுடைய வெள்ளியஏற்றையும், பெரிய *பெயரையுடையகணிச்சிப்படையினையுடையவ னுடைய நீலமணிபோலுந் திருமிடற்றில் அழகுபோலக் கரிய சர்ச்சரையை யுடைய கழுத்தினையும் எக்கினைகுட்டேற்றினையுமுடைய (ங)குரால் நிறத்தினை யுடைய ஏற்றையும், வருத்தமுடைய வச்சிரப்படையையுடையோனுடைய ஆயிரங் கண்களையொக்குந் திரட்சிகொண்ட பலவாகிய புள்ளிகளையுடைய கடிய

† சினத்தையுமுடைய நிறத்தையுடைய ஏற்றையும், முருகனுடைய உடை யாய்த் தாழ்ந்த விளங்குகின்ற வெள்ளியதுகிலையொப்ப நன்றாய் உயர்ந்த வெள்ளிய கால்களையுடைய சிவந்த ஏற்றையும், ‡ காலனது வலிபோலும்

வலியையுடைய பிறவேறுகளையும், சால நிறைகின்ற பல்லுயிர்களை உண்ண வேண்டி ஊழித்தீயும் காலசசியும் காலனும் கூற்றுவனும் அவ்வுயிர்களை விடாமற்செல்கின்ற ஊழிமுடிவாகிய காலத்தே அவை சேர்ச் சுழன்று திரியு மாறுபோலச் சுழன்று திரியும்படி தொழுவிடத்தே சேரப் || புகுதவிட்டார். எ - று.

பார்பயந்தன கடல்பயந்தனவென இரண்டிற்கும் பயந்தன என்றுந் தொழிற்பெயரைக் கூட்டுக. இனிப் பார்(வளர்முத்தம்)-(ச) நிலத்தில் வளர்ந்த

---

௧. இந்நூற்பக்கம் ௧௪௪. ௨-ஆம் குறிப்புப் பார்க்க.

௨. "கொடுமிட ஞெஞ்சிலான் றூர்போன் மராத்து, நெடுமிசைச் சூழு மயிலாலுஞ் சீர" கலி. ௩௬: ௧ - ௨.

௩. குரால்நிறம் - கபிலநிறம்; "குராலான் பகுதுய ரிராவிற்கண்ட, வுயர் திணை யூமன் போலத், துயர்பொறுக் கல்லேன்" குறுந். ௨௨௪.

௪. முன்பொருகாலத்துப் பாண்டியனவையிற் பொருளீட்டுதற்குச்சிறந்த வழியாதென்று கேள்வி வந்தது. அப்போது ஒரு வணிகன் வாணிகஞ் செய்தலென்றும், ஒரு வேளாளன் பயிர்செய்தலென்றும் கூறினர். அரசன் அவ்விருவருக்கும் சிறிது பொருளுதவி இதனைக்கொண்டு

நீங்கள் கூறியவழியால் பெரும்பொருளாக்குகவென்று விடுத்துச் சில யாண்டு கழித்துத் தன் றூதரை நோக்கி அவர் நிலையை வினவினன்.

பிரதிபேதம்) * பெயரையுமுடைய, † செருத்தையுமுடைய வேற்றையும், ‡ காலதவனி, || புகுதவிட்டார். எ-று: பயந்தனகடல்பயந்தன.



முத்தென்றுமாம். உடன் *புகுத்தனரென்க. (௧) முருகன் தனக்கு உரித்தல்லாத வெண்மேனில் உடுத்தாற்போலக் கால் வெளுத்த எருது. முன் இறைவன் கைய தாய் ஊழிமுடிவின்கண் அவன் ஏவலால் உயிர்த்திறமேற் றிரியுங் கணிச்சி. (௨) காலன், †கூற்றுவனேவலாளன்.

அத்துதர் வணிகன் வாணிகத்தாற் பெருஞ்செல்வம் ஈட்டியுளானென்றும் வேளாளன் செழிப்பாக ஒரு கருப்பந்தோட்டம் பயிர்செய்திருக்கிறானென்றும் சொன்னார்கள். அரசன் அதனைக்கேட்டு அவர் நிலையை நேரே அறியக் கருதியதனால் அவ்விருவரும் உறையும் ஊரிலுள்ள கொற்றவையின் திருவிழாவிற்குச் சென்றிருந்தபொழுது முதலில் வணிகனையழைப்பித்து வினவ அவன் தனக்குக் கொடுத்த பொருளைப் பதின்மடங்கு பெருக்கியிருப்பதாகச் சொன்னான். பின்பு அரசன் வேளாளனை யழைப்பித்து வினவ, அவன் அங்கிருந்தே தன் கருப்பந் தோட்டத்தைக் காட்டி இது என் பொருளீட்டம் என்றனன். அரசன் இது செழித்த தோட்டமேயாயினும் வணிகனீட்டிய பொருளிற் பத்தி லொரு பங்கிற்கேனும் இணையாமோவென வேளாளன் அவன் பொருள் இதன் விலையிற் பத்திலொருபங்கிற்கும் இணையாகாதென்றான். அரசன் அதனைக்கேட்டு வேளாளனை இகழ்ந்துரைக்க, அவன் தன் தோட்டத்திலிருந்து ஒரு கரும்பைக் கொணர்ந்து அரசன் முன்னிலையில் அடித்து முறித்தனன். அதிலிருந்து முத்துக்கள் தெறித்தன. அரசன் அம்முத்துக்களை நோக்கி ஒவ்வொன்றும் மிக்க விலைபெறுமென்பதையறிந்து மகிழ்ந்து அவ்வேளாளனுக்கு முத்து என்றும் அக்கரும்படித்தவிடத்திற்கு முத்தடித்த களமென்றும், அங்குள்ள அம்பிகைக்கு முத்தாளம்மனென்றும் அந்நாட்டிற்கு முத்துநாடென்றும் பெயர் புனைந்தனன் என்ப. இச்செவி வழிநிலைச் செய்தி இங்கே கருதத்தக்கது.

௬. "உடையு மொலியலுஞ் செய்யை" என்பதனால், (பரி. ௧௧: ௯௭) முருகனுக்கு வெண்டுகில் உரித்தன்றென்றார்.

௨. (அ) "ஆலமென்ன வனலென்ன வந்தகன், ஞாலமெல்லா நடுங்கக் கொதித்திடும், வேலை வெய்ய னென்ன வெகுண்டெவெங், காலனன்னவற் கின்ன கழறினன்" (ஆ) "என்னை யேவுதியென்னி விராவணன், றன்னை காணுயி ருண்பன்" இராமா. திக்குவிசய. ௭௨ - ௭௩. (இ) "அந்தக னத்துணை யமைச்ச னாகிய, வெந்திறற்காலனை விளித்துக் காசிபி, லந்தண னொருமக னவன தாவியைத், தந்திடு கென்றலும்

தரணி யெய்தினன்" (௩) "போன காலனு மறவியை வணங்கியே புகுந்த, பான்மையாவையு முரைத்தலும்" கந்த. மார்க்கண்டேய. ௨௧௯, ௨௨௬. (௨) "கடையுகத்திடியிற்பாய கடற்படை வடக்குவாயிற், (பிரதிபேதம்) * புகுத்தினசெங்க. † கற்றுவனேவலான். அவ்வழி,



௨௯. அவ்வழி

எ - து: அக்கனம் அவர் புகுத விட்ட இடத்து. எ - று.

(௧)காரெதிர் கலியொலி கடியிடி (௨)புருமி னியங்கறங்க
(௩)லூர்பெழு கிளர்புளர்:புயன்மஞ்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்
சீர்கெழு நிலைநிலைச் செயிரிகன் மிகுதியிற் சினப்பொதுவர்
தூர்பெழு துதைபுதை துகள்விசும் புறவெய்த
வார்புடன் ‡பாய்ந்தா ரகத்து.

எ - து: கார்காலத்துத் தம்மில் எதிர்ந்த கலிப்பினையுடைய உருமினது கடிய இடியொலிபோல வாச்சியங்கள் ஒலியாநிற்கப், பரந்து உயர்ந்து எழுகின்ற அசைதலையுடையமேகம்போலத் திசைகளிலே புகைமூச்செழாநிற்கப், புறவிதழ் ஒடித்த மணத்தையுடைய ஒத்தவிதழாற் கட்டின மாலையையுடைய மகளிர் நிரைநிரையாக அணியாநிற்கக் குற்றத்தைச் செய்த மாறுபாட்டின் மிகுதியாலே தலைமைபொருந்தினநிலைக்கின்றநிலைமையினையுடைய சினத்தையுடைய பொதுவர் எழுகின்ற நெருங்கின கண்கள்மறைத்தற்குக் காரணமான துகளாலே விசும்பு † தூர்ந்துமிகும்படி அத்துகள் சென்று சேரும்படியாக ஆர்த்து அத்தொழுவினுள்ளே சேரப் பாய்ந்தார்' எ - று.

௩0 மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயு
மெருத்திடை யடங்கியு ‡மிமிலிறப் புல்லியுந்
தோளிடைப் ||புகுதக்கூக் துதைந்துபா டேற்று
நிரையுமேற் சென்றாரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன வேறு

புடைவிளித் தார்க்கு மோதைப் பொருமுழக் கியமன் கேளா, விடை தெரித்துரைமினென்ன விலங்கெயிற்றலங்கோ டிண்டோண், மிடை வலி யிருத்துக்காலிருவரை விடுப்பச் செல்வார்" வேதாரணிய. சோரச். கஎ.

௧. கலிப்பாவில் ஐஞ்சீரடி மூடுகி வந்ததற்கு, "காரெதிர்............ரணி நிற்ப" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௬௯. பேர்.

௨. "இடியார் பணை துவைப்ப" பு - வெ. உழிஞை. ௨௭.

௩. "புயமழை யாடும் வரையகம்போலும், கொடிநறைசூழ்ந்த தொழூஉ" கலி. ௧0௩: ௨0 - ௨௧.

(பிரதிபேதம்) * பாய்ந்தனரகத்து. † துர்த்தபோம்படியத்துகள், ‡ இமிலிற்புல்லியும், || புகும் தக்துறைத்து,



௬0 கொள்வாரைக் கொள்வாரைக் (௪) *கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறூஉக் குரூஉச்சேகில் காணிகா
(௧)செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
யுயிருண்ணுங் கூற்றமும் போன்ம்

எ - து: அங்ஙனம் பாய்ந்து கொம்பிடத்தே பிடித்துக்கொண்டும் மார்பிலே உறும்படி தழுவிக்கொண்டும் †கழுத்திடத்திலே அடங்கிக்கிடந்தும் குட்டேறு முறியும்படி தழுவியும் தோளுக்குநடுவே கழுத்தைப் புகுதவிட்டுப் பிடித்தும் நெருங்கிக் கொம்புகள் தம்மேலேபடுதலை ஏற்றுக்கொண்டும் நிரைத்துத் தம்மேலே சென்ற ஆயரைப் பின்னர்க் கீழேவீழ்த்து நீண்ட மருப்புத் தைக்கும்படி குத்தி அவர்கள் தழுவுகின்ற கழுத்திடத்தைத் தழுவக்கொடாதே ஏறுகள் அவரை நீக்கி நிறுத்தின; அங்ஙனம் நிறுத்தினபின்பும் சென்று தழுவுவாரைத் தழுவுவாரைக் கோட்டிடத்தே சாம்படி குத்திப் பின்பு சென்று

௧. "சாப்புல்லற் பாற்று" என்பதற்கு, 'சாம் வண்ணம் பொருந்தற் பான்மை யுடைத்து' என்று பொருள்கூறி, 'சாவவென்பதனிறுதிநிலை விகாரத்தாற் றொக்கது' என இலக்கணமெழுதி, 'கோட்டின்வாய்ச் சாக்குத்தி' என்புழிப்போல வென இதனை மேற்கோளுங் காட்டினர் பரிமேல்; குறள். அ௩௯. இந் நூற்பக்கம் ௬௨௩: ௨-ஆம் குறிப்புப்பார்க்க.

௨. (அ) "காலனுங் காலம் பார்க்கும்" புறம். ௪௧: ௧. (ஆ) "எண்ணி யுயிர் கொள்வான் வேண்டித் திரியினு, முண்ணுந் துணைக்காக்குங் கூற்று" பழ. ௮௧. (இ) "ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் காப்பட், காலம் பார்க்குங் காலன் போல" பெருங். (௧) ௩௭: ௨௦௪-௨௦௫. (ஈ) "சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த், தேற்றும் விண்ணெனப்ப தன்றி யிவளைப்போ, ஞற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர், கூற்றுண் டோ" கம்ப தாடகை. ௬௪. (உ) "நோற்றநோன் புடைய வாழ் நாள் வரம்பினை முனித்த வெல்லாங், கூற்றினுக் கன்றே வீரன் சரத் திற்குங் குறித்ததுண்டோ" கம்ப. சிந்தனைப். ௭௩. (ஊ) "அடுத லோம்பிய செய்கைய னென்பதா லவனைக், கொடிய னென்பரா லறி விலார் செய்வினை குறித்து, முடிவி லாருயி ரெவற்றிற்கு முறை புரிந் திடலா, னடுவ னென்கின்ற தவன்பெய ருலகெலா நவிலும்" (எ) "கொல்வன்னெனக் காலர்தெரி கூற்றுமென நின்றேன்" கந்த. மார்க்கண்டேய.†௨௨. இரண்டாநாட் சூரபன்மன். ௨௧௩. (ஏ) "நாள் வரைக்கு நமனொத்த வாளியார்" கழுக்குன்ற. பசுவராத. ௮. (ஐ) "மாயு நாளுற நவெ னோர்க்கே,யாட்படேனுதர் நீர்போ யாங்கவற் கொணர்மி னென்ன" வேதாரணிய. சோரச். ௧௩. (ஒ) "நாள்வரை யறையே நோக்கு நவெனர் தூத ரேய்ப்ப" திருவானைக்கா. திருநாட்டுச். ௮௩.

(பிரதிபேதம்) *கோட்டின்வாய்ச். † கழுத்திலே.



தழுவுவாரைப் பெருமல் நின்ற சிறத்தையுடைய சிவந்த எது உயிர்குறை நின்றநாளிடத்தே அவர்பின்னேசென்று குற்றத்தைச்செய்து துகைத்து உயிரையுண்ணுங் கூற்றுவனையும்போலும்; இதனைப்பாராயென்றான். எ - று.

௬௯ பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா
*நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்

எ - து: சிவந்த கரிய எற்றினுடைய கொம்புகள் †படுதலை மார்பிலே எற்றவர்களைக் கொம்புகளாலே படும்படி குத்தி மேனோக்குதலாலே வீழ்ந்த குருதியால் நனைந்து அசையும் பலவாகக் திரண்ட திட்சியையுடைய சிறிய மணிகள் ஒளியமைந்த நறும்பூவினது முகையவிழுஞ் செவ்வியைநோக்கி அதனைச் சூழ்ந்து திரியும் தும்பியையும்போலும்; அதனைப்பாராயென்றான். எ - று.

"நறுவிதழ் கண்டன்ன ‡செவ்விரற் கேற்ப" (க) என உவமைகூறலின் நறும்பூவைசண்டுமணிக்கு (௨)உவமைகூறவே சிறியமணிகள்கோத்துக்கட்டினமையும் கோடெழுந்தென்றதனால் அக்கோடு எழுந்தகாலத்து வீழ்ந்த குருதியால் அவை சிவந்தமையும் பெற்றாம்.

௪௰ இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயும் வெள்ளேறு கண்டைகா
(ந)வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்

---

க. கலி. அச: ௨௨.

௨. நறும்பூவை எற்றின் கொம்புக்கும் தும்பியை அக்கொம்பிற் கட்டிய மணிக்கும் உவமையாகக் கொள்வது பொருத்த மென்று தோற்றுகிறது. "அவ்வரி வொரிதி னாக்கிர்த் தன்ன. செவ்வரி யிதழ சேணறு நறவி, னறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப், பொன்னுரை கல்வி னன்னிறம் பெறூஉம், வளமலை" (நற். ௨௫)என்பதனால்நறும்பூ, செவ்வரியையும் தும்பிமொய்த்தலையுமுடைய தென்பது விளங்கும்;

"களிர் கொடியன நறவிரையக நறுமலரன நறவம்" (துணை. ஞா. ச.) என வருதலால் இதன் முதல் ஒருகொடியென்று தெரிகிறது. மயிலைநாதரும் ஒருகொடியென்றே கூறினர். இதனை ஓடையென்பது போல ஒரு மரத்துக்கும் ஒருகொடிக்கும் பெயரென்பாரு முளர்.

௩. "வான்போழ் வானத்து வயங்குகதிர் சிதறி" நாற். சூ. கசஎ. மேற்.
(பிரதிபேதம்) * தகைசால், † படுத்தலை மார்பிலே, ‡ மெல்விரற்கேற்ப,

85



எ-து: கடுவே பாய்ச்செய்திக் கழுத்திடத்தே தழுவிக்கொண்டு கிடத்தவனோடே பரணின்மேலே தாவிப்பாயும் வெள்ளிய எறு பாம்பின்வாயாற் சிறிதிடம் விழுங்கப்பட்டு அப்பாம்புடனே ஒளியைத்தருகின்ற விசும்பிலே போதலைச்செய்கின்ற, பால்போலும் மதியையும்போலும்; இதனைக்காணென்றான் எ - று.

(க)*இதா முன்னிலையசை. அது காவெனத் திரிந்தது.

௪௭ ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று †மாறா
விருபெரு வேந்தரு மிகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ

எ - து: அங்ஙனே ஏறுகளும் இடையரும் தம்மின் மாறுபடுகையினாலே அத்தொழூ இருவராகிய பெரியவேந்தர் மாறுபட்டு எதிர்ப்பட்ட போர்மாறாத பொருகளத்தையொக்கும் என்றாள். எ - று.
இத்துணையும், தோழி தலைவிக்குக்காட்டிக் ‡கூறியது.

௫௦ வெல்புக ழுயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துதாங்கிமி

னல்லேறு கொண்ட பொதுவன் முகனோக்கிப்
பாடில வாயமகள் கண்

எ - து: செருக்கின கழுத்தையெல்லாம் மறைத்தலையுடைய அசை
சென்ற குட்டேற்றினையுடைய || நல்ல எற்றைத் தழுவின, வெல்கின்ற புகழ்
உயர்கின்ற நிலைமையையுடைய. பழைதாகிய குலத்தியல்பினையுடைய,
பொதுவன் முகத்தை நோக்கி ஆய்சாதியிற்பிறந்த மகளுடைய கண்
இமைத்தலை × யிலவாயிருந்தன. எ - று.

இது, தோழி தன் னெஞ்சோடே அவள் விரும்பக் கூறியது.

---

௧. "நில்லிகா வென்பான்போ னெப்புற் றொடுகானே, மல்லிகா மாலை
வளாய்" என்புழி, நில்லிகா வென்பான் போல் என்பதற்கு நில்லென்
பான் போல் என்று பொருள் கூறி, 'இகவென்னும் அசை இகரவென
வீறு திரிந்தது' என்று (பரிபாடல். ௬௧: ௧௦௪-௧௦௫.) பரிமேலழகரும்
காண்கா வென்பதற்குக் காண்பாயாக வென்று பொருள்கூறி, 'இக
வென்னும் முன்னிலையசை இகாவென ஈறு திரிந்தது' என்று
(சிலப். ௧௮: ௪௬) அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும்

எழுதியிருப்பதை நோக்க இங்கும் 'இக, முன்னிலையசை; அது இகா
வெனத் திரிந்தது' என்று இருக்கவேண்டுமென்று தோற்றுகிறது.

(பிரதிபேதம்) * இகமுன்னிலையசை. † மாருவிருபெரு, ‡ கூறினுள வெல்புகழ். || வல்லேற்
றை, × இல்லவாயிருந்தனவெனத் தோழி தன்னுடனேயவள்விரும்பக்கூறினுள்,
கூறுதலாய்.



௫௧. *நறுநுதா லென்கொ(க)லெங் கூந்த லூரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் † குறுமறுகி
யொல்லா தடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம்

(பிரதிபேதம்) * நறுநுதலா யென்கோலின் கூத்தனுளாயச். † குறுமருகுபொல்லாது, ‡ நம் முடைய, || அன்னிதாக அன்னிதாக மனம், ÷ கோபித்தென்ன பயனே, ÷ இங்குநேர், × பட்டநற்கெங்கள். ** கூடியயதற்கு, †† நம்முடைய நங்கண்கள், ‡‡ உடைத்தென்றுத் தலைவியைநோக்கிக்கூறினாள், ஒன்றுநுதல்.



மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
யலர்செய்து விட்டதிவ் வூர்

எ-து: அதுகேட்ட தலைவி, ஒள்ளிய நுதலினையுடையாய்! (க)யாய் தன் கண்களுடையவாகிய கோலை *புடையனாய் என்னைவருத்தியதற்கு இவ்வூர் என்னை மலரணிந்த கண்ணியை யுடைய பொதுவனோடே கூட்டமென்றெண்ணி (உ)அலரையுண்டாக்கிவிட்டது: இத்தன்மைத்தாகிய உவகை நமக்கு வேறியாதுதானெனெ மகிழ்ந்து கூறினள். எ - று.

அலைக்குங்கோலின் காரியத்தைக் கண்கள் செய்தமைபற்றிக் கண்களுடையவாகிய கோலென்றாள்.

கூகூ ஒன்றிப் புகரினத் † தாயமகற் கொள்ளிழா
யின்றெவ னொன்னை யெமக்கொடுப்ப தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் னெஞ்சு

எ - து: அங்ஙனம் கூறியபின்னரும் ஒள்ளிய இழையினையுடையாய்! தன்மேல் மிக்குச்சென்ற சிவந்த காரியேற்றினுடைய கோட்டிடையிலே இற்றைநாள் ‡அவன்செல்ல என்னெஞ்சம் உடன் சென்றது;இனிச்சுற்றத்தாரெல்லாரும் பொருந்திப் புகரையுடைய பசுத்திரளையுடைய ஆய்ச்சாதியிற் பிறந்த மகனுக்கு என்னைக்கொடுப்பதாக அறுதியிட்ட அற்றைநாளிற் கொடுக்கின்றது என்னபயனை யுடைத்தென்று தலைவி மகிழ்ந்து கூறினள். எ - று.

என (ரு)

அலைக்குநகோலாவது கண்ணொளைவுரை;த்துத் புன்வெகுளிநோக்கால் அவர் வெருடற் குறிப்பறிக வென்பது கருத்தாக்கு வாருமுளர்' எனப் பரிமேலழகர் பிறர்கோட் கூறி யிருத்தலும் (குறள். எகப) (ஆ)"கொக் தார் மலர்க்குழல் வல்லிநம் மன்னை குரிசில்வந்த, செந்தா மரை யடி கண்டனள் போலுமித் திண்சிலம்பில், வந்தா ரெவரென வந்தார் சிலரிலர் மற்றின் கென்றே, மொந்தா ணைடிதுயிர்த் தாள்கொடி தா யென்னை நோக்கினளே" (அம்பிகாபதிகோவை. உருக) என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

க. | யாய் - என் தாய். "யாயு ஞாயும் யாரா கியரோ" குறுந். ௪0.

உ. | "களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்; வெளிப்படுந் தோறு மினிது" குறள். ககசரு.

ங. ஏனவென்பது, இங்கே அசைநிலை.

(பிரதிபேதம்) * உடையாயாய் † துயர்மகற்கு. ‡ இவள்செல்ல.

# நான்காவது முல்லை ங.

எக (க)பாடிமிழ் பரப்பகத் தரவணை பசைஇய
வருடுகொ ணேமியாற் பரவுது நாடுகொண்
டின்னிசை முரசிற் (உ)பொருப்பன் மன்னி
யமைவர லருவி யார்க்கு
மிமையத் தும்பருந் *விளங் குக வெனவே

எ-து: அதுகேட்ட தோழி, யாம்(க)இல்லறம்நிகழ்த்தி இனிதிருக்குமாறு காத்தற்குப் பிறராதீனமாக்கொண்டிருந்த பூமியை உடைமையுடைத்தாகிய முரசினை யுடைய பாண்டியன் அமைந்து வருதலையுடைய அருவி ஆரவாரிக்கும் இமயத்திற்கு வட ‡திசையிலேயும் மன்னி விளங்குகவென்று உட்கொண்டு முறிதலையுடைத்தாகிய முழங்குகின்ற கடலிடத்துப் பாம்பணையிலே பள்ளி கொண்ட வெற்றி கொண்ட சக்கரத்தினை யுடையோனை வாழ்த்துவே மென்றாள். எ - று.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது தனிச்சொல்லும் ஐஞ்சீரடி பலவும் விராய் முடுகுவண்ணம் ஆடியிறந்தோடிய கொச்சகவெண்பாவும் கொச்சகமும் இரண்டு நெடுவெண் பாட்டும் "வெண்பாட்டீற்றடி முச்சீர்த்தாகும்" (௪)என்றதனான் இடையீற்று முச்சீரடிவந்த நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடி பெற்ற குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடி முடுகியலோடு தொடர்ந்த கொச்சகவெண்பாவும் நெடுவெண்பாட்டும் நாலடியானின்றும் குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் இரண்டு நெடுவெண் பாட்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வந்த கொச்சகம். (௫)

(௱௩.) கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
ணிமிழிசை மண்டை யுறியொடு தூக்கி
யொழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர்
வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை
பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்புலத்தார்;

---

௧. முல்லை நிலத்துக்குத் திருமால் தெய்வ மென்பதற்கு "பாடிமிழ் பரப்பகத் தரவணை............பரவுதும்" என்பது மேற்கோள்; தொல். அகத். ரு. நி. நச்.

௨. இந்நூற் பக்கம் ௧௧௫: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. "காவற்பொருட்டு அரசன் வாழ்க...........என யாய் இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது பிறிது நினைத்திலள்" என்னும் (ஐங்குறுநூறு. ௧.) உரைப்பகுதி இங்கே நோக்கற்பாலது.

௪. தொல். செய். ரு. ௭௨.

பிரதிபேதம் * முன்னி, † விளக்குகெனவே, ‡ திசைபிலே மின்னி.



௧௦ அவ்வழி,
நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை
மாறேற்றுச் சிலைப்பவை மண்டிப்பாய் பவையாய்த்
துளங்கிமி னல்லேற் றினம்பல களம்புகு
மள்ளர் வனப்பொத் தன;
௧௧ தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி யெவ்வாயும்

மைவாய் மருப்பினான் மாறாது குத்தலின்
மெய்வார் குருதிய வேறெல்லாம் பெய்காலைக்
கொண்ட னிரையொத் தன;
அவ்வேற்றை;
கசு பிரிவுகொண் டிடைப்போக்கி யினத்தோடு புனத்தேற்றி
யிருதிறனா நீக்கும் பொதுவ
ருருகெழு மாநில மியற்றுவான்
விரிதிரை நீக்குவான் வியன்குறிப் பொத்தனர்;
உ0 அவரைக், கழல வுழக்கி யெதிர்சென்று சாடி
யழல்வாய் மருப்பினாற் குத்தி யுழலை
மரத்தைப்போற் றொட்டன வேறு;
உங தொட்டதம், புண்வார் குருதியாற் கைபிசைந்து மெய்திமிரித்
தங்கார் பொதுவர் கடலுட் பரதவ
ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு;
உசு ஏறுதங், கோலஞ்செய் மருப்பினாற் றோண்டிய வரிக்குடர்
ஞாலக்கொண் டெழூஉம் பருந்தின் வாய்வழீஇ
யாலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட
மாலைபோற் றூங்குஞ் சினை;
ஆங்கு;
ஙக தம்புல வேறு பாத்தா வுய்த்தத
மன்புறு காதலர் கைபிணைத் தாய்ச்சிய
ரின்புற் றயர்வர் தழூஉ;
ஙச முயங்கிப் பொதிவே முயங்கிப் பொதிவே
முலைவேதி னொற்றி முயங்கிப் பொதிவேங்
கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே;

### நான்காவது முல்லை கஅ. கஎக

ஙஎ பல்லூழ் தயிர்கடையத் தாஅய் புள்ளிமேற்
கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லலெந் தோளிற் கணியோவெங் கேளே;

௪0 ஆங்கு, போரேற் றருந்தலை யஞ்சலு மாய்ச்சியர்
காரிகைத் தோள்கா முறுதலு மிவ்விரண்டு
மோராங்குச் சேற லிலவோவெங் கேளோ;

௪௬ கொல்லேறு கொண்டா னிவள்கேள்வ னென்றாரார்
சொல்லுஞ்சொற் கேளா வளைமாறி யாம்வருஞ்
செல்வமெங் கேள்வன் றருமோவெங் கேளோ;

ஆங்க;

௪எ அருங்கலை பேற்றோடு காதலர்ப் பேணிச்
சுரும்பிமிர் கானகம் பாடினம் பரவுது
மேற்றவர் புலங்கெடத் திறைகொண்டு
மாற்றாரைக் கடக்கவெம் மறங்கெழு கோவே.

இது தத்தம் இனம் தத்தம்புலத்துப் பிரிப்பான்புக்கவர் ஏறுகொண்ட வாறுகண்டு*ஆய்ச்சியர் தங்காதன்மிகுதியால்†தங்காதலரைக்கைபிணைந்து தாவையாடித் ‡தென்னன்வாழ்கெனக் கானம்பாடியது.

இதன் பொருள்.

(க)கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
ணிமிழிசை மண்டை யுறியொடு தூக்கி

---

க. "கொன்றையந் தீங்குழல்..........கேளாமோ தோழீ" (சிலப். கஎ.

'கன் றுகுணிலா')என்னும்தாழிசைகளின்விசேடவுரையில்,"கொன்றை ஆம்பல் முல்லை என்பன சிலகருவி. இனி அவற்றைப் பண்ணென்று கூறபவெனின். அங்ஙனம் கூறுவாரும் ஆம்பலும் முல்லையுமே பண்ணுக்குப் பொருள்கக் கூறினல்லது 'கொன்றை என ஒருபண்இல்லையாதலா( .. ..)னும் கலியுள் முல்லைத் திணையின்கண் ஆறும்பாட்டினுள், இப்பாட்டில் 'கழுவொடு .......வியன் புலத்தர்' எனக்கருவி கூறினமையாலும் அன்றைப் பகற்கழிந் தாளின் றிராப்பகற், கன்றின் குரலுங் கறவை மணி கறங்கக், கொன்றைப் பழக்குழற் கோவலராம்பலு, மொன்றல் சுரும்பு நரம்பென வார்ப்பவும்' என வஞ்சியாபதியுள்ளும் கருவி கூறிப் பண்கூறுதலாலும் இவை ஒரு பொருண்மேல் மூன்றடுக்கிவந்த வொத்தாழிசையாகலானும் இரண்டு பண்ணும்

(பிரதிபேதம்) * ஆச்சியர், † நல்லைகாதலை, ‡ தென்னவன்வாழ்கென.

௮௱௩0 கலித்தொகை ௧0௩.

பொழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர்
*வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை
பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்†புலத்தார்

எ - து: பால் பற்றறச் சிவுதலைச்செப்த(க)கறவைக்கலங்கள் வைத்தஉறியோடே தோற்பையிடத்தே கழுவோடேகூட்டுக் கோல்களையும்இட்டுச்சுருக்கிய பைகளையுந் தூக்கி நீளவளர்த்த கொன்றைக்காயைத் துறந்து சமைத்த இனிய குழலில் உண்டான ஓசையராய் வழுவின சொல்லையுடைய ‡கோவலர் தம்முடைய தம்முடைய இனமாகிய பசுக்கள் கார்காலத்தோடே தோன்றின அப்பொழுது வரும் மழையாலே ஈனைத்த அகற்சியையுடைய நிலத்திடத்தாராயினர். எ - று.

பழிசை ||பாடமாயின், பழித்தலையுடையதென்க. பழித்தலையுடையது பழிசை. முரற்சியர் என்னும் எச்சம் உடையவென்னும் வினைக்குறிப்போடு +முடிந்தது. (உ) கழுவாவது கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்கு இரண்டு தலையுஞ் சீவி மாலையாகக்கட்டிக் கழுத்தில் இடுவது.

௬ அவ்வழி

(௩)நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை

மாறேற்றுச் சிலைப்பவை மண்டிப்பாய் பவைபாய்க்

---

ஒன்று கருவியுமாகக் கூறின் செய்யுட்கும் பொருட்கும் வழூஉச் சேறலானும் அங்ஙனங்கூறாத வமையாதென்க" என்று அடியார்க்கு நல்லார் எழுதியிருப்பது ஈண்டு அறிதற்பாலது.

௧. "திண்கா ழறியன் பானைய னசலன்" அகம். உ௪௬: ௬.

௨. (அ)"நாகுசு ஸீங்கிய சேதாத் தொகுத்துக், குளம்புக் கோடும் விளங்கு பொன் னுறீஇத், தளையுக் தாம்பு மனைகடை மத்துங், கழுவுங் கலனும் வழுவில பிறவும், பைம்பொனி னியன்றவை பாற்பட வகுத்துக் குன்றாக் கோடி கொடுத்தவப் போரும்" பெருங். (௧) ௩௩: ௬௪-௬௭ (ஆ) "தழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத், தொழுவிடை யாயர் தொகுமின்" (தொல். புறத். ௬. ௩. ௩௪. மேற்.) என்பவற்றில் இச்சொல் வருதல் காண்க.

௩. (அ) "அடியிட்டு நிலன் இளைத்தண்டமெண் டிக்கும் போர்ப்பப், பொடியிட்டுயிர்த்துப் பொருகோட்டினிற் குத்திக் கோத்திட், டடியிட் டதிர்கா ரெதிரேற்றெழுக் தாங்கு சோக்கிச், செடியிட்டிருகண் ணழல் சிந்த நடந்த தன்றே" திருவிளை. மாயப்பசுவை. ௧௭. (ஆ) "ஈனிலை

(பிரதிபேதம்) * வழூச்சொல், † புலத்தர் எ-து: கழுவாவது............கழுத்திலிலேதுபாய் பற்றச், ‡ கோவர் தம்முடைய, || பாடமாயின் பழித்தலையுடையது பழியாம்முரற்பிய சென்றும், + முடிக்தது அவ்வழி.

## நான்காவது முல்லை ௬. ௬அ௧

துளங்கிமி னல்லேற் றினம்பல களம்புகு

மள்ளர் வனப்பொத் தன

எ - து: அவ்விடத்துத் துளங்குகின்ற குட்டேற்றினையுடைய நல்ல ஏற்றினங்கள் பலவும் முன்பு காலாலே வெட்டி நீற்றை எழுப்புமவை இப்பொழுது (௧)மழைபெய்தமையிற் (௨) கோட்டுமண் கொள்ளுமவை ஒன்றோடொன்று மாறுபடுதலை மேற்கொண்டு முழங்குமவை மிக்குப்பாயுமவையாய்ப்

போர்க்களத்தே *செல்லும் வீரர் அழகையொத்தன. எ - று.

கக தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி யெவ்வாயும்
வைவாய் மருப்பினான் மாறாது குத்தலின்
மெய்வார் குருதிய வேறெல்லாம் பெய்காலைக்
கொண்ட னிரைபொத் தன

எ - து: ஒன்றோடொன்று தாக்கி மீண்டு அடிப்பறித்துச்சேர்ந்து கூரிய இடத்தையுடைய கொம்பாலே மாறாமல் எவ்விடத்துங் குத்துகையினாலே மெய்யினின்றும் வடிகின்ற குருதியையுடைய †ஏறுகளெல்லாம் நாட்காலைப் பெய்யும் ‡மேகநிரையையொத்தன. எ - று.

நாட்காலைமேகம் சிவந்திருத்தலின், உவமையாயிற்று. பெய்யு மேகம் அதற்கு அடைகூறிற்று.

கஉ அவ்வேற்றை

பிரிவுகொண் டிடைப்போக்கி யினத்தோடு புனக்கேற்றி
யிருதிறனா நீக்கும் பொதுவ

---

கிறி வான்மிசை யுயர்த்துக் கதிர்மணி மருப்பிடை நோக்கி, யானின வேறு யடுசமர்க் கெழுந்தா னசனியே யென்னவோ ரவுணன்" பாக. (சO) ஸ்ரீ நாரதர். ச.

க. "பெயல கடுநீர் வரித்த செந்நில மருங்கின், விடுநெறி யீர்மணல் வாரணஞ் சிதறப், பாம்புறை புற்றத் தீர்ம்புறங் குத்தி, மண்ணுடைக் கோட்ட வண்ண னல்லேள, றுடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ, யூர்வயிற் பெயரும் பொழுதில்" அகம். சச: ஏ - கங.

உ. (அ) "கோட்டுமண் கொண்ட மார்பம்" சீவக. உஉகச. (ஆ) "கோட்டுமண் கொள்ளா முலை" முத்........... (இ) "கோட்டுமண் கொண்டு குனிர்திங்கள்" நள. சுயம். சOஉ. (ஈ) "கோட்டுமண் கொண்டு கூர்ம. ஆதவர்சிறப்பு. அ. (உ) கோட்டுமண் கொள்ளும் வேழுப் தணிகை. வீரட்ட. சஉ.

(பிரதிபேதம்) * கொல்லும் வீர, † மறெல்லாம், ‡ மேகநிரையொத்தன.

ருருகெழு (௧)மாநில மியற்றுவான்
*விரிதிரை நீக்குவான் வியன்குறிப் பொத்தனர்

எ - து: † அவ்வேறுகள் போர்செய்யாமற் பிரிதலைத் தாம் உட்கொண்டு அவை இரண்டு கூறாக நீங்கும்படி நடுவே சில ஏறுகளைச்செலுத்தி விலக்கிப் பின்னர்ப் பசுத்திரளோடே மேயும்புலத்திலே ஏற்றித் தத்தம் இனங்களைப் பிரிக்கும் இடையர், பழையவடிவுகளெல்லாங்கெழுமும்படி பெரியநிலத்தைப் ‡படைத்தற்கு அகற்சியையுடைய கருத்தினையுடைய,(௨) அந்நிலத்தை மறைத் துக்கிடந்த கடலைப் போக்கும் நான்முகனையொத்தார். ' எ - று.

ஏற்றையென்றது ஏற்றிற்கு ஐகாரவீற்றதோர்பெயர்; " ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா, மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப" (௩) என்றலின்.

௨௦ அவரைக், (௪)கழல வுழக்கி யெதிர்சென்று சாடி
அழல்வாய் மருப்பினாற் குத்தி (௫)யுழலை
மரத்தைப்போற் றொட்டன வேறு

எ - து: அங்ஙனம் நீக்குகின்றவர்களை அவ்வேறுகள் ஓடும்படி மிதித்து ஓடாமல் நின்றவர்களை எதிர் சென்று அழலுகின்ற இடத்தையுடைய கொம் பாலே குத்திச் சாடி உழலைகோத்த மரத்தைப்போலத் துளைத்தன. எ - று.

---

௧. (அ) "மாறி' யுலகம் வருத்தநாள் வரம்பு கடந்து மண்முழுது, மேறி யொடுங்கு மெறிகடல்போ லெயின்மா நகர மெய்தினர்" (ஆ) "தேர் செலும் வேகத்து வேலைநீ, ரோங்கு நாளி னெழுங்கு முலகுபோற், றுங்க வாற்றலில் வார்தடி மாறித்தா, நீங்கினர்"

௨. "உரைசெய் நான்முக னுறங்குழிப் புவிகொள வொருங்கே, திரை செய் வான்கடல் சென்றெனச் சென்றது சேனை" கந்த. திக்கு. ௧௦.

௩. தொல். மரபி. ௫. ௪௧.

௪. "கோவலர், கழலக் காய்போய்" சீவக. ௪௨௨.

௫. உழிலைமரம், தொழுவமுதலியவற்றுள் மாடுகளைப் புகாமல் தடுப்பதற்கு அவற்றின் வழியில் இருபக்கத்தும் உழலையை (கழிகளை) இழுத்துப் போடும்படி துளைத்துநிறுத்தியிருக்கும் மரம்; இது கடப்புத்தூணென வழங்கும். "கன்று தாம்பரிந், துழலை பாய்ந்துலா முன்றில்" என்பது சீவக. சஉஉ.

(பிரதிபேதம்) * விரைநிலை, † ஏற்றையென்றது..................என்றலின் அவ்வேறுகள், ‡ படைத்தற்கு இவ்வுலகத்தை மறைத்துக்கிடந்த அகற்சியையுடைய கடலைப் போக்கும் கருத்தினையுடைய நான்முகனையொத்தார், அவரைக்.

## நான்காவது முல்லை கூ. கூ அங

உகூ தொட்டதம், புண்வார் குருதியாற் கைபிசைந்து மெய்திமிரித்
தங்கார் பொதுவர் கடலுட் பரதவ
(க)ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு

எ - து: பொதுவர் அவ்வனந் துளைத்த தம்முடைய புண்களினின்றுஞ் சோருகின்ற குருதி வழுக்குதலாலே மணலை அள்ளிக் கையைப் பிசைந்து *உடம்பையுந் (உ)திமிர்ந்து தாழ்க்க நில்லாராய்க் கடலுக்குள்ளே பரதவர் (ந)சிறிய தெப்பத்தை ஏறினாற்போல ஏற்றைத் தழுவினர். எ - று.

உச ஏறுதங், கோலஞ்செய் மருப்பினாற் றோண்டிய வரிக்குடர்
ஞாலக்கொண் டெழூஉம் பருந்தின் †வாய்வழீஇ
யாலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட
மாலைபோற் றூங்குஞ் சினை

எ - று: அவ்வேறுகள் தம்முடைய அழகுசெய்கின்ற கொம்பாலே தோண்டிய வரிகளையுடைய குடர்கள், நான்று விழும்படி எடுத்துக்கொண்டு உயர்ந்துபோம் பருந்தின் வாயினின்றுந் தப்பி, ஆலமரத்தையுங் ‡கடம்பமரத்தையும் (ச)ஆண்டு உறையுந்தெய்வங்கட்கு ||மகிழ்ச்சியுண்டாகவேண்டி அணிதலைச்செய்தற்கு விலங்க இட்டுவைத்த மாலைகள்போலே கொம்புகடோறுந் + தூங்காநிற்கும். எ - று.

ரூ0 ஆங்கு

தம்புல மேலறு பரந்தூர் வுய்த்தத

மன்புறு (ரு)காதலர் கைபிணைந் × தாய்ச்சிய
ரின்புற் றாரவா தறோ.

க. "மறை யேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி, யூர்வான்போற் றோன்ற மலன்" கலி. கஙக:

உ. திமிர்தல் - பூசுதல்; "திமிர்த் திமிரக் கனலாய சந்தன சீதளமே" என வருதல் காண்க. திமிருறச் செய்தலென்பாருமுளர்.

ந. அம்பியென்பது தெப்பத்துக்கும் நீரிற் செலுத்தும் எல்லாக் கருவிகளுக்கும் பெயரென்பவாயினும் ஆமேற்றுக்கு உவமையாய் வருதலிற் சிறியதெப்பமென்று பொருள்கூறினர். "தண்புன லாடேக் கடங்கோட் டெருமை, இண்பிணயம்பிற் றோன்றூம்" என்பது ஐங்குறு. கஅ.

ச. இந்நூற்பக்கம் கூஉக: கூ, கூஉஉ: க-ஆம் குறிப்புக்கள் பார்க்க.

ரு. குரவை யென்பது: (அ) "குரவை யென்பது கூறுங் காலைச், செய் தோர் செய்த காமமும் விறலும், மெய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" (ஆ) "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக்

(பிரதிபேதம்) * உடம்புத்திமிர்த்த, † வாய்வழிவாழும், ‡ கடம்பமரத். || மகிட்சியுண்டாக வேண்டியதனைத்தலைச்செய்தற்கு ✢ ஏங்காமிற்கும். தம்புல. × ஆச்சியர்.



எ - து: அப்பொழுது ஆய்ச்சியர் தாம் மேயும் புலத்திலே ஏறு பரத்தலைச் செய்யும்படி செலுத்தின தம்முடைய அன்புமிக்க காதலருடைய கையைக் கோத்து இன்பமுற்றுக் குரவையாடுவர். எ - று.

கூச முயங்கிப் பொதிவே முயங்கிப் பொதிவே
(க)முல்லைவேதி நெற்றி முயங்கிப் பொதிவேங்
கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! கொலைத்தொழிலையுடைய ஏறுகள் சாடின புண்களைத் தழுவிக்கொண்டு பொதிந்துவிடக் கடவோம்; எம்மனந் தழுவவ

தென்று கேட்பாயாயின் முலையின் வெம்மையாலே ஆரம்படி ஒற்றித்தழுவிக் கொண்டு பொதிந்துவிடக் கடவேம். எ - று.

---

கடகக் கைகோத், தந்நிலைக் கொட்பின் குட வாகும்" என்னும் (சிலப். பதி. எஎ. உரைமேற்.) சூத்திரத்தால் தலைவனது காமமும் வென்றியும் தோன்றக்கூறி எழுமங்கையர் கைகோத்துச் சுழன்று ஆடுவதென்றே அறியப்படுமாயினும், (சிலப். ரு: கஉ.) "இருவகைக் கூத்தின்" என்பதன் விளக்க வுரையால், குரவையென்றது: காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது என்றுஅறியப் படுகின்றது. இவையும (இ) "மாயவனுடன் றம்முனுடிய, வாலசரிதை நாடகங்களில், வேனெடுங்கட் பின்னையோடாடிய குரவை யாடுதும்" (ஈ) "மாயவன்றன் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னை யொடுங், கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர, வாய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட் டசோதையார் தொழுதேத்தத், தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" சிலப். கஎ. என வருபவைகளும் (உ) "இடவல" என்பதற்கு, 'ஆய்ச்சியரோடு குரவைகோத்தலால் அவர்க்கு இடமும் வலமும் ஆயினேற்' பரி. ரு: அ௨ என்று எழுதியிருக்கும் உரையும் (ஊ) "களிதவென்பதற்கு தன்னைச் சேவிக்கு மகளிரொடு குரவையாடிச் செறிதல்" (பதிற். ருஉ: கக) என்று எழுதியிருக்கும் உரையும் (எ) "பரதவர், வெப்புடைய மட்டுண்டு, தண்குரவைச சீர் தூங்குந்து" (ஏ) "குறவர் மாக்கள், வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து, வேங்கை முன்றிற் குரவை யயரும்" புறம். உச: ௭ - க, ௧௨௯: க - ௩, என வருபவைகளும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றியும்" கலிங்க. கடை. கரு. (ஆ) "புண்வருத்தக் தன்னைநோக்கிக், கொங்கையையொற் றிடக்கொடுத்து" தனிப்பாடல். என்பவையும் (இ) "கொம்மை வரி முலை வெம்மை வேதுறீஇ" சிலப். உஅ: கசு. (ஈ) "கொம்மை வரு முலை வெம்மையிற் றடைஇ" நெடுநல். ௧௬. என்பவையும் இங்கே அறிதற்பாலன.

கஎ பல்லூழ் (க)தயிர்கடையத் தாஅய *புள்ளிமேற்
கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லலெந் தோளிற் கணியோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! பலமுறையாகத் தயிரைக் கடைகையி ஞலே பாய்ந்த புள்ளிகளின்மேலே கொல்லுகின்ற எற்றைத் தழுவினவ னுடைய குருதி மயக்கமுறும்படி தழுவுதல் எம்முடைய தோளிற்கு அழகு மாத்திரையோ? அதிலுஞ்சிறந்ததொன்றன்றே. எ - று.

சo ஆய்ந்து, போரேற் றருந்தலை யஞ்சலு, மாய்ச்சியர்
காரிகைத் தோள்கா முறுதலு மிவ்விரண்டு
மோராங்குச் சேற லிலவோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! ஆயர் பொருகின்ற எற்றினது சேருதற் கரிய†தலையை அஞ்சுதலும் ஆய்ச்சியர்எறுதழுவாதவருடைய காரிகைத்தோளை விரும்புதலுமாகிய இவ்விரண்டு நிலையும் இக்குடிப்பிறந்தவர்களுக்கு ஒன்றாகச ‡செல்லுதல் உண்டு இல்லையோ. எ - று.

காரிகைத்தோளென்றது, இகழ்ச்சி; வடுப்படாததோளாதலின்.

சக கொல்லேறு கொண்டா னிவள்கேள்வ னென்றூரார்
சொல்லுஞ்சொற் கேளா வளைமாறி யாம்வருஞ்
செல்வமெங் கேள்வன் றருமோவெங் கேளே.

எ - து: எம்முடைய தோழீ! இவளுடைய கணவன் கொல்லுகின்ற எற்றைத் தழுவினனென்று ||ஊரார் புகழ்ந்துசொல்லுகின்ற அச்சொல்லைக் கேட்டு மோரைவிற்று யாம் வருஞ் செல்வத்தை எங்கணவன் தருமோ. எ-று.

ஓகாரம், தெரிநிலை. என்றது, அவன் புறத்துப் + போய் இப்புகழ்கேட்க என்னைவிடானென அவன் தன்மேலுள்ள விருப்பங் கூறிற்று. இவை குரவைப்பாட்டு.

சஉ ஆங்க

(உ)அருந்தலை யேற்றொடு காதலர்ப் பேணிச்

சுரும்பிமிர் கானநாம் பாடினம் பரவுது
மேற்றவர் புலங்கெடத் திறைகொண்டு
மாற்ருரைக் கடக்கவெம் மறங்கெழு கோவே

க. "தயிர்ப்புளி, மொய்த்த தோணவார்" சீவக. சஉகூ.

உ. அருந்தலை யென்பதற்கு இங்கும் இச்செய்யுள் சO-ஆம் அடியிற்குறித்த பொருளே கொள்க.

(பிரதிபேதம்) * புள்ளியின்மேற், † தலைபஞ்சரமும், ‡ சொல்லுதலினவேல்லையோ, || ஊர் புகழ்ந்த, × போயபுகழ்.

## கூஅகூ கலித்தொகை கOஎ.

எ - து: எற்றையும் நக்காதலரையும் பாதுகாத்துச் சுரும்பினம் ஒலித்தின்ற கானத்தை நாம் பாடினமாய்த் திருமாலைப் பரவுவேம்; அப்பயனாலே எம்முடைய மறம்பொருந்திய பாண்டியன் பகைவர்நிலமென்னும் பெயர் கெட்டுத் தன்னிலமென்னும் பெயர்பெறும்படி அவர்நாட்டைத் திறைகொண்டு பகைவரை வெல்வானாக என்றார். எ - று.

இந்நிலப்பண்பிருந்தவா*றென்னென்று கண்டோர் கூறிற்றாகக்கொள்க.

இது, கண்டார்க்குப் புதுமையாகிய மருட்கை பிறந்தது.

இது முன் ஒருகொச்சகமும் தனிச்சொல்லும் சீட்டடியின்றிக் குறைவு சேர்த்தாகிய சொற்சீரடிபெற்ற கொச்சகவெண்பாவும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் சொற்சீரடிவந்த கொச்சகமும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டிரண்டும் ஐஞ்சீரடுக்கிய நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் நான்கு தாழிசையும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற கொச்சகம்.

(கOஎ.) எல்லா விஃதொன்று கூறு குறும்பிவர்
புல்லினத் தாயர் குடஞ்சுட் டவர்தமோங்
கொல்லேறு கோடல் குறைபெனக் கோவினத்தார்
பல்லேறு பெய்தார் தொழூஉ;

கு தொழுவத்து;

சில்லைச், செவிபறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்
கோட்டங்காழ் கோட்டி னெடுத்துக்கொண் டாட்டிய
வேழை விரும்புகர் பொங்கவப் பூவங்கென்
கூழையுள் வீழ்ந்தன் றாமன்;
கo அதனைக், கெடுத்தது பெற்றார்போற் கொண்டியான் முடித்தது
கேட்டன னென்பவோ யாய்;
கஉ கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்றிகா
வவன்கண்ணி யன்றோ வது;
கச பெய்போ தறியாத்தன் கூழையு ளேதிலான்
கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பிற்
செய்வதி லாகுமோ மற்று;
எல்லாத் தவறு மறும்;
ஓஓ அஃதறு மாறு;

(பிரதிபேதம்) * கன்றுகண்டோர்கூற்றுக்கொள்க.

## நான்காவது முல்லை எ.

கஅஎ

கசு ஆயர் மகனாயி னாயமகள் நீயாயி
னின்வெய்ய னாயி னவன்வெய்யை நீயாயி
னின்னைநோ தக்கதோ வில்லைம னின்னெஞ்ச
மன்னைநெஞ் சாகப் பெறின்;
அன்னையோ;
உச ஆயர் மகனையுங் காதலை கைம்மிக
ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து;
உஎ மருந்தின்றியா னுற்ற துயரா யினெல்லா
வருந்துவே னல்லனோ யான்;
உகூ வருந்தாதி;

மண்ணிமா சற்றபின் கூழையு ளாறவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்
பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ
டையன்மா ரெல்லா மொருங்கு.

இது தலைவி தோழிக்குஅறத்தொடுநிற்பத் தமர் *வரைவுடன்பட்டமை அவட்கு அவன் சொல்லியது.

இதன் பொருள்.

எல்லா இஃதொன்று †கூறு குறும்பிவர்

(௧)புல்லினத் தார்க்குங் (௨)குடஞ்சுட் டவர்க்குமெங்
(௩)கொல்லேறு கோடல் (௪)குறையெனக் கோவினத்தார்
பல்லேறு பெய்தார் தொழூஉ

---

௧. (அ) "புல்லினத்தாயனை நீ யாயிற் குடஞ்சுட்டு, நல்லினத் தாயரெமர்" கலி. ௧௧௩: ௮ - ௯. (ஆ) "புல்லினத்தாய மகன்" கலி. ௧௧௫: ௪.

௨. (அ) "நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்" கலி. ௧0௧: ௩. (ஆ) "கடுஞ் சுவையா னன்கு, குடஞ்சுட் டினத்தாற் கொடு" பு - வெ. வெட்சிப். ௧௮.

௩. "கொல்லேறு கொண்டான்" கலி. ௧0௪: ௪௩.

௪. குறை யென்பதற்கு இன்றியமையாததென்று சேனாவரையரும் பரிமேலழகரும் முடிக்கப்படும் பொருளென்று புறநானூற்றுரையாசிரியரும் பொருள் கூறுவர்.

(பிரதிபேதம்) * வரைவுடம்பட்டமை, † கூறுங்குறும்பு.

எ - து: ஏடா! குறும்பிடத்தே பரந்திருக்கின்ற ஆட்டிடையர்க்கும் இப்பசு இன்னதனைக் குடம்பால் போதுமென்று கட்டுதலையுடைய பசு விடையர்க்குமாகக் கோவினத்தையுடைய சுற்றத்தார் எம்முடைய கொல்லுகின்ற ஏற்றைத் தழுவுதலே காரியமென்று தொழுவிலே ஏறுகளைப்புகுதவிட்டார். எ - று.

௫ தொழுவத்துச்
சில்லைச், (க)செவிமறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்
(உ)கோட்டங்கண்ணி கோட்டி னெடுத்துக்கொண் டாட்டிய
வேழை யிரும்புகர் பொங்கவப் பூவந்தென்
கூழையுள் வீழ்ந்தன்று மன்

எ - து: அத்தொழுவிடத்துச் சிறுமைக்குணத்தையுடைய செவிமறையாயிருக்கின்ற ஏற்றைத் தழுவினவனுடைய சென்னியிற் கிடந்த குவிந்த (௩) முல்லைப் பூவாற் கட்டின வளைவினையுடைய கண்ணியைக் கொம்பிலே எடுத்துக்கொண்டு அலைத்த ஏழையாகிய பெரிய புகரேறு தள்ளுகையினாலே அப்பூ வந்து என் மயிருக்குள்ளே மிகவும் வீழ்ந்தது. எ - று.

ஏழையென்றான் களவொழுக்கம் *வெளிப்படுதல் இறவாமற் கோட்டால் அலைத்தமைபற்றி.

௪0 அதனைக், (ச)கெடுத்ததுபெற்றார்போற் கொண்டியான்முடித்தது கேட்டன னென்பவோ யாய்

எ - து: அக்கண்ணியை, கெடுத்ததொன்று மீண்டு பெற்றாரைப்போல எடுத்துக்கொண்டு யான்முடித்ததன்மையை யாய் கேட்டாளென்று சொல்லுவர்களோ? ஈதொரு வார்த்தையை எனக்கு விளங்கக் கூறுவாயென்றாள். எ - று.

†இஃதொன்று கூறு என்னுஞ்சொல்லை என்பவோ என்பதன் பின்னே கூட்டிப் பொருள்கூறுக.

---

க. "செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளை" கலி. ௧0௧: உ௩.
உ. (அ) "கோட்டங் கண்ணியுங் கொடுந் திரையாடையும்" புறம். உ௭௫:
(ஆ) "கோட்டுப்பூச் சூடினும்" குறள். ௧௩௧௩.

௯. "தேன்சொரி முல்லைக்கண்ணிச் செங் குவராடையாயர்" சீவக. ௪அ௯.

௪. (அ) கெடுத்துப்படு நன்கல மெடுத்துக் கொண்டாங்கு" நற். ௩அ௨: ௯. (ஆ) "பழந்தன பிழந்தன படைத்தவரை யொத்தாள்" கம்ப. உருக் காட்டு: ௬௯. (இ) "இழந்ததனம் பெற்றவர்போ லிராக்கதாக னிரைத் தீண்டி யிழந்ததங்கள், பழம்பதியிற் குடிபுகுந்து" இராமா. வரை யெடுத்த. ௬௯.

(பிரதிபேதம்) * வெளிப்படுத்தல், † இதுவொன்று.

## நான்காவது முல்லை எ. ௬௮௯

௧௨ கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்(க)றிகா
 வவன்கண்ணி யன்றோ வது

எ - து: மேல் தோழி, அக்கண்ணி வரைந்துகோடல் தாழாத அவ னுடைய கண்ணியன்றோ? அதனுற் பின்னை யாய் கேட்டால் என்ன பரி காரம் *யாஞ்செய்யவேண்டும்? அதற்கு ஒன்றும்வேண்டாவென்றாள். எ - று.

ஓ, அசை.

௧௪ (உ)பெய்போ தறியாத்தன் கூழையு ளேதிலான்
 கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பிற்
 செய்வதி லாகுமோ மற்று

எ - து: அதுகேட்ட தலைவி, (௩)முடிக்கும் பூ †இதுவென்றறியாத தன் னுடைய மயிரில் எதிலான் கையாலே புனைந்தகண்ணியை முடித்தாளென்று தாய்கேட்கில் அதற்குப் பின்னை அவள் வெகுளாமற்செய்வதொரு பரிகாரம் இல்லையாயிருக்குமோ என்றாள். எ - று.

மயிருக்கு (௪)மணந்தரும் பூ முடித்தல் வேண்டுமென்று அறியாதவள்.

௧௭ எல்லாத் தவறு மறும்

எ - து: அதுகேட்ட தோழி, இனி எல்லாத் தவறுகளும் நீங்குங்கா ணென்றாள். எ - று.

அவன் வரைவுணர்ந்தமையின்.

௧அ ஓஒ அஃதறு மாறு

எ - து: அதுகேட்ட தலைவி, ஓஒளவியந்து அத்தவறு அறமாறென்னை யென வினவினள். எ - று.

---

க. இருத்தல் - தாழ்த்தல்.

உ. "புல்லினத் தாய மகன் சூடி வந்ததோர், முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால், கூந்தலுட் பெய்து முடித்தேன்" கலி. ககடு. ச - சு.

ரு. முடிக்கும் பூ - குரும்பூ; குடசப்பூ, எருக்கு முருக்கு முதலியவை.

ச. மணத்தின் பொருட்டே பூக்களை மக்கள் அணிவரென்பது, "ஆணிக் கனக மணத்தரிற் பூமண மார்கொள்ளுவர்" என்பதனாலும் எருக்கு முதலியன மணமில்லாதன வென்பது, "தன்னியலு ரிலும் விரை சார்த், தறியாத புல்லெருக்கும்" (வாட்போக்கிக். கக.) என்பது முதலியவற்றாலும் அறியலாகும்.

(பிரதிபேதம்) * செய்யவேஅமதற்கொன்றுவேண்டா, †சதெதன்றறியாததன்மயிரில்.





கூ. ஆயர் மகனாயி னாயமகணீயாயி
(க)னின்வெய்ய னாயி னவன்வெய்யை நீயாயி
னன்னைநோ தக்கதோ வில்லை *நின்னெஞ்ச
மன்னைநெஞ் சாகப் பெறின்

எ - து: அதுகேட்ட தோழி, அவன் ஆயருடையமகனா யிருப்பானாயின், நீ ஆய்ச்சாதியிற் பிறந்த மகளாயிருப்பையாயின்; (உ)†அவன் உன்னைவிரும்பி யிருப்பானாயின், நீ அவனை விரும்பியிருப்பையாயின், தாய் மிகவும்நோவத் ‡தக்கதொருகாரிய மில்லைகாணென்றாள்; அதுகேட்டதலைவி, அன்னையுடைய நெஞ்சு நின்னுடைய நெஞ்சாகப் பெறின் அவள் || நோவத்தக்கதோ இல்லை யென்றாள். எ - று.

உக. அன்னையோ

எ - து: அதுகேட்ட தோழி, இன்னும் ‡ அத்தன்மையையோவென்றாள். எ - று.

என்றது, யான் இத்துணையெல்லாம் கூறவும் கொள்ளாத தன்மையையோ? எ - று.

உச (௩) ஆயர் மகனையுங் காதலை ; + கைம்மிக

(௪) ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ

நீயுற்ற நோய்க்கு மருந்து

---

௧. "தண்ணிய சிறிய வெய்ய தழற்சொலாற் சாற்று கின்றான்" (சீவக. ௭௪௭:) என்புழி 'வெய்ய' என்பதற்கு, விரும்பப்படுதலின் வெய்ய வென்றாரென்று விசேடவுரையெழுதி, 'நின்வெய்யனாயின்' என்பதை மேற்கோள்காட்டினர். நச்.

௨. "தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே, காமத்துக் காழில் கனி" குறள். ௧௧௯௧.

௩. 'ஆயர் வேட்டுவர்' என்னும் (தொல். அகத். ௨௧.) சூத்திரவுரையில், 'ஆயர் வேட்டுவரென்னும் இரண்டுபெயரே எடுத்தோதினரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலங்கட்குரிய ஏனைப் பெயர்களான் வருவனவுங் கொள்க' என்று கூறி, "ஆயர்மகனையுங்.........நோய்க்கு மருந்து" என்பதை மேற்கோள்காட்டுவர். நச்.

௪. ஞாய் - நின்றாய்; (அ) "யாயு ஞாயும் யாரா கியரோ" (குறுந். ௪௦.) என்பதனால் யாயென்பது தன்மைப் பெயரடியாகவும் ஞாயென்பது முன்னிலைப் பெயரடியாகவும் பிறந்த முறைப் பெயரென்று துணிய

(பிரதிபேதம்) * நின்னெஞ்சமென்னெஞ்சாகப், † இவன், ‡ தக்கதோர், || நோகத்தக்க தோ. + அத்தன்மையோவென்றான், + கைமிக.

## நான்காவது முல்லை ௭. ௩௯௯

எ - து: *கைம்மிக ஆயர்மகனையுங் காதலித்தலையுடையையாய்க் *கைம்

மிகயாவையும் அஞ்சியிரா†நின்றுயாயின், இனி நீயுற்ற காமநோய்க்குமருந்து அரிதென்றாள். எ - று.

அரோ, அசை.

உஎ மருந்தின்றியா னுற்ற துயராயி னெல்லா
வருந்துவே னல்லனோ யான்

எ - து: அதுகேட்ட தலைவி, எடீ! யானுற்ற வருத்தத்திற்கு மருந்தில்லையாயின், இனி வருந்தியே விடுவேனல்லனோ என்றாள். எ - று.

உ௬ வருந்தாதி

(ரு)மண்ணிமா சற்ற(உ)நின் கூழையு ளேறவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னைப்
பொய்யில் ‡பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ
டையன்மா ரெல்லா மொருங்கு

எ - து: அதுகேட்ட தோழி, இனி வருந்தாதேகொள்; கழுவி அழுக்கற்ற நின்னுடைய மயிரிடத்தே ஏற அவன் கண்ணியைத் தந்ததென்று பிறர் சொல்லக் கேட்டு, தந்தையோடே தமையன்மாரெல்லாரும் சேரக் கூடியிருந்து, தெய்வமாகிய மால் இவளுக்கு இவனைத் || திண்ணிதாகக்கொண்டு வந்து காட்டிற்றென மகிழ்ந்து, நின்னை அந்தக் களவொழுக்கத்தைப் பிறர் அறியாமல் ஒழுகவல்ல பொதுவனுக்கு அடுத்தலைச்சூழ்ந்தார் காணென்றாள். எ - று.

லாகும். பதிப்பில் ஞகரம் யகரமாக மாறியதனால் ஞயமாறிக்கிடந்த இப்பகுதியைத் திருத்தி யின்புறுத்தியது தமிழ்நெறி விளக்கமே. யாயென்பது தன்மையொடடுத்த முறைப்பெயரென்பதுமட்டும் தொல்காப்பிய உரைகளிற் குறிக்கப்பட்டுள்ளது; ஞாயென்பது முன்னிலையொடடுத்த முறைப்பெயராதலை (அ) "ஞாயர் பயிற்ற" (இ) "ஞாயர்பா லுண்டி" (ஈ) "ஞாயர்மாட்டைப்பால்" கலி. அக: கஉ; அ௯: உ௪, ௩௪. என இந்நூலிற் பலவிடத்தும் வருதலும் வலியுறுத்தும். இவைஇவ்வரம்புகடந்துதாயென்னும்பொருளிலும்வருதலுண்டு.

௧. "மாசற மண்ணுற்ற மணியேசு மிருங் கூந்தல்" கலி. எஎ: கக. என்பதும் அதன் குறிப்புக்களும் பார்க்க.

௨. "அவன்கண்ணி நீபுனைந்தா யாயி னமரு, மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை" கலி. கக௫: கஎ - க௮.

(பிரதிபேதம்) * வைகிய, † மீள்புய் இனிச், ‡ பொருவர்க்குடை, || நின்னலியுதாக,



இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது கொச்சகவெண்பாவும் தனிச்சொல்லும் ஐஞ்சீரடுக்கிய கொச்சக *வெண்பாவும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் ஈரடியாறென்றும் கொச்சகவெண்பாவும் †முச்சீரடியாறென்றும் இருசீரடியாறென்றும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் கொச்சகவெண்பாவும் தனிச்சொல்லும் சுரிதகமும்பெற்ற கொச்சகக்கலி. (எ)

(கOஅ) (க)இகல்வேந்தன் சேனை பிறுத்தவாய் போல
வகலல்குறேள் கண்ணென மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலயாற் காமனும் படைவிடு வனப்பினோ
டகலாங்க ணனைமாறி யலமந்து பெயருங்கா
னகைவல்லேன் யானென்றென் னுயிரோடு படைதொட்ட
விகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்;

அஃதவல மன்று மன;

௯ ஆயரெமரானு லாய்த்திபேம் யாமிகக்
காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை
மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ
ராயனை யல்லை பிறவோ வமரருண்
ஞாயிற்றுப் புத்தேண் மகன்;

௧௪ அதனுன் வாய்வாளேன்;
முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணு
நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்று கிற்பார்யார் ;

௧௯ சொல்லாதி;
நின்னைத் தகைத்தனெ னல்லல்காண் மன் ;

௨௧ மண்டாத கூறி மழருமுக் காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ

---

௧. புணர்த லென்னு முரிப்பொருள் வந்த முல்லைப்பாட்டுக்கு இச் செய்யுள் மேற்கோள்; நாற்கவி. சூ. ௨௫௧.

(பிரதிபேதம்) * வெண்பாட்டு மீரடியானென்றுங்கொச்சகவெண்பாவுமைஞ்சீரடியானென் றும்கெடுவெண். † ஐஞ்சீரடியானென்றும் இரு.

## நான்காவது முல்லை அ. ௪௧௦௩

பண்டம் விளைய படிற்றுற் றொடீஇ இபநிற்
கொண்ட தெவனெல்லா யான் ;

கொண்டது;

௨௬ அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ வஞ்ஞான்று
தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றாற்றய
விளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினு லென்னெஞ்சங்
களமாக்கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ; [கும்;

நின்னெஞ்சங், களமாக்கொண் டியாமாள லெமக்கெவ னெளிதா
௩௧ புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ
இனத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ;
அனைத்தாக;
௩௫ வெண்ணெய்த் தெழிகேட்கு மண்மைபாற் சேய்த்தன்றி
யண்ணணித் தூராயி னன்பகற் போழ்தாயிற்
கண்ணேக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன
வெயிலொ டெவன்விரைந்து சேறி யுதுக்காண்
பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின்
றடிகண் புரையுங் குறுஞ்சுனை யாடிப்
பனிப்பூந் தளவொடு முல்லை பறித்துத்
தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்
பனிப்படச் செல்வாய்நு மூர்க்கு ;
இனிச்செல்வேம்யாம்;
௪௧ மாமருண் டன்ன மழைக்கட்சிற் றாய்த்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
யாமுனியா வேறுபோல் வைகற் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாயோர் கட்குத்திக் கள்வனை
நீயெவன் செய்தி பிறர்க்கு;
யாமெவன் செய்து நினக்கு;
௫௦ கொலையுண்கட் கூரெயிற்றுக் கொய்தளிர் மேனி
யினைவனப்பின் மாயோய் நின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி
கூக௪ கலித்தொகை கடு௫.
மலையொடு மார்பமைந்த செல்வ னடியைத்
தலையினுற் றொட்டுற்றேன் சூள் ;
௫எ ஆங்குணரார் நேர்ப வதுபொய்ப்பாய் நீயாயிற்

தேங்கொள் பொருப்பன் சிறுகுடி யெம்மாயர்
வேந்தூட் டரவத்து நின்பெண்டிர் காணுமற்
காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையு ணின்பெண்டிர் கேளாமை
யாம்பற் குழலாற் பயிர்பயி ரெம்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி.

இஃது "அடியோர் பாங்கினும் *வினைவல பாங்கினும், கடிவரை யில புறத் தென்மனுர் புலவர்"(க)என்பதனுற் பிறர் ஏவிய தொழிலைச்செய்தல் †வல்ல அகப்புறத் தலைவனும் தலைவியும் முன்னேநகாற் கூடிப் பின்னர் அவனெதிர்ப்பட்டுழி அவன்வயிற் பரத்தைமையால் ஊடிக் கூறிநேர்ந்தது.

இதன் பொருள்.

இகல்வேந்தன் (உ) சேனை யிறுத்தவாய் போல
(ந)வகலல்குறேன் கண்ணெனை மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலையாற்(ச) காமனும் ‡படைவிடு வணப்பினே
டகலாங்க ணளைமாறி ||யலமந்து பெயருங்கா
ணைகவல்லேன் யானென்றென் னுயிரோடு படைதொட்ட
விகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்

---

க. தொல். அகத். ௩. ௨௧.

உ. 'சேனை யிறுத்தவாய்போல' என்பது இறுத்தலென்பது வந்து விடுதலென்னும் பொருளில் வருதற்கு மேற்கோள்; சிலப்: ௪: ௧௨. அடியார்க்கு நல்.

ந. "பெருந்தோண் மடந்தை," (சிலப். ந: ௬.) என்பதற்கு, மகளிர்க்குத் தோள்பெருக்கை இலக்கணமென்று விசேடவுரை எழுதி 'அகலல்குறேன் கண்ணெனை மூவழிப் பெருகி' என்பதை மேற்கோள்காட்டினர் உரைகாரரிருவரும்.

ச. (அ) "உருவி லாள னொருபெருஞ் சிலையொடு, விரைமலர் வாளி வெறுநிலத் தெறிய" சிலப். ந௦: ௨௫ - ௨௬. (ஆ) "படையிட்டு நடுக்

குக் கீரமன்" மணி. ௯:௨௬.எனவருபவையும் இக்கேரோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * விளைவர் பாங்கிலும், † வல்லாதவகைப், ‡ படையிலேனைப். || அலம்வந்து.

## நான்காவது முல்லை அ. ௬௯௫

எ-து: அகன்றவல்குல் தோள் கண் என்று சொன்ன மூன்றிடமும் பெருத்து, நுதல் அடி இடை என்று சொன்ன மூன்றிடமுஞ் சிறுத்துக் காமனும் பிறர்க்கு மனக்கவலை செய்தலோடே தன் அம்பை *விதேற்குக் காரணமான அழகோடே(க) ஊரிடத்தே † அலமந்து மோராவிற்ற நீ மீளுங் காலத்தே யான்ருதலைவல்லேனென்று நக்கு, பின்னர் இசுவிடத்தே சென்று விட்ட பாண்டியன்சேனை உயிரோடு போம்படி படை தொடு மாறுபோல என் னுயிரோடு போம்படி படையைத்,தொட்ட மாறுபாட்டையுடையவளே ! எடீ ! யான் நின்னையெப்படித் தப்பினேன் கூறென்றான். எ - று.

இகல்வாய்இறுத்த வேந்தன்சேனைபோல என மாறுக.

அ ‡அஃதவல ரன்று மன

எ - து: அதுகேட்ட தலைவி, அனைமாறிக் கிரிகின்றது மிகவும் எங்குலத் திற்குத் தீதன்று. எ - று.

௯ (௨)ஆய ரெமரானு லாய்க்கியேம் யாமிகக்
காயாம்பூங் கண்ணிக் (௩)கருந்துவ ராடையை
(௪)மேயு நிரைமுன்னர்க் (௫)கோலூன்றி நின்றாயோ
ராயனை ||யல்லை பிறவோ வாராருன்

ஞாயிற்றுப் புத்தேன் மகன்

எ - து: ×எஞ்சுற்றத்தார் ஆயரானல், யாங்கள் மிகவும் ஆய்த்தியரேம்; அதுகிடக்க, நீதான் காயாம்பூவாற்செய்த கண்ணியையும் துவரூட்டின கரிய ஆடையையு ÷முடையாய்; மேய்கின்ற நிரைகளுக்குமுன்னே ஒருகோலை

---

க. அகலாக்கண் - அகன்ற ஊரிடத்தே. மது. ௯௨௭.

௨. பார்ப்பார் அரசர் இடையர் குறவர் முதலியவர்பால் ஒருவரையொருவர் ஒவ்வாமற் கிடக்குஞ் சாதியியல்பாகிய தன்மை யென்னு மெய்ப்பாட்டின் இடையர் தன்மைக்கு, "ஆயரெமராளல்.........புத்தேண் மகன்" (ஒரு பிரதியில் ""காயாம்பூங் ..... .....ஆயனையல்லை") என்பது மேற்கோள்; தொல். மெய்ப்பாட்டியல். சூ. ௧௨. இளம்.

௩. "அர்துவ ராடைப் பொதுவனோடு" (கலி. ௧0௨: ௩௭.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. (அ) "மேயுநிரை.........மகன்" என்பது தலைவன் வினைவல பாங்கினன் என்பதற்கும் தொல். அகத். சூ. ௨௩. ௩௪; (ஆ) பிறவென்பது அசைநிலையாய்வருதற்கும், நன். இடை. சூ. ௨௨. மயிலை. விருத்தி. இரா. மேற்கோள்.

௫. "தன்கோ லூன்றிய தனிநிலை யிடையன்" அகம். ௨௭௪; அ.

(பிரதிபேதம்) * விடுத்தற்கு. † அலமவர்து, ‡ அஃதுதவல, || அல்லயிறவோ. × வஞ்சைறத் தார், ÷ உடைமையயாய், உடையராய்.



வன்றி அக்கிரை மேய்த்து நின்றநீ இடையனுர் தன்மைமை யுடைமையயல்லை; வேறுகத் தேவர்களுள் ஞாயிறுகிய தெய்வத்தின் மகனோ? உரைத்தென்றான்.

எ - று.

மகன், தன்னன்; *இஃது இகழ்ச்சி. ஆய்த்திமேயம் யாமரயின் என்றும் பாடம்.

௧௪ அதனுன் வாய்வாளான்

(க)முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன

பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணும்

நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய

சொல்லாட்டி நின்னொடு †சொல்லாற்ற கிற்பார்யார்

எ - து: அதுகேட்டவள் நீ இன்னனம் ‡ இகழ்ந்துகூறுதலால் நின்

ளுடு ஒன்றும் ||கூறேன்; முல்லையினது முகையையும் (உ)பீலிமுருந்தையும் நிரைத்தாலொத்த பல்லும் (௩)பணைபோலுந் தோளும் பெரிய அமர்செய்யும் உண்கண்ணும் ÷யான் நல்லேனென்ற, நின்னுடைய தகுதியைப் பிறர் நச்சுத லன்றி நீதானே நச்சியிருக்கின்ற ×சொல்லையுடையவனே! நின்னோடு மறு மாற்றஞ் சொல்லுதலை யார் நிகழ்த்துவாரென்றான். எ - று.

[முல்லை](பல்லு)முதலியன, வினைவினை முதலொடு முடிந்தது. ✚ஆற் றுகிற்பார்: வினைத்திரிசொல்.

௧௯. சொல்லாதி

எ - து: அதுகேட்டவள், அங்ஙனமாயின் ஒன்றுஞ் சொல்லாதே போவென்றான், எ - று.

௨௦ நின்னைத் தகைத்தனென்

எ - து: அதுகேட்டவன், **நின்னைப் போகாமல் விலக்கினேனென் றான். எ - று.

அல்லல் காண்மன்

எ - து: அதுகேட்டவள், இவன் நம்மிடத்து நிகழ்த்துகின்றதோர் வருத்தத்தைப் பாரெனச் செஞ்சொடு கூறினள். எ.- று.

---

௧. (அ)உருவென்னு மெய்ப்பாட்டிற்கு, "முல்லை முகையு............யார்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். ௬. உரை பேர். (ஆ) "முல்லை முகையு முருந்துநிரைத்தன்ன, பல்லர்" (கலி. ௧௦௩: ௬-௭) என்பதும் அதன்குறிப்பும் இங்கே ஒப்புநோக்கற்பாலன.

௨. பீலி - மயிலிறகு. ௩. பணை - மூங்கில்.

(பிரதிபேதம்) *இறைகட்டி, †சொல்லாற்றகிற்பார், ‡ மகிழ்ந்து. || கூறேனென்றான். என்று முல்லை, ÷ யானல்லனென்று, × சொல்லுமுடையயனே, ✚ ஆற்றகிற்பார், **போகாமல் நின்னைவிலக்கி னென்னென்றான்.

## நான்காவது முல்லை அ. ௯௧௭

௨௧ (௧)மண்டாத கூறி மழுகுழக் (௨)*காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ

பண்டம் வினைய படிற்றாற் றொடீஇயசிற்
கொண்ட தெவனெல்லா யான்

எ - து: கூறி, பின்னும் மனம் மயக்குதலையுடைய குழவிப்பருவத்துக்கு † ஆகின்று; என்மனம் பிக்கு விரும்பிச ‡செல்லாத சொற்களைச் சொல்லி

என்னைக் கண்டபொழுதே (௩)தனிசு கடவாரிடத்துக் கொடுத்தவர்கள் || அவரவர்களுக்குள்ள பண்டங்களை உசாவுமாறுபோல நீயும் என்னிடத்துள்ள பண்டங்களை இவை யாவை என்று வினவின வஞ்சனையாலே எனது வட்டியைப பிடித்தற்கு எடா! நின்னிடத்து யாம் வாங்கிக்கொண்ட பொருள் எப்பொருள் என்றான்? எ - று.

(௪)குழக்கு, "தாங்கக்கு × வணங்கக்கு" (௫)என்றாற்போல் நின்றது.

உ௫ கொண்டது

எ - து' அதுகேட்ட(வன்) நீ என்னிடத்து வாங்கிக்கொண்ட பொருள் கூறக்கேள். எ - று.

உ௬ அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ வஞ்ஞான்று
+ தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றாற்றய
லிளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினு லென்னெஞ்சங்
களமாக்கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ [கும்
நின்னெஞ்சங், களமாக்கொண் டியாமாள லெமக்கெவ னெளிதா

---

க. "மண்டாத சொல்லி" கலி. ௬௦: உ.

உ. கிடைத்த கையெழுததுப்பிரதிகளுள் ஒன்றிலேனும் 'ஆகின்றேன்' என னகரவீறான பாடம் இல்லை. முன்பதிப்பில் 'ஆகின்றேன்' என்று மூலமும் 'ஆகா நின்றேன்' என்று உரையும் உள்ளன. அவ்வாறு படிக்கும்படி ஏடேட்டிலிருப்பினும் அவற்றை "ஆகின்றென்" எனவும் 'ஆகா நின்று என்' எனவும் கொள்ளலாமென்று தோற்றுகிறது.

௩. தனிசு - கடன். பழ. ௯௮.

௬. குழவென்பது இளமைப் பொருட்டென்பதை அறிஞர் பலரும் அறி வர். இங்கே குழக்கென்பதற்கு எடுத்துக்காட்டியிருக்கும் மேற்கோளை நோக்க, அசசொல் குழமென மகர வீறகவும் இருக்குமோவென்று ஐயமுண்டாகிறது.

ҧ. "தாங்கக்கும் வண்ணகக்கும்" என்பது: யா-கா. ஒழி. எ.

பிரதிபேதம்) * ஆககின்றகண்ட, † ஆகாரின்றென்மனம், ‡ சொல்லாதிசொந், || அவம் கஞக்குள்ள. × வண்ணக்குளன்றுந், + தவமலர்.





௧௧ (க)புனத்துளா னெந்தைக்குப் (உ)புகாவுய்த்துக் கொடுப்பதோ
வினத்துளா *னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் †யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ

எ - து: அக்காளிலே மோர்விற்று மீள்கின்ற நீ செம்முல்லை நெருங்கின தோர் கானத்திடத்துச் ‡சிறிய யாற்றினயலிடத்தே (௩)||இளையமாவிலையைப் பிளந்தாலொத்த கண்ணாலே எனக்குஉரித்தாகிய என்னெஞ்சைநினக்கு இருப்பிடமாக வாங்கிக்கொண்டு அடிமைத் தொழில்கொண்டாய்; ஒரு கன்வியை யல்லையோ? அது யேறியாயோ என்றான்; அது கேட்டவள், நின் னெஞ்சை எனக்குஇருப்பிடமாக ÷வாங்கிக்கொண்டியாம்அடிமைத்தொழில்கொள்ளுதல் எமக்கு என்னைம் எளிதாயிருக்கும்? நின்னெஞ்சு புனத்திடத்தாளுகிய(௪)என் தமையனுக்கு உணவைக்கொண்டுசென்று கொடுக்குமதொன்றோ? பசுத்திர ளிடத்தாளுகியஎன் தந்தைக்குக்கரவைக்கலங்கொண்டு ×செல்லுமதொன்றோ? தினை அரிந்த+தாளிடத்தே, யாய் மேயவிட்ட கன்று மேய்க்குமதொன்றோ? அன்றே! ஆதலால் அரிதேகாணென்றான். எ - று.

௧௨ அனைத்தாக

எ - து: அதுகேட்டவன், இனி நீ எவின தொழில்களை என்னெஞ்சு செய்வதொன்ருக என்றான். எ - று.

---

௧. தலைவி வினைவல பாங்கின னென்பதற்கு "புனத்துளா............ மேய்க்கிற்பதோ" என்பதை, (தொல். அகத். சூ. உ௩.) மேற்கோள்

காட்டி, இஃது 'எமரேவலான் யாம் செய்வதன்றி யாங்களேவ நின் னெஞ்சம் இத்தொழில்கள் செய்கின்றனவில்லை யென்றலின், வினை வல பாங்கினளாய தலைவி கூற்றாயிற்று' என விளக்கினர். நச்.

உ. புகா-உணவு; தொல். கள. சூ. கக: க. அற. ககக, கஉஉ.

ங. (அ) "வடுவிடை போழ்ந்தகன்ற கண்ணாய்" கார். க. (ஆ) "வடுப் போழ்ந் தன்ன வாளரிநெடுங்கண்" (இ) "வடிப்போழ்ந் தன்ன வா ளரித் தடங்கண்" பெருங். (க) சக: உஉங; (உ)ச: கஉ. என்பவையும் கலி. சச: உக-ஆம் அடியும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

ச. என்னை யென்பதற்கு என் தமையனென்ற பொருளும் எந்தை யென்பதற்கு என் தகப்பனென்ற பொருளுமே காணப்படுவதனால், இங்கே ஏதோ ஒரு முறைபற்றி அச்சொற்களை மாற்றி இயைத்தா ரென்று தோற்றுகிறது. அன்றி எந்தையென்பதற்கு என் தமைய னென்ற பொருளு முண்டெனின் பிரதிபேதத்தால் ஆற்றொழுக் காகவே பொருள் அமையும்.

(பிரதிபேதம்) *எந்தைக்கு. † யாம்விட்ட. ‡ செற்றுற்றய, செற்றியாற்றய, ||இனமாலவேலை.— வாங்கிக்கொண்டு அடிமைத், × செல்லுவதொன்றே, + தாவிடத்தேயா யா மேயவிட்ட.



வெண்ணெய்த் *தெழிகேட்கு மண்மையாற் சேய்த்தன்றி
(க)பண்ணணித் தூராயி னன்பகற் † போழ்தாயிற்
(உ)கண்ணேக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன
வெயிலொ டெவன்விரைந்து சேறி (ங)புதுக்காண்
(ச) ‡பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின்
றடிகண் ணுரையுங் (ரு)குருஞ்சுனை யாடிப்
(எ)பனிப்பூந் (அ)தளவொடு முல்லை பறித்துத்
தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்

௧. "இப்புனத்தின், மருங்கண் ணனையதன் டோவந்த திக்கொரு வான் கலையே" (கோவையார். ருடை.) என்பதன் உரையில், 'மருங்கென்பது மருங்கிலென்ன ஈறுதிரிக்கின்றது. அணித்தாகவென்னும் பொருட்டாய அன்றி, அண்ணனைக் குறைந்து நின்றதெனினு மமையும்' எனப் பேராசிரியர் எழுதியிருப்பதும், தொல்காப்பியவுரையில் அண்ணனி யென்பது அடையடுத்ததென்று நச்சினார்க்கினியரெழுதியிருத்தலும் இங்கே அறியத்தக்கன.

௨. (அ) "கண்கவர் காரிகை"..........(ஆ) "கண்டவர் மனமுங் கண்ணுங் கவர்ந்திட வனப்பு வாய்ந்த, வொண்டொடி" நைடத. போர்புரி. இ. என்பவையும் (இ) "வாங்கெழி னல்லாரும்" (கலி. ௧0௫: ௯௧.) என்பதற்கு, 'நோக்கினார் கண்ணை வாங்கிக்கொள்ளும் அழகினையுடைய ஆய்ச்சியரும்' என்றெழுதியிருக்கு முரையும் இங்கே நோக்கற்பாலன.

௩. "உதுக்காண்" என்பது சுட்டு முதல் உகர ஈறாகிய சொல்லின்முன் வல்லெழுத்து மிக்கு வந்ததற்கு மேற்கோள்; தொல். உயிர். கு. ௯௧. நச். குறுந். ௧௯௧; ஐங்குறு. ௧0௧, ௭௫௬; புறம். ௩0௭: ௩.

௪. "கரும்புணக் களித்த புகர்முக வேழ, மிரும்பிணர்த் துறுகற் பிடி செத்துத் தழூஉங்கின், குன்று" ஐங்குறுநூறு. ௨௩௯.

௫. "குறுஞ்சுனைப் புறவம்" காஞ்சி. திருநாட்டுப். ௬௪.

௬. "பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை"

௭. (அ) "தண்ணெளிக் கேழ்ந்த பைங்கொடி முல்லை, முகைதலை திறந்த நாற்றம் புதன்மிசைப், பூமலர் தளவமொடு தேங்கமழ்பு கஞல" (ஆ) "முல்லை, மொடுதவிழ் தளவமொடு" (இ) "நெடுங்கொடி முல்லையொடு தளவமல ருதிர" (ஈ) "கல்லேர் புறவிற் கவினிப் புதன்மிசை, முல்லை தளவொடு போதவிழ" (உ) "வெருகு வேட்பச் சிரிப்பனபோன்

(பிரதிபேதம்) * தொழில்கேட்கு, † பொழுதாயின், ‡ பிடித்தாக்க வள்ளமுறைமேலுரைக்கின்

எ - து: என்று, பின்னர்க் கடைந்தமோரைக் கையால் *அலைக்கும் ஓசைகேட்கும் அணுமையினலே தூரம் அன்றாய் ஊர் மிகவும் அணித்தாயின், பொழுது உச்சியம் பொழுதாயின், கண் வேறொரு வடிவை நோக்குதலைத் தவிர்க்கும் அழகைப்பெறுகின்ற பெண்டன்மையினையும் மயிலினுடைய கழுத்தினுடைய நிறத்தையுமுடையமாயோனே! இப்படி வெய்தாகிய பொழுதோடே விரைந்து செல்லாநின்றாய்; இதனால் மற்றைப் பெரும்பயனென்? காயாம் பூவையுடைய குளிர்ந்த பொழிலை அவ்விடத்தே பாராய்; அவ்விடத்திற் பிடி நின்றவனவற்றையொத்த †பாறையிடத்தனவாகிய (௧) நுங்கினது வெட்டின கண்ணையொக்கும் (௨) நீர்நிறைந்த அண்ணியசுனைகளிலே ஆடிக் ‡குளிர்ச்சியையுடைத்தாயபூக்களையுடைய (௩) செய்முல்லைமலரோடேமுல்லை மலரையும் பறித்துத் தனியே அப்பொழிலிடத்தே எம்முடனே தங்கிப் பொழுது குளிர்ச்சியுண்டாக நம்மூர்க்குச் செல்வாயென்றான். எ - று.

௪௰ இனிச் ||செல்வேம்யாம்

எ - து: அதுகேட்டவன், நீ போகவேண்டா என்கின்றாயாதலின் யாம் போவேமென உடல்தோன்றக் கூறினன். எ - று.

௪௧ (௪)மாமருண் டன்ன மழைக்கட்சிற் றாய்த்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
யாமுனியா வேறுபோல் வைகற் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாபோர் கட்குத்திக் கள்வனை

முகைத்த முல்லை............குருதிக் கூரெயிறு கூர்ந்தியர்கட் கொண்ட கொடித் தளவமே" என்பவற்றால் தளவமும் முல்லையும் வேறுவேறு ஆதலை அறிக.

௧. "நுங்கின் தடிகண்ணன்ன நீர் சுனையின் நிருக்கும் அதன் நீர்நிறைவு சுனையின் நீர் நிறைவுக்கும் உவமை.

௨. "துகளத்தன்ன நிறைசுனைப் புறவின்" மலை. ௧௦௪.

௧. தனவும் செம்முல்லைக்குப் பெயராய்வருதலை (அ) "சிரல்வா யுற்ற தளவின்" (ஆ) "புதன்மிசைத் தளவி னிதன்முட் செச்சை" (இ) "சிரல்வாய் வனப்பின வாகி நிரலொப்ப, வீர்ந்தண்டளவத் தகைத்தள" என்பவற்றாலும் இந்நூற்பக்கம் ௬௬௬: ௬; ௬௬௬: எ (உ) குறிப்புக்க ளாலும் அறிக. இது முல்லையென்னும் பொருளிலும் வரும்.

௨. தலைவி குறிப்பானன்றிக் கூற்றால் வழிபாடு மறுத்தற்கு, "மாமருண் டன்ன... .....நினக்கு" என்பது மேற்கோள்; தொல். களவி: ௬. ௨௦. இளம்.

(பிரதிபேதம்) *அலக்கும் தலைஞெசைகேட்கும். † பாறையிடத்தக்களவாகிய. ‡ குளிச்சி, || செல்வேம், ௪-து: அது.

## நான்காவது முல்லை ௮. எ0க

நீயெவன் செய்தி பிறர்க்கு
யாமெவன் செய்து நினக்கு

எ - து: கூறி,, பின்னும் *மான் மருண்டு நோக்கினுலொத்த குளிர்ச்சியை யுடைய கண்ணையுடைய சிறியஆய்த்தியராய் நீமயக்கிக்கூறுஞ் சொல்லிடத்தே மயங்குவார்க்கு அம்மொழிகளைக் கூறு; யான் அதற்கு மருளேன்; நீதான் பல பசுக்களையும் தெவிட்டாமற் கூடும் ஏறுபோல நாடோறும் பதின்மரை ஒருவரைப்போலே விருப்பமுற்று அவர்மேற் செல்வாய்; ஒரு கட்குத்தியாகிய கள்வன்; ஆதலால் நீ பிறர்க்கு என்ன நன்மை செய்வாய்? இத்தன்மையை யுடைய நினக்கு யாம் என்ன நன்மை செய்வேமென்றாள். எ - று.

கட்குத்திக்கள்வன் என்றது, (௧)†"விழித்திருக்கப்பின்னடையைக்கொள்வான்" என்னும் பழமொழி. ,, அசை. நீ அம்மகளிரையும் அவர் கருத்து முற்ற நுகராது அவர்வருந்தநீங்குவையென்பதுதோன்ற 'நீயெவன்செய்தி' என்றாள். 'யாமெவன் செய்தும்' என்றது எம்மிடத்து நீங்காத அன்புடையையல்லை என்பது தோன்ற நின்றது.

௨ கொலையுண்கட் கூடிமாயிற் றாங் கொய்தளிர் மேனி
யிணைவனப்பின் மாயோய் பின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி

மலையொடு மார்பமைந்த செல்வ னடியைத்
(உ)தலையினாற் றொட்டேற்றேன் சூள்

எ - து: அதுகேட்டவன். கொலைத்தொழிலையுடைய கண்ணினையும் கூரிய எயிற்றினையும் கொய்யப்படுந் தளிர்போலும் நிறத்தினையும் கண்டார் வருந்தும் அழகினையுமுடைய மாயோனே! யான் விரும்புதற்கு உரியாராய் நின்னிற்காட்டிற் சிறந்தமகளிர் மண்ணுலகத்தில் இல்லாமையை நீதானே தெளிவாய்; இனி நீ நினைக்க வேறாக இன்றென்று யான் தெளிவித்தற்கு நீ அணுக வருவாய்; மார்பு மலையோடு ஒப்பமைந்த திருமாலடியைத் தலையினாலே வணங்கிக் கையினாற் றொட்டுச் சூளுற்றேனென்றான். எ - று.

ளை ‡ஆங்குணரார் நேர்பவதுபொய்ப்பாய் நீயாயிற்
(ங)றேங்கொள் பொருப்பன் சிறுகுடி யெம்மாயர்

---

க. 'விழித்திருக்கச்[சே](செய்தே) விழியைக் கொண்டுபோய் விடுவான்' என ஒருவன் திறமை மிகுதியைச் சிறப்பித்தற்கு வழங்கும் வாக்கியம் இப்பழமொழியின்பொருட்டென்று தோற்றுகிறது.

உ. "தலைதொட்டேன் றண்பரங் குன்று" பரி. ஈ: கஉ.

ங. தலைவி மறுத்தெதிர்கோடலுக்கு "தேங்கொள்...... .....குறி" என்பது மேற்கோள்; தொல். களவி. சூ. உ0. இளம்.

பாடபேதம்) * மாமனமருண்டு. † மிழித்திருக்க. ‡ ஆங்குணர்வார்நேர்வது.



வேய்நுட் டரவத்து நின்பெண்டிர் காணுமற்
(க)காஞ்சித்தா துக்கன்ன (உ)தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையு ணின்பெண்டிர் கேளாமை
(ங)யாம்பற் குழலாற் பயிர்பயி றெம்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி

எ-து: அதுகேட்டவள், அப்படியை மெய்யென்று உணரும் அறியா மகளிர் கூட்டத்திற்கு உடன்படுவோர்; அக்குறுநரவு பொய்க்குவென் நீ; நின் வருத்தத்தை ஆராய்ந்து பார்க்கில் அதற்கு உடன்படுதல் வேண்டுகலின் எம்முடைய புழைக்கடையிற் காஞ்சிமரத்தின் கீழ் குரவையிடஞ்செய்தேம்; ஆண்டு வருங்கால் தேனைத் தன்னிடத்தே கொண்ட (அ) பொதியின்மலையை யுடையவனுடைய சிறுகுடியில்வாழும் எம்முயிர் அவ்வேற்றன் இனிதிருந்து வாழ்வதற்கு அக்கிலத்திற் றெய்வத்திற்கு மடைகொடுக்கும் ஆரவாரத்தாலே வந்த நின்னுடைய பெண்டிர் நின்னைக் காணாமல், காஞ்சிப்பூவின் தாது உதிர்த்தாற்போன்ற மாதாகியஎருவையுடைய மன்றத்திடத்து ஆடும் குரவைக் கூத்திடத்து வந்த நின்னுடைய பெண்டிர் கோபமல், செயபுக(ந்)குறிவை

க: (அ) "புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண், டன்புகொண் மடப்பெடை யலமந்தாங் ககல்வதனை, யென்புருகு குர வழைஇ யிருஞ்சிறகர் குலைத்துருத்து, தன்பெடையைக் குயிற்றுவத் தலைவந்த திளவேனில்" (சீவக. கசஅ.) என்பதனால் காஞ்சிம் தாது பச்சைநிறமுடையதென்பது அறியலாகும்: (ஆ) "குயிற்கு மூங்குடை காஞ்சியின் கோபலர் தாது, வெற்கு பூமறைத் திருவிசம் பிருள் செய" என்பது காஞ்சிப்புராணம்.

உ. (அ) "தாதெரு மன்றம் தயர்வர் தமூஉ" கலி. க0ங: கஉ. (ஆ) "தா தெரு மன்றந் தாதுடன் கழிந்து" (இ) "தாதெருமன் றத்தாடு குரவையோ தகவுடைத்தே"(ஈ)"தாதெரு மன்றத்து மாதரிமெழுந்து" (சிலப். கசு: க0உ, கஎ: 'மாயவன்றன்', உஎ: எச எனத் தாதெருக் கூறப்பட்டிருக்கும் இடங்களையும் அதற்கு இங்கே காஞ்சித்தாதை உவமை கூறியிருப்பதையும் நோக்க, தாதெருவென்றது சாணத்தை யென்று தோற்றுகிறது. இது யானை குதிரைகளின் இலத்தி முதலிய வற்றிற்கும் வரும்.

ங. ஆம்பற் குழலென்பது வெண்கலத்தால் ஆம்பற்பூவடிவாக அணைசு பண்ணிச்செறித்த குழலென்று விளக்குவர் அடியார்க்குநல்லார்.

இந்நூற் பக்கம் கககு: க-ஆம் குறிப்புப் பார்க்க.

ஙு. "நின்னுர ரகம்புகுந் தாற்குறி காட்டு நெடுந்தகையே" தஞ்சை. கஅச.

(௪) ஆம்பலென்னும் பண்ணையுடைய குழலாலே குறிசெய்து வருவாயாக என்றான். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகைபிறந்தது.

இதனுள், தலைவன் வினைவலபாங்கினனுயவாறு காண்க. இது கைக்கிளை.

இது தாவும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் சொற்சீரடியும் கொச்சகமும் தனிச்சொல்லும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் ஒருதாழிசையும் ஐஞ்சீரடியாறென்றும் கொச்சகமும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் மூச்சீரனென்றும் நெடுவெண்பாட்டும் வெள்ளைச்சுரிதகமும் பெற்று வந்த கொச்சகக்கலி. (அ)

(க0௪.) காராரப் பெய்த கடிகொள் வியன்புலத்துப்
பேராது சென்று பெரும்பதவப் புன்மாந்தி
நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்
போரார வேற்றின் பொருநா கிளம்பாண்டி
௫ தேரூரச் செம்மாந் ததுபோன் மதைஇனள்
பேரூருஞ் சிற்றூருங் கௌவை யெடுப்பவள்போன்
மோரோடு வந்தா டகைகண்டை யாரோடுஞ்
சொல்லியா ளன்றே வனப்பு;
௧0 பண்ணித் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி யெடுக்கல்லாக் கோடேந் தகலல்குல்
புண்ணில்லார் புண்ணாக நோக்கு முழுமெய்யுங்
கண்ணளோ வாய மகள்;
௧௫ இவடான், திருத்தாச் சுமட்டின ளேனைத்தோள் வீசி
வரிக்கூழ வட்டி தழீஇ யரிக்குழை
யாடற் றகையள் கழுத்தினும் வாலிது
நுண்ணிதாத் தோன்று நுசுப்பு;

௧எ இடைதெரியா வேள ரிருவருந் தத்த
முடைவனப் பெல்லா மிலட்கித்தார் கொல்லோ
படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும்
பாலொடு கோட்டம் புகின்;

---

௧. (அ) "இயவர், தீங்குழ லாம்பலி னினிய விமிரும்" ஐங். உ௧௫. (ஆ) "ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைதர" திணைமொழியைம். உ௯.

எ௦௪ கலித்தொகை ௧௦௪.

உ௧ இவடான், வருந்தநோய் செய்திறப்பி னல்லான் மருந்தல்லள்
யார்க்கு மணங்காதல் சான்றனென் றார்ப்பெண்டிர்
மாங்காய் நறுங்காடி கூட்டுவேம் யாங்கு
மெழுகின் கிளையொடு போகென்று தத்தங்
கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்
வாயி லடைப்ப வரும்.

இது வினைவலபாங்கிற் றலைவியைக்கண்ட வினைவலபாங்கிற் றலைவன் "காமஞ் சாலா விளமை யோள்வயி, னேமஞ்சாலா விடும்பை யெய்தி"(க) கூறியது.

இதன் பொருள்.

காராரப் பெய்த கடிகொள் வியன்புலத்துப்
போரா சென்று பெரும்புகவப் புன்மாத்தி

நீரார் நிழல (உ)குடஞ்சுட் டினத்துள்ளும்
(௩)போஒஓ வேற்றின் பொருநர (௪)கிளர்(௫)பாண்டி
றேனுரச் (௬)செம்மாந் ததுபோன் *மதைஇனள்
பேரூருஞ் சிற்றூருங் கௌவை யெடுப்பவர்போன்
(எ) †மோரோடு வந்தா டளைகண்டை யாரோடுஞ்
சொல்லியா ளன்றே வனப்பு

---

க. தொல். அகத். சூ. ௬0. இச்சூத்திரத்தின் இவ்வுரையிலும் இச்செய்யுள் இச்செய்திக்கே மேற்கோள்.

உ. கலி. ௧0எ: உ-ஆம் அடியையும் அதன் குறிப்பையும் பார்க்க.

௩. மத வென்னு முரிச்சொல் மிகுதிப்பொருளில் வருமென்பதற்கு "போஒஓ வேற்றின்...........மதைஇனள்" என்பது (தொல். உரிச். சூ. அ0. நச்.) உரையிலும். "நாகிளம் பாண்டில்.........மதைஇனள்" என்பது (தொல். உரிச். சூ. ௬௪. "மிகுதியும்" தெய்.) உரையிலும் மேற்கோள்.

௪. "செல்லு மழவிடைபோற் செம்மாந்து" நள. சுயம். ௧௫௪.

௫. (அ)பாண்டில், தேர்பூணு மெருதென்பர், பதிற்றுப்பத்துரையாசிரியர்; பதிற். ௬௪: ௧0. (ஆ) எருத்தைப் பாண்டி லென்பது தெலுங்குச் சொல்லென்பர்; இ-வி. சூ. ௧எ௪. நன். பெயரி. சூ. ௧௧. இராம;

௬. செம்மாத்தல். பழ. ௩௧௫, ௩௧௩.

எ. 'தண்டை' என்பது அசைநிலையாய் வந்ததற்கு, "மோரோடு............ வனப்பு" என்பது மேற்கோள்; தொல். எச்ச. சூ. ௩0. 'கேட்டை யென்று' தெய்.

(பிரதிபேதம்) * மதைஇயினள், † மோருடன் வந்தா.

## நான்காவது முல்லை க. ௧0௪

எ-து: மழைநிறையப்பெய்த விளக்கந்தொண்ட அகற்சியையுடையநிலத்தே *சென்றுநின்று அவ்விடத்தேநின்ற(க)பெரிய அறுகாகியபுல்லைநிறையத்தின்று நீர் நிறைந்த நிழலிடத்தனவாய (உ)இன்னதலைக் குடம்பால் போதுமென்று

கருதப்படும் பசுக்கிரனில் †வைத்துங்கொண்டும் எனையவற்றிற்கு (௩) ஒப்புச் சொல்லப்படும் காரு (௪) போர்த்தொழில் அமையாத எற்றினுக்கின்ற இளைய எருது (௫) கொல்லர்வண்டியை ஈராயிரக் இளமையால் இறுமாக்குமாறுபோலத் தலையில் மோர்ப்பானையுடனே அழகாலும் இளமையாலும் மிகுதியையுடைய வாய்ப் பெரிய ஊர்களையுஞ் சிறிய ஊர்களையும் ஆரவாரத்தை உண்டாக்குவாள்போலே மோரோடே வந்தவளுழை நெஞ்சே காண்பாயாக; இவள்தான் மிக்க வனப்புடைய மகளிரெல்லாரொடும் தன் அழகு ஒவ்வாமை சொல்லப் பட்டவள். எ - று.

இது வினைவினை முதலொடு முடிந்தது.

௬ (௬) ‡பண்ணித் தாரக் கொருபுறந் தைஇய
கண்ணி ‖பெருங்கலத் தோடுட னகலல்குற்

---

க. பெரிய அறுகு - யானை யறுகு.

உ. இன்னத்தனைக் குடம் பால் போதும் - இத்தனை குடம் பால் கறக்கும்.

௩. "பொருக" என்பதற்கு. உவமிக்கப்படுவோ யென்று பொருள் கூறி, 'பொருவப் படுமவன் பொருந னென நின்றது' என்றும் (முருகு. உஎக.) ஒப்பற்றவனே யென்று பொருள் கூறி, 'பொருநனென்றது தான் பிறர்க்கு உவமிக்கப்படுவோனென்னும் பொருட்டு' என்றும் (மது. ௬உ.) இவரால் எழுதப்பெற்றிருக்கும் விசேடவுரை வாக்கியங்களும் இங்கே அறிதற் பாலன.

௪. "கொய்புற் கொடுத்துக் குறைத்தென்றாங் கீற்றினும், வையம்பூண் கல்லா சிறுகுண்டை" நாலடி. ௩௫௦.

௫. 'கன்னிக் கோட்டை முதலிய இடங்களில் மாடுகட்டிய கூட்டு வண்டி கொல்லர் வண்டி யென வழங்கப்படுகின்றதென்பர்' என்பது சீவக. ௫-ஆம் பதிப்பு அரும்பத. பக். ௧௧௫. இது கொல்லா வண்டியெனவும் கொல்லாப்பண்டியெனவும் சிலப். உரையிற் காணப்படுகின்றது.

௬. "சிறந் துழியையஞ்சிறந்ததென்ப" என்னும் (தொல்.களவி. ௩.) சூத்தி
ரத்தின் விசேடவுரையில் "உலகத்துத் தலைமகனும் தலைமகளுமாக
நம்மால்வேண்டப்பட்டார் அந்தணர்முதலாகிய நான்குவருணத்திலும்
ஆயர் வேட்டுவர் குறவர் பரதவ ரென்னும் தொடக்கத்திலும் ஆ
குலத்தா ராகிய குறு நில மன்னர் மாட்டும் உளராவ ரன்றே.

(பிரதிபேதம்) * கன்று நின்றவிடத்தே நின்றுபெரிய, † வைத்துக்கொண்டு ...
‡ மன்னித் தமதக்தொகு, || எடுக்கல்லா.

39



புண்ணில்லார் புண்ணாக நோக்கு (௧)முழுமெய்யுங்
கண்ணளோ *வாய மகள்

எ - து: சுற்றத்தார் கட்டிக்கொண்டு †வந்து, மயிர்முடியில் ஒருபுறத்தே செருகிவைத்த கண்ணியைச்சுமக்கமாட்டாத பக்கம் எத்தின அகன்றவல்குலையுடைய இவ்வாயர் மகள், மனத்திற் (௨)காமவேட்கையில்லாத ‡இருடிகளும் புண்பட்டு நெஞ்சு வருந்தும்படி பார்க்கும்; அதுவேயன்றி மெய்முழுதுங் கண்ணையுடையவளோ? எ - று.

||என்பது,(௩)கண்கள்செய்கின்றவருத்தம்போல மெய்ம்முழுதும்வருத்துதலின், மெய்முழுதுங் கண்ணளோ என்றதாயிற்று.

௧௩. (௪)இவடான் ÷ திருக்காச் சுமட்டின ளேனைத்தோள் வீசி
வரிக் × சுழ வட்டி தழீஇ யரிக்குழை
யாடற் றகையள் கழுத்திலும் + வாளிது
நுண்ணிதாய்த் தோன்று நுசுப்பு

எ - து: இவள் தான் பல நிறத்தையுடைய செல்லையுடையவாகிய (௫)வட்டியை ஒருகையால் அணைத்து மற்றைத்தோளை இளமைச் செருக்குத்

ரெல்லாரினும் செல்வத்தானும் குலத்தானும் வடிவானு முயர்ந்த தலைமகனுந் தலைமகளு மாயினார் மாட்டே ஐயம் நிகழ்வது. அல்லாதார் மாட்டு அவ்வழி மரபினையே சுட்டியுணர நிற்கும்" என்று எழுதி "பண்ணித் ...... .. .. ..மகள்" என்னும் பகுதியை ஐயமின்றிச் சுட்டி புணர்த்தமைக்கு மேற்கோள்காட்டுவர் இளம்.

௧. "முழுமெயும்" சீவக. ௩௪௦. உ௧௩௧; 'முழுமெயும் - மெய்முழுது மென மாறுக' என்பர் அடியார்க்கு நல்லார்; சிலப். ௪: ௩.

௨. (அ) "காமமொடு, கடுஞ்சினங் கடிந்த காட்சியர் .. .....முனிவர்" முருகு. ௧௩௪ - ௧௩௭. (ஆ) "பெண்டிரு முண்டியு மின்பமென் றுலகிற், கொண்டோ ருறூஉங் கொள்ளாத் துன்பம், கண்டன ராகிக் கடவுளர் வரைந்த, காமம்" சிலப். ௧௪: ௩௧ - ௪௨.

௩. (அ) "கண்ணாற் கலிஇப நோய்செய்ய. நடாஅக் கரும்பமன்ற தோளாரை" கலி. ௧௧௨: ௫-௬. (ஆ) "இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கு" குறள். ௧௦௯௧.

௪. ஐஞ்சிறப்பிற்கு வந்ததற்கு "இவடான், றிருந்தாச்............நுசுப்பு" என்னும்" பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. ௧௫௪. ௩௪.

௫. வட்டி - சடகப்பெட்டி, இஃது உட்புறம் பனங்குருத்தாலும் வெளிப்புறம் பனையகணியாலும் தெற்றி முடையப்படுவது.

(பிரதிபேதம்) § உயர்மகன், † வந்த.........சொருகலைவத்த, ‡ இருடிகளுக்குமட்படவெஞ்ச || என்றது. + திருந்தாச், × கழைவட்டி, ÷ வாளிறி துன்னிதாத்தோன்று.



தோன்ற வீசித் தன் அழகிற்குத் திருத்திப்போது (க) சுணங்கினையுடையளாய் மெய்க்கட் பூண்டனவன்றிக் கழுத்திடத்திலும் அழகையுடைய மகரக்குழையாகிய தொண்டரான அழகையுடையவள்; அதுவேயன்றி அல்குலுந் தோளுஞ் சுமந்து இளைத்த நுசுப்புக் கண்ணேயெய்கலா மென்மைக்கேற்ப நுண்ணிதாய் *கன்றுயத் தோன்றாநிற்கும். எ - று.

௧௭ இடைதெரியா வேள ரிருவருந் தந்த

†முடைவனப் பெல்லா மிவட்கீத்தார் கொல்லோ
‡படையிடுவான் மற்கண்டீ.ர் காமன் (உ) முடையடும்
பாலொடு கோட்டம் புகின

எ-து: தம்மில்லவர || பெயர்விளங்கிஅழகையுடையாராகிய(௩)உருப்பசியும் திலோத்தமையும் தம்முடைய தம்முடைய அழகையெல்லாம் இவட்குக் கொடுத்தார் கொல்லோ? அது தெரிந்ததில்லை; + இவள் தெய்வத்திற்குப் பலியாகச்சமைக்கும் பாலோடே காமன் கோயிலிலேசெல்லில்(௪) அக்காமனும் நெஞ்சழிந்து தன்கையிற் படையை மிகவும் × போகடுவன். எ - று.

---

க. "தர்மை யிலேசுமடன்" என்புழி, சுமடென்பது சுமையென்னும் பொருட்டுப்போலும்; "குழிசி பூஞ்சுமட்டிரீஇ" என்புழி இது சும்மாடென்னும் பொருளில் வருகிறது.

உ. "பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோ,ளாயர் முதுமகள்" (சிலப். கஎ: ௯ஏ - ககஅ.) என்பதனாலும் ஆய்ச்சியர் தெய்வத் தருள்பெறப் பலியாக அட்டபாலளித்தல் அறிய லாகும்.

௫. உருப்பசியும் திலோத்தமையும் அழகிய மகளிர்க்கு உவமை கூறும்படி மிகச் சிறந்த அழகுடையராய் விளங்கும் தேவதாசியர்; இவர்களுள் உருப்பசியாவாள் திருமாலின் கூறாகிய நாராயணமுனிவர் வதரிகாரணியத்துத் தவஞ் செய்வதை அழித்தற் பொருட்டுத் தேவேந்திரனால் விடுக்கப்பட்ட தேவதாசியர்கள் வெட்கியோடும்படி அம்முனிவரால் தமது தொடையில் உண்டாகப்பெற்றவளென்றும் ஊரு (தொடை) வில் தோன்றினமையால் அவளுக்கு ஊர்வசி யென்று பெயர்வந்ததென்றும் சொல்லுவர். அப்பெயர் உருப்பசி யெனத்திரிந்து நின்றது. திலோத்தமையாவாள் பிரமதேவரால் அழகுடையபொருளொவ்வொன்றினுமுள்ள சிறந்த அழகை எள்ளளவு எள்ளளவாக எடுத்துச்சேர்த்துப் படைக்கப் பெற்றவளென்ப. இப்பெயரே இப்பொருளை அறிவிக்கும்.

௬. "சிலை வல்லான் போலுஞ் செறிவினன்" கலி. (௧௪௩: ௬௪.) என்று சிறப்பிக்கப் படுதல் கருதி, காமனும் என உம்மை கொடுத்தார்.

(பிரதிபேதம்) * ஒன்றுபதொன்றுமிற்கும், † உடையவனப்பெல்லாமிவட்கேய்த்தார், ‡ படைவிபோன், || போர்விலக்கி, + அவன். × போமேவன்.



காமன் மாயோன்மகனாதலின் அவனும் அந்நிலத்திற்குத் தெய்வமாதல் "அவ்வகைபிறவும்" (க) என்றவழி வகை என்றதனாற் கொள்ளப்பட்டது. தெரியாவென்பது *செய்தெனெச்சம். இருவர், திருமகளும் † பூமகளுமெனினுமாம். (உ) கண்டீர் வினவொடு சிவணி நின்ற அசை.

உக (௫) இவடான்
இவடான் ‡என்று நெஞ்சொடு வினயினன்.

வருந்தநோய் செய்திறப்பி னல்லால் மருந்தல்லள்
யார்க்கு மணங்காதல் சான்றொன் றார்ப்பெண்டிர்

மாங்காய் ||நறுங்காடி கூட்டுவேம் யாங்கு
மெழுநின் (ச) ÷ கிளையொடு போகென்று தத்தம்
கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்
வாயி லடைப்ப வரும்.

எ - து: அதுவேயுமன்றித் தன்னை நோக்கினரெல்லார்க்கும் வருத்த மாதல் அமைந்தவளென்று கருதி இவ்வூர்களிற் பெண்டிரெல்லாரும் மோருக்கு மாருக மாங்காயை நறிய × ஊறுகாயாகக் கூட்டி நுகரக்கடவேம்; நீ எவ்விடத்தும் ✝ போய் மோர்முதலியன விற்றுத்திரியும் நின் சுற்றத்தாருடனே போவாயாக என்று கூறித் தம்முடைய கணவரைப் புறத்துப் போகாமற் காத்துக்கொண்டு இவள்வருங்காலமேயன்றி ஒருநாள்முழுதும் வாயிலே இடை

---

க. தோல் அகத். சூ. கஅ. இவ்வுரைகாரர் தோல். அகத். ரு - ஆம் சூத்திரவுரையில் "படையிவோன்........புகின்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி இக்குறிப்பையும் எழுதியுள்ளார்.

உ. "படையிவோன்......... புகின்" என்னும் பகுதி கண்டீரென்பது அசைநிலையாய்வருதற்கு மேற்; தோல். எசச. சூ. உக. 'கண்டீர்' தெய்.

ங. ஐஞ்சிறுதெய்வ சரிதகத்தான்வந்ததற்கு "இவடான், வருந்தநோய்............ வரும்" என்னும் பகுதி மேற்கோள் தோல்.செய்.சூ. கருச. நச்.

ச. "இளையொடு காத்தநின் கொழுநன் மார்பே" குறுந். ௮௰. என்னுந் தொடர் இங்கே நோக்கற்பாலது.

ரு. காடியென்பது ஊறுகாயென்னும் பொருளில் வருதலை, "காடி வைத்த கலனுடை மூக்கின்" என்புழி, 'புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார்' என்று இவர் எழுதியிருக்கும் விளக்கத்தால் அறிக.

(பிரதிபேதம்) * செய்ததெனெச்சம், ✝ பூமகளுமாம் கண்டீர், ‡ என்றது நெஞ்சொடு ¶|| நறுங்கடி 'கூட்டு,' ÷ கிளையொடும் போயென்று, × ஊறுகறியாகக், ✝போயம்மோர்.

யிட்டுக்கொண்டு நிற்கும்படியாக வாராநிற்கும்; இவன் தான் மனம்வருந்தும் படி நோயைச்செய்து போவதன்றி அந்நோய்தீர்க்கும் மருந்தல்லனெனச் சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புற்றான். எ - று.

சுற்றத்தொடு போவென்றார், அவரோடு இவன் போங்காலத்து, தங் கணவற்குப்பின் †சேறல் இயையா[ன]தென்பது பற்றி.

இதனால், இவனுக்கு அசைவு பிறந்தது.

இது காமஞ்சாலாவிளமையோளென்னும்(க)சூத்திரத்து வினாவலபாங்கி னோரும் இங்ஙனம் கூறவா மென்றமைத்தாம்.

மருந்தல்லனென்றது, காமஞ்சாலா விளமையோளென்றது.

மோர்விற்கின்றமை கூற வினாவலபாங்கினளாயிற்று.

இஃது இவடானென ஐஞ்சீர் அடுக்கிய சுரிதகத்தான் இற்ற கலிவெண் பாட்டு. (க)

(கக0.) கடிகொ ளிருங்காப்பிற் புல்லினத் தாயர்
குடிதொறு நல்லாரை வேண்டுதி யெல்லா
விடுதேன் மருந்தோநின் வேட்கை தொடுதரத்
துன்னித்தந் தாங்கே நகைகுறித் தெம்மைத்
தினைத்தற் கெளியமாக் கண்டை யளைக்கெளியாள்
வெண்ணெய்க்கு மன்ன ளெனக்கொண்டா யொண்ணுதா
லாங்குநீ கூறி னனைத்தாக நீங்குக;
அ அச்சுததான் மாறி யசைவினாற் போத்தந்து
நிச்சந் தடுமாறு மெல்லிய லாய்மகன்
மத்தம் பிணித்த கயிறுபோ னின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு;
கஉ விடிந்த பொழுதினு மில்வயிற் போகாது
கொடுந்தொழுவி னுட்பட்ட கன்றிற்குச் சூழுங்
கடுஞ்சூலா நாகுபோ னிற்கண்டு நாளு
நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு;
கசு எவ்வ மிகுதர வெந்திறத் தெஞ்ஞான்று

நெய்கடை பாலிற் பயன்யாது மின்றாகிக்

௧. தொல். அகத். சூ. ௫௦.

(பிரதிபேதம்) * மருந்தல்லன். எ - று. மருந்தல்லனென்றது காமஞ்............னென்று மோரை விற்கின்றமைகூற.........னாயிற்று. இது இடைபெனை வஞ்சிச்செவ ...பாட்டு. †சேறவினையாமையான் என்பது.



கைதோயன் மாத்திரை யல்லது செய்தி
யறியா தளித்தென் னுயிர் ;
அன்னையோ, மன்றத்துக் கண்டாங்கே சான்றோர் மகளிரை
யின்றி யமையேனென் றின்னவுஞ் சொல்லுவாய்
நின்றாய்நீ சென்றீ யெமர்காண்பர் நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து.

இது வினைவலபாங்கினல் *வெண்ணெய் (௧) நொடைக்குச் சென்ற தலைவியைக்கண்டு வினைவலபாங்கிற்றலைவன் மெய்தீண்டித் தனது ஆற்றாமையை அறிவித்துழி, அவன் ஈண்டுப் பிறரறிவர், நாளைக்கன்றொடு †சேறுமென இடங்கூறியது.

இதன் பொருள்.

கடிகொ ளிருங்(௨)காப்பிற்(௩)புல்லினத் தாயர்
குடிதொறு நல்லாரை வேண்டுதி யெல்லா
விடுதேன் மருந்தோநின் †வேட்கை தொடுதாத்
துன்னித்தந் நாங்கே நகைகுறித் தெய்மைந்
திளைத்தற் கெளியமாக் கண்டை யளைக்கெளியாள்
‖வெண்ணெய்க்குந் மன்ன னெனக்கொண்டா ÷யொன்றுதா
லாங்குநீ கூறி னனைத்தாக நீங்குக

எ - து: எடா! வளைவுகொண்ட பெரிய குறும்பிடம்பு இருக்கின்ற ஆட்டிடையருடைய குடிதோறமுள்ள மகளிரை விரும்பாநின்றாய்; = நினது காமவேட்கை எறிந்த தேனுக்குக் கடுப்பற + அப்பொழுதே இட்டு தீர்க்கும் மருந்துபோல வேட்கைதோன்றியபொழுதே கூடத்தீர்க்க வேண்டுவதொன்றோ? அவ்வவே! நின்னோடு சூள்களைசெய்தலைக் குறித்து நீ என் மெய்யைத் தீண்டுதற்கு யாம் நின்னை அணைந்து மெய்யைத் தந்த + அப்பொழுதே, எம்மைப் புணர்ச்சிக்கும் × எளியமாக நீ மனத்தாலேகண்டாய்; அங்ஙனம் கண்டது, மோரை வேண்டினார்க்குச் சிறிது மோரைவார்த்து எளியளானவளொருத்தி வெண்ணெயை வேண்டினார்க்கு** வெண்ணெயையிட்டு எளியளா

க. கொடைக்கு - விற்பதற்கு. இது கொடுவென்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர்.

உ. காப்பினென்றும் படிக்கலாம்.

ந. "புல்லினத்தாயர்" (கலி. க0ங: சஎ.) என்பது மதன்குறிப்பும்பார்க்க.

(பிரதிபேதம்) * வெண்ணை, † சென்றமென, ‡ வாழ்க்கைதொடிதா, ‖ வெண்ணைக்கும் ÷ ஒன்றுதலாங்கு, = நின்காமவாட்கை, + இப்பொழுதே, × எளியேமாதலி ** வெண்ணையை.



யிருப்பள் என்று சொன்னாலே * கருதினாற்போலே இருந்ததென்றாள்; அது கேட்ட தலைவன் ஒள்ளிய நுதலினையுடையாய்! அங்ஙனம் நீ கூட்டத்தை மறுத்துக் கூறுவையாயின், அக்கூட்டம் இல்லையாவதாக இனி நின்னை விட்டு நீங்குக என்றான். எ - று.

அ அச்சத்தான் மாறி யசைவினாற் போத்தந்து

பிச்சர் தடுமாறு மெல்லிய லாய்மகன்
(க) மத்தம் பிணித்த கயிறுபோ னின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு

எ - து: மெல்லிய இயல்பினையுடைய ஆயச்சாதியிற் பிறந்த மகன்! மத்தைச் † சுற்றிய கயிறுபோல ‡ நின்றுடைய நலத்தைச் சூழ்ந்துகொண்டு சுழன்றுதிரிகின்ற என்னுடைய நெஞ்சு நீ கூறிய கூற்றினால் தனக்கு உண்டா

ிய அச்சத்தினாலே நின்னிடத்துநின்று மீண்டு தான் நிலைபெறமாட்டாது பின்னரும் அசைகின்ற அசைவாலே என்னிடத்தினின்றும் புறப்பட்டு நாடோறும் மீளத் தமொருநிற்கும் என்றான். எ - று.

கஉ விடிந்த பொழுதினு மில்வயிற் போகாது
(உ)கொடுங்கொழுவி னுட்பட்ட கன்றிற்றுச் சூழூஉன்
(ங)கடுஞ்சூலா நாகுபோ னிற்கண்டு நாணு
||நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு

---

க. (அ) "மத்தகம் புல்லிய நாகிற்றின் மற்றவ, ரத்த லைவிடி னித்த லைவி டார்" சீவக. சஉந. (ஆ) "போலியொருகான் மீளும் புகுந்தொருகான் மீணடேகு. மாயர் சொனார்ந்த வடிபாலின்—ேறயல், கடைவார்தன் கைபோலு மாயிற்றே காலன், வடிவாய வேலான் மனம்" நள. கலி தொடர். சOந.

உ. "கோக்கினின் றுள்சிறைப் பட்டகன், காவர்கன் றிற்புனிற் றுவனை கார்மயிற் சாயலே" சீவக. ககநிக. (ஆ) "கன்று தடையுண் டெதி ரழைக்கக் கதறிக் கனைக்குர் புனிற்றாப்போல்" பெரிய. கழறிற். சஙஇ. (இ) 'கன்று பிடியுறத் தீர்குறு. தாயைப்போல" கம்ப. பிணிவீட்டு. நச. (ஈ) "கன்றொழி புனிற்று வென்னக் கதறினர்" கந்த. பானு. உOடு. (உ) "அளித்தாவீன்ற, கன்றொஞ் வினைந்தினைந்து மறகாநின்ற கபிலையைப்போலென் பட்டாள்" வில்லி. பதினேழாம்போர். உளஎ. என்பவையும் (ஊ) இந்நூற்பக்கம் சஅ௯: உ-வது குறிப்பில் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் ஈண்டு அறிதற்பாலன.

ந. கடுஞ்சூல் என்பது (அ) "கடுஞ்சூன் மந்தி" பெரும். நகடு. (ஆ) "பிடிக்குற்ற, கடுஞ்சூல் வயாவிற்கு" கலி. சO: உக-உஉ. (இ) "கடுஞ்

(பிரதிபேதம்) * கருநிறைப்போலே, †சுழற்றிய. ‡ நின்னலைத்தழூஉ. || நடுக்கஞரிட்டதென்.

எ - து: என்று, பின்னும் முதற்கூல்கொண்ட பசு, இல்விடத்தினின்றும் *தூரிய இடத்தில் இடப்படாத வளைத்த தொழுவினுள்ளே கட்டிவைத்த தன் கன்றிற்குப் பொழுது விடிந்த காலத்திலும் மேயப்போகாது சூழ்ந்து திரியும்; அங்ஙனம் போலே நின்னைக் கண்டு என்னெஞ்சு நாடோறும் (க) நடுங்குகின்ற வருத்தத்தை உற்றதுகாணென்றான். எ - று.

(உ)காடு, ஈண்டு இளமை.

கசு எவ்வ மிதுதா வெந்திறத் தென்னான்று
(ங)செய்கடை பாலிற் பயன்யாது மின்றாகிக்
கைதோயன் மாத்திரை யல்லது செய்தி
யறியா தளித்தென் னுயிர்

எ - து: †என்று பின்னரும் என்னிடத்து‡எக்காலும் வருத்தம் மிகுகையிலுலே அளித்தக்க என்னுடைய உயிர் மருந்தையிட்டு செய்யைக் கடைந்து வாங்கின பாலிடத்து நுகர்வார்க்குச் சிறிதும் ||பயன்படுதலில்லையாய் அவர் கைசென்று தோய்ந்து விடுகின்ற அளவாய்விட்டது; அதுவும் ஒழிய மேல் தான் செய்வதோர் செயலையும் அறியாதென்றான். எ - று.

என்றதனால், நீ என் உயிரிடத்துள்ள நன்மையை ஒருவழியாலே வாங்கிக் கொண்டு விட்டாயென்றும் அது பின்னர் நீ பயன் கொள்ளுங்காலத்து நினக்கு ஓர் இன்பம் ✝கருதல் ஆற்றாதென் றுங் கூறினனாயிற்று.

குன் மடப்பிடி" அகம். எஅ: க. என விலங்குகட்கும், (ம) "கடுஞ் குன் மகளிர்" மது. கoக; (உ) "கடுஞ்சூற் சிறுவன்" (ஊ) "கடுஞ் குன் மகளே" ஐங். ௩oக, ௩அக; (எ) "கடுஞ்சூன் மகளிர்" மணி. எ: அ௨. என மக்கட்கும் கூறப்படுவமன்றி. (ஏ) "கடுஞ்சூல் முண்டகம் கதிர்மணி கழாஅலவும்" சிறுபா ஃ. கசஅ. என ஒதிவுயிர்க்குள் கூறப்படுகிறது.

க. "கடுங்களர் - கடுங்குதற்கு ஏதுவாய அளர்" கலி. ௫௩: கஅ; குறள். கoஅக. உரைபார்க்க.

உ. நாகு, ஈண்டு இளமை யென்றது: நாகென்பதனை, (தொல். மர. சூ. கூ.) பெண்பாற் பெயராகக் கொள்ளாது (தொல். மர. சூ. உக.) இளமைப் பெயராகக்கொண்டு இளமையையுடைய கன்றென்று பொருள்கொள்ளவேண்டுமென்று கருதிப்போலும்; இஃது இப்பொருளில் வருவது, "நல்லாவின் கன்றுயி ஞகும் விலைபெறூஉம்" (நாலடி. ககடு.) என்பதனுலும் அறியலாகும்.

ங. பாலைக் காய்ச்சாமலே இயந்திரத்தினுதவியால் அதிலுள்ள வெண்ணெயை யெடுத்துவிட்டு, சென்னை முதலிய இடங்களில் விற்கும் பால் உண்பவர்க்குப் பயன்படாமை இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * தூரிய இடப்படாத. † பின்னரும், ‡ எந்தாளும். || பயன்படுதலில்லாய வாலைசென்று, + தருமாதலாற்றுறேதன்றும்.

## நான்காவது முல்லை கக. எ௰௪

௪௦ (க) அன்னையோ, மன்றத்துக் *கண்டாங்கே சான்றோர் மகளிரை
†இன்றி யமையேனென் றின்னவுஞ் சொல்லுவாய்
நின்றாய்நீ சென்றீ யெமர் காண்பர் ‡நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து

ஏ - து: அதுகேட்டவள், நீ அத்தன்மையையுடையையோ என அருள் செய்து, பலருந் திரிகின்ற மன்றத்திலே எதிர்ப்பட்ட அப்பொழுதேநின்னைப் போலன்றி அமைதியை யுடையோர் மகளிரை இவ்விடத்துப் புணர்ச்சியின்றாயின் உயிர்வாழேனென்று நின்றாய்; இவ்விடத்து நின்றால் எம்முடையசுற்றத்தார் காண்பர்; இனிஇன்றேயன்றி நாளையும் புலத்திலே கன்று மேய்த்தற்குப் போவேம்; ஆண்டு வந்து இத்தன்மையன || உற்றவை மேற்சொல்லுவாய்; நீதான்இனி ஈண்டு நில்லாமற்போவென இடங்கூறினள். எ-று.

இதனல், இருவர்க்கும் புணர்ச்சிவேட்கை பிறந்தது.

இது நேரிசைவெண்பாட்டும் × பின்னர் மூன்றுவெண்பாட்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற அகப்புறக் கலிவெண்பாட்டு. (௪௦)

(கககூ.) (உ) தீம்பால் கறந்த கலமாற்றிக் (ந.) கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த

க. பழிதீர் முறுவல் சிறிதே தோற்றலென்பதற்கு, (அ) "அன்னையோ......... புலத்து" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, இதனுள் 'அன்னையோ' என்பது நகையொடு கூடிய சொல் என்பர் இளம்பூரணர்; தோல். களவி. சூ. உ௦. (ஆ) வறிது நகை தோற்றற்கு "அன்னையோ.........சொல்லுவாய்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டுவர் நாற்கவிராசநம்பியும்; நாற்கவி. சூ. கஉஎ.

உ. (அ) "ஆயர் வேட்டுவர்" என்னும் (தோல். அகத். உக.) சூத்திர வுரையில், 'ஆயர் வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்து ஓதினுரேனும் ஒன்றெனமுடித்தலான் அந்நிலங்கட்குரிய வினைப்பெயர்களான் வருவனவுங் கொள்க' என்றுகூறி, அதற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; (ஆ) இதனைத் தலைமகள் உள்ளப் புணர்ச்சியின் உரிமைபூண்டிருந்தவாற்றிற்கும் வரைந்தெய்தத் உறலுற்ற வாற்றிற்கும் (தோல். களவி. சூ. அ.) (இ) * பிறதளையான் (* இயற்றளையான் என்றும் பிரதிபேதம்) வந்த கலிவெண்பாட்டுக்கும் (தோல். செய். சூ. கசக. 'ஒருபொருள்') மேற்கோள் காட்டினர் இளம்பூரணர். (ஈ) இந்நூற்பக்கம் எகஎ: க-ஆம் குறிப்பும்பார்க்க.

ந. (அ) "சிறுதாம்பு தொடுத்த பசலைக்கன்றின்" முல்லைப்பாட்டு, கஉ. (ஆ) "கன்று தாம்பரித்து" சீவக. சஉஉ.

(பிரதிபேதம்) * கண்டார்குச் சான்றார், † அன்றியமையலனென். ‡ காலீபெய் கன்றெமு, ‖ உற்றமேற். × பின்னிரண்டுவெண்பாட்டும், பின்னரிரண்டுவெண்பாட்டும்.





(க) பூங்கரை நீலம் * புடைதாழ மெய்யசைஇப் (உ) பாங்கரு
முல்லையுந் † தாய (ந.) பாட்டங்காற் றோழிநம்
(ச) புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா
மொருங்கு விளையாட வவ்வழி வந்த
(ரு) குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை

‡முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்று ணெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் ||முற்றிழாய்
(௬)தாதுறூஉம் ÷கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்று ணெல்லாநீ
|யேதிலார் தந்தபூக் ×கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் +மாதரா
யைய (௭)பிதிர்ந்த (௮)சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்

---

க. "பூங்கரை நீலந் தழீஇ" கலி. ௧௧௫· ௧௪.

உ. 'பாங்கரும்' என்பதை நான்காமடியின் முதற்சீராகக்கொண்டு அதனை ஐஞ்சீரடியாக்கலுமாம்.

௩. "பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு செல்வேம்" கலி, ௧௧௩: ௧.

௪. இந்நூற்பக்கம் ௬௮௭: ௧-ஆம் குறிப்புப்பார்க்க.

௫. (அ) "குருந்தலை கண்ணிக் கோவலர்" ஐங். ௪௩௧. (ஆ) "குருந்தலை வான்படலை சூடிச் சுரும்பார்ப்ப, வாயன் புகுதரும் போழ்தினான்" ஐந் - எழு. ௨௮. (இ) "குருந்தமென் கண்ணி சூடுங் கோவலர் கொழுந்து" பாகவதம். (௧0) வேய்ங்குழலிசைத்த. ௧௯.

௬. "தாதுறும் கூந்தல்" என்பதனொடு, (அ) "கொய்பூந், தாதுகொண் டளகத் தப்பி" சீவக. ௨௧௪௮; (ஆ) "போதுகொண் டணியித் பொறுக்க லாற்றாத், தாதுகொண் டிருந்த தாழிருங் கூந்தலர்" பெருங். (௧) ௪௩: ௧௪0 - ௧௪௧. என்பவை ஒப்புநோக்கற்பாலன.

௭. (அ) "சுணங்கு பிதிர்ந்து... ..வெம்முலை" சிறுபாண். ௨௪ - ௨௬. (ஆ) "பிதிரு முலைமேற் சுணங்கு" திணைமொழி. ௨௮. (இ) "பிதிர் சுணங்கணி வெம்முலை" நைடத. வேற்றுரு. ௯.

அ. "சுனைக்கணி வனமுலை" நற் கஃ கூ; கலி. சு0: க.

(பிரதிபேதம்) * புடைத்தாழ, † தாயப்பாட்டங்கால், ‡ முற்றிழையோணமட, முற்றிழை யேர்மட || முற்றிய. ÷ கூந்தகை. × கொள்ளானனி, ╪ ஆயிமாய்.



*செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ †விடுகென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி (க)ரியல்புரைத் (உ)தெந்தையும்
(ங)யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்.

இது தலைவி ஆயத்திடைத் தலைவனைக் கண்டவாறும் அவனைக்கூறி யனவும்கூறி, தோழியைத் தலைவனை வரைவுகடாவி யாய்க்கு அறத்தோடு நிற்கவேண்டுமென்றது.

இதன் பொருள்.

தோழீ! இனிய பாலைக் கறந்த கலங்களை அவ்விடத்து நின்றும் எடுத்துவைத்துக் கன்றுகளையெல்லாம் தாம்பாற் கட்டி மனைக்கண்ணே நிறுத்தித் தாய்தக்க பூத்தொழிலினையுங்கரையினையுமுடைய நீலத்தையுடைய ஆடை பக்கந்தூங்கித் தாழாநிற்க மெய்யை அசைத்துப் (ச) பாங்கர்க்கொடியும் முல்லைக்கொடியும்பரந்த (ரு)முற்றாட்டாகிய தோட்டத்திடத்தே நம்முடைய ஆட்டினத்தையுடைய ஆயர்மகளிரோடே(சு)மற்றை இருகூற்றில் ‡ஆயர்மகளி ரெல்லாருஞ் சேர விளையாடாநிற்ப அவ்விடத்தேவந்த குருந்தம்பூவாற் செய்த கண்ணியையுடைய பொதுவன் ||பின்னை என்னைநோக்கிச் சூழ்ந்த அணிகலங் களையும் ÷ அழகினையும் மடப்பத்தையுமுடைய நல்லாய்! நீ இழைத்த வினை யாடுஞ் சிற்றிலை யானுஞ் சிறிது புனைவேனோ என்றான்; யான் அதற்கு எடா!

௧. 'இயல்' என்பது 'இலக்கணம்' என்னும் பொருளில் வருதல் பெருவழக்கு. 'இயல்பு' என்பதும் அப்பொருளில்வருதலை(அ) "அக்காலத்தே மொழிபுணரியல்பே" (ஆ) "இயல்புற நாடின்" என்னுந் தொல்காப்பியப்பகுதிகட்கு இவரெழுதியிருக்கும் உரையானுமறிக.

௨. "எந்தையும்..........மன்" என்பது குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தற்கு மேற்கோள்; நாற்கவி. ரூ. ௧௬௬.

௩. "வாவியுறையு மடவனமே யென்னுடைய, ஆவி யுவந்தளித்தா யாதியால் - காவினிடைத், தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி" நள. சுயம்வர. ௫௦.

௪. இந்நூற்பக்கம் ௬௨௮: ௫-ஆம் குறிப்புப் பார்க்க.

௫. { முற்றூட்டு - ஸர்வமானியம்.

௬. { முற்றூறு இருகூறு - பசுவினம், எருமையினம்.

(பிரதிபேதம்) * செய்வுற. † விடுவென்றேன். ‡ ஆயமகளிர், || பின்னைபென்ன. + அழ கினையுடையமடப்பத்தையுடைய கள்ளாளோ!.



வரைந்துகொண்டு எமக்கு ஓரில்லை அமைத்தலறியாயாய்த் தன் சுற்றத்தார் எடுத்த இல்லிலே இவளிருக்க யாம்பெற்றேமென்று நினைத்திருக்குமவன் நீ; ஆதலால், உறுதியாக நீ உலகியலிற்கற்றதொன்றும் இல்லைக்காணென்றேன்; *அதன்பின்புமுற்றிழாய்! கட்டினமாலையை நினக்குத் தாதுசூழ்ந்தகூந்தலிலே அழகு பெறப் புனைவேனோ என்றான்; யான் †அதற்கு எடா ! நீ வரைந்துகொண்டு, விடாமற் கோதை புனைதல்அறியாயாய், (க)என் சுற்றத்தார் மிகக்கொண்வேந்து சூட்டின பூவை மிகப் பூவென்றுகொள்ளுமவன் நீ; ‡ஆதலால் உலகில் உறுதியாகப் பெரிதும் பேதைத்தன்மையையுடையை என்றேன்;

ரயின், அவன் உற்ற நோயன்றி யான் உற்ற நோயையும் மிகப்போக்குவை; தினைக் குறிக்கோள் என்றாள். எ - று.

இதனால், தலைவிக்கு அசைவு பிறந்தது.

இது (க)பன்னீரடியின் இகந்து தனையும் விரவி ஐஞ்சீரடியும்வந்து ஒரு பாருணுதலாது வந்த கலிவெண்பாட்டு. (கக)

(கஉ.) யாரிவ னென்னை விலக்குவா னீருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்றா ரெமர்;
ரு எல்லா, கடாஅய கண்ணாற் கலைஇயநோய் செய்யு
நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்றா ரெமர்;
அ கடாஅயார், நல்லாரைக் காணின் விலக்கி நயந்தவர்
பல்லித ழுண்கண்ணுந் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற நுமர்பெரிதும்
வல்ல ரெமர்கட் செயல்;
கஉ ஓஒ, வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே லெம்மை
யிகழ்ந்தாரே யன்றோ வெமர்;
ஒக்கு, மறிவல்யா னெல்லா விடு;
கரு விடேன்யா, னென்னீ குறித்த திருக்கூந்த
லின்னையென் முன்னின்று
சொல்லலோம் பென்றமை யன்றி யவனீ
புல்லலோம் பென்ற துடையரோ மெல்ல

படிவந்தா னெடியோனை முதற்பயந்த, தாயென்று முதுமறை பரவி னும், யாயென் றல்ல தியாந் துணி யலமே" (தொல். செய். சூ. ககக. பேர். உரை.மேற்கோள்) என்பவையும் இது தன்மையொடடுத்தபெய ரென்று கல்லாடரும் தன்மையொடொட்டிய பெயரென்று நச்சினார்க் கினியரும் எழுதியிருப்பவையும் இங்கே அறிதற்பாலன.

க. பன்னிரண்டடியின் இகந்து ஒரு பொருணுதலாதுவரும் கலிவெண் பாட்டுக்கு இச்செய்யுள்மேற்கோள்; தொல். செய். சூ. கருக. பேர். நச்.

## எகஅ கலித்தொகை ககஉ.

உ0 முயங்குநின் முள்ளெயி றுண்கு மெவன்கொலோ
மாயப் பொதுவ னுரைத்த வுரையெல்லாம்
வாயாவ தாயிற் றலைப்பட்டாம் பொய்யாயிற்
சாயலின் மார்பிற் கமழ்தார் குழைத்தநின்
ஞாயிற் றுண்கண் பசப்பத் தடமென்றோள்
சாயினு மேஎ ருடைத்து.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக் கண்டு வினைவலபாங் கிற்றலைவன் விலக்கி நகையாடி இருவருஞ் சிலமொழி கூறியவழி அவள் கூட்டத்திற்கு உடம்பட்டது. இது (க)கைக்கிளை.

இதன் பொருள்.

(உ)யாரிவ னென்னை விலக்குவா னீ(ங)ருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்

(ச)கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்று ரெமர்

எ - து: என்னை விலக்குவானாகிய இவன் எமக்கு என்ன உறவுடைய னென(ரு)முன்னிலைப்புறமொழியாகப் †புலர்துகூறி, பின்னர் அவனைநோக்கி நீரிலே‡ அசைகின்ற பொலிவையுடைய தாமரையினது பூவை எமக்கு வினை

௪. (அ) "கல்லாப் பொதுவனை நீமாறு" எனப்பொதுவியர் கூறலும் "நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின், விடாஅலோம் பென்று ரெமர்" எனப பொதுவர் கூறலும் மிக்க காமத்து மிடலாகிய பெருந் திணை யாதலின் முல்லையுட் கோத்தாரென (தொல். அகத். சூ. ௧௩.) உரையில் இவரே வேறு திணையாக எழுதியிருப்பது இங்கே ஆராயத் தக்கது.

௨. தலைவன் சொல்லெதிர் தலைவி உடம்பாடிருப்பவும், இசைவில்லா தாரைப்போல அல்ல கூற்றுக் கூறுதற்கு, 'யாரிவ னென்னை......... .........ரெமர்' என்பதனை மேற்கோள் காட்டி, 'எவன்கொலோ...... .........எவருடைத்து' என உடம்பாடு கூறினளாதலின், முற்கூறியது அல்ல கூற்றாயிற்று என்பர் இளம்பூரணர்; தொல். களவி. சூ. ௧௧.

௩. உளர்தல் - அசைதல்.

௪. "கல்லாக் கோவலர்" (ஐங். ௩0௪) என்பது இங்கு ஒப்புநோக்கற் பாலது.

௫. 'யானுநீ யென்னை விலக்குவாய்' என்றது "யாரிவனென்னை விலக்கு வான்" என்றது முன்னிலையிற் புறமாக மொழிந்தது.

(பிரதிபேதம்) * நீருளபூத்தாமரை. † புலாத்தா. ‡ அசைக்கின்ற பூவையுடையதாமரை.



ரிடத் தந்த, (௧)பலமலர் விரவுதலையுடைத்தாகிய தாரினையுடைய, *நினது ரதித்தன்மை கல்லாதபடி இயல்பாகப்பட்ட இடையனுந் தன்மையை டையை; இவ்வொழுக்கம் அறிந்தாரைப்போல எம்முடைய சுற்றத்தார் ின்னோடு சிலசொல்லுதலைப் பாதுகாத்துக்கொள் என்றார்; ஆதலால் நீ ண்டு நில்லாது போ என்றான். எ - று.

"ஏர்நில மருங்கிற் †பூவும்" (௨)என்பதனால், தாமரை கூறினார்.

௫ எல்லா, கடாஅய (௩)கண்ணாற் கலைஇயநோய் செய்யு நடாஅக் (௪)கரும்பமன்ற தோளாரைக் காணின் விடாஅலோம் பென்று ரெமர்

ஏ - து: அதுகேட்டவன் ஏடீ! வேட்கை செலுத்தின கண்ணாலே
மனத்தைக் கலக்கின காமநோயை உண்டாக்கும் எழுதுகரும்பு நெருங்கின
தோளினையுடைய மகளிரைக் கண்டாயாயிற் போகவிடாதே கொள்; அவர்
செய்த நோயை அவரைக் கொண்டே பரிகரித்துக்கொள்ளென்று கூறினர்
நம்முடைய சுற்றத்தார் என்றான். எ - று.

அ கடாஅயார், நல்லாரைக் காணின் விலக்கி நயந்தவர்
பல்லித ழுண்கண்ணுந் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற நுமர்பெரிதும்
வல்ல ரெமர்கட் செயல

எ - து: அதுகேட்டவள் அங்ஙனம் பரிகரித்துக்கொள்ளென்று கூறி
னவர்கள் அதுவேயன்றி நல்ல மகளிரைக் கண்டாயாயிற் போகாமல் தடுத்து
விரும்பி அவருடைய (ரு) பல பூக்களையும் போலுங் கண்ணையும் புகழ்ப்படுச்

---

க. (அ) "பிடவமும் ........கோடலும்........காயாவும் பிறவு, மணிகொள
மலேந்த கண்ணியர்" (ஆ) "மெல்லிணர்க் கொன்றையு மென்மலர்க்
காயாவும், புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங், குல்லையுங் குருந்துங்
கோடலும் பாங்கரும், கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலேந்தனர்"
கலி. ௧0௩: உ - ௬; ௧0௩: ௧ - ௪ என்பனவையும் இந்நூற்பக்கம் ௯௩அ:
உ-ஆம் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

உ. தொல். அகத். ௬. ௧௧.

௩. இந்நூற்பக்கம் ௭0௩: ௩-ஆங் குறிப்புப்பார்க்க.

௪. "தோண்மேற், கரும்பெழுது தொய்யிற்கு" கலி. ௬௩. எ - அ என்ப
தும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

ரு. பல பூக்களென்பதற்கு, மகளிர் கண்ணுக்கு உவமையாகக் கூறப்படுமே
செந்தாமரை, குவளை, கருநெய்தல், கருவிளை, கருமுதலியமலர்களென்று
பிரதிபேதம்) * சாதித்தன்மையைக்கல்லாதவடிவிபல்பாக. † பூவும்புன்னும்.

தோளையும் பாம்படியாக நல்லதொரு தொழில் கற்பித்தார்; அவர்தாம் அறநியாக; எம்முடைய சுற்றத்தாரிடத்து அவர் வரைவுகோர்தற்குச் செய்யுஞ் செயலை நம்முடைய சுற்றத்தார் பெரிதும் வல்லராயிருந்தாரென்றான். எ-று.

*இஃது, இகழ்ச்சி.

கஉ ஒஓ. (ஈ)வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே †லெம்மை
யிகழ்ந்தாரே யன்றோ வெமர்

எ-து: அதுகேட்டவன் தன் மனத்தே ஓஒ! என வியந்து, பின்னர் வெயில்வெம்மையால் ஒருவரும் வழங்காத உச்சிக்காலத்தே நீ கன்று‡மேய்ப் பாய்போலப் பிறர்க்கு நோயைச்செய்து திரிகின்றதன்மையை அறிந்திருக்கின்றவர்கள் இப்படித் திரிகின்றானென்று எனக்குஉரையாதிருப்பாராயில் எம்முடைய சுற்றத்தார் எம்மை இகழ்ந்தாரேயல்லவோ என்றான். எ-று.

கரு ஒக்கு, மறிவல்யா னெல்லா விடு

எ-து: அதுகேட்டவன் நீ கூறியது ஒக்கும்; எடா! இது பொய் யென்று யான் அறியவேண்டா; இக்கூற்றைக் கைவிடென்றாள். எ-று.

கசு விடேன்யா, னென்னீ குறித்த திருங்கூந்தா
னின்னையென் முன்னின்று
சொல்லலோம் பென்றமை யன்றி யவனீ
புல்லலோம் பென்ற துடையரோ வெல்ல
உ0 ‖முயங்குமின் முள்ளெயி றுண்டு மெவன்கொலோ
மாயப் பொதுவ னுரைத்த வுரையெல்லாம்

சொன்னலாம். இவ்வுரையாசிரியர் இதழெனபதைச் சினையாகு பெய ராக்கிப் பல்விதழென்பதற்கு, பல பூவென்று பொருள் கூறினர். இதற்கே பலவாகிய இதழினையுடையதென்று அன்மொழித் தொகை யாக்கிப் பூவென்ற பொருள் கூறுவாருமுளர். 'பல்லித ழுண்கண்' என்னுந்தொடர்மொழி, (நற். உ௬0: ௧௧; குறுந். ௫; ஐங். ௧௪0, ௧௬0, ௩௩௬, ௩௫௧, ௬௭௧; கலி. ௬௫: ௧௧, ௧00: ௧0) பலவிடங்களிலும் வருதல்காண்க.

௧. வினைவல பாங்கின ளாய தலைவியை நோக்கித் தலைவன் கூறியதற்கு, "வழங்கரப் பொழுதாகி.........வெமர்" என்பது மேற்கோள்; தொல். அகத். சூ. உ௩. நச்.

(பிரதிபேதம்) * ஊறைகட்டி. † என்னை. ‡ மேய்ப்பாரைப்போலே. || முயங்கின் முன்னே பிறன்பிமென.



வாபாவ தாயிற் றலைப்பட்டாம் பொய்யாயிற்
(௩)சாயலின் மார்பிற் கமழ்(உ)தார் *குழைத்தநின்
ஞயித ழுண்கண் பசப்பத் தடமென்றோள்
சாயினு மேஎ ருடைத்து

எ - து: அதுகேட்டவன் யான் நின்னை விடேன்; கரிய கூந்தலை யுடையாய்! யான் கூறிய கூற்றை நீ பொய்யாகக் குறித்ததென்? யான் பொய்கூறிற்றிலேன்; அது நிற்க, நின் சுற்றத்தார் நின்னை என்முன்னே

ன்று சில சொல்லுதலைப் பாதுகாத்துக்கொள்ளெனச் சொன்னமையன்றி அவனை நீ புல்லுதலைப் பாதுகாத்துக்கொள்ளென்ற வார்த்தையை அவர் உடையரோ? இல்லையன்றே! ஆகவால் நீ மெத்தென முயங்குவாய், அப் பொழுது யான் நின் கூரிய (௬) எயிற்றை உண்பேனென்றான்; அதுகேட் டவள், இவன்கூறியது எத்தன்மைத்தோவென நெஞ்சொடு உசாவி, பின்னும் தன்னெஞ்சை நோக்கி, பொய்யை வல்ல பொதுவன் கூறிய கூற்றெல்லாம்

மெய்யாயிருப்பதோர் வார்க்கை யாயில் அவனிடத்து †மனைவாழ்க்கையிலே பட்டேமாகின்றேம் ; அன்றி அது பொய்யாயிற்றேல் மென்மை இனிகாகிய மார்பிற் கமழ்கின்ற மாலையை வருத்தின நின்னுடைய அழகிய இதழ்போலுங் கண்கள் பசலைநிறங் கொள்ளப்‡பெருமையையுடைய மெல்லியதோள் பின்னர் மெலியினும் நின் மேனி இப்பொழுது பெறுகின்ற அழகையுடைத்துக் காண் எனக் கூட்டத்திற்கு உடம்பட்டுக் கூறினள். எ - று.

குழைத்த என்னும் பெயரெச்சம் நின் என்னும் பெயரொடு முடிந்தது. ஈன்று மேய்ப்பாய் போ லென்பதனல், வினைவல பாங்காயிற்று. ,"நோயு

---

க. (அ) "ஊரன் மார்பே,...... ..இன்சா யற்றே" (ஐங். கசு.) என்பதும் (ஆ) "இன்சாயன் மார்பன்" (கலி. சுகு: ௬.) என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

உ. தார்குழைதலைக்குறித்து, சீவக. உ0௩சு, உ0௬உ; பு - வே. பெருந். கஉ; இவற்றில் வருபவையும் "குழைந்தநின் றாரும்" (கலி. ககஃ கக - கஉ.) என்பதும் அதன் குறிப்பும் இங்கே நோக்கற்பாலன.

௩. (அ) "கரும்பின், காலரி கடிகைக் கண்ணயின் றன்ன, வாலெயி றூறிய வசையி நீநீர்" குறுந். உசஎ. (ஆ) "முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக், கள்ளினு மகிழ்செய்யுமெனவுரைத்தும்" கலி. ச: க௩ - கச. (இ) "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி, வாலெயி றூறிய நீர்" குறள். ககஉக. என்பவையும் (ஈ)இந்நூற்பக்கம் ௩௩: க-ஆங்குறிப்பில் இவ்விடத்துக்குப்பொருந்துவனவும் அப்பக்கம் ௩ - ஆம் குறிப்பும் பார்க்க.

ச. இந்நூற்பக்கம் உஎக: ௬ - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * குழைத்தவென், † மனைவாட்கையிலே. ‡ பெருமையையுடைய தோள்.

யின்பமும்" என்னும்(க) சூத்திரத்து, "உறுப்புடை யதுபோ லுணர்வுடையத்
போல், மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்தும்" என்பதனால் உறுப்புடைத்தாகக் கூறினான்.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது மூச்சீரடியும் இருசீரடியும் இடையேவந்த கொச்சகக் கலி. (கஉ)

(கக௩.) நலமிக நந்திய நயவரு தடமென்றோ
ளலமர லமருண்க ணந்நல்லாய் நீயுறீஇ
யுலமர லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல் ;
ச பேரேமுற் றார்போல முன்னின் றுவிலக்குவா
யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி ;
௬ தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்
புல்லினத் தாயர் மகனேன் மற்றியான் ;
அ ஒக்குமன்;
புல்லினத் தாயனீ யாயிற் குடஞ்சுட்டு
நல்லினத் தாய ரெமர் ;
கக எல்லா;
நின்னொடு சொல்லி னேதமோ வில்லைமன் ;
ஏதமன் றெல்லை வருவான் விடு ;
கச விடேன்;
உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு
மெல்லிய வாத லறியினு மெல்லியா
னின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண்
டென்னெஞ்ச மேவல் செயின் ;
க௯ நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்சிய
காதல்கொள் காமங் கலக்குற வேதிலார்
பொய்ம்மொழி தேறுவ தென் ;
உஉ. தெளிந்தேன் றெரியிழா யான் ;
உ௩. பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி

ல்க லகலறை யாயமொ டாடி.

க. தொல். பொருளி. சூ. உ.

(பிரதிபேதம்) * கொத்துமென்பதூஉம், கொர்த்து மென்பதூஉம்.

## நான்காவது முல்லை கக. எஉக

முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற தின்னங் கழிப்பி
யரவுற் றுருமி னதிருங் குரல்போற் பொருமுரா
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக்கண்டு அவளை வினைவலபாங்கிற் றலைவன் விலக்கி அவளோடு சிறிது கூறியவழி அவன் *கூடலுறுகின்றான் கூறியது. இது கைக்கிளை.

இதன் பொருள்.

நலமிக நந்திய நயவரு தடமென்றோ
(க)ளலமர (உ)லமருண்க ணாங்கல்லாய்† நீயுறீஇ
(ங)யுலமர லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல்

எ - து: நன்மை மிகப் பெருகிய விருப்பம் வருகின்ற பெருமையினையுடைய மெல்லிய தோளினையும் சுழலுதலுடைய, முகத்தோடு பொருந்தின கண்ணினையும் அழகினையுமுடைய நல்லாளே! நீ ‡உற்றதனால் உழத்தலையுடைய வருந்து நோய்க்கு (ச) உய்யும் நெறியைக் கூறிப் பின்புபோ என விலக்கினேன். எ - று.

ச (ரு)||பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா
யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி

க. ¶"அலமர லுண்கண்ணர்" (கலி. எங: கஉ) என்பதும் இத்தூற்பக்கம் சகக: உ-ஆம் குறிப்பும் பார்க்க.

உ. ‖அமர்க்கண் கலி சO: க; நெ: உட.

ங. (அ) "உலமரல் வருத்த முறுதும்" அகம். கஅ: கங; (ஆ) "யா மூல மர" கலி. அங: உ.

ச. உய்யும் நெறி - தப்பிப் பிழைக்கும் வழி; உயவு நோயைப் போக்குகின்ற வழியென்றுமாம்.

ஒ. (அ) எல்லான் என்பது எல்லாவென அண்மைக்கண் ஈறழிந்ததென்று கொண்டு, "பேரேமுற் றார்போல......யாரெல்லா" என்னும்பகுதியை மேற்கோள்காட்டுவர், மயிலைநாதர்; நன். பெயரி.கு. ௫௦ (ஆ) "எமுற விரண்டு முளவென மொழிப" என்புழி, ஏமுறல் மயக்குதலை புணர்த்திவருதற்கு, "பேரேமுற் றார்போலமுன்னின் றுவிலக்குவாய்"

(பிரதிபேதம்) * உடன்பட்டாளாக அவன் கூறியது. இது, † நீயுறீஇயவுலமரல், ‡ உறழ் சூழ்தலையுடைய, || பேரேமுற் றப்போல.



எ - து: அதுகேட்டவள், எடா! நின்னை முன்பு கண்டு அறிந்ததுஉமில்லாத என்னிடத்தே பெரிய பித்தேறினாரைப் போல முன்னே நின்று (க) விலக்குகின்ற நீ யார்தான் என்றாள். எ - று.

க (உ) தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்
(ங) புல்லினத் தாயர் மகனேன் மற்றியான்

எ - து: அதுகேட்டவன், என்னை நீ அறிதலை விரும்பின் மனந்தளர்கின்ற இயல்பினையுடையாய்! யான் பகைக்கு அஞ்சாத ஆட்டினத்தையுடைய ஆயரானவர்க்கு ஒருமகனாகு * வேனென்று தன் செல்வக்குடிப் பிறப்பு உணர்த்தினான். எ - று.

அ † ஒக்குமன்
புல்லினத் தாயனீ யாயிற்(ச) குடஞ்சுட்டு
நல்லினத் தாய ரெமர்

எ - து: அதுகேட்டவள், அது மிகவும் ஒக்குமென அதற்குடம்பட்டு, பின்னர் நீ ஆட்டினத்தையுடைய ஆயனாந் தன்மையையுடையையாயின் எம்முடைய சுற்றத்தார் நும் இனத்திற் சிறந்த இன்னதனைக் குடம் பால்

போதுமென்று கருதப்படும் பசுவினத்தையுடைய இடையரெனத்தன்செல்வக் குடிப்பிறப்பு உணர்த்தினள். எ - று.

கக எல்லா

நின்னொடு சொல்லி னேதம்பா டில்லோ.ன்

எ - து: அதுகேட்டவன், எடீ! இம்மனஞ் சிறந்த நின்னோடே சில மொழி கூறின் மிகக் குற்றமோ இல்லை என்றான். எ - று.

கஙு ‡ஏதமன் றெல்லை வருவான் விடு

எ - து: அதுகேட்டவள், இருவரும் ஒத்த குடியாயிற் பின்னைச் சில ||கூறிக் குற்றமென்? யான் நாளைவருதற்கு இப்பொழுது போகவிடு என்றாள். எ - று.

---

என்பது மேற்கோள்; தொல். களவ. ரு. சஅ. நச். (இ) "எம்மை, முன்னைநின் றாகவே விலக்கிய வெல்லாநீ, யென்னேமுற் றாஅய் விடு" (கலி. ககசு: உ - ச.) என்பது இதனோடு ஒப்புநோக்கற்பாலது. (௩) "பேரே முறுகர்" என்பது நற். உஉ0: எ. (உ) இந்நூற்பக்கம் சசகூ: ச-ஆம் குறிப்பும் பார்க்க.

க. "நின்னைத் தகைத்தனென்" கலி. கூ0அ: உ0.

உ. "தளரிய லவரொடு" கலி. கக: கள. என்பதும் அதன்குறிப்பும்பார்க்க.

௩. கலி. க0எ: உ. அடியையும் அதன் குறிப்பையும் பார்க்க.

ச. இந்நூற்பக்கம் கஅள: உ - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * உடையேனென்று † ஒக்கும்புல்லி. ‡ஏதமன்றென்னை, ||கூறிக்குற்றமென்.



கச விடேன்

உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு

மெல்லிய *வாத லறியினு மெல்லியா [கொண்

(க) னின்மொழிகொண் டியானோ † விடுவேன்மற் றென்மொழி

டென்னெஞ்ச மேவல் செயின்

எ - து: அதுகேட்டவன், யான் விடேனென்று கூறி, பின்னரும் (உ)என்னுடைய வார்த்தையைக்கேட்டு என் நெஞ்சம்அறியாமையிலேபுகுந்து

எனக்கு ஏவலைச்செய்யுமாயின், உலகத்தில் ஒருகாரியக்கூற்றால் (௩) உடன் பட்டு மனத்தால் உடன்படாதார் கூற்றுச் செவிக்கு மெய்தென்றிருத்தலை அறிந்திருந்தே‡னாயினும், மெல்லியஇயல்பினையுடையாய்! நின்னுடைய வஞ்ச மானமொழியை உண்மையாகக்கொண்டு யானே போகவிடுவேன்; அதனாற் பெற்றதென் ? அஃது ஏவல்செய்யாதாயிற்றே என்றான். எ - று.

௧௬. நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்சிய
(௪)காதல்கொள் காமங் கலக்குற (௫)வேதிலார்
||பொய்ம்மொழி தேறுவ தென்

எ - து: நின்னைக் கைகடந்து நின்ற காதலைக்கொண்ட காமங் கலக்குத லுறுகையினாலே என்னெஞ்சு எனக்கு ஏவலைச்செய்யாதெனச் சொல்லிநின்ற உனக்கு ஏதிலார் கூறிய பொய்யாகிய வார்த்தையைத் தெளியுந்தன்மை எங்ஙனே உண்டாயிற்று என்றாள். எ - று.

---

௧. "நின்மொழி... .......செயின்" என்பது மறுத்துரைப்பதுபோல் தலைமகன் கூற்று உவகைபற்றிவந்ததற்கு மேற்கோள்; தொல். பொருளி. சூ. ௨. இளம்.

௨. "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே, நீயெமக் காகா தது" குறள். ௧௨௯௧.

௩. (அ) "மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ், சொல்லினாற் றேறற்பாற் றன்று" (ஆ) "கட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ, லொல்லை யுணரப் படும்" குறள். ௮௨௫, ௮௨௬.

௪. (அ) "காதற் காமங் காமத்துச் சிறந்தது" பரி. ௯: ௧௪. (ஆ) "காதல் செய் காமங் கனற்ற" பு-வெ. கைக்கிளை. பெண்பாற். ௪.

௫. "ஏதிலார் யாதும் புகல விறைமகன், கோதொரீஇக் கொள்கை முதக்குறைவு - சோர்கின்று, காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை, சால்புடைத் தென்பாரு முண்டு" நீதிநெறி. ௩௩.

(பிரதிபேதம்) * ஆகலற்பினும். † விடுவேனென்மொழி, ‡ஆயினும், ||நின்மொழி.

எதிலாரென்றது, தான் எதிலேனல்லேனென்னும்பொருண்மை குறிப்பாய்த் தோன்றக் கூறியது. பொய்ம்மொழியென்றது தான் உண்மைகூறவும் பொய்யாகக் கொண்டாரெனென்பது தோன்றக் கூறியது.

௨௨ தெளிந்தேன் *தெரியிழா யான்

எ - து: அதுகேட்டவன், தெரிந்த இழையினையுடையாய்! நீ இப்பொழுது கூறிய கூற்றால் நீ முன்னர் 'வருவான் விடு' என்றது உண்மையென்று யான் †தெளிந்தேன் என்றான். எ - று.

௨௩ பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலறை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை

யிரவுற்ற ‡தின்னங் கழிப்பி
யரவுற்(க)றுருமி னதிருங் குரல்போற் பொருமுரா
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே

எ - து: என்ற பின்னர், யாம் முல்லைப்பூவைக் குருந்தம்பூவோடே முடியிலே சூடிப் பலகாலுங் காட்டாற்றில் விளங்குகின்ற மணலையுடைய குளிர்ந்த பொழிலிடத்து யாம் முன்பு ‖ தங்கும் அகன்ற பாறையிலே ஆயத்தோடே விளையாடுகையினாலே பகற்பொழுது போய் இராப்பொழுது வந்து தோன்றிற்று; அது வருவதற்குமுன்னர்ப் போகாமல் +தாழ்க்கின் நம்மைக் கோபிப்பார்கள்; அதனை உணராது நீ இன்னங் காலங்கழியாநின்றாய்; பல பசுவினத்தினுடைய திரளுக்குள்ளே,(உ)பாம்புசேர்கையினாலே அதிரும் உருமினுடைய குரல்போல அதிரும் பொருகின்ற மாறுபாட்டினையுடைய நல்ல (௩)ஏறுநாகுடனே தம்மிற் கூடி நின்றன; அவைபோல நாமுங்கூடிச் சேரப் போதற்குக் கூட்டத்திற்கு உடம்படுவாயாக என்றான். எ - று.

---

(அ) "வானேறு வானத் துரற்ற வயமுரா, ணனேற் றெருத்த லதனோ டெதிர்செறப்ப" கார். ௪௦. (ஆ)‡"இடியார் கடுமுழக் கேறு" தே. (இ) "இடிக்குர லானேற் றினமெதிர் செறப்ப" கல். ௧௦௪: ௪௦.

(௩) "(அடலேறு) இடியிட்டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கி" திருவிளை. மாயப்பசுவை வதைத்த. கஎ.

௨. இந்நூற்பக்கம் உளச: ௫-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. "மல்லன் மறுகின் மடநா குடனைச், செல்லு மழவிடைபோற் செம் மாந்து" நள. சுயம். கஙக.

பிரதிபேதம்) * தெரியிழாய் எ-து, † தெரிந்தேன், ‡ இன்னும், || தம்கும்பாமைவிளே + நாட்டின்.



"ஓங்குசினைத் தொடுத்த*வூசல் பாம்பென, முழுமுத றமிய வருமெறிக் கன்றே"(க)என்றார் பிறரும்.

(உ)யாங் கூட ஆயத்தோடு ஆடியெனத் தானுங்கூட ஆடினனென்றதனுனும், பொழுது †வைகிப்போதற்குத் தாம் தமக்குரியரல்லரென்றமையானும், ஏறும் காருங் கூடப் போமாறுபோல நாமுங் கூடப்போக என்றமையானும், விளையாட்ட பாங்கினராயிற்று. ஆரவுறவெனத் திரிக்க.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சிவேட்கை பிறந்தது.

இது தரவும் இரண்டடியான் இரண்டு கொச்சகமும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் ஓரடியான் இரண்டும் தனிச்சொல்லும் கெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் சிந்தடி ‡போரடியா னென்றும் சொற்சீரடியும் ஐஞ்சீரும் வந்து (௩) போக்கிலக்கண ||மில்லாத ஆசிரியச் சுரிதகமும் பெற்ற × உறழ்கலி. (கரு)

(ககச.) வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த
வோரிப் புதல்வ னழுதன னென்பவோ
புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று ;
எ சென்றியா னறிவேன் கூறுக மற்றினி ;

க. அகம். கஅ: க - எ.

உ. "அடியோர் பாங்கினும்" என்னும் தொல். அகத். உ௩-ஆம் சூத்திர வுரையிலும் இவ்வுரையாசிரியர் தலைவனும் தலைவியும் வினைவல பாங் கின ரென்பதற்கு "பல்கால்யாம் .....செலற்கே" என்னும்பகுதியை மேற்கோள்காட்டி, இக்குறிப்புக்குச் சிறிது வேறாக "இது தாழ்த்துப் போதற்குத் தலைமையின்றிக் கடிதிற்போகல் வேண்டுமென்றமை யாலும், நல்லேறும் காரும்போல் நாமுங் கூடப் போகல் வேண்டு மென்றமையாலும் தலைவன் வினைவலபாங்கின னாயிற்றென்க. வினை வல்லானென்றது பாங்கினென்றதனைத் தமரேவல்செய்வதுபெறுதும்; இஃது அவ்வந்நிலத்து இழிந்தோர்க்கு என்றுான் றும் தொழிலேயாய் நிகழும்" என்று எழுதி யிருக்கிறார்.

௩. இது போக்கிலக்கணமில்லாத ஆசிரியச்சுரிதகம் பெற்று உறழ்கலி யாயிற்றென்பர் பேராசிரியரும். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறு வர். தொல். செய். ரு. கரு௪.

(பிரதிபேதம்) * பூதலம்பாம்பென, † வைகிற்போதற்கு. ‡ தாடியாறென்றுமஞ்சிகும். || இவ் வழிஆசிரியச், × ஒத்தாழிசைக்கலி.

எ௨அ கலித்தொகை ககச.

அ சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொரூஉ மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு ;
க௨ தருமணற் றாழப்பெய் தில்பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் தனித்தே யொழிய
வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த
திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ வலர்ந்த

விரிநீ ருடுக்கை யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்

கிருமணங் கூடுத லில்லியல் பன்றே.

இஃது "ஆங்கதன் புறத்துப் புரைபட வந்த மறுத்தலொடுதோகைஇ (க) *என்பது, அவன் வரைவுவேண்டின †இடத்து அவ்வரைவு புறத்த தாகியவழித் தலைவி தன்னுயர்வு உண்டாகத் தோன்றிய மறுத்தலோடே முற்கூறியவற்றைத் ‡தோதத்து" என்று பொருள்கூறி, "அதன்புறமேனவே அதற்த அயலாகிய நோதுமலர்வரைவாயிற்று" என்றும்; உயர்வு, (உ)குடிப் பிறப்புங் கற்பும்; அதற்கேற்பப் பிறர்வரைவு மறுத்துத் || தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் =கூறியது.

இதன் பொருள்.

வாரி நெறிப்பட் டிரும்புறந் ÷ தாஅழ்ந்த
(ங)வோரிப் புதல்வ னழுதன +னென்பவோ

க. தொல். களவி. சூ. கச. இதனுரையில் இவர் இச்செய்திக்கே இச் செய்யுளைமேற்கோள்காட்டி, சிறிதவேறுபட இக்குறிப்பையும் எழுதி யிருக்கிறார்.

உ. (அ) "இற்பிறப்பு மொழுக்கு மிழுக்க மில், கற்பும் யான்பிறர்க் கெல்லைக் காட்டுகேன்" (ஆ) "இற்பிறப் பென்ப தொன்று மிரும் பொறையென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்" கம்ப. சூடாமணி. கஎ, திருவடி. சஉ.

ங. ஓரி-ஆண்பிள்ளையின் தலைமயிர்.

(பிரதிபேதம்) * என்றது. † இடத்தே வரைவு, இடத்தவரைவு. ‡தொகுத்தென்பதற்குப் பொருள். அதன்புறமெனவேகொதுமலர்வரைவாயிற்று. உயர்வு. || தலைவனை வரையுமாறு. = கூறினள். ÷ தாழ்ந்த. + என்பவோ வோரும்புதல.

நான்காவது முல்லை கசஎ. எஉக

புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் * கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ

தோழி யவனுழைச் சென்று

†எ - து: தோழீ! புதியனவாகிய மலர்களைச் சூடி எம்முடைய சுற்றத்தார் என்பெயரைச் சொல்லிப் பெண்பிள்ளைக்கலியாணஞ் செய்கின்றவர்களைக் ‡கண்டு வைத்தும் கோதி நெறித்தற்கெழிலிலே பட்டுப் பெரிய முதுகிலே தாழ்ந்துகிடக்கின்ற மயிரினையுடைய புதல்வன் அழுதனனென்பவோ? அங்ஙனங் கூறுவார்களாயின், நீ அவனிடத்தே சென்றுஇவ்வதுவை நின்னைவிட்டு அகலாதற்க அது நின்னிடத்தே ஆம்படி வரைந்துகொள்ளும் மதியை அறியாதவனைத்தன்மையையுடையையென்றுசிரித் துவாரா||யென்றான்எ-று.

கோதி நெறித்து முதுகிலே கிடக்கின்ற மயிரினையுடைய புதல்வனென்றதனாற் பயன், மயிர்முடி கூடி இளமை முதிர்ந்து காமச்செவ்வி அறிந்து களவொழுக்கத்திற்கு உரியனும் தான் வரைந்துகொள்ளுந் தன்மை அறியாமல் இருமுதுகுரவர்கீழே நிற்கின்ற பிள்ளையாயிருக்கின்றவனென்பது உணர்த்திற்று.

அழுதனனென்பவோ என்றது, (க)நொதுமலர்வரைவுவாழ்பும் தான் வரைவின்முயலாது வருந்தினனென்று ஊரிலுள்ளார் கூறுவார்களோ என்றவாறு.இஃது அழுகையென்னும் மெய்ப்பாடு.பெயராலென்பது உருபுமயக்கம்.

எ சென்றியா னறிவேன் கூறுக =மற்றினி

எ - து: அதுகேட்ட தோழி ஆண்டுச்சென்று அவனிலையை அறிவேன்; பின்னை, அவற்குக் கூறுவனவற்றை இனிக் கூறுவாயாக என்றாள். எ - று.

அ சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொருஉ ÷மற்றென் றகலகது நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் ×கூறு

எ - து: அதுகேட்ட தலைவி, மடவாய்! நீ அவனிடத்தே சென்று எடா! நின்குரவரை நோக்கி இவ்வதுவை என்னிடத்தே +யாகவேண்டு

க. நொதுமலர் - அயலார்.

(பாதபேதம்) * கண்டுவிலக்கிமற், † எ-து. ‡கோதி நெறித்தற்.........தாழ்ந்துகிடக்கின்ற புதல்வனென்றதனும் பயன்.........களவொழுக்கத்திற்கு முரியனும்......... மெய்ப்பாடு. தோழீ' புதியவாகிய, ¦ கண்மையைத்தமோரிப்புதல்வன், || என்றான். பெயராலென்பது. = மாற்றினி, ÷ மற்றென்றகல். எ-து: அதுகேட்ட

தலைவி மடவாய் என்றாள்.........விருப்பனமைபற்றி. அகலுகின்ற நெஞ்சு.
+ கூறு என்பது மடவாய்!, × ஆகவேயுமென்று.

92



மென்று சொல்லுஞ் சொல்லை அறியாதபேதை; ஆகையினாலே *இவ்வருவை நினக்குரித்தன்றி அகலும்; அவ்வகற்சிதான் நீட்டித்தலில்லை; அது நொது மலர்க்கின்றி நினக்குவருவதாக நெஞ்சாலே காண்பாய்; அங்ஙனம் †காணு யாயின் அது நின்னை ஒருவுமென்று நீங்கு; அங்ஙனம் நீங்கும்பொழுது இவ்வருவை தனக்குரித்தாக முயலும்படி நீ சொல்லிய சொற்களும் முன்பு வரைவுகடாயவுஞ் ‡சொல்லாத அவன் நினையாமல்(௧)நின்எவலை அவன்மனக் காரியமென்றே கொள்ளும்படி கூறுவாயாக ||என்றாள். எ - று.

மடவாயென்றான், ஆண்டுக்கூறவனவற்றைத்(௨)தான் அறியாள்போலத் தன்னை வினையினமைபற்றி.

௧௨. (௩) தரு(௪)மணற் றாழப்பெய் தில்(௫)பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் (௬)தனித்தே (௭)யொழிய
(௮)வரிமணன் முன்றுறைச் சிற்றில் ÷ புனைந்த

௧. “விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது, சொல்லுதல் வல் லார்ப்பெறின்” குறள் ௬௪௮.

௨. “தானறிந்து கூறுந் தலைமற் றிடையது, கோனுரைத்த தீதென்று கூறுமால்” பாரதம்.

௩. (அ) “தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து” நெடுநல். ௯௦. நற். ௧௪௩. ௨ பெருங். (௧) ௪௭: ௧௧௭.(ஆ) “தருமணன் ஞெமிரிய திருநகர்

முற்றம்" அகம். ௧௮௭. ௧. (இ) "தருமணன் முற்றத்து" மது. ௬௮௪;
பெருங். (௧) ௩௪: ௪௦. (ஈ) "தருமணன் ஞெமிரிய திருநா றொருசிறை"
மணி. ௧௮: ௪௪. (உ) "தருமணற் போில" (ஊ) "தருமணற் பந்தர்"
(எ) "தருமணன் ஞெமிரிய தண்பூம் பந்தருள்" பெருங். (௧) ௩௩:
௧௩௪; ௩௯: ௪௧; (௪) ௬: ௧௨.

௪. "வரைப்பின் மணற்றூழப் பெய்து" கலி. ௧௧௫: ௧௩.

௫. (அ) "பூவலூட்டிய புனைமாண் பந்தர்க், காவற்சிற்றிற் கடிமனை" சிலப். ௧௬: ௫ - ௬. (ஆ) "பூவற் படுவில" புறம். ௩௧௯: ௧. (இ) "பூவலங் குன்றம்" களவழி. ௧௨.

௬. "தனித்து" என்பதைத் தனிக்கவெனத் திரித்து, யான் தனியே நீங்கின்னாகு எனக.

௭. 'ஒழிய' என்பதற்கு அவனையன்றி வேறு சிலரிடத்தே தங்குகையி லொழிய என்பதைப் பொருளாகக்கொள்க; ஒழிதல் - நீங்குதல். இஃது இப்பொருட்டாதலை 'ஒழிய' 'ஒழிந்திட்டான்' (சீவக. ௨௩௪௧, ௨௯௦௪) என்பவற்றுக் கெழுதியிருக்கும் உரையான் உணர்க.

௮. "வரிமணல்" பட். ௬௦. கலி. ௧௨௭: ௫.

(பிரதிபேதம் * பின்னையில்லதனை, † காணுயாயிற பின்னை அது, ‡ சொல்லாக அவன். ‖ என்முன்தருமணல், ÷ புனைந்துநிருத்தல்.



திருநுத லாயத்தார் * தம்முட் புணர்ந்த
வொருமணற் றானறியு மாயி னெனைத்துக்
தெருமரல் கைவிட் டிருக்கோ † வலர்ந்த
விரிநீ ருடுக்கை(௧)யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் ‡ கூடுத லில்லியல் பன்றே

எருமைப் பெடையென்றது * "பேடையும் பெடையும்" என்னும் (௧) சூத்திரத்து நாடியென்றதனல் அமைத்தாம்.

(உ) இது வெள்ளைக்கொச்சகமும் ஓராடியாலெனும் கொச்சகமும் போதிலக்கண †மில்லாத ஆசிரியச்சுரிதகமும் பெற்ற உறழ்கலி. (௧௪)

(௧௧௫.) தோழிநாங், காணமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
புல்லினத் தாய மகன்சூடி வந்ததோர்
முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ;
அதனை, வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
னெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
பாங்கரும் கானத் தொளித்தே னதற்கெல்லா
வீங்கெவ னஞ்ச வது;
அஞ்சல், அவன் கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பின் மணற்றாழப் பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை.

ருது தலைவிகளவுவெளிப்பட்டதென்று அஞ்சித்தோழிக்குச் ‡சொல்ல, || தமர் நின்னை அவற்கே கொடுக்கச் சூழ்ந்தாரெனச் சொல்லி அச்சம் நீக்கியது.

---

க. தொல். மரபியல். சூ. ருச.

உ. இச்செய்யுள் போக்கிலக்கணமில்லாத ஆரியச் சுரிதகம்பெற்ற உறழ் கலிக்கு மேற்கோள்; தொல். செய். சூ. கருகூ. பேர். நச்.

(பிரதிபேதம்) * பேடை பெடையும், பெட்டையும் பெடையும். † இல்லாவாளிய. ‡ சொல்லவேண்ணை. || எமர்.

## நான்காவது முல்லை கடு. எகூக

### முதல் பொருள்.

(க)தோழிநாம், (உ)காணாமை(ங)யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
(ச)நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் (ரு)கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
(சா)புல்லினத் *தாய மகன்சூடி வந்ததோர்
முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
(எ)†வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு ‡மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ

---

க. 'ஆயர்வேட்டுவர்' என்னும் (தொல். அகத். உக.) சூத்திரவுரையில் 'ஆயர்வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்தோதினரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலக்கட்குரிய ஏனைப்பெயர்களான் வருவனவும் கொள்க' என்று கூறி, "தோழி நாம்..............மகன்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டுவர். நச.

உ. (அ) "கம்மு ளுணூகர் போலத் தம்முன், மதுமறைத் துண்டோர் மகிழ்ச்சிபோல, வுள்ளத் துள்ளே மகிழ்ப" தொல். களவி. சூ. உங. நச்; நாற். சூ. கசக. மேற். (ஆ) "கள்ளொற்றிக் கள்சாய் பவர்"

குறள். ௧௨௭. (இ) "மட்டொளிக் குன்று மார்தர் மாண்புபோன் மறைந்து வண்ணப், பட்டொளித் தொழிப வல்குற் பசுங்கதிர்க் கலாபந் தோன்ற" சீவக. ௨௫௩௩.

௩. "அந்திந்தேறன் மார்பினர் மயங்கி ...................புலவிக்காலத்துப் போற்றா துரைத்த காவியங்கண்ணார் கட்டுரை யெட்டுக்கு, நாவொடு நவிலா நகைபடு கிளவியும்" சிலப். ௧௪: ௧௩௩ - ௧௩௯.

௪. "நாணென்னு நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும், பேணாப் பெருங்குற்றத் தார்க்கு" குறள். ௯௨௪.

௫. "தலைப்பெய்து, கையொடு கண்டாய்" கலி. ௬௫: ௨௭ - ௨௮ என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௬. "புல்லினத் தாயர்மகன்" (கலி. ௧௦௩: ௪௭) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

௭. "ஐங் கூந்த லுளரச், சிறுமுல்லை நாறியதற்கு" (கலி. ௧௦௫: ௩-௪.) என்றதற்கு, 'ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்ற அது வெண்ணெயின் நாற்றம் நீங்கிச் சிறிய முல்லைப்பூவின் நாற்றம் மேவி மிக நாறியதற்கு' என்று எழுதியிருக்குமுறை ஈண்டு அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * ஆயர்மகள். † வெண்ணெயுரை. ‡ இல்லாராயாரான.



*எ - து: மெல்லிய இயல்பினையுடையாய்! நம்பாட்டினத்தையுடைய (௧)ஆயர்மகன் சூடிவந்ததொரு முல்லைத்தொடையினையும் அதனாற் †செய்ததோர்(௨)கண்ணியையுங் கூந்தலிலேயிட்டுமிகவும்‡முடித்தேன்;தோழீ! அப்பூச் செவிலித்தாய் ||வெண்ணெய்தேய்க்கவிரித்த மயிரோடே நாற்றமுந் தந்தை முதலியோரும் இல்லிடத்தேயிராநிற்க நாற்றமுங் கெட்டொழும்படியாகச் செவிமுன்னே வீழ்ந்தது; ஆகையினாலே () தோழீ! பிறர் காணாமையுண்ட (௩)கள்ளின்களிப்பு மெய்யிடத்தே தோன்றி மிகுகையினாலே பின்னை காணாமற்சென்று பிறர் நகைக்கும்படி அக்களங்கள்ளைத் தாமுண்டபடியை உரைத்தாற்போல ¶நாம் காந்தனவொழுக்கமுங் கையோடே பிடித்துக்கொள்ளப் பட்டேம் காணென்றாள். எ - று.

அதனை, † வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
ளெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
(௪)பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
(௫)பாங்கருங் கானத் தொளித்தே னதற்கெல்லா
நீங்கெவ × னஞ்சு வது

எ - து: பின்னரும் அப்பூவை வந்தபடி என்னென்று கேட்டலுஞ் செய்யாளாய்ச் சினத்தலுஞ் செய்யாளாய் நெருப்பைக் கைபாலே தீண்டினவர்கள் = அக்கையைப் பிதிர்க்குமாறுபோலக் கையைப் பிதிர்த்து நீங்கிப் புறமாகிய புறத்தேபோனாள்; அவள்போனபின்பு யானும் என்னுடைய மயிர்ச் ∴ சந்தனம் பூசி உலர்த்தின மயிரை முடித்து நிலத்தே ** தாழ்ந்த பூத்தொழிலையுடைத்

---

௧. (அ) "முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்" பதிற். ௨௧: ௨0.
(ஆ) "முல்லையங் கண்ணிசிந்தக் கால்விசை முறுக்கியாய, ரொல்லென வொலிப்ப வோடி" சீவக. ௪௯௮.

௨. "கூழையு னேதிலான், கைபுனை கண்ணி முடித்தாள்" கலி. ௧0எ: ௧௪ - ௧௫.

௩. "மெய்க்கண், மகிழா னறிப ளறு" நான்மணி. எ௯.

௪. "பூங்கரை நீலம் புடைதாழ" கலி. ௧௧௧: ௩.

௫. "பாங்கரும் பாட்டங்கால்" கலி. ௧௧௧: ௧.

(பிரதிபேதம்) * எ - து. மெல்லியலாய் நம்மாட்டினத்தை. † செய்தவழியிலையுடைய கண்ணியையும். ‡ முடித்தேன் அப்பூ. ‖ வெண்ணெய்தேய்க்க. என்னெய்தேய்க்க ¶ தோழி. ÷ காக்கார்த்த ஒழுக்கமும். † வினவலுஞ்சொல்லாள் சினவலுஞ் சொல்லாள். × அஞ்சுவது அஞ்சல். எ-து: = தக்கையைப், ∴ சந்தனமெழுகி யுலர்த்தின, ** தாழ்ந்தபூத்தொழிலை.

நான்காவது முல்லை ௧௧. எ௫

தாகிய கரையினையுடைய நீல ஆடையைக் கையாலே சிறிதேதத் தழுவிக் கொண்டு அச்சத்தால் தளர்ந்து கடந்து பக்கத்திலுண்டான செல்லுதற்கரிய கானத்திலே சென்று ஒளித்தேனென்றான்; அதுகேட்டதோழி, எடீ! அப்பூ வீழ்ந்ததற்கு நீ அவ்விடத்தே அஞ்சுவது என்னகாரியத்திற் *கென்றாள். எ-று.

கஎ அஞ்சல், (க) அவன்கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பில் (உ) மணற்றாழப் †பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை

எ-து: என்று பின்னும் நின் தலைவன் கண்ணியை நீ சூடினாயாயின் அதற்கேற்ப நம்முடைய சுற்றத்தாரும் நின்னை அவனிடத்தே அடுத்தலைச் சூழ்ந்தார்; அதுவேயன்றி அகன்ற இடத்தையுடைய முற்றத்தே மணலைத் ‡தங்கப்பெய்து திரையிட்டுக் கல்யாணமும் இப்பொழுதே செய்வார்கள்; பகலேயன்றிப் போன இரவிலும் ஆராய்ந்த காரியம் ‖அக்காரியமேயாம்; நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ-று.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

✝இஃது ஐஞ்சீரடுக்கி வந்த தாவும் பாட்டுஞ் சுரிதகமும் பெற்ற கலிவெண்பா. (கசு)

(கக௫.) பாங்கரும் பாட்டங்கால் கன்றொடு செல்வேமெந்
தாம்பி னுருதலை பற்றினை யீங்கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லாநீ
யென்னையே முற்றாய் விடு;
ரு விடேஎன், தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடுவய நாகுபோ னோக்கிக் கொடுமையா
னிங்கிச் சினவுவாய் மற்று;

---

க. "நின் கூழையு ளேறவன், கண்ணிதந் திட்ட தெனக்கேட்டு..........|
நின்னையப், பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ,
டையன்மா ரெல்லா மொருங்கு" கலி. க0எ: ௯௦-௯௪.

௳. "மணற்றுழப் பெய்து" (கலி. ககச: கஉ) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) *, என்றன் அவன்கண்ணி, †பெய்த வதுவையும், ‡தலைப்பெய்த கலி யாணமிப்பொழுதே. || அக்காரியமேயாமினியஞ்சாதே, +இதனைவிடேன்.

ஏகூ. கலித்தொகை ககக.

அ நீங்கு, கன்றுசேர்ந் தார்கட் கதவிற்றுச் சென்றாங்கு
வன்கண்ண ளாய்வர லோம்பு ;
க0 யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோள்வினு மிங்கே வருக தளரேன்யா
னீயருளி நல்கப் பெறின் ;
கரு நின்னையான் சொல்லினவும் பேணாய் நினைஇக்
கனைபெய லேற்றிற் றலைசாய்த் தெனையதூஉ
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
வருவையா லுணிலி நீ.

இது விளைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக்கண்டு * விலக்கிய தலைவனோடு அவள் சில மொழிகூறிக் குறியிடங் கூறியது.

இதன் பொருள்.

(க)பாங்கரும் (உ)பாட்டங்காற் (௩)கன்றொடு செல்வேமெம்
† தாம்பி னொருதலை பற்றினை யீங்(ச)கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லா நீ
‡ யென்னை (ரு)யே முற்றாய் விடு

எ - து: மனைப் ||பக்கத்திற், பிறர் சேருதற்கரிய, நாம் பயிர் செய்யுந் தோட்டத்திடத்தேகன்றொடுபோகாரின்றேம்; அங்ஙனம்போகின்றவெம்முடைய கையில் தாம்பின் ஒரு தலையைப் பிடித்தனையாய் எம்மை இவ்விடத்தே + முன் பேயும் ஒருதா நின்று விலக்கினாற்போல விலக்குதற்கு, எடா ! நீ என்ன பித்தேறினாய் ? நீ என்னைப் போகவிடு என்றாள். எ - று.

---

க. "பாங்கரும் கானத்து" கலி. ககரு: கங.

௨. "பாட்டங்கால்" கலி. ககக: ச.

௩. "கன்றெல்லாந் தாம்பில்" கலி. ௧௧௧: ௧ - ௨. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. "பேரேமுற்றார்போல முன்னின்று விலக்குவா, யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி" கலி. ௧௧௫: ௪ - ௫.

௫. இந்நூற்பக்கம் ௭௨௩: ௫ - ஆம் குறிப்புப் பார்க்க

(பிரதிபேதம்) * விலக்கியவத்தகைவளேடு, † தாம்பிலொருதலை, ‡ என்னே முற்றுஅயலிலே, || பக்கத்திற்சேருதற்கரிய காம்பயிலரைச்செய்யும். ÷ முன்பேவுமொருத்தர் நின்று விலக்கினவாப்போல.



ரு * விடேஎன், (க)தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடு †வய நாகுபோ னோக்கித் (உ)தொடுவாயி
னிங்கிச் சினவுவாய் ‡ மற்று

எ - து: அதுகேட்டவன், யான் நின்னைப் போகவிடேன்; தன்னைத் தீண்டுதற்குச் செல்லுமவர்களை இடையே விலக்கி எதிரே மிக்குச்செல்லுங் கடிய வலியினையுடைய நாகுபோலே செறுத்துநோக்கித் தொழுவின் வாயிலினின்றும் பேர்த்து நின்று பின்னைச் சினப்பா ||யென்றான். எ - று.

அ நீநீங்கு, கன்றுசேர்ந் தார்கட் ÷ கத (ங)விற்றுச் சென்றாங்கு
வன்கண்ண ளாய்வா லோம்பு

எ - து: அதுகேட்டவள், நீ இவ்விடத்து நின்றும் போ; அதுவென் னெனில் தன்னுடைய கன்றைச் சேர்ந்தார்மேலே கோபத்தையுடைய புனிற்றாச் ×சென்றாற்போல நீ என்மேலே வந்தது காணில் யாய் தறுகண்மையை யுடையளாய் வந்துசீறுதலுமுண்டுகாண்; அவ்வரவை நீபேணிக் +கொள்வா யென்றாள். எ - று.

௧0 யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக **தளரேன்யா
(ச)னீயருளி நல்கப் பெறின்

|| வார்த்தைகளைப் பரிகசியாயாய்க் கூட்டத்தையே நினைந்து செய்த மழையிடத்து ஏறுபோலே தலையைச் சாய்த்து யான் கூடியவற்றிற்கு எதிராகச் சில சொற்களைக் கூறி இன்னம் மயக்கமுறுகின்றவனே ! நாணமில்லாதவனே ! நீ கறவைக்கலத்தோடே யாஞ் செல்லும் பசுமேய்க்கின்ற இடத்தையும் காடி என் தமையன்மார் நிற்கும் புலத்திடையும் வருவையாயிருந்தாய்; ஆண்டுக் கூடுது மெனக் குறியிடங் கூறினள். எ - று.

இதனுள், + இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இஃது ஐஞ்சிறடுக்கிவந்த கலிவெண்பாட்டு. (கக)

(ககஎ) மாண வுருக்கிய நன்பொன் மணியுறீஇப்
பேணித் துடைத்தன்ன மேனியாய் கோங்கின்
முதிரா விளமுகை யொப்ப வெதிரிய
தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை ;
கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலு ளென்னுள
காண்டக்கா யெற்காட்டிக் காண் ;

(ஓ) "இருளுறழ் கூந்தலா யென்னை, யருளுறச் செயினுமக் கறனும்மா ரதுவே" (ந) "கேல்வி னுண்டென் னுயிர்" கலி: கக: கரு - கஎ, கக - உ0; சு0: கூகூ - கூச; கச: கஉ.

க. |"பூனைபெயல்" (கலி. சகூ: ச) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * கினைந்தான், † மற்றித் தலைசாய்த்து, ‡ வருகுவையால், || வார்த்தைகளையும். பரிகசியாய், + இருவரும் புணர்ச்சியுவகை யெய்தினர் இதை அஞ்சிர்,

நான்காவது முல்லைக்கலி. எ௩க்

கO காணினி, தோட்டார் கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிலையாயின் முற்றிய கூழையா

வெல்விற்றாப் போழ்தாயி னீதோளிக் கண்டேனற்
செல்லென்று நின்னை விடுவேன்யா னற்றெனக்கு
சொல்லிய தோரா வறிவு.

*இஃதுஆற்றிடைத்தலைவர் தலைவியைக் கையதுவிறுத்துச்சேர்ந்தது.

இதன் பொருள்.

மாணா வுருக்கிய நன்(க)பொன் மணியுரு இப்
பேணித் துடைத்தன்ன மேனியாய்(உ)கோங்கின்
முகிழா விழுமுலை பொய்ய வெகிரிய

---

க. "பொன்னுரை மணியன்ன மாமைக்கண்" (கலி. சஅ: கஎ) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

உ. கோங்கு பாலைநிலத்துக்குரியதாகக் கூறப்படுவது; பொரியரையுடையது; வேனிற்காலத்து மலரும் இயல்பினது; தொகைச்செய்கையில் மகளிர்குரவை கேட்டு மலர்வதாகக் கூறப்படுவது. இம்மலர் பொன்னிறமும் விரிந்து தோன்றலுமுடையதாதலால், இதற்கு விளக்கும் பொற்கிண்ணமும் பொற்றட்டும் பொற்ற[illegible]த்தட்டும்பொற்குடையும் சுரிதகமென்னுமாபரணமும் உவமையாகக் கூறப்படுகின்றன. இவை (அ) "அரும்புமுலை ததைந்தன கோங்கமும் மலவமு மெல்லடி யினை வருவகைத், தலைவரே டவ்வழிச் சார்ந்தின்புற, நிலைபெறு பஞ்சியி னெறிகொடுக்குமே" எனவும் (ஆ) "பொரியரைக் கோங்கின் பொன் மருள் பசவீ" எனவும் (இ) "[illegible]லைக் கோங்கம் பயந்த, வண்மிகு கொழுமுகை யுடையும் பொழுதே" (ஈ) "வேனிற் கோங்கின் பூம் பொருட்டு" எனவும் (உ) "கோங்க மாதர் குதலையைக் கேட்டலும், தேங்கொள் போது சினைதொறும் பூத்தலால்" எனவும் (ஊ) "பொன் போதலர் கோங்கு கோங்கு சோலை" எனவும் (எ) "கோங்கின், காலூறக் கழன்ற கண்கமழ் பனிமலர், கைவிடு சுடரிற் றோன்றும்" (ஏ) "செல்சுடர் நெடுங்கொடி போலப், பல்பூங் கோங்கம் மணிந்த

காடே" எனவும (ஐ) "உள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்" எனவும் (ஏ) "கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப், பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச், செம்பொற்றட்டிற் றீம்பா லேந்திப், பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்றும்" எனவும் (ஏ) "பொன்

(பிரதிபேதம்.) * இது கிடைத்திலது.



(க)தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை

எ - து: மாட்சிமைப்பட உருக்கி ஒடவைத்த நல்ல பொன்னிலே நீல மணியை அழுத்திப் பேணி ஒப்பமிட்டாற்போன்ற கரிய நிறத்தையுடையாய்! முதிராத கோங்கினது இளைய முகையையொப்பத் தோன்றின தொய்யி லெழுதினவனமுலையையுடையாய்! பின்னை நின் கையிடத்தது யாதுதான் உரையென்றான். எ - று.

உ கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில்; புட்டிலு ளென்னுள
*காண்டக்கா யெற்காட்டிக் காண்

எ - து: அதுகேட்டவள், என் கையிடத்தது, இச்சேரிக்குரிய இடையர்மகளாயிருப்பேன் யான், பின்னை என் கையில் இருக்கின்ற இது காதலையுடைய புலைத்தி விற்கப்படுவதொன்றாக முடைந்ததொரு புட்டில்; அதுதான் பின்பு பனங் குருத்தின் வகிராற் பொத்தின தொழிலையுடைய புட்டி லென்றான். அதுகேட்டவன், (உ) காட்சிதக்கவளே! இப்புட்டிலுள் என்ன பண்டங்களுள? அவற்றை எனக்குக் காட்டிக்கா†ணென்றான். எ - று

செய் கன்னம் பொலிய வெள்ளி, நுணகோ லறைகுறைந் துதிர்வன போல, வரவ வண்டின மூதுதொறும் குரவத், தோங்குசினை நறவீ

கோஙகல ருறைப்ப" எனவும் (ஏஙு) "புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைபபூ" (ஃ) "குடைமாக மெனவேந்திக் கோங்கம்போ தவிழ்ந்தனவே" (அஙு) "குடையவிழ்வன கொழுமலரின குளிர்கனியன கோங்கம்" (ஆஙு) "கோங்கு பொற்குடை கொண்டு கவிந்தன" எனவும் (இஙு) "கைவல் வினைவன் றைபுபு சொரிந்த, சுரிதக வுருவின வாகிப் பெரிய, கோங்கங் குவிமுகை யவிழ" எனவும் வருவனவற்றால் அறியலாகும். இதன் றாது பொன்னிறமுடையதென்பது கலி. கஉ: கஉ-ஆம் அடியானுணரப்படும். இதன் காய் சால்போன்றதென்றும பஞ்சுடையதென்றும் கூறுவர்; இதன் அரும்பும் மகளிர் கொங்கையும் ஒன்றற்கொன்று உவமையாகக் கூறப்படுதலை இந்நூற் பக்கம் கஅச. உ - ஆம் குறிப்பால் உணர்க.

க. (அ) "தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை" மது. சகக. (ஆ) "தொய்யில் பொறித்த வனமுலை" (இ) "தொய்யில் பொறித்த வழி" கலி. கஎ: கட; சச: கச.

உ. காண் - அழகுமாம்.

(பிரதிபேதம்) *காண்டக்காய் காட்டிக்கான். † என்றன் தோட்டார்.

## நான்காவது முல்லை கஎ. எசக

காணினி, (க)தோட்டார் கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை; மற்றிவை;
முல்லை யிவையாயின் முற்றிய கூழையா
யெல்லிற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனற்
(உ)செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு.

எ - து: அதுகேட்டவள், இனிக்காண்பாயாக; பின்னை இவை இதழாலே நிறையப்பட்ட மயிரினையுடைய என் தோழி ஆயத்தாருடனே காட்டிடத்தே பறித்த சிறுமுல்லையென்றாள்; அது கேட்டவன், முடிகூடின

மயிரினையுடையாய்! யான் தனியே இவ்விடத்தே*கண்டேனல்; இருந்த இவை முல்லைப்பூவாயின், இவை தொடுத்துமுடித்து நாங் கூடுதற்குப் பொழுதாயின், ஒளி இத்தன்மைத்தாயிராநின்றது; நின் நினைவு போக்கிலேயாகில் யான் போவென்று விலைதுஞ் செய்வேன்; பின்னை எனக்கு நின்னைப் போகவிடுதலை †ஓராது இவனை என் அறிவு இளைத்திராநின்றது; இனி இக் கூட்டத்திற்கு உடம்பட நில்லேனென்றான். எ - று.

இது (௩.)‡இதோளி ஈதோளியெனச் சுட்டு நீண்டு நின்றது; இது சுட்டு முதலாகிய இரயீற்று வல்லெழுத்து மிக்கு நின்றது.

---

க. (அ) "தோட்டார் கதுப்பினுள்" நறுள். ககO௫. (ஆ) "தோட்டார் குழலியொடு" சிலப். க௫: கக௮.

உ. "நின்மொழிகொள்ள டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண், டென்னெஞ்ச மேவல் செயின்" கலி. ககங: கஎ - க௮.

௩. "ஒரு காலத்து வழங்கப்பட்ட சொல் ஒரு காலத்து வாராதாகலும் பொருள் வேறுபடுதலுமுடைய; அதோளி இதோளி உதோளி எனவும் குயின் எனவும் நின்ற இவை ஒருகாலத் துளவாகி இக்காலத் தில வாயின. இவை முற்காலத் துளவென்பதே கொண்டு வீழ்ந்தகாலத்தும் செய்யுள் செய்யப்படா. அவை ஆசிரியர் நூல் செய்த காலத்து உளவாயினும் கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற் பாட்டினுந் தொகையினும் அவற்றை காட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர்; அவற்றுக்கு இது மரபிலக்கண மாகவி னென்பது" என்று பேராசிரியரும் "ஒருகாலத்து வழங்கிய சொற்கள் ஒருகாலத்து வழங்காதனவுமுள" என்பதற்கு, அதோளி இதோளி உதோளி குயின் என்பவற்றை மேற்கோள் காட்டி, 'இவை இடைச்சங்கத்திற் காதரவாயின'

பிரதிபேதம்) * கண்டேனு பிருந்தவிவை, † ஓராதிவனையறிவு, ஓராதி வயனையறிவு, ‡ இது தோளி யீதோளியென.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

---

என்று நச்சினார்க்கினியரும், "மரபேதானும்" என்னும் (தொல். செய். 80.) சூத்திரத்தினுரையில் எழுதி யிருக்கிறார்கள்; "இவை இடைச் சங்கத்திற் காகாவாயின' என்ற நச்சினார்க்கினியருக்குக் கடைச்சங்கத்திற் காகுமெனபது கருத்தென்று கொள்ளலாகாது; இச்சொற்கள் வழக்கி லில்லையென்பதே கருத்தென்று கொள்ள வேண்டும். ஆனால், 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னும் (தொல். தொகை. கஎ) சூத்திரவுரையில் இளம்பூரணர் சுட்டுமுதலாகிய இகரவிறுதிக்கு, அதோளி, இதோளி, உதோளி என்னுஞ் சொற்களை உதாரணங்காட்டி யிருக்கிறார். நச்சினார்க்கினியரும் அவரையே பின்பற்றி அச்சூத்திரவுரையில் அப்பகுதிக்கு அச்சொற்களையே உதாரணங் காட்டி யிருப்பதோடு 'அதோளி - அவ்விடமென்னும் பொருட்டு' என்று குறிப்பும் எழுதியிருக்கிறார். 'ஞமவ வென்னும் புள்ளிமுன்னர், யஃகா னிற்றல் மெய்பெற் றன்றே" என்னும் (தொல். நூன்மரபு உஎ.) சூத்திரத்துரையில், இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ்செய்தலின் அக்காலத்து இந்நான்கு புள்ளிகளின் முன்னும் யகரம் வரப்பெற்று ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன என்று கூறுபவராகிய இவர், அதோளி முதலியசொற்கள் முற்காலத்தனவாகி இவர்காலத்து இலையாயின் 'சுட்டு முதலாகிய விகரவிறுதியும்' என்னுஞ்சூத்திரவுரையிலும் 'இங்ஙனம் ஆசிரியர்சூத்திரஞ்செய்தலின் அக்காலத்துச், சுட்டுமுதல் இகரவீற்றன சொற்கள் உளவென்பது பெற்றாம்; அவை இக்காலத்து இறந்தன' என்றன்றோ கூறவேண்டும். இவர் கூற்றுள்ளே முன்னுக்குப் பின் முரணுகின்றமை [illegible] அமைத்துக்கொள்ளல் வேண்டும்.

நாமறிந்த அளவில் இச்சொற்குப் பொருளறிவித்தவர் இவரே. அங்கு, அதோளியென்பதற்கு அவ்விடமென்று பொருள்கூறி யிருப்பது போலவே இந்நூலிலும் இச்செய்யுளில் 'இதோளி' என்னுஞ் சொல்லுக்கு 'இவ்விடம்' என்று பொருள் கூறியிருக்கிறார். இவற்றையும்

செய்யுளியலுரையில் இவர் எழுதியிருப்பதையும் நோக்கின், இச் சொற்கள் மிகுதியாக வழங்காமை கருதிச் செய்யுளியலில் அவ்வாறு எழுதினரென்றும் இவை அருகி வழக்குமென்பதே இவர் கருத்தென்றும் கொள்ளுதலே தகுதியாம். "கதிர்த்ததண் பூண் கம்புடாழ் பீலிக் கவிர்குர ஞரைவண் டானம்" (சீவக. உ௧௦அ.) என்பதனுரையில் 'பூணிகம்பு வென்பன இறந்தவழக்கு' என்று இவர் எழுதியுள்ள (பிரதிபேதம்) * தோன்றிற்று.

## கலித்தொகை கதள. எசுக

இரு கொச்சகக் கலி. (கள)

*முல்லைக்கலி முற்றும்.



கருத்தையும் நோக்குக. 'இதோளி' என்னுஞ்சொல் ஒன்றே முதல் நீண்டாவது இந்நூலிற் காணப்படுகின்றது; அதோளி உதோளி யென்பன நாமறிந்த அளவில் ஓரிடத்துங் காணப்படவில்லை. வடமலையாளமாகிய தனிச்சேரிப்பக்கத்து இப்போதும் ஒளியென்பது இடமென்னும் பொருளில் பெரியோரைச் சுட்டி உயர்சொற் கிளவியாய் வழங்குமென்ப; இச்சொற்கள் பண்டைக்காலத்தே சற்றேறக்குறைந்து வழங்கியும் வழங்கின வென்பது தொ. வி. புள்ளி. ௪௦௩-ஆம் சூத்திர வுரையிலுள்ள மேற்கோள்களால் அறியலாகும். கன்னடத்தில் அதரொள் இதரொள் என்பன அதில் இதில் என்னும் பொருளில் வழங்குமென்பதும் இங்கே கருதத்தக்கது. அன்றியும், இக்காலத்து அவ்விடம் இவ்விடமென்னும் பொருளில் வழங்கும் அதோ இதோ என்னுஞ் சொற்களும் அதோள் இதோள் என்பவற்றின் சிதைவோவென்றும் ஐயமுண்டாகிறது. இவற்றைப் பாகதச் சிதைவென்பாருமுளர். இவற்றுள், இதோவென்பது சிவஞானமுனிவரது செய்யுளிலும் பல இடத்து எடுத்தாளப்படுகிறது. "மற்றிதோ தோன்றுகின்ற, சோலைசூழ் வரையினேற்றி" (சிவத. ௧௨௩௨) என்புழி. இதா வென்பது இவ்விடமென்னும் பொருளில் சிந்தாமணியிலும் வந்துள்ளது. அங்கு 'இதா, திசைச்சொல்' என்று இவ்வுரையாசிரியர் குறிப்பு எழுதியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * முல்லைப்பாட்டு முற்றும், முல்லை முற்றும்.

ௐ

[illegible],
[illegible],
[illegible], சேலம்.